ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாந யோகஜந்யஜ்ஞாநங்களைவிட
ஆயிரம்மடங்கதிஶயித்த
பகவத்ப்ரஸாதஜந்ய தத்வயாதாத்ம்யஜ்ஞாநவித்தமராய்
ப்ரபந்நஜநகூடஸ்த்தராய்எழுந்தருளியிருக்கும்
மஹாப்ரபாவரான

# நம்மாழ்வாருடைய

பகவதநுபவ பரீவாஹரூபமான, த்ராவிடவேதஸாகரஸாரமாகிய

# திருவாய்மொழி

ஒன்பதாம்பத்து.

மூலமும் அதின்வ்யாக்யாநாதிகளும்

இவை,

ஸ்ரீமத்-உபய-ஸ்ரீமாந்-ஆழ்வார்திருநகரி வடபத்ரஶாயி

**அரையர்ஸ்வாமி அவர்களாலும்**

ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாததூளியாகிய,

**கா. ராமஸ்வாமிநாயுடு அவர்களாலும்**

அநேகப்ரதிகளைக்கொண்டு பரிஶோதிக்கப்பட்டு

சென்னை: ராமாநுஜஸித்தாந்த ஸபாத்யக்ஷராகிய

ஸ்ரீமாந்,

முதலியாண்டான்முன்னிலையில்

புலியனூர். இரங்கசாமிமுதலியார் அவர்கள்குமாரர்

**பு. கிருஷ்ணஸ்வாமிமுதலியார் அவர்களால்**

சென்னை:

ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன.

ஆழ்வார்திருவவதாராதிவர்ஷம்-சகூஅஎ-பார்த்திபவர்ஷம்.

May 1885.

விஶ்வாசநிராஸகத்வத்தையும், அநிஷ்ட நிராஸக க்ருபாயோகத்தையும், அவதாரப் ரயுக்த குணோத்தரதையையும், அநிஷ்டத்வம்ஸகத்வமடியான அபிகமநீயதையை யும், கீர்த்தநீயகுணவத்த்வத்தையும், சிந்தாமாத்ரசுலபத்வத்தையும், உஜ்ஜீவநஹே துத்வத்தையும், போக்யவிக்ரஹவிசிஷ்டதையையும், பூபார நிராஸகத்வத்தையு ம நுசந்தித்து, "ஏவம்பூதனான சர்வேஶ்வரனே நிருபாதிகபந்துவானவன்; அல்லா தார் உபாதிநிபந்தநபந்துக்கள். ஆதலா லவர்களைவிட்டு, நிருபாதிகபந்துவான விவ னையேபற்றி யுஜ்ஜீவியுங்கோள்" என்று தாமறுதியிட்டவர்த்தத்தை தம்மைப்பற்றி னார்க்குத் தஞ்சமாக வுபதேசித்தருளுகிறார். ........................................*

ஈடு.

ஒன்பதாம்பத்தில் முதற்றிருவாய்மொழி. கீழ்த்திருவாய்மொழி யிலே, பாகவதசேஷத்வபர்யந்தமாக நிரதிசய புருஷார்த்தத்தை நிகிலவி ரோதிநிவ்ருத்திபூர்வகமாக அவன் காட்டிக்கொடுக்க, அதிப்ரீதியோடே அந்த மஹோபகாரத்தை அநுசந்தித்து "சயமேயடிமைதலைநின்றார்" என்றும், "நீக்கமில்லாவடியார்" என்றும், "கோதிலடியார்" என்றும் பாகவதரை விரும்பினாராய்நின்றார். ஆப்பான்திருவழுந்தூரரையர் ஆஶ்ர யித்ததும், திருவாய்மொழி கேட்டதும், ஆழ்வாரோடேயிறே. "'சய மேயடிமைதலைநின்றார்' என்றது ஸ்ரீபரதாழ்வான்போல்வாரை; 'நீக்கமி ல்லாவடியார்' என்றது இளையபெருமாள்போல்வாரை; 'கோதிலடியார்' என்றது ஸ்ரீசத்ருக்நாழ்வான் போல்வாரைக்காணும்" என்று ஆழ்வான் பணித்தானாகப் பணிப்பர். "இப்படிப்பட்ட பாகவதசேஷத்வமாகிறபுரு ஷார்த்தத்தி னெல்லையை நமக்குத்தந்த சர்வேஶ்வரனே நிருபாதிகபந்து, அல்லாதாரடங்க சோபாதிகபந்துக்கள். அவனே நிருபாதிக சுஹ்ருத்து, அல்லாதார்பக்கல் தோற்றுகிற சௌஹார்த்தம் சோபாதிகம்;" என்று ப்ராப்யாபாசங்களைத் தவிர்த்து, அவனே ப்ராப்யனென்றும், ப்ராபகாபா சங்களைக்கழித்து அவனே ப்ராபகனென்றும், அறுதியிட்டுப்பிறந்தலாப த்தாலுண்டான ஹர்ஷத்தாலே சேதநரைக்குறித்து, "நீங்கள் சோபாதி கபந்துக்களானவல்லாதாரைவிட்டு நிருபாதிகபந்துவான அவனையேபற்றி உஜ்ஜீவிக்கப்பாருங்கோள்" என்று பரோபதேசே ப்ரவ்ருத்தராகிறார். "ஸர்வேஷாமேவலோகாநாம்" (ஸர்வேஷாமேவலோகாநாம்) இத் யாதி; அவ்யயஃபிதா; அல்லாதார் தாய் தமப்பனென்று பேராய், நாலு நாளிருந்து மணற்கொட்டகம்போலே கழிந்துபோவர்கள், அங்ஙனன்றி க்கே அழியாதே யென்றுமொக்க ரக்ஷகனும் பிதா அவனேயாயிற்று. த னக்கு ஹிதஞ்சொன்ன விபீஷணனை "த்வாந்துதிக்" (த்வாந்துதிக்) எ ன்று புறப்படவிட்டானிறே ராவணன்; அவன் தம்பியையொழியச் செ ல்லாதென்றாரிறே பெருமாள். மஹாராஜர் ஜ்யேஷ்ட்டனாலேநோவுபட், தனிமையிலேவந்துதவினாரிறே; பெருமாள். பெற்றதமப்பன் பகையாக, அவனிலுமண்ணியனுய்வந் துதவினாரிறே ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு. மா தாபிதாக்கள் கைவிட்டஜயந்தனுக்கு, ப்ரஹ்மாஸ்த்ரந்தொடுத்துக் கொடு

நிற்கிறவர் தாமேயிறே புகலானுர் "ஸபித்ராச" (ஸபித்ராச) இத்யாதி. [ஸ:] நீரிலேபுக்கழுந்துவாரைப்போலே தாரகரானவரே பாதகராயம்புதொடுக்கும்படி சூழ்த்துக் கொடுநின்ற அவன். சேஷம்பூர்வவத். த்ரௌபதி, தர்மப்ரதாநரான பர்த்தாக்க ளைவரும் வெறுந்தரையைக்கிறியிருக்க, அவர்களையொழிய தூரஸ்த்தனுன க்ருஷ்ணனையேநினைக்க, "அவள் ஆபந்நையாய் நம்மை நினைக்க, நாமுதவப்பெற்றிலோம்" என்று "க்ருஷ்ணாம்-தூரவாஸிநம்" (க்ருஷ்ணுமாம்தூரவாஸிநம்) என்றுபுண்பட்டானவனிறே. அர்ஜுநன் "என்னபிமதமென்னுல்தலைக்கட்டிக்கொள்ளவரிது" என்றுசோகிக்க; "உன்னைத்தொற்றி வருவதொன்றுபேற்றுக்குடலாமன்றிறே - உனக்கு சோகிக்கவேண்டுவது, உன்னுடையசர்வபரங்களையும் நம் தலையிலேபோகட்டு, நாமே கடவோமென்றிரு, உன்னுடைய விரோதிவர்க்கத்தை யடைய நாமே போக்கித்தருகிறும்" என்றுனிறே. இப்படிகளாலே "அவனே நிருபாதிகபந்து, அவனையேபற்றப்பாருங்கோள்" என்று தாமறுதியிட்டவர்த்தத்தைத் தம்மைப்பற்றினுர்க்குத் தஞ்சமாக வுபதேசித்தருளுவதாக பரோபதேசே ப்ரவ்ருத்தராகிறுர்......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

கொண்டபெண்டிர் ப்ரவேஶே, சங்கதிகதநார்த்தம் வ்ருத்தத்தை அநுவதிக்கிறுர் (கீழ்த்திருவாய்மொழியிலேயித்யாதி.) கீழ்த்திருவாய்மொழியில் பத்தாம் பாட்டில் சொன்னவர்த்தத்தை அநுவதித்ததுக் காப்தசம்வாதம் (ஆப்பானித்யாதி,) சங்கதி (இப்படிப்பட்டவித்யாதி.) ஸோபாதிகஸம்ஸி ஹ்ருதயம்யஸ்ய, ஸ:-ஸுஹ்ருத். சோபாதிகபந்துக்களென்றத்தால் பலிதம் (ப்ராப்யாபாசங்களைத்தவிர்த்து) என்றது. நிருபாதிகபந்துவென்றத்தால்பலிதம் (அவனேப்ராப்யன்) என்றது. "ஸௌஹார்த்தம்" நிருபாதிகமென்றத்தால் பலிதம் (ப்ராபகாபாசங்களைக்கழித்து) என்றது. (அவனே நிருபாதிகஸுஹ்ருத்து) என்றத்தால் பலிதம், (அவனே ப்ராபகன்) என்றது. அல்லாதாரடங்க சோபாதிகபந்துக்கள், அவனே நிருபாதிகபந்துவென்றதுக்கு வசநத்வயமும், அநுஷ்ட்டாநங்களும் காட்டுகிறுர் (சர்வேஷாமித்யாதி, அர்ஜுநனென்கிற வாக்யத்தளவும்.) அவ்யய:பிதா என்றதுக்கர்த்தம் (அல்லாதாரித்யாதி.) (சேஷம் பூர்வவத்) என்றது. பயிலும் சுடரொளியிலே "நம்பனைஞாலம்படைத்தவனை" என்கிற பாட்டில் வ்யாக்யாதமானுப்போலே யென்றபடி. இதரர் ரக்ஷகரல்லர், அவனே ரக்ஷகனென்கிறுர் கீழ். உபாயாந்தரங்களு முபாயமன்று, அவனே உபாயமென்கிறுர் மேல் (அர்ஜுநனித்யாதி.) உபாயாபாஸங்களைக்கழித்து அவனே உபாயமென்றதுக்கு சப்தம் - "சிற்றவேண்டாசிந்திப்பேயமையும்" என்றது. சுற்றத்தவர்" என்றது, அவனே நிருபாதிக பந்துவென்றதுக்கு சூசகசப்தம். அநுஷ்ட்டாநங்காட்டினவைகளிலே ஆகிஞ்சந்யாநந்ய கதித்வங்களு மர்த்தாத்ஸித்திக்கிறது.......................................................................*

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஒன்பதாம்பத்து.

### முதற்றிருவாய்மொழி.

#### முதற்பாட்டு.

கொண்டபெண்டிர்மக்களுற்றூர்சுற்றத்தவர்பிறரும்
கண்டதோடுபட்டதல்லாற்காதன்மற்றியாதுமில்லை
யெண்டிசையுங்கீழும்மேலுமுற்றவுமுண்டபிரான்
றொண்டரோமாயுய்யலல்லாலில்லைகண்டீர்துணையே.

ஆறாயிரப்படி.

(கொண்டபெண்டிர்) இந்தபாகவதகைங்கர்யரூபசம்பத்தை பாகவதகைங்கர்யாதிகளாயிருப்பாரோடே புஜிக்கையிலே யபேக்ஷயுடையரான வாழ்வார், ததாவிதரை இந்தலோகத்திலே காணாமையாலே இந்தலோகத்திலுள்ளாரையே பாகவதசேஷதைகரதிகளாக்கிக்கொண்டாகிலு மவர்களோடே இப்போகத்தை புஜிக்கைக்காக, பாகவதசேஷதைகரதித்வத்துக்குபாயமாக, அவர்களைப்பார்த்து, உங்களுக்கு ஸோபாதிகஸ்நேஹரான களத்ராதிகளோடுள்ள வுறவைவிட்டு, அகாரணஸுஹ்ருத்தாய் ப்ரளயகாலத்திலெல்லாரையும் தன்றிருவயிற்றிலேவைத்து பரிஹரித்தருளி மஹோபகாரகனான வெம்பெருமானுக் கடியோமாயுய்கையொழிய வேறுரக்ஷகரில்லையென்கிறார் ..........................................*

பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், ஔபாதிகபந்துக்களான, தாரபுத்ராதிகளா லொருப்ரயோஜநமில்லை, அசேஷஜகத்தையும் வயிற்றிலேவைத்துநோக்கின ஆபத்ஸகனானவனுக் கடியராமதொழிய வேறுதுணை யில்லையென்கிறார்.

கொண்ட-நாம்பந்துக்களாக நெஞ்சிலேகொள்ளப்பட்ட. பெண்டிர் - தார. மக்கள்-புத்ராதி. உற்றார்-சம்பந்தி. சுற்றத்தவர்-பாந்தவர்களும். பிறரும் - மற்றும் மித்ரப்ருத்யப்ரப்ருதிகளும். கண்டதோடு-நங்கையிலே ப்ரயோஜநங்கண்டபோது. பட்டதல்லால்-உடன்படுமதொழிய. மற்று-ப்ரகாராந்தரத்திலே. யாதும்-ஏகதேசமும். காதலில்லை-ஸ்நேஹமுடையரல்லர். ஆதலால், எண்டிசையும் - சமஸ்ததிக்கு

க்களோடேகூடின. கீழும்-பூமியையும் பாதாளங்களையும். மேலும்-ஊர்த்வலோகங்களையும். முற்றவும்-எல்லாவற்றையும். உண்ட-ப்ரளயங்கொள்ளாதபடி யமுதுசெய்துநோக்கின. பிரான்-மஹோபகாரகனுக்கு. தொண்டரோமாய்-அடியோமாய். உய்யலல்லால்-உஜ்ஜீவித்தலல்லது, வேறுபத்துக்கு, இல்லைதுணை-துணையில்லை ... ...*

## ஈடு - முதற்பாட்டு.

முதற்பாட்டில். "ஔபாதிகபந்துக்களான தாரபுத்ராதிகளாலொருப்ரயோஜநமில்லை, நிருபாதிகபந்துவானவனே ஆபத்ஸகன், அவனையேபற்றி யுஜ்ஜீவியுங்கோள், வேறுதுணையில்லை" என்கிறார்.

(கொண்டபெண்டிரித்யாதி) தான் தன் ஹ்ருதயத்திலே பந்துக்களாக நினைத்திருக்கும் பார்யாதிகளென்னுதல், (கொண்டபெண்டிர்) நிருபாதிகமாகவந்ததன்றிக்கே த்ரவ்யாத்யுபாதிகளாலே பரிக்ரஹித்தஸ்த்ரீகள். அன்றிக்கே மாதாபிதாக்களைச் செங்கற்சீரைகட்டவிட்டு, தானார்ஜித்ததநத்தை யடையக்கொடுக்கும்படி தஞ்சமாக நெஞ்சிலேகொண்டபெண்டிரென்றுமாம். ஆசார்யனும், பரதேவதையும், ஐஸ்வர்யாதிகளுமெல்லா மிவளேயாகக் கொண்டபெண்டிரென்றுமாம். இவளுண்டாகையிறே யெல்லாமென்றிருக்கை. அன்றியே, இது சர்வவிசேஷணமாய், பந்துக்களாகத்தான் நினைத்திருக்கும் பார்யாதிகளென்னுதல். (மக்கள்) அப்படிப்பட்டவவளுடைய யௌவநத்தையழிய மாறிப்பெறும் ப்ரஜைகள். (உற்றார்) தனக்கும் ஸத்ருஸவிஷயமென்று ஆதரித்தசம்பந்திகள். (சுற்றத்தவர்) அவர்கள் மதிக்கும்படியான ஜ்ஞாதிகள். (பிறரும்) அந்யரும். முன்புசொன்னவர்களும், இவர்களிற்காட்டில் வாசிபெரிதன்றென்கை (பிறரும்) மித்ரப்ருத்யாதிகளென்றுமாம். (கண்டதோடேபட்டதல்லால்) சந்நிதியிலே ஸ்நேஹிக்குமதொழியவென்னுதல், கையிலே த்ரவ்யங்கண்டபோது அத்தைப்பற்ற ஸ்நேஹிக்குமதொழியவென்னுதல். (காதல்மற்றியாதுமில்லை) ப்ரயோஜநங்கண்டபோ துடன்படுமதொழிய, ப்ரகாராந்தரத்தி லேகதேசமும் ஸ்நேஹமுடைய ரல்லரென்னுதல், காணாதபோது மெய்யானஸ்நேஹமொன்றுமில்லையென்னுதல், கண்டதுக்குமற்று-காணாதபோதிறே. (காதல்மற்று) ஸ்நேஹமும், அதுக்கெதிர்த்தலையான த்வேஷமுமில்லையென்னுதல், ஸ்நேஹமு மதுககடியான பந்தமுமில்லையென்னுதல். (எண்டிசையுமித்யாதி) பத்துத்திக்கிலுமுண்டான சகலசேதநரையும் பிரிகதிர்ப்படாமே திருவயிற்றிலேவைத்துரக்ஷித்தவன், இவற்றின்பக்கலொன்றுமில்லாதவன்று ரக்ஷிக்குமவன். ப்ரளயாவஸ்தையில் ரக்ஷிக்கைக்கு சாதநமுமில்லை, அர்த்தித்வமுமில்லையிறே. ரக்ஷிக்கைக்குத் தானறிந்தவாபத்தும் சம்பந்தமுமிறே வேண்டுவது. அப்போது விலக்குகைக்குப் பரிகரமில்லையே. (பிரான்) உபகாரசீலனானவன். (தொண்டரோமாயுய்யலல்லால்) அவனுக்கு நம்மதாயிருப்பதொன்று கொடுக்கவேண்டுவதில்லை - அடியோமா யுஜ்ஜீவிக்கு மதொழிய. சே

ஷத்வம் ஸ்வரூபமானபின்பு அத்தையிழக்கையாவது - விநாசமிறே. அந்வயத்தாலே அன்றிக்கே வ்யதிரேகத்தாலு மிவ்வர்த்தத்தை த்ருடீகரிக்கிறார். (இல்லைகண்டீர் துணையே) ஆபத்துக்கு வேறோரபாஶ்ரயமுண்டாயிருக்க விவனைப்பற்றச்சொல்லுகிறதல்லவிது, அவனைப்பற்றி ஸ்வரூபம் பெறுதல் இல்லையாகி லில்லையாமித்தனை..................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (கொண்டபெண்டீரித்யாதி) உத்தரார்த்தத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (நிருபாதிகபந்துவானவித்யாதி) (தான்தன்ஹ்ருதயத்திலே இத்யாதி) வாக்யத்வயம் சில ஸ்ரீகோசங்களிலில்லை.

"கொண்ட" என்றதுக்கு மூன்றர்த்தம் - க்ரீதத்வமும், வால்லப்யமும், உத்தேஶ்யதையும். (த்ரவ்யாத்யுபாதிகளாலே) என்கிறவிடத்தி லாதிசப்தத்தாலே, வீர்யசுல்கத்தாலும், பூத்தருபுணர்ச்சியென்றுதொடங்கி மூன்றுபுணர்ச்சியாலும், பரிக்ரஹித்தவர்களைச்சொல்லுகிறது. செங்கற்சீரைகட்டவிட்டென்றது - பிச்சைபுகிரவிட்டென்றபடி. (நெஞ்சிலேகொண்ட) என்றது-ப்ரீதிவிஷயமாகக்கொண்டவென்றபடி. பார்யையைப்பற்ற புத்ரனபிமதனென்னுமிடம், ஸ்த்ரீயையுபேக்ஷித்து அஷ்டமபுத்ரனுன பீஷ்மனைநோக்கிக்கொண்ட சந்தநுவின்பக்கலிலே கண்டுகொள்வது. கீழ்ச்சொன்னவர்களோடே பிறரையுமொக்க வெடுப்பானென்னென்ன (முன்புசொன்னவர்களுமித்யாதி) சொன்னவர்களுக்குமென்றபடி.

(கண்டதோடு) இவனைக் கண்டபோதென்று முந்தினவர்த்தம். (பட்டதல்லால்) படுகை - நெஞ்சிலேபடுகையாய், ஸ்நேஹிக்குமதொழியவென்றபடி. இதிரண்டாமர்த்தத்துக்குமொக்கும். மற்று - காதல் - யாதுமில்லையென்றந்வயித்தர்த்தம் (காணுதபோதித்யாதி) மற்றென்ருல் காணுதபோதைச்சொல்லுமோவென்ன (கண்டதுக்கித்யாதி) மற்றையர்த்தத்துக்கும், "காதல்மற்று" என்று அடைவேகண்டுகொள்வது. எதிர்த்தலை - ப்ரதிகோடி. த்வேஷமுமென்றது - த்ருஷ்டாந்தார்த்தம். அதுக்கடியான - ஸ்நேஹத்துக்கடியான. மற்று - சம்பந்தமும்.

முற்றவுமென்றதுக்கர்த்தம் பிரிகதிர்ப்படாமேயென்றது, தப்பாதபடியென்றபடி. இத்தால்பாவம் (இவற்றின்பக்கலித்யாதி) அப்போதொன்றுமில்லையோவென்ன (ப்ரளயாவஸ்த்தையிலித்யாதி) சாதநமுமில்லை - பக்தியுமில்லையென்றபடி. அர்த்தித்வமும் - ப்ரபத்தியும். ஒன்றுமில்லாவிட்டால் ரக்ஷிக்கும்படியென்னென்ன (ரக்ஷிக்கைக்கித்யாதி) சம்பந்தம் நித்யமாயிருக்க சம்சாரப்ரளயத்தில் நின்றும் ரக்ஷியாதிருப்பானென்னென்ன (அப்போதித்யாதி) அப்ரதிஷேதம் காணுமையாலே ரக்ஷித்திலனென்றபடி. அப்போது - ப்ரளயாவஸ்த்தையிலே.

அவனுபகாரசீலனுனுல் நாமும் சிலபச்சையிடவேணுமோவென்ன (அவனுக்கித்யாதி) "தொண்டரோமாயுய்யலல்லால்" என்கிறதென் சேஷத்வஜ்ஞானமில்லாதபோது உஜ்ஜீவநமில்லையோவென்ன (சேஷத்வமித்யாதி) வ்யதிரேகத்தாலுமிவ்வர்த்தத்தை த்ருடீகரிக்கையாவது - அவனைத்துணையாகப்பற்றினு லுஜ்ஜீவிக்கலாம், அல்லாதாரைத் துணையாகப்பற்றினு லுஜ்ஜீவநமில்லையென்றபடி. துணையேயென்ற வவதாரணுர்த்தம் - (வேறோரித்யாதிவாக்யத்வயம்) இது - ஆத்மவஸ்து.

கொண்டபெண்டிர்தொடங்கி, உய்யலல்லால்-துணை-இல்லைகண்டீரித்யந்வயஃ.

# இரண்டாம்பாட்டு.

துணையுஞ்சார்வுமாகுவார்போற்சுற்றத்தவர்பிறரு
மணையவந்தவாக்கமுண்டேலட்டைகள்போல்சுவைப்பர்
கணையொன்றாலேயேழ்மரமுமெய்தவெங்கார்முகிலைப்
புணையென்றுய்யப்போகலல்லாலில்லைகண்டீர்பொருளே.

## ஆறாயிரப்படி.

(துணையும்) பரப்ரயோஜநபரரைப்போலே வர்த்தியாநின்று ஸ்வ ப்ரயோஜநபரராயிருக்கிறவர்களைவிட்டு, கேவலம் பரப்ரயோஜநபரனான தசரதாத்மஜனையே ரக்ஷகனாகப்பற்றப்பாருங்கோள்; வேறொருவரைப்ப ற்றி யொருப்ரயோஜநமில்லையென்கிறார் ..................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவிஶ்வஸநீயரான அநுபகாரகனா பந்துபுத்திபண்ணாதே, விஶ் வாஸஜநகனுமா யுபகரிக்குமவனை யாஶ்ரயித்தாலல்லது ப்ரயோஜநமில்லையென் கிறார்.

சுகதுக்கங்களுக்கு, துணையும்-ஸஹாயபூதருமாய். ஆபத்துவந்தால், சார்வும்-அபாஶ்ரயமும். ஆகுவார்போல்—ஆவாரைப்போலே. சுற்றத்தவர்-பந்துக்களும். பிறரும்-மற்றுமுள்ளாரும், அணைய-தங்களுக்குக்கிட்ட. வந்த-வரும். ஆக்கம்-ப்ரயோஜநம். உண்டேல்-உண்டாகில். அட்டைகள்போல் - அட்டைகள்போலே. சுவைப்பர் - இவன்றனக்கு உபகாரமென்று நினைக்கும்படி பசையறச்சுவைத்துவிடுவர். அப்படியன்றியே, ஆபத்திலே அபாஶ்ரயமான தன்பக்கலிலே பந்தாதிசங்கைபண்ணினவனுக்கு விஶ்வாஸம்பிறக்கும்படி, கணையொன்றாலே - ஓரம்பாலே. ஏழ்மரமும்-ஏழுமராமரத்தையும். எய்த-எய்தவுபகாரகனாய். எம்-நம்மையும் விஶ்வஸிப்பிக்கும். கார்முகிலை-காளமேகஸ்வபாவனானவனை. புணையென்று - அபாஶ்ரயமென்று நினைத்து. உய்யப்போகலல்லால்-உஜ்ஜீவித்துப்போமதொழிய. பொருள்-ப்ரயோஜநம். இல்லை-இல்லை.

புணை-தெப்பமாய், அமிழ்த்தாதபடி நோக்கும் அபாஶ்ரயத்தைச் சொல்லுகிறது ..............................................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

உபகாரகரைப்போலேயிருந்து, ஸ்வப்ரயோஜநங்களைத் தலைக்கட்டநினைக்குமவிஶ்வஸநீயரானவர்களையொழிய, நிர்ஹேதுகமாக விஶ்வாஸஜநகனாய், ஆபத்ஸகனானவனைப்பற்றுமதன்றி ப்ரயோஜநமில்லையென்கிறார்.

(துணையித்யாதி) துணையாகையாவது - "ஏகம் து:கம் ஸுகம் ச நௌ" (ஏகம்துஃகம்ஸுகஞ்சநௌ) என்று சுகதுஃகங்களையொக்க வநுபவிக்கை, சார்வாகையாவது - போக்கடியற்றதசையில், தாங்களேபுகலா

கை. பாண்டவர்களுடைய வநவாசத்தில் தனிமையிலே முகங்காட்டியு ம், த்ரௌபதியை மீட்டுக்கொண்டுபோகிறபோது "ஜமாஉதாம்ஹாமஃ வகஉஃஸாஸாழ" (ஜகாமதாம்பார்க்கவகர்மஸாலாம்) என்று, அவர்கள் தங்கினபணிக்கொட்டிலிலேசென்று முகங்காட்டிக்கூடக்கிடந்து கதறியு ந்துணையாயும், பகதத்தன்விட்ட சக்தியை அர்ஜுநனைத்தள்ளித் தன்மா ர்பிலேயேற்றுப்புகலாயும் போந்தக்ருஷ்ணனைப்போலேயிருக்கை. (ஆகு வார்போல்) தாங்க ளபந்துக்களானபடியே கடக்கநிற்பதுஞ்செய்யாதே, "ரக்ஷகர்" என்று ப்ரமிக்கும்படி வர்த்திப்பர்கள். (சுற்றத்தவர்பிறரும்) ஜ்ஞாதிகளும், மற்றுமுள்ளாரும். (அணையவித்யாதி) கைக்கெட்டினசம் பத்துண்டாகில். "இவன்பக்கலிலே ப்ரயோஜநம் தங்களுக்குண்டாம்" என்றுதோற்றியிருக்கிலென்னுதல்; "தங்கள்பக்கலிவனுக்கொரு ப்ரயோ ஜநமுண்டு" என்றுதோற்றியிருக்கிலென்னுதல். (அட்டைகள்போல்சு வைப்பர்) ரக்தஸ்பர்ஸமற வாங்காநிற்கச்செய்தே, இவனுக்கு ஹிதஞ் செய்தனவாயிறே யிவையிருப்பது. அப்படியே, உபகாரங்கொண்டாரா ய்க்கொள்ளாதே, ஹிதஞ்செய்கிறார்களாய்க்கொண்டுபஜீவிப்பர்கள். "உ ன்பக்கலிலே தநங்கிடக்கில் வாங்கிக்கொள்வர்கள், அவற்றை யென்மே லே யேறிட்டுவை" என்று அவனுக்கு ஹிதஞ்செய்கிறார்களாயாயிற்றுப ஜீவிப்பது. (கணையித்யாதி) "ஸகெநஉஹெஷ—ணா" (ஏகேநமஹேஷுணா) என்று கைக்கெட்டிற்றோரம்பாலே, மஹாராஜர், தனியருமாய், வெ றுவியருமாய், தமையன்பகையுமாய், மநுஷ்யசஞ்சாரமில்லாத தனிக்கா ட்டிலேயிருக்க, பெருமாளையு மிளையபெருமாளையுந் தூரத்திலேகண்டு, "வாலிவரவிட்டவர்கள்" என்றஞ்சியோடித் திருவடியைவரவிட்டு, அறி வித்தபின்பு, "நாமும்முடையகார்யஞ்செய்யவல்லோம்" என்று மழுவே ந்திக்கொடுத்து மவர்கார்யஞ்செய்தாரிறே. (ஏழ்மரமுமெய்த) ஒன்றிர ண்டாலே மஹாராஜரதிசங்கை தீர்க்கலாயிருக்க, ஏழுமராமரத்தையுமெ ய்த. (எங்கார்முகிலே) (எம்) என்று - ஆஸ்ரிதரைச்சொல்லுதல்; ஆத்மநி பஹுவசநமாய், மஹாராஜர்க்குச்செய்தது தமக்குச்செய்ததாக நினைத் திருந்தபடியாலேயாதல். (கார்முகிலே) பரமோதாரனானவனே. அவன்படி யிதுவாகில் நாமவனுக்குச்செய்யவேண்டுவதென்னென்னில் (புணையித் யாதி) இடவேண்டுவதொரு பச்சையில்லை, ஓருக்திமாத்ரமமையும். "எ ன்கார்யமுனக்கே பரம்" என்றொருவார்த்தையே யவனுக்கு நேரவேண் டுவது. (இல்லைகண்டீர்பொருளே) புறம்பொருவரைப்பற்றினாலொரு ப்ர யோஜநமுமில்லை. புறம்பாஸ்ரயிக்கையிலே க்லேசிக்கச்சிலருண்டத்தனை; ப்ரயோஜநரூபமாவதொன்றில்லை ....................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (துணையுமித்யாதி) "துணையும்சார்வும்" என்றுதொடங் கி, "புணையென்றுய்யப்போகலல்லால்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (உ பகாரகனாயித்யாதி) ..........

துணைக்கும் சார்வுக்கும் பேதமருளிச்செய்கிறார் (துணையாகையாவதித்யாதி) துணை-சஹாயம். சார்வு-ரக்ஷகம். துணையும் சார்வுமாகை சர்வேஶ்வரனுக்கேயுள்ளதென்றுவிவக்ஷித்து, அப்படி துணையும் சார்வுமாகக்கண்டவிடமுண்டோவென்ன (பாண்டவர்களுடையவித்யாதி) "𑌤𑍍𑌵𑌂𑌵𑌯𑌸𑍍𑌯𑍋𑌽𑌸𑌿𑌹𑍃𑌦𑍍𑌯𑍋𑌮𑍇𑌹𑍍𑌯𑍇𑌕𑌂𑌦𑍁𑌃𑌖𑌂𑌸𑍁𑌖𑌂𑌚𑌨𑍌" ( த்வம்வயஸ்யோஸிஹ்ருத்யோமே ஹ்யேகம் து:கம் ஸுகஞ்சநௌ ) இத்யாதி கிஷ்கிந்தாகாண்டே. "𑌵𑍃𑌷𑍍𑌣𑌿𑌪𑍍𑌰𑌵𑍀𑌰𑌸𑍍𑌤𑍁𑌕𑍁𑌰𑍁𑌪𑍍𑌰𑌵𑍀𑌰𑌾𑌨𑌾𑌶𑌂𑌕𑌮𑌾𑌨𑌸𑍍𑌸𑌹𑌰𑍌𑌹𑌿𑌣𑍇𑌯𑌃 । 𑌜𑌗𑌾𑌮𑌤𑌾𑌂𑌭𑌾𑌰𑍍𑌗𑌵𑌕𑌰𑍍𑌮𑌶𑌾𑌲𑌾𑌂𑌯𑌤𑍍𑌰𑌾𑌸𑌤𑍇𑌤𑍇𑌪𑍁𑌰𑍁𑌷𑌪𑍍𑌰𑌵𑍀𑌰𑌾𑌃" (வ்ருஷ்ணிப்ரவீரஸ்துகுருப்ரவீராநாஶங்கமாநஸ்ஸஹரௌஹிணேய: । ஜகாமதாம்பார்க்கவகர்மஶாலாம் யத்ராஸதேதே புருஷப்ரவீரா:) இதிசம்பவபர்வணி. பார்க்கவ:-குலால:. "𑌭𑌾𑌰𑍍𑌗𑌵𑌸𑍍𑌤𑍁𑌕𑍁𑌲𑌾𑌲𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌭𑍃𑌗𑍁𑌸𑌮𑍍𑌭𑌵𑌶𑍁𑌕𑍍𑌰𑌯𑍋𑌃" (பார்க்கவஸ்துகுலாலேஸ்யாத்ப்ருகுஸம்பவஶுக்ரயோ:) இதிநிகண்டு:. "𑌕𑌰𑍍𑌮𑌶𑌾𑌲𑌾𑌂" (கர்மஶாலாம்) என்றதுக்கர்த்தம் ( பணிக்கொட்டிலிலேயென்றது. ) சார்வானதுக் குதாஹரணம் (பகதத்தனித்யாதி.) "போல்" என்றதுக்கு பாவாந்தரம் ( தாங்களித்யாதி. ) அணையவந்த - அணைந்துவந்த - கிட்டவந்த ; ஆக்கம் - சம்பத்து, ப்ரயோஜந மென்னுதல். தாதாவானவனை யணைந்துவந்த வென்னுதல், அர்த்திகளான தங்களை வந்தணையும்படி-வந்து கிட்டும்படியான வாக்கம் தாதாவுக்குண்டென்று தோற்றியிருக்குமாகி லென்னுதல். "அட்டைகள்போல்" என்றதுக்கு பாவம் ( ரக்தஸ்பர்ஶமித்யாதிவாக்யத்வயம். ) "ஹிதம்செய்கிறார்களாய்க்கொண் டுபஜீவிப்பர்கள்" என்றதின்விவரணம் (உன்பக்கலிலேயித்யாதி.)

ஓரம்பாலே யெய்ததுக்கு ப்ரமாணம் (ஏகேநேத்யாதி) "𑌬𑌿𑌭𑍇𑌦𑌚𑌪𑍁𑌨𑌸𑍍𑌸𑌾𑌲𑌾𑌨𑍍𑌸𑌪𑍍𑌤𑍈𑌕𑍇𑌨𑌮𑌹𑍇𑌷𑍁𑌣𑌾" ( பிபேதசபுநஸ்ஸாலாந்ஸப்தைகேநமஹேஷுணா ) இத்யாதி. "கணையொன்றாலே யேழ்மரமுமெய்த" என்றதுக்கு பாவம் ( மஹாராஜரித்யாதி. ) "ஏழ்" என்றதுக்கும், "மரமும்" என்ற சஶப்தத்துக்கும் பாவம் ( ஒன்றிரண்டாலேயித்யாதி. ) புணை - ப்ரதிபூ:. "என்று" என்கிறதுக்குபாவம் ( இடவேண்டுவதித்யாதி. ) விவரணம் ( என்கார்யமித்யாதி. ) பொருள் - ப்ரயோஜநம். விவரணம் ( புறம்பித்யாதி. )

க்ரமேணார்வய:. .................................................................*

# மூன்றாம்பாட்டு.

பொருள்கையுண்டாய்ச்செல்லக்காணிற்போற்றியென்றேற்றெழுவ
ரிருள்கொடுன்பத்தின்மைகாணிலென்னேயென்பாருமில்லை
மருள்கொள்செய்கையசுரர்மங்கவடமதுரைப்பிறந்தாற்
கருள்கொளாளாயுய்யிலல்லாலில்லைகண்டீரரணே.

## ஆறாயிரப்படி.

( பொருள்கை ) இப்படி ஸ்வப்ரயோஜநபரராகையாலே ப்ரயோஜநமுள்ளபோது பற்றி, தாரித்ர்யாபத்தில் விடும் ஸ்வபாவரானவர்களை

விட்டு, ஆபத்ஸகனான க்ருஷ்ணனுடைய க்ருபைக்கு விஷயமா யுய்யிலல்லால் வேறொரு ரக்ஷையில்லையென்கிறார். ................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநிஷ்டநிராஸகனான க்ருஷ்ணனுடைய க்ருபாபாத்ரமாகி லல்லது வேறுமுதலில்லையென்கிறார்.

கை - கையிலே. பொருள் - அர்த்தம். உண்டாய் - உண்டாய். செல்ல-செல்ல. காணில் - கண்டார்களாகில். போற்றியென்று - மங்களாசாசநம்பண்ணி. ஏற்று - அவன்கொடுத்தத்தைக் கையிலேயேற்றுக்கொண்டு. எழுவர் - யதாபிலஷிதம் போகாநிற்பர். இருள்கொள் - அஜ்ஞாநதமஃப்ரசுரமாய். துன்பத்து - துஃகோத்தரமான. இன்மை - தாரித்ர்யம். காணில் - கண்டார்களாகில். என்னே - ஐயோ!. என்பாரும் - என்று க்ருபைபண்ணுவாரும். இல்லை - இல்லை. ஜகத்துக்கு, மருள்கொள் - நெஞ்சுகலங்கும்படியான. செய்கை - ப்ரவ்ருத்திகளையுடைய. அசுரர்-அசுரர். மங்க - கலங்கும்படியாக. வடமதுரை - வடமதுரையிலே. பிறந்தாற்கு - அவதரித்த க்ருஷ்ணனுக்கு. அருள் கொள் - க்ருபாபாத்ரமான. ஆளாய் - சேஷபூதராய்க்கொண்டு. உய்யிலல்லால் - உஜ்ஜீவிக்கிலல்லது. அரண் - வேறுபுகல். இல்லை - இல்லை. ......................................................................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

அவனை யொழிந்தார், ப்ரயோஜந முள்ளபோது பந்துக்களாய்க் கொண்டாடி, ஆபத்துவந்தால் பார்ப்பாருமில்லை ; ஆனபின்பு, நிருபாதிகமாக வாபத்ஸகனான க்ருஷ்ணனுடைய க்ருபாபாத்ரமாகையொழிய வேறுரக்ஷகரில்லையென்கிறார்.

( பொருள்கையுண்டாய்ச்செல்லக்காணில் ) இவன்முன் சிலவற்றை யவிழ்ப்பது முடிவது சேமிப்பதாய்ப் போராநிற்குமிறே. பொருளானது கையிலேயுண்டாய்ப் போரக்காணில். (போற்றியென்று)பரசம்ருத்த்யேக ப்ரயோஜநனைப்போலே வார்த்தைசொல்லுவர். உனக்கின்னமும் கிழிச்சீரை பெருகவேணுமென்பர்கள். “நம்சம்ருத்தியே தனக்குப்ரயோஜநமாயிருப்பானொருவனுண்டாவதே!” என்று குளிரப்பார்க்குமே, இவனினி நமக்குக் கண்ணறமாட்டானென்றறிந்தவாறே (ஏற்றெழுவர்) இடலாகாதோ போகவென்று ஏற்றுக்கொண் டெழுந்திருப்பர்கள். ( இருளித்யாதி ) அஜ்ஞாநாவஹமாய், துஃகஹேதுவா யிருக்கிற வெறுமையைக் காணில். ( என்னேயென்பாருமில்லை ) ஐயோவென்பாருமில்லை. பிள்ளை திருநறையூரரையர், “ ஒருவனுக்கிட் டொருவன்வெறுவியனாவது, அவனாலே சம்ருத்தனானவனிவனை ‘என்’ என்னுதல், இவன்க்ருஹத்திலேவந்தொருநாள் கால்கழுவிப்போதல்செய்ய, அவ்வளவாலே ‘இன்னானின்னானுக்கு பந்துவாகாதே!’ என்றிவ்வளவுகொண்டு ஜீவிக்கலாயிருந்தால் அவ்வளவுஞ்செய்வாரில்லை ” என்றுபணிப்பர். ( மருளித்யாதி ) பொருள் கையுண்டாய்ச் செல்லக்காணாதவன்று மாஸ்ரிதருடையவாபத்தைப் போக்

குகைக்காக அகர்மவஶ்யனான தான்வந்தவதரித் துதவுவா னொருவனுண்டென்கிறதுமேலே; சேதநர்நெஞ்சிலே யிருள் குடிபுகுரும்படியான ப்ரவ்ருத்திகளையுடைய வாசுரவர்க்கம் முடியும்படி, ஒருவரபேக்ஷியாதிருக்கத் தானேவந்தவதரித்து ரக்ஷிக்குமவனுக்கு. அவனுக்கு நாஞ்செய்யவேண்டுவ தென்னென்னில் ( அருள்கொளித்யாதி ) க்ருபாபாத்ரமான சேஷபூதராய்க்கொண் டுஜ்ஜீவிக்கிலல்லது. அவன்பண்ணு மருளை விலக்காதொழியுமத்தனையே வேண்டுவது; தன்னருள்கொள்வாரை "உதாராঃ" (உதாரா:) என்னுமவனிறே யவன். இவன்பக்கலிதுக்குமேற்பட்கொள்ளலாவதில்லை; அவனுக்கு மிதுக்குமேல்செய்யவேண்டுவதில்லை பூர்ணனுகையாலே. சம்பந்தமோ ஸ்வாபாவிகமாயிருந்தது, இவன்புகுரநின்றவம் ஶமுண்டாகில், தன்பேருக நினைத்திருக்குமவனு யிருந்தான், இனி விலக்காமையிறே வேண்டுவது. (இல்லைகண்டீரரணே) ரக்ஷகமாவதிதொன்றுமே; அல்லாததெல்லா மநர்த்தத்தோடே தலைக்கட்டு மித்தனை. சிறுப்ரஜை "குன்றிச்சூடு" என்று நெருப்பிலே கைவைக்குமாபோலே யிருப்பதொன்றிறே புறம்பிவன் ரக்ஷகமாக நினைத்திருக்குமிவை. [ ஶூத்ரேண யயாஸௌதிய நவஜ்ஞோ நேஷ்யா । தயாசவிஶ்வகர்த்தாரம்கோநஹம்வேத்தவ்ய நாஸ ] [ ஆதரேணயதாஸ்தௌதிதநவந்தந்தநேச்சயா। ததாசேத் விஶ்வகர்த்தாரம்கோநமுச்யேதபந்தநாத் ] ஸ்தோத்ரம்பண்ணிப்போந்த வாஸநையாலே உச்சைஸ்ஸாக ஸ்துதியாநிற்கும். இப்படி ஸ்துதிக்கிறது உதாரனையோவென்னில் [ யநவஜ்ஞ ] [ தநவந்தம் ] * ஓர்பற்றையையென்றபடி. அவன்பக்கல் நெகிழ்ச்சியில்லை. ஆகிலவனை ப்ரேரித்தாரானொன்னில் [ யநேஷ்யா. ] [ தநேச்சயா. ] சர்வத்தையுமுடையனாய், இவனளவன்றிக்கேயிருக்கிற வவன்பக்கலிலே யிவ்வாநுகூல்யத்தைப் பண்ணப்பெறில், பிறர்கீழேயிருந்து ஸ்துதிக்கவேண்டும்படியிவனை வையான்.

## ஜீயர் அரும்பதம்.

மூன்ரும்பாட்டு. ( பொருள்கையித்யாதி. ) "பொருள்கையுண்டாய்" என்றுதொடங்கி, "இல்லைகண்டீரரணே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (அவனையொழிந்தாரித்யாதி.)

காண்கைக்கு ப்ரஸக்தியேதென்ன (இவன்ருனித்யாதி.) சப்தார்த்தம் (பொருளானதித்யாதி.) "போற்றி" என்றதுக்கு பாவம் ( பரசம்ருத்தீத்யாதி. ) சொல்லும்வார்த்தை தன்னை விசதீகரிக்கிருர் ( உனக்கின்னமுமித்யாதி. ) கிழிச்சீரை-சாளிகை. கண்ணறமாட்டான் - நிர்த்தயனுகமாட்டானென்றபடி. (என்றறிந்தவாறே யென்னுமளவும்) அவதாரிகை.

கொள்கை - உடைத்தாகையாய், அஜ்ஞாநாவஹமென்றபடி. இன்மை- இல்லாமை. தாரித்ர்யம். "என்னே" என்றதுக்கு - என் என்பாரு மில்லையென் றர்த்தாந்தரம் விவக்ஷித்து, அதுக்கு சம்வாதம் ( பிள்ளைதிருநறையூரித்யாதி. ) அன்றிக்கே, ஏகார்த்தமேயாய், என்னேயென்பாரு மில்லாமையின் சரமாவதிக்கு சம்வாதமாதல்.

அருளைக்கொள்ளுகிற வாளாயென்றபடி. அப்படி விலக்கா தொழிந்தால் கணக்க நினைத்திருக்குமோவென்ன (தன்னருள்கொள்வாளாயித்யாதி.) விலக்காத மாத்ரத்தாலே "உதாராঃ" (உதாராঃ) என்னக்கூடுமோவென்ன (இவன்பக்கலித்யாதி, விலக்காமையிறே வேண்டுவ தென்னுமளவும்.) அவனப்படியிருந்தாலுமவன்பெருமைக்கிடாக விவன் பச்சையிடவேண்டாவோ வென்ன (அவனுக்குமித்யாதி.) ஒன்றுமில்லாத விவன்பக்கலிலே, விலக்காமைமாத்ரங்கொண்டு க்ருபைபண்ணுகைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் (சம்பந்தமோவித்யாதிவாக்யத்வயத்தாலே.) புகுரநின்றவம்ஸம் - லபிக்குமம்ஸமென்றபடி.

"அல்லாலில்லைகண்டீர்" என்றத்தால் பலிதம் (ரக்ஷகமாவதித்யாதிவாக்யத்வயம்.) இது - அருள்கொளாளாகை. "இதொன்றுமே" என்கிறதென், வேறு ரக்ஷகரில்லையோவென்ன (சிறுப்ரஜையித்யாதி. ) குன்றிச்சூடு - குந்தமணிக்கொண்டை. அநுமதிமாத்ரம்கொண்டு அவன் ரக்ஷிக்குமென்கைக்கு ப்ரமாணம் (ஆதரேணேத்யாதி) "ஆத³ரேண யதா² ஸ்தௌதி த⁴நவந்தம் த⁴நேச்ச²யா। ததா² சேத்³ விஶ்வகர்த்தாரம் கோ ந முச்யேத ப³ந்த⁴நாத்" (ஆதரேணயதாஸ்தௌதி தநவந்தந்தநேச்சயா। ததாசேத்விஶ்வகர்த்தாரம்கோநமுச்யேதபந்தநாத்.) ஸ்தோத்ரமப்ரதிஷேத த்யோதகமென்று கருத்து. "ஆத³ரேண" (ஆதரேண) என்றதுக்குபாவம் (ஸ்தோத்ரம்பண்ணியித்யாதி.) "த⁴நவந்தம்" (தநவந்தம்) என்று - அஸ்திவிவக்ஷாயாம் மதுப்பாய், தநமுண்டானமாத்ரமென்றபடி. உத்தரார்த்தத்துக்கர்த்தம் (ஸர்வத்தையுமித்யாதி.) இவனளவன்றிக்கே யென்றது- விஶ்வகர்த்ருத்வம் தயாகார்யமாகையாலே நெகிழ்ச்சியுடையனா யிருக்குமென்றபடி.

க்ரமேணாந்வயঃ. ........................................................................*

---

## நான்காம்பாட்டு.

அரணமாவரற்றகாலைக்கென்றென்றமைக்கப்பட்டா  
ரிரணங்கொண்டதேப்பராவரின்றியிட்டாலுமஃதே  
வருணித்தென்னேவடமதுரைப்பிறந்தவன்வண்புகழே  
சரணென்றுய்யப்போகிலல்லாலில்லைகண்டீர்சதிரே.

### ஆறாயிரப்படி.

(அரணமாவர்) த்ரவ்யதாநாதிகளாலே யாபத்துக்கு பந்துக்களை சம்பாதித்துவைத்தால், அவர்களுமாபத்துவந்தால் க்ருதக்நரா யநுபக்ருதரைப்போலே யுதவார்; ஆதலால், அவர்களைவிட்டு, உபகாராபேக்ஷனன்றியே வடமதுரையிலேவந்துபிறந்து ஆபந்நரைரக்ஷிக்கும் ஸ்வபாவனானவனுடைய கல்யாணகுணங்களை சரணமாகப்பற்றுங்கோள், அதுவேசதிரென்கிறார் ........................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆபத்துக்குதவுவர்களென்றாக்கிவைத்தவர்களும், அவ்வவஸ்தையிலுதவார்கள்; அபேக்ஷாநிரபேக்ஷமாக வவதரித்துபகரிக்கு மவன்குணங்களே ரக்ஷகமாமதொழிய, வேறுகோளில்லையென்கிறார்.

அற்றகாலைக்கு-கைம்முதலற்றகாலத்துக்கு. அரணமாவர் - புகலிடமாவர். என்றென்று-என்றுபலகாலுமநுசந்தித்து. அமைக்கப்பட்டார்-அர்த்தாதிகளாலேவசீகரிக்கப்பட்டார். இரணம்-கடவது. கொண்ட - கொண்டாரோபாதி. தேப்பராவர்-துச்சராய்ப்போவர்கள். இன்றியிட்டாலும்-நாமாக்காதொழியினும். அஃதே-அவருடையவுதவாமையேசித்தம். வருணித்து-க்ருதக்நப்ரகாரம்சொல்லி. என்னே - என்னப்ரயோஜநமுண்டு. வடமதுரை-வடமதுரையிலே. பிறந்தவன்-பிறந்தவனுடைய. வண்-நிர்ஹேதுகோபகாரகமான. புகழே-சீலசௌலப்யாதிகுணங்களையே. சரண் ரக்ஷகம். என்று-என்றுநினைத்து. உய்ய - பிழைத்து. போகிலல்லால்-போமதொழிய. வேறு, சதிர்-சதிர்பாடு. இல்லை-இல்லை.

சதிராவது - அநாயாஸேந பலம்பெறலாம் ப்ரவ்ருத்தி. இன்றியிட்டாலும்-அவர்கள் நசித்தாலுமென்றுமாம். தேப்பர்-தப்ரராய், துச்சரொன்றபடி ............*

## ஈடு - நான்காம்பாட்டு.

சிலரை ஆபத்ஸகரென்று அர்த்தாதிகளாலே நெடுநாளாஶ்ரயித்தால், ஆபத்துவந்தவாறே கண்ணற்றுபேக்ஷிப்பர்கள்; நிர்ஹேதுகமாகவந்தவதரித்து ஆபத்ஸகனானவனே யாஶ்ரயணீயனென்கிறார்.

(அற்றகாலைக்கு-அரணமாவர்-என்றென்றமைக்கப்பட்டார்) கைம்முதலற்றகாலைக்கு ரக்ஷகனுவானொருவன் வேணுமென்று பலகாலுமநுசந்தித்து, தனக்கு இயற்றியுள்ளகாலத்திலே பச்சையிட்டாஶ்ரயித்து, தனக்கபாஶ்ரயமாகச் சமைத்துவைத்தவர்கள். இப்படி அர்த்தாதிகளாலே வசீகரிக்கப்பட்டவர்க ளாபத்துக்குதவும்படி யென்னென்னில் (இரணங்கொண்டதேப்பராவர்) இவனிட்டபச்சையை யிவனொன்றுசெய்தானாக நினைத்திருக்கையன்றிக்கே, தங்களுக்கு ப்ராப்தமானத்தை வாங்கினாராய், இவனுக்கியற்றி யின்றிக்கே பச்சையிடாதநாளைக்கும் “ நமக்கிட்டிலன் ” என்றுவெறுத்து, இப்படிகொடுத்தது வாங்கினாரோபாதி புல்லியராம்படியையுடையராவர். தேப்பர்-தப்ரர். சப்ரரொன்றபடி. (இன்றியிட்டாலுமஃதே) பச்சையிட்டாஶ்ரயியாவிடிலு மாபத்துவந்தால் கைவிடுவாரைக்கிடைக்கும். ஆபத்துவந்தால் கைவிடுவார்க்குப் பச்சையிட்டாஶ்ரயிக்க வேண்டாவே. அன்றிக்கே, இப்படியே இப்பச்சையிட்டவன் “நமக்குரக்ஷகன்” என்றுஶ்ரயியாநிற்கச்செய்தே, நடுவேயவன்முடிவது, அப்போதும் கீழ்ச்சொன்னதுவே பலிதமாமித்தனை. (வருணித்தென்னே) உபகரித்தார்திறத்திலே யபகாரம்பண்ணுவார்படியை யநுசந்தித்துவெறுத்து (வருணித்தென்னே) எனகிறார். இளையபெருமாள், கைகேயியுடையபடிகளை யநுசந்தித்து, “ ஆத்மகாமா ஸதா சண்டீ க்ரோதநா ப்ராஜ்ஞமாநிநீ ” (ஆத்மகாமாஸதாசண்டீக்ரோதநாப்ராஜ்ஞமாநிநீ) என்றாப்போலே சிலவற்றைச்சொல்ல; வாராய்பிள்ளாய், நீதானிவையெல்லாஞ்சொல்லுகிறது நடுவிலாய்ச்சியையே, [ ந தேऽம்பா மத்யமா தாத கர்ஹிதவ்யா கதஞ்சந ] [நதேம்பாமத்யமாதாதகர்ஹிதவ்யாகதஞ்சந] ஒருபடியாலும் நீயவளை யிவ்வார்த்தைசொல்லக்கடவையல்லை. [தாமேவ] வேணுமாகில் கை

கண்டமருந்தைச்செய்யப்பாராய். [ஐக்ஷ்வாகூரநாயஸ்யஹூதஸ்ய] [இக்ஷ்வாகுநாதஸ்யபரதஸ்ய] ஐயரோபொகட்டுமுடிந்துபோனார்; நாம்பொகட்டுப்போந்தராஜ்யத்தை யிக்குடியில் மர்யாதைகுலையாதபடியாக நோக்கிக்கொண்டு கிடந்தபிள்ளை - பரதனன்றோ விக்குடிக்குநாதன். [ஹூதஸ்ய க்ஷயாங்கூஜா] [பரதஸ்யகதாம்குரு] நாநீர்வரும்படியானவார்த்தைசொல்லப்பாராய். ஆக, உபகரித்தார் விஷயத்திலே யபகாரமாகநினைத்திருப்பார்படி யநுசந்தித்து, இவ்வர்த்தகதையைக்கிடந்து வர்ணிக்கிற வித்தால் ப்ரயோஜநமென், பச்சையிட்டமையாதவன்று மபேக்ஷிதகாலத்திலேவந்துதவுவானொருவனுண்டு, அவனையாச்ரயித்துப் பிழைத்துப்போகப்பாருங்கோள் (வடமதுரையித்யாதி) ஒருவரபேக்ஷியாதேயிருக்கச்செய்தே, இவற்றினுடைய ரக்ஷணார்த்தமாகத்தானேவந்து ஸ்ரீமதுரையிலேயவதரித்தவனுடைய நிர்ஹேதுகோபகாரகமான சௌசீல்ய சௌலப்யாதி கல்யாணகுணங்களே நமக்கு ரக்ஷகமென்றுஜ்ஜீவித்துப்போகையொழிய. (இல்லைகண்டீர்சதிரே) நெற்றிபெருத்து, பலமொன்று மின்றிக்கேயிருக்குமென்னுமது - இளிம்பிறே; நெற்றியல்பமாய், பலம்கனக்கப்பெறுமதிறே - சதிராவது. * நமோவென்னலிறே நெற்றி; * சமன்கொள் வீடிறே பலம் ......................................................................*

## ஜீயர் அரும்தபம்.

நாலாம்பாட்டு (அரணமித்யாதி) "அமைக்கப்பட்டார் - இரணங்கொண்ட" என்றுதொடங்கி, "வண்புகழேசரண்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (சிலையித்யாதி)

காலைக்கு – காலத்துக்கு. இயற்றி - சாமர்த்யமும், யோக்யதையும், உச்ச்ராயமும், அமைக்கப்பட்டார் - சமைக்கப்பட்டார். இரணம்கொண்டதேப்பராவர்-கடன்கொடுத்துத் திரும்பவாங்கினரோபாதி சப்ரராவரென்றபடி. இரணம் - ருணம். கடனென்றபடி. தேப்பர்-சப்ரர். இரணம்கொண்ட ப்ரகாரத்தை யுபபாதிக்கிறார் (இவனிட்டவித்யாதி) "தேப்பராவர்" என்றத்தை யுபபாதிக்கிறார் (இவனுக்கியற்றியித்யாதி) தப்ரர்-சப்ரர்.

இன்றியிட்டாலும்-பச்சையிடாவிட்டாலுமென்னுதல், முடிந்துவிட்டாலுமென்னுதல். "அஃதே" என்றது – "இரணங்கொண்டதேப்பராவர்" என்றவதுவேயென்றபடி. இதுசொல்லுகிறதுக்கு ப்ரயோஜநமேதென்ன ( ஆபத்துவந்தாலித்யாதி ) "அஃதே" என்றதின் விவரணம் (கீழ்ச்சொன்னவித்யாதி) அதாவது-இரணம்கொண்டதேப்பராகை.

" வருணித்தென்னே " என்றது - க்ஷேபோக்தி. இப்படி வெறுத்தபேருண்டோவென்ன ( இளையபெருமாளித்யாதி ) "[illegible]" ( ஆத்மகாமாஸதாசண்டீக்ரோதநாப்ராஜ்ஞமாநீ । அரோகாசாபிமேமாதாகைகேயீகிமுவாசச ) இத்யயோத்யாகாண்டேபரதஃ "[illegible]"

[Grantha] । [Grantha]" ( நதேம் பாமத்யமாதாதகர்ஹிதவ்யாகதஞ்சந । தாமேவேக்ஷ்வாகுநாதஸ்யபரதஸ்யகதாம் குரு ) இத்யாரண்யகாண்டேராமஃ. ஆத்மகாமா - ஸ்வார்த்தபரா. சண்டீ - அத்யந்த கோபவதீ. க்ரோதநா - ஸ்வஸம்சர்க்கேணாந்யேஷாமபிகோபஜநநீ. ப்ராஜ்ஞமாநிநீ- பண்டிதாம்மந்யமாநா. என்றாப்போலேயென்று - ஸ்ரீபரதாழ்வான்சொன்னாப்போ லே. சிலவற்றைச்சொல்லவென்றது - "[Grantha] । [Grantha]" ( பர்த் தாதஸாரதோயஸ்யாஸ்ஸாதுஸ்சபரதஸ்ஸுதஃ । கதந்நுஸாம்பாகைகேயீதாத்ருஸீக்ரு ரதர்ஸிநீ ) என்றிப்படி சிலவற்றைச்சொல்லவென்றபடி.

"[Grantha]" (கதஞ்சந) என்றதுக்கர்த்தம் (ஒருபடியாலுமித்யாதி) தேவ ரிக்ஷ்வாகுநாதராயிருக்க, பரதனை இக்ஷ்வாகுநாதனென்கிற தென்னென்ன; அந்வ ர்த்தஸம்ஜ்ஞையையுடையவனாகையாலே யவனே இக்ஷ்வாகுநாதனென்கிறார் ;(ஜய ரித்யாதி) நாநீர்வரும்படி - நாக்குக்குநீர்வரும்படி.

"வருணித்தென்னே" என்றதுக்குக் கீழ்ச்சொன்ன வர்த்தத்தை யநுவதியா நின்றுகொண்டு, மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (ஆகவித்யாதியாலும், பச் சையிட்டமையாத வித்யாதியாலும்)

வண்புகழ் - கல்யாணகுணம். வ்யதிரேகார்த்தகதந பூர்வகமாக ஸ்வபாவார் த்தம் (நெற்றிபெருத்தித்யாதிவாக்யத்வயம்) நெற்றி-ப்ரயாஸம். பகவத்விஷயத்தி லே நெற்றியல்பமாய், பலம் கனத்திருக்குமோவென்ன (நமோவென்னலித்யாதி) இளிம்பு - அசாதுர்யம்.

க்ரமேணாந்வயஃ ........................................................................*

# ஐந்தாம்பாட்டு.

சதிரமென்றுதம்மைத்தாமேசம்மதித்தின்மொழியார்
மதுரபோகந்துற்றவரேவைகிமற்றொன்றுறுவ
ரதிர்கொள்செய்கையசுரர்மங்கவடமதுரைப்பிறந்தாற்
கெதிர்கொளாளாயுய்யிலல்லாலில்லைகண்டீரின்பமே.

## ஆறாயிரப்படி.

( சதிரமென்று ) சதிராகவாழாநின்றோமென்று தங்களைத்தாங்க ளேயிசைந்து, இனியபேச்சுக்களையுடைய ஸ்த்ரீகளுடைய மதுரமான போகங்களை புஜித்தவர்களே, புஜிக்கைக்கீடான யோக்யதைகுன்றினவா றே யவர்களாலே மிகவும் பரிபவிக்கப்படுவர்; லோகமெல்லாமதிரும்படி யான ப்ரவ்ருத்திகளையுடைய வசுரர் மங்கும்படியாக வடமதுரைப்பிறந் தாற்கு ஸ்வாகதாதிகளைப்பண்ணி யெதிர்கொள்ளுமடியாரா யுய்யிலல்லா ல் வேறுசுகமில்லையென்கிறார் ........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தங்களுக்கு போக்யதயா ஸ்வீக்ருதைகளான ஸ்த்ரீகளுமுதவாத படி க்லேசிப்பர்; க்லேஶநிவர்த்தகனான க்ருஷ்ணனை யபிகமநம்பண்ணி யாஶ்ரயிக்குமதொழிய வேறுசுகமில்லையென்கிறார்.

சதிரம்-அபிமதவிஷயத்தை வசீகரிக்கவல்ல சதிரையுடையோம். என்று-என்று. தம்மை-தங்களை. தாமே-தாங்களே. சம்மதித்து - சம்வதித்துக்கொண்டு. இன்-ப்ரமுகஸரஸமான. மொழியார் - வார்த்தையையுடையரான ஸ்த்ரீகளுடைய. மதுரம்-இனிதான. போகம் - போகத்தை. துற்றவரே - பூர்ணமாகவநுபவித்தவர்களே. வைகி-காலாந்தரத்திலே. அவர்கள், மற்றொன்று - அவமாநாதிகார்யமான விபரீத பலத்தை. உறுவர்-பெறுவர். லோகத்துக்கு, அதிர்கொள்-மிகவுமதிர்த்தியைவிளைப்பிக்கையே. செய்கை-ஸ்வபாவமாகவுடைய. அசுரர்-அசுரர்கள். மங்க - நசிக்கும்படி. வடமதுரை - வடமதுரையிலே. பிறந்தாற்கு - அவதீர்ணனான க்ருஷ்ணனுக்கு. எதிர்கொள்-அபிகமநகர்த்தாக்களான. ஆளாய்-சேஷபூதராய்க்கொண்டு. உய்யிலல்லால்-உஜ்ஜீவிக்கிலல்லது. வேறு, இன்பம்-நிரதிசயசுகம். இல்லை-இல்லை.................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

தங்களைப்பெறுவிடில் தரிக்கமாட்டாதபடி ஸங்க்தைகளான ஸ்த்ரீகளாலே யாபத்துவந்தாலிகழப்படுவர்; ஆனபின்பு, ஏகப்ரகாரமாக ஸங்க்தனானவனை யாஶ்ரயிக்குமதொழிய வேறுசுகமில்லையென்கிறார்.

(சதிரமென்று) சதிராகவாழாநின்றோமென்று. "நாஞ்சதிரர், நாஞ்சதிரர்" என்றாயிற்று இருந்ததேகுடியாகத் தந்தாமைநினைத்திருப்பது. (தம்மைத்தாமேசம்மதித்து) தங்களைத்தாங்களேசம்மதித்து. தாங்களேயிசைந்து. அல்பமியற்றியையுடையனா யிருக்குமவன், "அங்கேநம்மை 'சதிரன்' என்று நினைப்பிட்டுக்கொடுவர, நாமதிலே மேலெழுத்திட்டுத்தர" என்னும்; இவ்வஸதஸ்யப்ரவ்ருத்திக்கு வேறுஸஹகரிப்பாரைக்கிடையாதே; தானேயிறேயுள்ளது. (இன்மொழியார்) இனிய பேச்சையுடையராயிருந்துள்ளவர்களுடைய. அகவாய் மயிர்க்கத்தியாயிருக்கச்செய்தேயும், ப்ரணயஸரஸமானபேச்சாலே வசீகரிக்கவல்லவர்கள். (மதுரபோகந்துற்றவரே) மதுரமானபோகத்தை, அவர்களுடனே நெருங்கபுஜித்தவர்களே. (வைகிமற்றொன்றுறுவர்) போகத்துக்குப்பாங்கான யௌவநமும், அதுக்குக்கைம்முதலான த்ரவ்யமும்போமே; பின்னையுமாசைமாறாதே; அவ்வோவிடங்களிலேபோயிருக்கும் வருவார்க்கும்விரோதியாய். முற்பட, மனிச்சிலே நாலிரண்டுபெண்ணை "போகலாகாதோ" என்பர்களே; "போகிறோம், போகிறோம்" என்றிருக்குமேபோகாதே; பின்னைவெள்ளாட்டியையிட்டு பரிபவிப்பர்கள்; அதுக்கும்போகானே; பின்னையானையிட்டெழுப்பிப்பார்ப்பர்கள்; அதுக்குமெழுந்திரான்; பின்னைக்காலைப்பற்றியிழுப்பர்கள், இவன் தூணைக்கட்டிக்கொள்ளும்; இப்படியாலவர்களாலே பரிபூதராவர்கள். விபாகத்தில் பிறக்கும் பரிபவத்தை யநுசந்தித்து

வெறுத்து, அது தன்வாயாலருளிச்செய்யமாட்டாமையாலே (மற்றென்று) என்கிறார். அங்ஙனன்றிக்கே,விபாகத்தில் நன்மையோடே தலைக்கட்டும்விஷயத்தைப்பற்றி யுஜ்ஜீவித்துப் போகப்பாருங்கோளென்கிறார் (அதிரித்யாதி) சேதநருடைய நெஞ்சுகளதிரும்படியான ப்ரவ்ருத்திகளையுடைய வசுரவர்க்கம் முடியும்படி வடமதுரையிலேவந்து திருவவதரித்தவற்கு (எதிர்கொளாளாயுய்யலல்லால்) ஆபிமுக்யம்பண்ணு மடியாரா யுஜ்ஜீவிக்குமதொழிய. அவனுக்கு நாஞ்செய்யவேண்டுவதிது-அவன்தானே மேல்விழாநின்றால், விமுகராகாதொழியு மத்தனையே வேண்டுவது. [ கூநு) தூ-ஒூணாஉவாംகூ-ஹாசு ] [ அங்யத்பூர்ணாதபாம்கும்பாத் ] பாண்டவபக்ஷபாதியாயிருக்கிற க்ருஷ்ணன் வாராநின்றான், அவனுக்கு நாட்டையுங்கொடுத்து, பொன்னையுங்கொடுத்து, நமக்காக்கிக்கொள்ளுகிறோமென்றாப்போலே, த்ருதராஷ்ட்ரன் சிலசொல்ல; அதுக்குக்கருத்து - இவற்றாலே அவனைப் படையறுத்துக் கொள்ளுகிறேனென்றாயிற்று. அவன்றான் நெஞ்சாலேநினைப்பதொன்றாய், வாயாலே வ்யவஹரிப்ப தொன்றாயிறேயிருப்பது; இத்தையறிந்த சஞ்சயன், வருகிறவனங்ஙனொத்தவனல்லன் காண், அவனுக்குவேண்டுவ திவ்வளவென்கிறான்; தான்குடிக்குந்தண்ணீரைக் குளிரவைக்கக்கடவனே, அத்தை அவன் வருகிறவழியிலே வாசலிலேவைக்கவமையும். தன் க்ருஹத்திலே அதிதி வந்து புகுந்தால் கால்கழுவுவதாக சாமாந்யசாஸ்த்ரம் விதித்தது, அதுக்கு மேற்பட அவனை வாசிக்கு விசேஷித்துச் செய்யவேண்டுவதில்லை [ கூநு) தூஉாவடுநஜநாசு ] [ அங்யத்பாதாவநேஜநாத் ] அந்தக்குடத்தில் நீரையிட்டு அவன் திருவடிகளை விளக்க வமையும், மற்றுவேண்டா. [ கூநு) தூ-ஶுலஸ்ஂவூஹாசு ] [ அங்யத்குசலஸம்ப்ரச்நாத் ] நெடுந்தூரம் வந்தவனை "நடந்த கால்கள்நொந்தவோ" என்ன ப்ராப்தமிறே. [ நவெஷூதி ] [ நசேச்சதி ] உண்டவனுக்குண்ணப்போகாதிறே; அப்படியே இவனுடைய உத்யோகத்திலே அவனுக்கு வயிறுநிறையும்; பின்பவன் செய்யுமவையடைய மிகையாயிருக்கும். (இல்லைகண்டீரின்பமே) துஃகங்களிலே சிலவற்றை சுகமென்று ப்ரமிக்கிறவித்தனைபோக்கி, இதொழிய சுகரூபமாயிருப்பதொன்றில்லை. உயிர்க்கழுவிலே யிருக்கிறவனுக்கு பிபாஸையும்வர்த்தித்து, தண்ணீருங்குடித்து, தாஹமும்சமித்தால் பிறக்கும் சுகம்போலேயிருப்பதொன்றிறே சம்சாரிகளுக்கு போகத்தால் பிறக்கும் சுகமாகிறது. ஆடுகிறபாம்பின் நிழலிலே யொதுங்கி, "அதள்ளிக்கொள்ளும்" என்றறியாதே "வெய்யிலைத்தப்பப்பெற்றோம்" என்று ஹ்ருஷ்டராயிருப்பாரைப்போலேயிறே விஷயாநுபவங்களாலே களித்திருக்கிறவிருப்பிவனுக்கு.......*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. ( சதிரமித்யாதி. ) "இன்மொழியார் மதுரபோகந்துற்றவரோ வைகிமற்றென்றுறுவர் - எதிர்கொளாளாயுய்யிலல்லா லில்லைகண்டீரின்பம்"

என்கிறவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை (தங்களையித்யாதி.) கீழ், ப்ராபகாபாசங்களைச்சொல்லிற்று ; இதில், ப்ராப்யாபாசங்களைச் சொல்லுகிறது. “வடமதுரைப்பிறந்தாற்கு” என்கையாலே - ஏகப்ரகாரஸ்திக்ததை ஸித்தம்.

“தம்மைத்தாமே” என்ற பஹுவசநத்தையுட்கொண்டர்த்தம் ( நாம்சதிரரித்யாதி. ) இருந்ததே குடியாக - எல்லாருமொக்க. சம்மதிக்கும்ப்ரகார மேதென்ன ( அல்பமித்யாதி. ) இயற்றி - த்ரவ்யாத்யாதிக்யம். (இருக்குமவன்) என்றதுக்கு, ( என்னும் ) என்றத்தோடே யந்வயம். அங்கேயென்றது - சபையிலே யென்றபடி. நம்மையென்று - ஸ்வாதிசயந் தோற்றச் சொல்லுகிறபடி. “தாமே” என்றவவதாரணார்த்தம் ( இவ்வஸதஸ்யேத்யாதி. )

மொழியினினிமையைச் சொன்னதுக்கு வ்யாவர்த்யம் ( அகவாயித்யாதி. ) இவ்விடத்திலே, “ஐய-ந்திஷ்டிவாவியொஷிதாஂ ஹ்ரூதிஹாலாஹலமேவ கேவலம்” (மதுதிஷ்ட்டதிவாசியோஷிதாம் ஹ்ருதிஹாலாஹலமேவகேவலம் ) என்றதநுசந்தேயம். “மற்று” என்றது - * மதுரபோகத்துக்கு மற்றான பரிபவமென்றபடி. “வைகிமற்றொன்றுறுவர் -” சிறிதுகாலம் சென்றவாறே பரிபவத்தையடைவர்களென்று சப்தார்த்தம். வைகி - காலாந்தரத்திலேயென்றபடி. மற்றொன்றும் ப்ரகாரமேதென்ன ( போகத்துக்கித்யாதி. ) வைகுகை - யௌவநாதிகள்கழிகை. இருந்துபோகிறானென்று உதாஸீநைகளாயிராதே, பரிபவிப்பானென்னென்ன ( வருவார்க்கும் விரோதியாய் ) என்கிறார். மனிச்சிலே - பஹுமாநத்திலே. பண்ணை - பர்யாயம். “மற்று” என்கிறதென், இன்னதென்னவொண்ணாதோவென்ன ( விபாகத்திலித்யாதி. ) விபாகத்தில் - பலவேளையில்.

அவர்களிற்காட்டி லிவனுக் கேற்றமருளிச்செய்கிறார் (அங்ஙனன்றிக்கேயித்யாதி.) உஜ்ஜீவிக்கைக் காபிமுக்யம்போருமோவென்ன (அவனுக்கித்யாதி.) விவரணம் ( அவன்தானேயித்யாதி. )

ஆபிமுக்ய சந்துஷ்டனென்னுமதுக்கு ப்ரமாணம் ( அந்யத்பூர்ணாதித்யாதி ) “அந்யத்பூர்ணாதபாம் கும்பாதந்யத்பாதாவநேஜநாத் । அந்யத்குஶலஸம்ப்ரஶ்நாந்நசேச்சதி ஜநார்த்தந:” ( அந்யத்பூர்ணாதபாம்கும்பா தந்யத்பாதாவநேஜநாத் - அந்யத்குஶலஸம்ப்ரஶ்நாந்நசேச்சதிஜநார்த்தநஃ ) இத்யுத்யோகபர்வணி ஏகோநநவதிதமே த்ருதராஷ்ட்ரம் ப்ரதிஸஞ்சயஃ. இதுக்கவதாரிகை ( பாண்டவேத்யாதி. ) படையறுத்து - ஸ்வவசமாக்கி. நாடுமுதலானவற்றைக்கொடுத்து ஸ்வவசமாக்குகை கபடமாகவேணுமோவென்ன ( அவன்றானித்யாதி. ) ஆபிமுக்யமே யிவனுக்கு வேண்டுவதென்னுமத்தை பதங்களிலே யேறிட்டுக்காட்டுகிறார் ( தான்குடிக்குமித்யாதி. ) “பாதாவநேஜநாத்” ( பாதாவநேஜநாத் ) என்றதுக்கவதாரிகை ( தன் க்ருஹத்திலேயித்யாதி. ) நடந்தகால்கள் நொந்தவோ வென்றது - திருச்சந்தவிருத்தம் அறுபத்தோராம்பாட்டு. ஸ்பஷ்டோர்த்தஃ. இச்சாபாவத்துக்கு ஹேதுவருளிச்செய்கிறார் ( உண்டவனுக்கித்யாதி. ) ப்ரக்ருதத்திலேயேதென்ன ( அப்படியேயித்யாதி. ) ஆகிலென்னென்ன ( பின்பவனித்யாதி. )

ஏதேனும் சிலசுகங்களுண்டாயிருக்க, “இல்லை” என்கிறதென்னென்ன (துஃகங்களிலேயித்யாதி.) விஷயசுகம் - சுகப்ராந்தியொழிய, வஸ்துதஃ துஃகமென்கிறார் ( உயிர்க்கழுவிலேயித்யாதி. ) “விஷயாணாம் ஸம்ஸர்காத்” ( விஷயாணாந்து ஸம்ஸர்க்காத் ) இத்யாதி வசநாபிப்ராயேண அநர்த்தபர்யவசாயியுமாமென்கிறார் (ஆடுகிறவித்யாதி.) ......................................................................................*

# ஆறாம்பாட்டு.

இல்லைகண்டீரின்பமந்தோவுள்ளதுநினையாதே
தொல்லையார்களெத்தனைவர்தோன்றிக்கழிந்தொழிந்தார்
மல்லைமூதூர்வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே
சொல்லியுய்யப்போகிலல்லான்மற்றொன்றில்லைசுருக்கே.

## ஆறாயிரப்படி.

( இல்லைகண்டீர் ) “ எம்பெருமானல்லது வேறுபுருஷார்த்தமில்லை” என்னு மிவ்வுண்மையை யுணராதே யெத்தனைவ ரிங்ஙனேமுடிந்து போனார்; நீங்களு மிங்ஙனே நசியாதே, ஆஸ்ரிதர்க்காத்மதாநம் பண்ணுகைக்காக வந்து பிறந்தருளினவனுடைய வௌதார்யத்தையே சொல்லியுய்யுங்கோள்; வேறுய்ய விரகில்லை, இது ஸங்க்ஷேபேண சொன்னோமெனகிறார். ................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், புருஷார்த்த பரிஜ்ஞாநமில்லாமல் முடிந்துபோகாதே க்ருஷ்ணனுடைய வாநந்தஜநகமான குணகீர்த்தநத்தைப் பண்ணிலல்லது வேறுஜ்ஜீவநார்த்தமாயிருப்பதொரு சங்க்ரஹமில்லையென்கிறார்.

“ 𑌸𑌰𑍍𑌵𑌂𑌦𑍁𑌃𑌖𑌮𑌯𑌂𑌜𑌗𑌤𑍍 ” ( ஸர்வம்துঃகமயம்ஜகத் ) என்கிறஜகத்திலே, இன்பம் - சுகரூபமாயிருப்பதொன்று. இல்லைகண்டீர்-இல்லைகிடீர். அந்தோ!-ஐயோ!. உள்ளது - சர்வகாலவர்த்தியான வாநந்தியாயுள்ள பகவத்ஸ்வரூபத்தை. நினையாதே - அநுசந்தியாதே. தொல்லையார்கள் - பழையகாலத்தி லுள்ளார். எத்தனைவர் - எத்தனைபேர். தோன்றிக்கழிந்தொழிந்தார் - ஜந்மமரணங்களே யாத்ரையாய்ப்போனார். ஆனபின்பு, மல்லை - நிரதிசயசம்பத் ஸம்ருத்தமாய். மூது - வாமநாவதாரந்தொடங்கி தத்ஸம்பந்தம் மாறாமல் பழையதான. ஊர்-ஊராயிராநிற்கிற. வடமதுரை - வடமதுரையிலே. பிறந்தவன் - பிறந்தவனுடைய. வண் - ஆஹ்லாதஜநகமான. புகழ் - குணங்களை. சொல்லி - கீர்த்தித்து. உய்யப்போகிலல்லால்-உஜ்ஜீவித்துப்போமதொழிய. மற்று - வேறு. சுருக்கு - சங்க்ரஹேண சொல்லலாவது. ஒன்று - ஒன்றும். இல்லை - இல்லை.............................................................*

## ஈடு - ஆறாம்பாட்டு.

நிரதிசயபுருஷார்த்தத்தை யுணராதே முன்புள்ளாரநேகர் முடிந்துபோனார்கள்; அப்படியே நீங்களும் நசியாதே, ஆஸ்ரிதர்க்காக வவதரித்து ரக்ஷிக்குமவனையே யாஸ்ரயிக்குமத்தனையல்லது, ஆத்மாவுக்கு ஹிதமில்லையென்கிறார்.

( இல்லைகண்டீரின்பம் ) “ 𑌸𑌰𑍍𑌵𑌂𑌦𑍁𑌃𑌖𑌮𑌯𑌂𑌜𑌗𑌤𑍍 ” (ஸர்வம்துঃகமயம்ஜகத்) என்கிற சம்சாரத்தில், கெடுவீர்காள், சுகலேசமுமில்லைகிடீ

கோள். ( அந்தோ! ) போக்தாக்களான வுங்களுக்கு நானுபதேசிக்கவேண்டிவதே!. ப்ரத்யக்ஷமு மகிஞ்சித் கரமாயிருக்க உபதேசிக்கிறுரிறே. ( உள்ளதுநினையாதே ) உண்டான புருஷார்த்தத்தை நினையாதே. "சுகரூபமுமாய் நித்யமுமா யிருப்பது பகவத்விஷயம்" என்றநுசந்தியாதே. உண்டானவில்லாமையை நினையாதேயென்றுகீழேகூட்டவுமாம். (தொல்லையித்யாதி) பழையராயிருப்பா ரெத்தனைபேர், உத்பத்தியானது விநாசத்தோடேகூட்ட, நடுவுள்ளநாள் புருஷார்த்தத்துக்குடலன்றிக்கே கழிந்துபோனுர். சிலபூண்டுகளுண்டாய், தோன்றின விடந்தன்னிலே நின்று தீய்ந்துபோவன; அப்படியே. ( மல்லையித்யாதி ) சம்ருத்தியை யுடைத்தாய், அவனுக்கென்றுமொக்கக் கலவிருக்கையாய்ப்போருகிற சித்தாஸ்ரமமாய், ஸ்ரீவாமநனெழுந்தருளியிருந்தும், ஸ்ரீசத்ருக்நாழ்வான்படைவீடு செய்தும், க்ருஷ்ணன்வந்தவதரித்தும், இப்படி பகவத் ஸம்பந்தம் மாறுதே போருகிறதேசமாயிற்று. ( மூதூர் ) பழையதாய் வருகிறவூர்; அங்கேவந்தவதரித்தவனுடைய வுதாரமான புகழையே வாயாலே சொல்லியுஜ்ஜீவித்துப் போமதொழிய. ( மற்றென்றில்லைசுருக்கே ) புறம்பேநின்று பரக்கக்காடுகைக்கலாவதுண் டித்தனைபோக்கி, சுருங்க வொருபாசுரத்தாலே சொல்லலாவதில்லை. ...............................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. ( இல்லைகண்டீரித்யாதி. ) "உள்ளதுநினையாதே" என்று தொடங்கி, "மற்றென்றில்லைசுருக்கு" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை ( நிரதிசயேத்யாதி ) இந்தவவதாரிகை "உள்ளதுநினையாதே" என்றதின் முந்தினவர்த்தத்திலே.

"அந்தோ!" என்றதுக்கு ஹார்த்தபாவம் ( போக்தாக்களித்யாதி. ) து:கரூபதை ப்ரத்யக்ஷமாயிருக்க உபதேசிக்கிறதென்னென்ன, ( ப்ரத்யக்ஷமுமித்யாதி ) க்ருபையாலேயென்றபடி.

விவரணம் ( சுகரூபமுமாயித்யாதி. ) உண்டானவில்லாமை - சத்யமானவில்லாமை. சம்சாரத்தினுடைய பாரமார்த்திகாகாரம் - இன்பமில்லையென்னுமதென்றபடி. த்விதீயயோஜனையில், "இன்பம் - இல்லைகண்டீர்" என்றதுள்ளது, அத்தை நினையாதே யென்று சப்தார்த்தம். உக்தத்துக்கு த்ருஷ்டாந்தம் ( சிலபூண்டுகளித்யாதி. )

மல்லை - சம்ருத்தி. அதாவது - பகவத்ஸம்பந்தம் மாறுமை. கலவிருக்கை- கொலுவிருக்கை. என்றுமொக்க விது கலவிருக்கையோவென்ன ( ஸித்தாஸ்ரமமாயித்யாதி. ) "சுருக்கே" என்றதுக்குபாவம் ( புறம்பேயித்யாதி. ) காடுகைக்கலாவது - வாய்கைக்கும்படி வர்ணிக்கலாவது. வாய்க்குக் கேடாய்ச்சொல்லுகையென்றபடி.

இல்லைகண்டீரொன்றுதொடங்கி, போகிலல்லால் - சுருக்கு - மற்றென்றில்லையென்றந்வயம்.............................................................*

# ஏ ழா ம் பா ட் டு.

மற்றொன்றில்லைசுருங்கச்சொன்னோமாநிலத்தெவ்வுயிர்க்குஞ்
சிற்றவேண்டாசிந்திப்பேயமையுங்கண்டீர்களந்தோ
குற்றமன்றெங்கள்பெற்றத்தாயன்வடமதுரைப்பிறந்தான்
குற்றமில்சீர்கற்றுவைகல்வாழ்தல்கண்டீர்குணமே.

## ஆறாயிரப்படி.

(மற்றொன்றில்லை) இச்சுருக்கை மிகப்பரவாமே வ்யக்தமாக்குகிறார். வேறுவக்தவ்யமில்லாதபடி ஸங்க்ஷேபேணத்மோஜ்ஜீவநோபாயத்தையெல்லார்க்கும்சொன்னோம். இதுக்கதிகாரிநியமமும், காலநியமமும், தேசநியமமுமில்லை. "இவ்வுபாயந்தான் துஷ்கரம்" என்றுகுறைவுபடவும்வேண்டா, ஸ்ம்ருதிமாத்ரமேயமையும். இது நிஷ்பலமாகிலோவென்னில்; இது செய்தால் முன்னமநர்த்தமில்லையிறே. ஆதலால், ஆஶ்ரிதர்க்காக வடமதுரையிலேபிறந்தானான பசுமேய்க்கு மாயனுடைய ஹேயப்ரத்யநீகமான கல்யாணகுணங்களை யநுசந்தியுங்கோள், இதுதானே யமையுமென்னும்படி போக்யமாய், யுக்தமுமாயிருக்குமென்கிறார் ...... ............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சிந்தாமாத்ரசுலபனான க்ருஷ்ணகுணாநுசந்தாநம்பண்ணி, காலதத்த்வமுள்ளதனையும் வாழ்கை ப்ராப்தமென்கிறார்.

மற்று-வேறு. ஒன்று-வக்தவ்யமாயிருப்பதொன்று. இல்லை-இல்லை. சுருங்க-ஸங்க்ரஹேண. சொன்னோம்-உங்களுக்குச்சொன்னோம். மா-பெரிய. நிலத்து-பூமியிலே. எவ்வுயிர்க்கும்-எல்லாவாத்மாக்களுக்கும். சிற்றவேண்டா-பரக்கவாயாசப்படவேண்டா. சிந்திப்பே-சிந்தாமாத்ரமே. அமையும்-அமையும். கண்டீர்கள் - " ஆயாஸஸ்மரணேகோஸ்ய " ( ஆயாஸஸ்மரணேகோஸ்ய ) என்று ப்ரசித்தமன்றோ. அந்தோ! - ஐயோ!. இந்தசுகரமார்க்கம் பலவ்யாப்தமல்லவாகிலும், குற்றம்-அநர்த்தகரம். அன்று-அல்லவே. இப்படி ஸ்மர்த்தவ்யமேதென்னில்; எங்கள் - ஆஶ்ரிதபவ்யனாய். பெற்றம்-அஜ்ஞமானபசுக்களுக்கு. தாயன் - ரக்ஷகமாய்க்கொண்டு. வடமதுரை-வடமதுரையிலே. பிறந்தான்-அவதீர்ணனானவனுடைய. குற்றமில் - அபேக்ஷாநிரபேக்ஷமாக ஆஶ்ரிதஸம்ரக்ஷணைக ப்ரயோஜநமான. சீர்-குணங்களை. கற்று - உபதேசமுகத்தாலே யிப்படி வ்யுத்பத்திபண்ணி. வைகல் - " ஸர்வாந்காமாந்ஸமஶ்நுதே " (ஸர்வாந்காமாந்ஸமஶ்நுதே) என்கிறபடியே யாவதாத்மபாவிகுணாநுபவம்பண்ணி. வாழ்தல்கண்டீர் - வாழ்கைகிடிகோள். உங்களுக்கு, குணம் - ஸ்வபாவமாகையும், ப்ராப்தமும் ........ .....................................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

பகவத்ஸமாஶ்ரயணத்தினுடைய வெளிமையையு மினிமையையுமருளிச்செய்கிறார்.

(மற்றொன்றில்லை) இத்தோடொக்க வேறெண்ணலாவதில்லையெ ன்னுதல், இப்போதித்தைச்சொல்லி வேறொருபோது வேறொன்றைச் சொல்லுகிறோனென்றிருக்கவேண்டாவென்னுதல். (சுருங்கச்சொன்னோம்) இதுதன்னைப்பரப்பறச்சொன்னோம். ப்ரதிபத்திக் கவிஷயமாம்படி சொல் லுகையன்றிக்கே, சுக்ரஹமாகச்சொன்னோம். (மாநிலத்து) இதுக்கதிகா ரிகள் சம்சாரத்திலே. இவ்வர்த்தத்துக்கணியார் பரமபதத்திலுள்ளாரா கிலும், உபதேசத்துக்கதிகாரிகள் சம்சாரத்திலுள்ளாரென்கை. (எவ்வு யிர்க்கும்) இததிக்ருதாதிகாரமன்று, சர்வாதிகாரம். (சிற்றவேண்டா) ஆ யாசிக்கவேண்டா. சிற்றுதல் - சிதறுதலாய், பரக்கவேண்டாவென்கை. ஒருவ்யாபாரம்வேண்டாவென்றபடி. (சிந்திப்பேயமையுங்கண்டீர்கள்) உ க்திநிரபேக்ஷமான சிந்தாமாத்ரமேயமையுங்கிடிகோள். (அந்தோ) "நற்ச ரக்குக்கிட்டினதனையும் கைவிடுகைக்குடலாவதே!" என்று - அந்தோ! என்கிறார். (குற்றமன்று) கீழ்ச்சொன்னநன்மைகளொன்றுமில்லையேயா கிலும், இதுசொன்னாலு முங்கள்தலையில் முந்தற முன்னமிடிவிழாது. "யொவஸாஃஸ்உஷ்யதாங-ஹூாதெ௷வெதிக்ருஷ்ணெதி" (யோவஸாத ஸ்ஸஉச்யதாம்-ப்ராதர்த்தேவேதிக்ருஷ்ணேதி) இவ்வுபாயத்துக்குப் பல மில்லையானாலும், இதுதானே ப்ரயோஜநம்போருமென்கை. (எங்கள்பெ ற்றத்தாயன் வடமதுரைப்பிறந்தான்) வந்துபிறப்பதற்குமுன்னே பெற்ற த்தாயன்போலேகாணும். வந்தவதரிப்பதாக சங்கல்பித்ததில் புரையற்றி ருந்தபடி. ஆஸ்ரிதர்க்காக வடமதுரைப்பிறந்தானான பசுமேய்க்குமாயனெ ன்னுதல். பெற்றத்தாயன் - பசுமேய்க்குமிடையன். (குற்றமில்சீர்கற்று) ஹேயப்ரத்யநீகமான கல்யாணகுணங்களை யப்யஸித்தென்னுதல்; பிறப் பிலும் சேஷ்டிதங்களிலும் புரையற்றிருக்குமென்னுதல். "ஃஹம்வொ வாந்தவொஜாதஃ" (அஹம்வோபாந்தவோஜாதஃ) (வைகல்வாழ்தல்கண் டீர்குணமே) கற்பதொருக்காலாய், பின்பு வாழ்ச்சி நித்யமாயிருக்குமாயி ற்று; இதொன்றுமேகுணம்; இதொழிந்ததடையவப்ராப்தம்...... ......*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (மற்றொன்றில்லையித்யாதி) "சிற்றவேண்டாசிந்திப்பேயமை யும்; குற்றமன்று" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (பகவத்ஸமாஶ்ரயணே த்யாதி.)

இத்தோடொக்கவென்றது - "சிந்திப்பேயமையும்" என்றத்தைப்பற்ற. ப்ர திபத்தியோடொக்க வெண்ணலாவதோருபாயாந்தரமில்லையென்று முந்தினவர்த்த த்துக்குபாவம்; என்வார்த்தையை "விப்ரலம்பகவாக்யம்" என்றிருக்கவேண்டா, "ஆப்தம்" என்று விஸ்வஸியுங்கோளென் றிரண்டாமர்த்தத்துக்குபாவம். "சுருங்க" என்றதுக்கு - சப்தத்தினுடைய சங்க்ரஹமும், அர்த்தத்தினுடைய சுக்ரஹத்வமுமெ ன்றிரண்டர்த்தம். இத்தையருளிச்செய்கிறார் (இதுதன்னையித்யாதிவாக்யத்வயத்தா லே) "சம்சாரத்திலே" என்கிறதென், நித்யவிபூதியிலேயன்றோ வுள்ளதென்ன (இ வ்வர்த்தத்துக்கித்யாதி) "எவ்வுயிர்க்கும்" என்றதுக்குபாவம் (இததிக்ருதேத்யாதி.)

“சிற்ற” என்றால் ஆயாசத்தைக்காட்டுமோவென்ன (சிற்றுதலித்யாதி) “சிந்திப்பே” என்றவவதாரணார்த்தம் (உக்திநிரபேக்ஷமானவித்யாதி) “அந்தோ” என்றதுக்குபாவம் (நற்சரக்கித்யாதி) கெட்டினதனையும் - கெட்டவிருக்கச்செய்தேயும்.

கீழ்ச்சொன்னநன்மைகளாவன - சர்வோபாயாதிகதமத்வ ப்ரதிபத்திவிஷயத்வ சுலபத்வ சர்வாதிகாரத்வாநாயா சத்வோக்திநிரபேக்ஷத்வரூபமான விவ்வாநுகூல்யங்கள். உக்தார்த்தத்துக்கு சம்வாதம் (யோவஸாத இத்யாதி) “𑌪𑍍𑌰𑌾𑌤𑌰𑍍𑌥𑍇𑌵𑍇𑌤𑌿𑌕𑍃𑌷𑍍𑌣𑍇𑌤𑌿𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑍇𑌤𑌿𑌚𑌜𑌲𑍍𑌪𑌤𑌾𑌮𑍍 । 𑌮𑌧𑍍𑌯𑌾𑌹𑍍𑌨𑍇𑌚𑌾𑌪𑌰𑌾𑌹𑍍𑌣𑍇𑌚𑌯𑍋𑌵𑌸𑌾𑌦𑌸𑍍𑌸𑌉𑌚𑍍𑌯𑌤𑌾𑌮𑍍” (ப்ராதர்த்தேவேதிக்ருஷ்ணேதிகோவிந்தேதிசஜல்பதாம் । மத்யாஹ்நேசாபராஹ்ணேசயோவஸாதஸ்ஸஉச்யதாம்.) அவஸாத: - து:கம். “குற்றமன்று” என்றதுக்கு பாவாந்தரம் (இவ்வுபாயத்துக்கித்யாதி) ஏகார்த்தமாகவுமாம். பெற்றம் - கன்றும், பசுவும். பிறந்தபின்பு பெற்றத்தாயனென்னாதே “பெற்றத்தாயன்பிறந்தான்” என்றதுக்குபாவம் வந்துபிறப்பதற்கித்யாதி) பலிதம் (வந்தவதரிப்பதாகவித்யாதி) த்விதீயார்த்தத்துக்கு, “சீர்” என்று - குணகார்யசேஷ்டிதங்களைச்சொல்லுகிறது. “பிறப்பில்புரையற்றிருக்கும்” என்றதுக்குப்ரமாணம் ( அஹம்வோபாந்தவஇத்யாதி ) “𑌨𑌾𑌹𑌂𑌦𑍇𑌵𑍋𑌨𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑍋𑌨𑌯𑌕𑍍𑌷𑍋𑌨𑌚𑌦𑌾𑌨𑌵𑌃 । 𑌅𑌹𑌂𑌵𑍋𑌬𑌾𑌨𑍍𑌧𑌵𑍋𑌜𑌾𑌤𑍋𑌨𑍈𑌤𑌚𑍍𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌮𑌤𑍋𑌨𑍍𑌯𑌥𑌾” ( நாஹந்தேவோநகந்தர்வோநயக்ஷோநசதாநவ: । அஹம்வோபாந்தவோஜாதோநைதச்சிந்த்யமதோந்யதா ) இதிஸங்காம்குர்வதோகோபாந் ப்ரதிஶ்ரீக்ருஷ்ண:. “கற்றுவைகல்வாழ்தல்” என்றபதச்சேர்த்திக்குபாவம் (கற்பதொருக்காலாயித்யாதி) “வாழ்தல்கண்டீர்குணம்” என்றந்வயித்து, அவதாரணார்த்தம் (இதொன்றுமேயித்யாதி) குணம் - ப்ராப்தம்.

“சுருங்கச்சொன்னோம்” என்றதுக்கு, “ சிந்திப்பேயமையும் ” என்றத்தோடேயந்வயம் ..............................................................................*

---

# எட்டாம்பாட்டு.

வாழ்தல்கண்டீர்குணமிதந்தோமாயவனடிபரவிப்
போழ்துபோகவுள்ளகிற்கும்புன்மையிலாதவற்கு
வாழ்துணையாவடமதுரைப்பிறந்தவன்வண்புகழே
வீழ்துணையாப்போமிதனில்யாதுமில்லைமிக்கதே.

## ஆறாயிரப்படி.

(வாழ்தல்) தன்னுடைய கல்யாணகுணாநுசந்தாநைகாத்மதாரணரான சீரியர்க்கு வாழ்துணையாக வடமதுரையிலேவந்து பிறந்தருளின சர்வேஶ்வரனுடைய கல்யாணகுணாநுசந்தாநத்துக்குமேற்பட்ட புருஷார்த்தோபாயமில்லையென்கிறார் ..............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநந்யப்ரயோஜநரான வதிகாரிகளுக் குஜ்ஜீவநஹேதுவான க்ருஷ்ணனுடைய குணங்களை யபிநிவேசித்தநுபவிக்குமதொழிய, இதில்விஞ்சினதொருவாசியில்லையென்கிறார்.

வாழ்தல்-வாழுகிற. இது-இதுவன்றே. குணம் - எல்லார்க்குங்குணமாவது. கண்டீர்-இதுலோகப்ரசித்தமன்றே. அந்தோ! - ஐயோ!, வாழும்ப்ரகாரமறிகிறதில்லையே. எதென்னில்; மாயவன் - ஆச்சர்யகுணசேஷ்டிதனான சர்வேஶ்வரனுடைய. அடி-திருவடிகளை. பரவி - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸ்தோத்ரம்பண்ணி. போழ்துபோக-காலக்ஷேபம்பண்ணவேணுமென்று. உள்ளகிற்கும் - நினைக்கவல்லவர்களாய். புன்மை-ப்ரயோஜநாந்தரசம்பந்தமாகிறபுல்லிமை. இலாதவர்க்கு - இல்லாதவர்களுக்கு. வாழ்-ஸ்வரூபாநுரூபமானவாழ்ச்சிக்கு. துணையா - உபாயபூதனுகைக்காக. வடமதுரை-வடமதுரையிலே. பிறந்தவன்-வந்துபிறந்த க்ருஷ்ணனுடைய. வண்-ஆஶ்ரிதாநுபாவ்யமான. புகழே-குணங்களையே. வீழ்-அபிநிவேஶவிஷயமான. துணையா - போகசஹாயமாய்க்கொண்டு. போம்-நடக்கிற. இதனில்-இதில். மிக்கது-விஞ்சினது. யாதும்-ஏதேனுமொருவாழ்வும். இல்லை-இல்லை.

வீழ்துணை-விழுமியதுணையென்றுமாம் ..........................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

அவதாரத்துக்கு நிதாநத்தைச்சொல்லி, அவனையேரக்ஷகனாகப் பற்றுமிதொழிய, வேறுவிலக்ஷணமாயிருப்பதோ ரபாஶ்ரயமில்லையென்கிறார்.

(வாழ்தல்கண்டீர்குணமிது) அவன்குணங்களை யநுசந்தித்து வாழுமிதுவே கிடிகோள்யுக்தம். (அந்தோ) கரும்புதின்னக் கூலிகொடுப்பாரைப்போலே, இவர்களையபேக்ஷிக்கவேண்டுவதே யெனக்கு. வாழ்ச்சியுங்களதாயிருக்க, இரந்துதிரிவேன் நானுவதே!. (மாயவனித்யாதி) சௌந்தர்யசீலாதிகளா லாஶ்சர்யபூதனாயிருந்துள்ள வஸ்துவினுடைய குணஜிதராய், ப்ரீதியாலே யவன்றிருவடிகளை யக்ரமமாகவேத்தி, அத்தாலேகாலக்ஷேபம்பண்ணுவதாக வத்யவசிக்கவல்லரான நன்மையையுடையவர்கள் சீரியவர்கள். அநந்யப்ரயோஜநரான ஶ்ரீவைஷ்ணவர்களுக்கு. * தெரித்தெழுதிவாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போதுபோக்குமவர்கள். "இந்தமாயவனடிபரவுகை, சூதுசதுரங்கத்தோபாதி காலக்ஷேபமாக்குகிற புன்மையில்லாதவர்கள்" என்றுபட்டர். (வாழ்துணையித்யாதி) புன்மையுடையவர்களு மகப்படக்கழித்து அதுவேபோதுபோக்காக நின்றபின்பு, முதலிலே யதுகுடிபுகுராதவனுக்கு ஆஶ்ரிதசம்ஶ்லேஷமொழிய வேறுப்ரயோஜநமில்லையிறே. அவர்கள் தன் குணங்களையநுபவித்து வாழ்கைக்குத்துணையாக வடமதுரையிலேவந் தவதரித்தவனுடைய. அவதாரப்ரயோஜநம் " வரித்ராணாயஸாய-ஏநாழ" (பரித்ராணாயஸாதூநாம்) என்றிறேயிருப்பது. (வண்புகழித்யாதி) அவனுடைய கல்யாணகுணங்களையே யாசைப்படுந்துணையாகப்பற்றுமிதுபோக்கி. (வீழ்துணை) ஆசைப்படுந்துணை. "தாம்வீழ்வார் தம்வீழப்பெற்றவர்" என்னக்கடவதிறே ஆசாயுக்தனை. (இதனில்) இதிற்காட்டில். (யாதுமில்லை மிக்கதே) இதனில் மேலாயிருப்பதொன்றுண்டாய், "இதில்நன்று" என்னவேணுமே; இதுக்கு மேலாயிருப்பதொன்றுமில்லை.....................*

என்கிறபடியே, உணர்ந்தருளும்போதை யழகுகாணவேணும். (உன்தாமரைமங்கையும்நீயும்) "பகவத்விஷயத்தில் முதலடியிடுவார் பிராட்டிபுருஷகாரமாகப் பற்றக்கடவது" என்னுமத்தாலே, "பங்கயத்தாள்திருவருள்" என்றார்கீழ்; அடிமைசெய்யுமிடத்திலு மிருவருமானசேர்த்தியிலே யடிமைசெய்வதாகச் சொல்லிப்போரு மத்தைப்பற்றச்சொல்லுகிறதிங்கு. (இடங்கொள்மூவுலகும்) இடமுடைத்தான சகலலோகங்களிலுள்ளாரும். (தொழவிருந்தருளாய்) அநந்யப்ரயோஜநரைப்போலே முறையிலேதொழ நீயிருக்குமிருப்பை நான்கண்டநுபவிக்கவேணும். (திருப்புளிங்குடிக்கிடந்தானே) நீசுலபனானபின்பு, எல்லாம் செய்தருளவேணும். அபேக்ஷிதங்களெல்லாஞ் செய்தருளக்கடவதானால், அதிலேகதேசஞ்செய்தால், குறையுஞ்செய்து தலைக்கட்டவேண்டாவோ. (திருப்புளிங்குடிக்கிடந்தானே - இருந்தருளாய்) சாய்ந்தருளின வழகுகாட்டினாய், இருந்தருளினபோதை யழகையுங்காட்டியருளாய்.......................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (கிடந்தநாளித்யாதி) "உன்திருவுடம்பசைய - எத்தனைகாலங்கிடத்தி - தாமரைமங்கையும்நீயும் - இருந்தருளாய்" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (திருவுடம்பசையவித்யாதி)

"கிடந்தநாள்" என்கையாலே - கிடந்தகாலத்துக்கொரு முடிவில்லையென்று தோற்றுகிறது. அக்காலதைர்க்யத்துக்கொருஹேது வருளிச்செய்கிறார் (கிடந்ததோரித்யாதி) ஆஸ்ரிதரபேக்ஷைக்காகக் கண்வளர்ந்தருளுகிறவன்றுதொடங்கி யொருபடிப்படக் கண்வளர்ந்தருளினாய்; சுகுமாரமான வுன்திருமேனி யலசமாம்படி யின்னமெத்தனைகாலம் கண்வளர்ந்தருளக்கடவையென்று சப்தார்த்தம். (கிடந்ததோர்கிடக்கையித்யாதி) திருமாலை. (கிடந்தவாறெழுந்திருந்துபேசுவாழி) திருச்சந்தவிருத்தம். ஸ்பஷ்டோர்த்த:.

இதுக்கொரு முடிவுண்டாகவொண்ணுதோவென்கிறவிது, "எத்தனைகாலம் கிடத்தி" என்கிறவிவர்க்கு விவக்ஷிதமாகையாலே, அம்முடிவுண்டாவது, ஆஸ்ரிதன், "எழுந்திருக்கவேணும்" என்றபேக்ஷிக்குமளவுமென்கிறார் (இனியொருவனித்யாதி) கிடக்கையிருக்கையெல்லா மாஸ்ரிதரிட்டவழக்காயிருக்குமோவென்ன (எல்லாசேஷ்டிதங்களுமித்யாதி) "ஸம்ஸ்ரிதார்த்தஞ்சகர்த்த" (ஸம்ஸ்ரிதார்த்தஞ்சகர்த்த) என்னக்கடவதிறே. வாதராஜஸ்தவே. அசைய - அலசும்படி. அலசமாம்படி. இத்தால்பாவம் (அர்த்திகளேயேயித்யாதி.)

"தொடர்ந்து" என்றவிசேஷணத்துக்குபாவம் (இத்தசையிலித்யாதி) ஸத்ருஷ்டாந்தமாகவிவரணம் (பெருமாளித்யாதி) தொடர்ந்து - அறவிதாநம்பண்ணியென்றபடி. வடிம்பிட்டு-ப்ரேரித்து. அடிமையிற்றென்மையேதென்ன (ஆத்மாவுக்கித்யாதி) அப்படி ஸ்வாபாவிகமோவென்ன (ஆவிஸ்யுரித்யாதி) அஷ்டஶ்லோகீ, "அகாரார்த்தாயைவஸ்வமஹமதமஹ்யம்நவஹோநராணாம்நித்யாநாம்"
(அகாரார்த்தாயைவஸ்வமஹமதமஹ்யம்நவஹோநராணாம்நித்யாநாம்) இத்யாதி. "கைங்கர்யவிதய:" (கைங்கர்யவிதய:) என்கிறதில், விதியென்றது-விதாநமாய்,

கைங்கர்யக்ரியையைச்சொல்லுகிறது. "குடிகுடிவழிவந்தாட்செய்யுந்தொண்டர்" என்றும், "வழிவருகின்றவடியர்" என்றும், "தொலலடிமைவழிவரும்தொண்டர்" என்றும், தம்முடையவயோக்யதையையென்றபடி.

"தாமரை" என்றவேகவசநத்திலேநோக்காகபாவம் (பொய்கையித்யாதி) தடம் - பொய்கை, பரப்பும். கண்செறியிட்ட - மறைத்த. "நீயெழுந்து" என்கைக்கு, எழுந்திருக்குமது அழகாயிருக்குமோவென்ன (சீரியவித்யாதி) அறிவுற்று - உணர்ந்து.

கீழே "பங்கயத்தாள்" என்றுவைத்து. பின்னையும் "தாமரைமங்கை" என்கிறதென்னென்ன (பகவத்விஷயத்திலித்யாதி)

"திருப்புளிங்குடிக்கிடந்தானே - இருந்தருளாய்" என்றுகூட்டிபாவம் (சீலபனனவித்யாதி) விவரணம் (அபேக்ஷிதங்களித்யாதி) "கிடந்தானே - இருந்தருளாய்" என்றுகூட்டி, உத்தத்தை ஸ்புடமாகக்காட்டுகிறார் (சாய்ந்தருளினவித்யாதி) ஏகதேசம் செய்கையாவது - திருப்புளிங்குடியிலேகிடக்கை.

உன்திருவுடம்பசைய - கிடந்தநாள் கிடந்தாயெத்தனைகாலம் கிடத்தியென்றுதொடங்கி, திருப்புளிங்குடிக்கிடந்தானே - இருந்தருளாயித்யன்வயः ... .........*



# நான்காம்பாட்டு.

புளிங்குடிக்கிடந்துவரகுணமங்கையிருந்துவைகுந்தத்துணின்று
தெளிந்தவென்சிந்தையகங்கழியாதேயென்னையாள்வாயெனக்கருளி
நளிர்ந்தசீருலகமூன்றுடன்வியப்பநாங்கள்கூத்தாடிநின்றார்ப்பப்
பளிங்குநீர்முகிலின்பவளம்போற்கனிவாய்சிவப்பநீகாணவாராயே.

## ஆறாயிரப்படி.

(புளிங்குடி) உன்னுடைய காருண்யத்தினாலே யெனக்காகப் புளிங்குடிக்கிடந்து, வரகுணமங்கையிருந்து, வைகுந்தத்துள்நின்று, தெளிந்தவென்சிந்தை யகங்கழியாதே யென்னையடிமைகொண்டருளினாப்போலே, இன்னமு முன்னுடைய பரமகாருண்யத்தினாலே சோதிவாய்திறந்து, தாமரைக்கண்களாலேநோக்கி, திருவடிகளை யென்றலையிலேவைத்தருளி, பிராட்டியோடேகூட விருந்தருளி, "ஆழ்வாரபேக்ஷிதத்தைச்செய்தருளினான்" என்று இந்தகல்யாணகுணத்தைக்கண்டு லோகமெல்லாம் விஸ்மயப்பட நாங்கள் கூத்தாடி நின்றாரவாரப்பட, நிறமழகிதான மேகத்திலே யுண்டானபவளம்போலே யழகியதிருப்பவளத்தில் சிவப்போடேகாணலாம்படி நீவரவேணுமென்கிறார் .......................... ...........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதார்த்தமாகக் கிடந்திருந்து நின்றென்னை யடிமைகொண்ட தர்ஶநீயமான வடிவோடேகூட நான் காணும்படி வரவேணு மென்கிறார்.

புளிங்குடி - திருப்புளிங்குடியிலே. கிடந்து - கண்வளர்ந்து. வரகுணமங்கை - திருவரகுணமங்கையிலே. இருந்து - இருந்து. வைகுந்தத்துள் - ஸ்ரீவைகுண்டத்திலே. நின்று-நின்று. தெளிந்த-"இவை நமக்காகப்பண்ணின வ்ருத்திகளிறே" என்றுதெளிந்த. என் - என்னுடைய. சிந்தையகம் - நெஞ்சுக்குள்ளே நின்று. கழியாதே - போகாதே. உன்னுடைய சீலாதிகுணங்களைப்ரகாசிப்பித்து, என்னை - என்னை. ஆள்வாய் - அடிமைகொண்டவனே. எனக்கு - என்க்கு. அருளி - விசேஷமாகக்ருபைபண்ணி. உன்னுடைய, நளிர்ந்த - சீதளமான. சீர் - சீலாதிகளை. உலகமூன்று - லோகத்ரயமும். உடன் - ஏககண்டமாய்க்கொண்டு. வியப்ப - "ஓராஶ்ரிதபக்ஷபாதமே" என்று விஸ்மயப்படும்படியாகவும். நாங்கள் - அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு காணவிருக்கிற நாங்கள். கூத்தாடி-ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணி. நின்று - நின்று. ஆர்ப்ப - ஆர்ப்பரவம்பண்ணும்படியாகவும். பளிங்கு - தெளிந்த. நீர் - நீராலேநிறைந்த. முகிலின் - காளமேகத்திலே. பவளம்போல் - பவளக்கொடிபடர்ந்தாப்போலே. கனி - ஸ்நிக்தமானநிறத்தையுடைத்தான. வாய் - திருவதரம். சிவப்ப - சிவந்துதோன்றும்படி. காண - நாங்கள்கண்டநுபவிக்கும்படியாக. நீ - நீ. வாராய் - நடந்துவந்தருளவேணும்..............................*

## ஈடு - நான்காம்பாட்டு.

திருப்பதிகளிலே சந்நிஹிதனா யென்னை யிவ்வளவாக்கினாப்போலே, மேலுமென்னபேக்ஷிதஞ்செய்தருளவேணுமென்கிறார்.

(புளிங்குடியித்யாதி) நானிரக்கவோ விவையெல்லாம் நீசெய்தது. பட்டர், திருநாராயணபுரத்தில் வெறுப்பிலே, "தேவர்ஸ்வாதந்த்ர்யமெல்லாங்காட்டினாலும் பின்னையும்பண்ணின விஶ்வாஸத்தில் குலைத்தலின்றிக்கே யிருக்கும்படி எலும்புராமுடைய வெம்பெருமானார் போல்வார்பக்கல் செய்யுமத்தை எலியெலும்பனான வடியேன்பக்கலிலும்செய்வதோ, 'மஹாவிஶ்வாஸபூர்வகம்' என்கிறபடியே, ஏதேனுமொன்று வந்தாலும் 'இங்குத்தைக்கொன்று வருவதாய்வந்ததன்று, இதுக்கடி நம்முடையபாபம்' என்று பண்ணினவிஶ்வாஸம் குலையாதார் விஷயத்திலே செய்யுமத்தை, இதுதானே ஹேதுவாக நெஞ்சுநெகிழும்படி யிளநெஞ்சர்பக்கலிலு மத்தைச்செய்யக்கடவதோ" என்றாராம். திருப்புளிங்குடியிலே "கிடந்ததோர்கிடக்கை" என்னுமழகைக்காட்டியும், வரகுணமங்கையிலே "பிரானிருந்தமைகாட்டினீர்" என்னுமிருப்பழகைக்காட்டியும், ஸ்ரீவைகுண்டத்திலே "நிலையாரநின்றான்" என்னும் நிலையழகைக்காட்டியுமன்றோ வென்னைப்புகுரநிறுத்திற்று. (தெளிந்தவென்சிந்தை யகங்கழியாதே) "அயோக்யன்" என்றகலாதபடி * கண்கள்சிவந்திலே என்ஹ்ருதயத்தைத்தெளிவித்தும் அத்தைக்கைவிடாதே நிரந்தரவாஸம்பண்ணி. (என்னையாள்வாய்) என்னை "அயோக்யன்" என்றகலவுமொட்டாதே, பிரிவாற்றாமையால் முடியவுமொட்டாதே; குணஜ்ஞாநத்தாலே தரிப்பித்துக்கொண்டுபோந்தாய். (எனக்கருளி) புறம்புபோகாதபடி வளைத்து நீயும் ஜீவநமிட்டாவிட்டா லெங்ஙனேதரிக்கும்படி. (நளிர்ந்தவித்யாதி) அநுச

ந்தித்தார் ஹ்ருதயம் குளிரும்படியான சீலகுணத்தை. "ஆழ்வாரபேக்ஷி தஞ்செய்தருளினன்" என்கிறகல்யாணகுணத்தை. (உலகமூன்றுடன்வியப்ப) விலக்ஷணரோடவிலக்ஷணரோடு வாசியற வெல்லாருமொக்கவநுபவித்து விஸ்மயப்படும்படியாக. (நாங்களித்யாதி) நாங்கள் விஸ்மயப்பமௌவன்றிக்கே, விக்ருதராம்படி. இவர்க்கு விஸ்மயப்பட வவஸரமில்லையாயிற்று. (பளிங்குநீர்முகிலின்பவளம்போல்கனிவாய்சிவப்ப) தெளிந்தநீரை முகக்கையாலே தர்ஸநீயமான மேகமானது பவளத்தைப்பூத்தாப்போலேயாயிற்று திருவதரத்தில் பழுப்பிருப்பது. இவர் சம்ப்ரமத்தைக்கண்டு அவன்பண்ணும் ஸ்மிதமிருக்கிறபடி. (நீகாணவாராயே) என்னெதிரே யுன்னழகுகாணவரவேணும். அவன்கூத்திருக்கிறபடி. அவன்மாறிமாறியிடுமெடி, வல்லாராடினுப்போலேகாணுமிருப்பது. பிள்ளையழகியமணவாளவரையரைப் பெருமாளொருநா ளருளப்பாடிட்டு, "நாமிங்ஙனே நடக்கிறோம், நீயிதுக்கீடாக ஆடிக்காண்" என்ன; "தம்பிரானே, என்னலங்நடைக்கீடாக ஆடப்போமோ, [ கானகம்படியுலாவியுலாவியித்யாதி ] தேவருடையகுழலோசையைக்கேட்டவாறே, பாடல்தவிர்ந்தார்கள், தேவருடைய ஸ்வாபாவிகமானநடைக்குத் தங்களுடைய சிக்ஷாபலத்தாலுண்டான ஆடல்தவிர்ந்தார்கள்; குரக்குக்கைகொடுகூழ்துழாவி அடியேன் தேவர்திருமுன்னே ஆடவல்லேனே" என்றாராம் ....................*

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு (புளிங்குடியித்யாதி) "புளிங்குடிக்கிடந்து" என்றுதொடங்கி, "எனக்கருளி" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (திருப்பதிகளிலேயித்யாதி) இவ்வளவாக்குகை - இந்தப்ராவண்யத்தைவிளைக்கை.

"வைகுந்தத்துள்நின்று" என்னுமளவுக்கும்பாவம் (நானிரக்கவித்யாதி.)

"தெளிந்தவென்சிந்தை" என்றதுக்கு - "கிரயோவர்ஷதாராபி꞉" (கிரயோவர்ஷதாராபி꞉) இத்யாதிப்படியே, எத்தனை துꞏகங்கள்வந்தாலும் கலங்காத நெஞ்சென்று விவக்ஷித்து,அதுக்கைதிஹ்யம் (பட்டரித்யாதி) விவரணம் (மஹாவிஸ்வாஸேத்யாதி) திருநாராயணபுரத்தில் வெறுப்பாவது - எம்பெருமான்திருமேனிக்கு மழிவுவந்து, பிள்ளை திருநறையூரரையரும் திருநாட்டுக்கெழுந்தருளினத்தால் வந்தது꞉கம். எலும்புரமுடைய - சக்தியுடைய. மஹாவிஸ்வாஸமுடையவென்றபடி. எலியெலும்பனை-அல்பசக்திகனை. விஸ்வாஸமாந்த்யமுடையனை வென்றபடி.

"நானிரக்கவோ நியிவையெல்லாஞ்செய்தது" என்கிறவாக்யத்தில் ஹ்ருதிக்ருதமான வர்த்தவிசேஷங்களை விசதமாகவருளிச்செய்கிறார் (திருப்புளிங்குடியிலேயித்யாதி.)

"தெளிந்த" என்றதுக்கர்த்தாந்தரம் (அயோக்யனித்யாதி) ஆரும்ப்ரகாரமேதென்ன (அயோக்யனென்றித்யாதி)

"எனக்கருளி" என்றுதொடங்கி மேலுக்கெல்லாம்பாவம் (புறம்பித்யாதி.)

நளிர்ந்த - சீதளமான. * சீருக்குக்குளிர்த்தியேதென்ன (அநுசந்தித்தாரித்யாதி) * சீராவதேதென்ன (ஆழ்வாரித்யாத) விலக்ஷ்ணர் - இந்த்ராதிகள். அவிலக்ஷணர் - பூமியிலுள்ளார். "உடன்" என்றதுக்கர்த்தம் (வாசியறவென்றது)

"நாங்கள்" என்று - ஆத்மநிபஹுவசநம், இவர்க்கு விஸ்மயப்படவேண்டாவோவென்ன (இவர்க்கித்யாதி)

ஸ்படிகம்போலே தெளிந்த நீரையுடைய காளமேகத்தில் பவளம் பூத்தாப்போலே யிருக்கிற கனிவாயானது சிவந்துதோன்றும்படி யென்று சப்தார்த்தம். "நாங்கள் கூத்தாடிநின்றார்ப்ப" என்றவநந்தரம், "கனிவாய்சிவப்ப" என்றதுக்குபாவம் (இவர் சம்ப்ரமத்தையித்யாதி)

"நாங்கள் கூத்தாடிநின்றார்ப்ப - வாராய்" என்றபதச்சேர்த்தியால் பலித்தபாவம் (அவன்கூத்திருக்கிறபடியென்று) அவன்வருவது கூத்தோவென்ன (அவன்மாறிமாறியித்யாதி) "நடக்கை - கூத்து" என்னுமதுக்கு ஸம்வாதம் (பிள்ளையித்யாதி) "அவன் நடைக்கிடாக வாட்டப்போகாது" என்கைக்குப்பாசுரம் (கானகமித்யாதி) பெரியாழ்வார்திருமொழி. கானகம்படி - வநபூமி. பாசுரத்துக்கர்த்தம் (தேவருடையவித்யாதி) குரக்குக்கை - குரக்குவலித்தகை. குரக்கு - குரக்குவாதம்.

புளிங்குடிக்கிடந்தென்றுதொடங்கி, அடைவேயர்வயம்.....................*

---

# ஐந்தாம்பாட்டு.

பவளம்போற்கனிவாய்சிவப்பநீகாணவந்துநின்பன்னிலாமுத்தந்
தவழ்கதிர்முறுவல்செய்துநின்றிருக்கண்டாமரைதயங்கநின்றருளாய்
பவளநன்படர்க்கீழ்ச்சங்குறைபொருநற்றண்டிருப்புளிங்குடிக்கிடந்தாய்
கவளமாகளிற்றினிடர்கெடத்தடத்துக்காய்சினப்பறவையூர்ந்தானே.

## ஆறாயிரப்படி.

(பவளம்போல்) வருமிடத்தில், ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்காகப் பெரியதிருவடிமேலேறிவந்தருளினாப்போலே, கனிவாய்சிவப்ப நீகாணவந்து நின்பன்னிலாமுத்தந்தவழ் கதிர்முறுவல்செய்து, நின்திருக்கண் தாமரைதயங்க நின்றருளாயென்கிறார்........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்முன்னே யெழுந்தருளிவந்து மந்தஸ்மிதம்பண்ணிக்கொண்டு நின்றருளவேணுமென்கிறார்.

பவளம் - பவளத்தினுடைய. நன் - செறிந்த. படர்க்கீழ் - பாரத்தின்கீழே. சங்கு-சங்குகளானவை. உறை - வர்த்திக்கும்படியான. பொருநல் - திருப்பொருநலையுடைய. தண் - ஶ்ரமஹரமான். திருப்புளிங்குடி - திருப்புளிங்குடியிலே. கிடந்தாய் - கண்வளர்ந்தருளினவனாய். கவளம் - கவளங்கொள்ளுகையே ஸ்வபாவமான, மா - பெரிய. களிற்றின் - கஜேந்த்ரனுடைய. இடர் - ஆயிரம்தேவஸம்வத்ஸரம் நிராஹாரனாய் நின்றுக்லேசித்ததுஃகம். கெட - போம்படியாக. தடத்து - அந்தத்தடாகத்திலே. காய் - விரோதிவிஷயத்திலே வெவ்விய. சினம்-சினத்தையுடைய. பறவை - பெரியதிருவடியை. ஊர்ந்தானே - நடத்திக்கொண்டுவந்தவனே. பவளம்போல் - திருப்பொருநலில் பவளப்படரும் சங்கும் செறிந்தாப்போலே. க

ளி - ஸ்நிக்தமான. வாய் - திருவதரமானது. சிவப்ப-சிவந்துதோன்ற. நின் - உன். பல் - பல்லாய். நிலா - நிற்கிற. முத்தம் - முத்தம்பார்க்கில். கதிர் - கதிரை. தவழ்- உடைத்தாம்படி. முறுவல்செய்து - முறுவல்செய்துகொண்டு. ஸ்ரீகஜேந்த்ரன்முன் புவந்தாய்போலே, காண - நானுங்காணும்படி. நீ - நீ. வந்து - ஸத்வரனாய்வந்து. நின்-உன்னுடைய. திரு - அழகிய. கண் - திருக்கண்களாகிற. தாமரை - தாமரையானது. தயங்க - விளங்கும்படி. நின்றருளாய் - ப்ரீதிதோன்ற நின்றருளவேணும்.

படர் - பற்றை..................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குவந்து தோற்றினாப்போலேவந்து தோற்றியருளவேணுமென்கிறார்.

(பவளமித்யாதி) "அவாக்யநாதர:" (அவாக்யநாதர:) என்கிறபடியே, ஒன்றுக்கும் விக்ருதனாகாதநீ, அநுகூலதர்ஶநத்தாலே யகவாயில் பந்தந்தோற்ற விக்ருதனாய் ஸ்மிதம்பண்ணிநிற்கும்படியைக் காணவேணும். (நின்பன்னிலாமுத்தம்) பல்லாகிற நிலாவையுடைய முத்துநிரையானது. (தவழ்கதிர்முறுவல்செய்து) (கதிர்-தவழ்-முறுவல்செய்து) கதிருள்ளடங்காதே புறம்பேதவழும்படி. முத்தத்திலே பன்னிலாக்கதிர் தவழும்படி. முத்தம்-அதரம். கதிர்புறப்படும்படி முறுவல்செய்து. (நின் திருக்கண்டாமரைதயங்க நின்றருளாய்) கண்ணினுடைய ஸ்மிதமிருக்கிறபடி. தயங்குகையாவது - அப்போதுபிறந்தவொளியாதல், கடல்சலித்தாப்போலேயசைந்துவருகிறபடியைச்சொல்லிற்றாதல். (நின்றருளாய்) முந்துறநாலடிவந்து, பின்னையதுவும் மாட்டாதே ஸ்தப்தனாய்நிற்கும் நிலை காணவேணும்.

(பவளமித்யாதி) நல்லபவளப்படரின்கிழே சங்குகள் நிர்ப்பாதமாய்வர்த்திக்கிற திருப்பொருநலையுடைத்தாய், ஶ்ரமஹரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே. படர்—தூறு. அவ்வூரில் பதார்த்தங்களுக்கு, பாதகத்துக்கு பயப்பட்டுவர்த்திக்குமதில்லையாயிற்று. அத்தேஶஸ்வபாவமிதுவாயிருக்க, "எனக்குன்னைக்கிடைக்குமோ, கிடையாதோ" என்று நான் பயப்படும்படியிருக்கிறதென்.

(கவளமித்யாதி) கவளங்கொண்டிருப்பதான பெரியவானை. கவளங்கொண்டவென்றவித்தால் - மதமுதிதமென்கை. இதுக்குமுன் பிடர்பட்டறியாதவானை. (இடர்கெட) "வாராயென்னாரிடரைநீக்காய்" என்று, தன்வாயாலே "ஆரிடர்" என்னும்படியிறே பட்டவிடரின்கனம். "ஆனையின்துயரம்" என்று நெஞ்சுளுக்கும்படியிறேபட்டது. (தடத்து) தன்னிலமல்லாதபொய்கையிலே க்ஷுத்ரபதார்த்தத்தின்கையிலே யகப்பட்டு ப்ரதிக்ரியையின்றிக்கே யிருக்கும்படியான வாபத்துப்போம்படியாக. தடமென்று - கரைக்கும், பொய்கைக்கும்பேர். ( காய்சினப்பறவையூர்ந்தானே ) ப்ரதிபக்ஷத்தைக்காயுஞ்சினத்தையுடைய பெரியதிருவடியை,

அவன்வேகம்போராமை அவனைப்போரித்துக்கொண்டுவந்து தோற்றிற்றிலையோ. அவ்வானையின் தசைகிடாயென்தசை; அதுக்குத்தோற்றினாப்போலே யென்முன்னேவந்து தோற்றியருளவேணும் ..................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (பவளம்போலித்யாதி) "கவளமாகளிற்றினிடர்கெடத்தடத்துக்காய்சினப்பறவையூர்ந்தானே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (ஸ்ரீகஜேந்த்ரேத்யாதி.)

ஸ்மிதத்துக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார் (அவாகீத்யாதி) அவாகி - வார்த்தைசொல்லக்கடவனன்றிக்கே யிருக்குமவன், அநாதரஃ - ஆதர்த்தவ்யவிஷயமில்லாமையாலே அநாதரித்திருக்குமவனிதிஶ்ருத்யர்த்தஃ. பவளம்போலே ஸ்நிக்தமான திருவதரமானது சிவந்துதோன்ற, அத்தை நான்காணும்படி நீவந்தென்று சப்தார்த்தஃ

முந்தினவர்த்தத்துக்கு, "நிலா" என்று - ஒளியாய், திருமுத்துக்கு விசேஷணமாய், பல்லாகிற நிலாவையுடைய திருமுத்து நிரையினுடைய கதிரானது தவழும்படி முறுவல்செய்தென்றபடி. அர்த்தாந்தரம் (முத்தத்திலேயித்யாதி) அதாவது - "நிலா" என்றும், "கதிர்" என்றும் - ஒளியாய், இரண்டாலும் - மிக்கதேஜஸ்ஸைச்சொல்லி, பல்லினுடைய மிக்கதேஜஸ்ஸானது, முத்தத்திலே - அதரத்திலே, தவழும்படி முறுவல்செய்தென்றபடி. அதரத்திலே கதிர்தவழுகையாவது - கதிர் புறப்படுகை.

பதச்சேர்த்தியால் பலித்தபாவம் (கண்ணினுடையவித்யாதி) "காணவந்து" என்றத்தோடே, "நின்றருளாய்" என்றத்தையுங்கூட்டியர்த்தம் (முந்துறவித்யாதி)

"நன் - பவளம் - படர்க்கீழ்" என்றன்வயிப்பது. படர் - தூறு. இத்தால் பாவம் அவ்வூரிலித்யாதி) ஹார்த்தபாவம் (அத்தேஶஸ்வபாவமித்யாதி)

•"கவளங்கொண்ட" என்றத்தால் பலித்தபாவம் (கவளங்கொண்டவித்யாதி.) "மதமுதிதம்" என்றதுக்குபாவம் (இதுக்குமுன்பித்யாதி) "மாகளிற்றினிடர்" என்றதுக்கு - களிற்றினுடைய பெரியவிடரொன்று விவக்ஷித்து, அப்படி பெரியவிடருண்டோவென்ன; ப்ரமாணம் (வாராயித்யாதி) சிறியதிருமடல். ஆரிடர் - மிக்கவிடர். ஆர் - மிகுதி. இடர் - துஃகம். ப்ரமாணாந்தரம் (ஆனையின்துயரமித்யாதி) நெஞ்சுளுக்கும்படி - ஈடுபடும்படி. களிற்றினிடர் கெடவென்னுதே, "தடத்து" என்று விசேஷித்ததுக்குபாவம் (தன்னிலமித்யாதி) காய்கை - ஹிம்ஸிக்கை. சினம் - கோபம். "இடர்கெட" என்றதிலே நோக்காகபாவம் (அவ்வானையித்யாதி) "ஊர்ந்தானே" என்றதிலே நோக்காகபாவம் (அதுக்கித்யாதி.)

பவளநன்படர்க்கீழென்றுதொடங்கி, காய்சினப்பறவையூர்ந்தானே-நீ பவளம்போல் கனிவாய்சிவப்ப - காணவந்து, நின்பன்னிலாவித்யாரப்ய, நின்றருளாயித்யந்வயஃ....................................................................................*

# ஆறம்பாட்டு.

காய்சினப்பறவையூர்ந்துபொன்மலையின்மீமிசைக்கார்முகில்போல
மாசினமாலிமாலிமானென்றங்கவர்படக்கனன்றுமுன்னின்ற
காய்சினவேந்தேகதிர்முடியானேகலிவயற்றிருப்புளிங்குடியாய்
காய்சினவாழிசங்குவாள்விற்றண்டேந்தியெம்மிடர்கடிவானே.

## ஆறாயிரப்படி.

(காய்சினப்பறவையூர்ந்து) உம்முடைய மநோரதங்களுக்கு ப்ரதிபந்தகங்களில்லையோ, சஹஸா முடியுமோவென்னில்;

என்னுடைய மநோரதப்ரதிபந்தகங்களைப் போக்குகைக்காக வன்றோ, சங்க சக்ர கதா சார்ங்காதி திவ்யாயுதங்களை யேந்தி யருளியிருக்கிறது; ஆனபின்பு, பொன்மலையின்மீமிசைக் கார்முகில்போலே காய்சினப் பறவையூர்ந்து, மாலி சுமாலி மால்யவத்ப்ரப்ருத்யசுரநிரஸநம் பண்ணியருளினாப்போலே யிந்த ப்ரதிபந்தகத்தையும் நீயேபோக்கி யென்னுடைய மநோரதத்தையும் முடித்தருளவேணுமென்கிறார்.........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உகவாதார்முன்னேயகப்படப் பெரியதிருவடியைமேற்கொண்டு சென்று நின்றநீ, உகந்துகாணவாசைப்பட்ட வென்முன்னேயப்படி யவனைமேற்கொண்டுவந்து நின்றருளவேணுமென்கிறார்.

பொன் - கநகமயமான. மலையின் - மஹாமேருவின். மீமிசை - மேலேபடிந்த. கார்முகில்போல - காளமேகம்போலே. காய் - விரோதிவிஷயத்திலேவெவ்விய. சினம் - சீற்றத்தையுடைய. பறவை - பெரியதிருவடியை. ஊர்ந்து - நடத்திக்கொண்டு. காய் - ப்ரதிபக்ஷங்களிலே காலாக்நிகல்பமான. சினம் - சினத்தையுடைய. ஆழிசங்குவாள்வில்தண்டு - ஸ்ரீபஞ்சாயுதத்தையும். ஏந்தி - ஏந்தி. மா - பெரிய. சினம் - சினத்தையுமுடைய. மாலி - மாலி. மான் - மஹானான. மாலி - சுமாலி. என்று - என்றுப்ரஸித்தரான. அவர் - அவர்கள். அங்கு - அந்தயுத்தபூமியிலே. பட - நசிக்கும்படி. “காலாக்நிஸத்ருஶக்ரோதே” (காலாக்நிஸத்ருஶக்ரோதே) என்கிற கணக்கிலே, கனன்று - பெரியசீற்றத்தோடே. முன் - உகவாதார்முன்னே. நின்ற - இவ்வழகைக்காட்டி நின்றவனாய். “அங்கருளில்லாத்தன்மையாளன்” என்னும்கணக்கிலே, காய் - விரோதிகளுக்குதாஹகமான. சினம் - க்ரோதகுணத்தையுடைய. வேந்தே - ஸ்வாமியாய். கதிர் - விரோதிவர்க்கம்மடிகையாலே யொளிவிடுகிற. முடியானே - திருவபிஷேகத்தையுடையவனாய். ஆஶ்ரிதார்த்தமாக, கலி - சம்ருத்தமான. வயல் - வயலையுடைய. திருப்புளிங்குடியாய் - திருப்புளிங்குடியிலே வர்த்திப்பானாய். அவ்வழியாலே, எம் - எங்களுடைய. இடர் - அநுபவாலாபரூபமான து:கத்தை. கடிவானே - கழிக்கக்கடவனாயிருக்கிறவனே.

அந்த வாஹநத்தோடு மாயுதங்களோடும் திருவபிஷேகத்தோடும் நான்காணும்படியாகவந்து நின்றிருக் கண்டாமனாதயங்க நின்றருளாயென்று கீழேயந்வயம்*

## ஈடு - ஆறும்பாட்டு.

உம்முடைய வபேக்ஷிதங்கள் செய்யவொண்ணுதபடி ப்ரதிபந்தகங்கள் ப்ரபலமன்றேவென்னில்; மாலி, சுமாலி, மால்யவான், இவர்களிலும் வலிதோ வென்ப்ரதிபந்தகமென்கிறுர்.

(காய்சினப்பறவையூர்ந்து) ப்ரதிபக்ஷத்தி லுனக்குக் கண்ணேடிலும் கண்ணற்றழியச்செய்யும் பெரியதிருவடியைநடத்தி. (பொன்மலையின்மீமிசைக்கார்முகில்போல) அப்போதிருக்கும்படி. மேருவைக்கினிய காளமேகம் படிந்தாப்போலேயாயிற்றிருப்பது. இப்போதிதுசொல்லுகிறது - பெரியதிருவடி முதுகிலிருப்பைக் காண்கைக்காக. (மாசினமாலி) பெரியசினத்தை யுடையனுய்க்கொண்டுவந்தமாலி. (மாலிமான்) மஹாஜ்ஞனமாலி. சுமாலியென்றபடி. (என்றங்கவர்பட) என்கிறவர்களங்கே முடியும்படியாக. (கனன்றுமுன்னின்ற) சீறி, அவர்கள்முன்னேநின்ற. வடிவைக்கண்டபோதே யெதிரிகள் முடியும்படியாயிறே வீரமிருப்பது. (காய்சினவேந்தே) திருநாமம். காயுஞ்சினத்தையுடைய நிர்வாஹகனே. (கதிர்முடியானே) விளங்காநின்ற திருவபிஷேகத்தை யுடையவனே. நீரக்ஷணத்துக்கு முடிசூடியிருக்க, நானிழக்கவோ. (கலிவயல் திருப்புளிங்குடியாய்) நீ தூரஸ்த்தனுய்த்தானிழக்கிறேனே. சம்ருத்தமானவயலையுடைய திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே. (காய்சினவாழியித்யாதி) காயுஞ்சினத்தையுடைய திருவாழிமுதலான திவ்யாயுதங்களை தரித்தது ஆஶ்ரிதருடைய வாபத்தைப் போக்குகைக்காகவன்றே. "எம்மிடர்கடிவானே - திருக்கண்டாமரைதயங்கநின்றருளாய்" என்றுகீழிற்பாட்டிலே யிப்பாட்டுக்கு க்ரியை.......................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. (காய்சினமித்யாதி.) "மாசினமாலிமாலிமான்" என்று தொடங்கி, "கனன்று" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (உம்முடையவித்யாதி.)

"காய்சினம்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (ப்ரதிபக்ஷத்திலித்யாதி.) அன்றிக்கே, "காய்சினப்பறவை, காய்சினவேந்தே" என்றபதங்களைக்கடாக்ஷித்து பாவமாதல். கண்ணற்று - நிர்த்தயமாய். கண் - க்ருபை. இப்போதிதுசொல்லுகிறதென்றது - வகுத்துச்சொல்லுகிறதென்றபடி. மீமிசை - மேலே. கினிய - கபளீகரிக்க.

மாலியையும் சுமாலியையுஞ்சொன்னது - மால்யவானுக்கு முபலக்ஷணம். சுமாலியும் மால்யவானு மோடிப்போகையாலே, "அவர்பட" என்று - தேஜோவதத்தைச் சொல்லுகிறது. "மான்மாலி -" மஹாஜ்ஞனமாலி. "என்று - அவர் - அங்கு - பட -" என்று ப்ரசித்தரானவர்கள் அந்யுத்தபூமியிலே படவென்றுசப்தார்த்தம். கனன்று - சீறி. ஹிம்ஸியாதே, சீறி முன்னேநிற்பானென்னென்ன (வடிவையித்யாதி.) அர்வர்த்தநாமமென்கிறுர் (காயும்சினத்தையித்யாதி.)

இதுக்குபாவம் (நீ ரக்ஷணத்துக்கித்யாதி.)

கலி - சம்ருத்தி. "திருப்புளிங்குடியாய்" என்றதுக்குபாவம் (நீ தூரஸ்த்தனு யித்யாதி.)

"எம்" என்று - ஆஶ்ரிதரைச்சொல்லுகிறது. இப்பாட்டுக்கு க்ரியையைக் காட்டுகிறார் (எம்மிடரித்யாதி.)

பொன்மலையின் மீமிசைக்கார் முகில்போல-காய்சினப்பறவையூர்ந்து-காய்சினவாழிசங்கு வாள்விற்றண்டேந்தி-மாசினமாலிமாலிமானென்று-அவர்-அங்குபடக்கனன்று முன்னின்ற காய்சினவேந்தே யென்று தொடங்கி, திருப்புளிங்குடியாய்-எம்மிடர்கடிவானே-நின்திருக்கண்டாமரை தயங்க நின்றருளா யித்யந்வய:.*

## ஏழாம்பாட்டு.

எம்மிடர்கடிந்திங்கென்னையாள்வானேயிமையவர்தமக்குமாங்கனையாய்
செம்மடன்மலருந்தாமரைப்பழனத்தண்டிருப்புளிங்குடிக்கிடந்தாய்
நம்முடையடியார்கவ்வைகண்டுகந்துநாங்களித்துளநலங்கூர
விம்மடவுலகர்காணநீயொருநாளிருந்திடாயெங்கள்கண்முகப்பே.

### ஆறாயிரப்படி.

(எம்மிடர்) உத்கர்ஷாபகர்ஷவிபாகமின்றியே சர்வாத்மாக்களுக்கும் நீயல்லது வேறு ரக்ஷகருளரோ; ஆனபின்பு, உனக்கு நல்லராயிருப்பார் நீயிருந்தருளு மிருப்பைக்கண்டால் படும்பாடுகண்டு நாங்கள்வாழும்படியாக, இந்தலோகத்திலுள்ளவர்கள் காணும்படி யெங்கள் கண்ணெதிரே நீ யொருநாளிருந்திடா யென்கிறார். ......................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அளவிலிகளான வெங்களோடு, அளவுடையாரோடு வாசியற ரக்ஷகனான நீ, அசாதாரணசேஷபூதரான சூரிகளநுபவிக்கிற கிளர்த்தியைக்கண்டு நாங்களுகக்கும்படி யெங்கள் கண்முகப்பே யிருந்தருள வேணுமென்கிறார்.

எம் - எங்களுடைய. இடர் - அவித்யாதி க்ருதமான சகல து:கங்களையும். கடிந்து - போக்கி. இங்கு-இந்த பூமியிலே வைத்து. என்னை-என்னை. ஆள்வானே - அடிமைகொண்டு போருமவனாய். இமையவர்தமக்கும் - அநிமிஷரான ப்ரஹ்மாதிதேவர்களுக்கும். ஆங்கு - அங்கு. அனையாய் - அப்படி அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகமாக இஷ்டப்ராப்தியைப் பண்ணிக்கொடுத்து ரக்ஷிக்குமவனாய். செ - சிவந்த. மடல் - இதழ். மலரும் - மலருகிற. தாமரை - தாமரையையுடைத்தான. பழனம் - நீர்நிலங்களையுடைய. தண் - குளிர்ந்த. திருப்புளிங்குடி - திருப்புளிங்குடியிலே. கிடந்தாய் - ஆஶ்ரிதார்த்தமாகக் கண்வளர்ந்தருளுகிறவனே. நம்முடை - நம்முடையாரென்னும்படி. அடியார் - உனக்கசாதாரண சேஷபூதரான சூரிகளுடைய. கவ்வை - அநுபவஜநிதமான கோலாஹலத்தை. கண்டு - கண்டு. நாம் - நாங்கள். உகந்து-உகந்து. களித்து - ஆநந்திகளாய். உளம் - நெஞ்சிலே. நலம் - ப்ரேமமானது.

கூர - வர்த்திக்கும்படியாக. மடம் - வாசியறியாத. இ - இந்த. உலகர் - லோகத்தாரும். காண-காணும்படி. நீ-நித்யசூரிகளை யென்றுமிருந்தநுபவிப்பிக்கிற நீ. ஒருநாள் - ஒருநாளாகிலும். எங்கள் கண்முகப்பே - எங்கள் கண்முகப்பே. இருந்திடாய் - இருந்தருளவேணும்..............................................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

துர்ப்பலரோடு ப்ரபலரோடு வாசியற ரக்ஷகனனநீ, நாங்கள் வாழும்படி கண்ணெதிரே யொருநாளிருக்கவேணுமென்கிறார்.

(எம்மிடர்கடிந்து) எங்களுடைய ஸாம்ஸாரிக ஸகலதுःகங்களையும்போக்கி. (இங்கென்னையாள்வானே) பகவத்ஜ்ஞாநத்துக்கடைவில்லாத விஹலோகத்திலே யென்னை யடிமைகொள்ளுகிறவனே. (இமையவர்தமக்குமாங்கனையாய்) அகிஞ்சநரான வெங்களுக்கே யன்றிக்கே, “ஈஶ்வரோஹம்” (ஈஶ்வரோஹம்) என்றிருக்கிற ப்ரஹ்மாதிகளுக்கு மங்கப்படி நிர்வாஹகனானவனே. (செம்மடலித்யாதி) சிவந்தமடல்மலரா நின்றுள்ள தாமரைகளையுடைய நீர்நிலங்களை யுடைத்தாய், ப்ரமஹரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே. உள்ளும்புறம்புமெல்லாம் தாமரையாயிற்று.

(நம்முடையித்யாதி) உன்னடியா ருன்னையநுபவிக்கிற வாரவாரத்தைக்கண்டு நாங்களுகந்து, அந்தவுகப்புத் தலைமண்டையிட்டு, ஹ்ருதயத்திலே ஸ்நேஹமானது மேன்மேலென மிக்குவர. (இம்மடவுலகர்காண) இந்தஸம்ஸாரத்திலறிவுகேடராய், இடக்கைவலக்கையறியாதவர்களும் கண்ணாலே காணும்படியாக. (நீயொருநாளிருந்திடாயெங்கள்கண்முகப்பே) எங்கள்கண்வட்டத்திலே யொருநாளிருந்தருளவேணும். நித்யசூரிகளுக்கு ஸதாதர்ஶநவிஷயமானநீ, ஒருநாளெங்கள்கண்ணுக்கு விஷயமாயிருந்தா லாகாதோ; உன்னுடைய தர்ஶந மதிக்ருதாதிகாரமாக வேணுமோ..............................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (எம்மிடரித்யாதி.) “என்னையாள்வானே, இமையவர்தமக்குமாங்கனையாய் - எங்கள் கண்முகப்பே - இருந்திடாய்” என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை (துர்ப்பலரோடித்யாதி.) “எம்” என்கையாலே (துர்ப்பலரோடென்றது.) “இமையவர்” என்கையாலே (ப்ரபலரோடென்றது.)

“இங்கு” என்று விசேஷித்ததுக்குபாவம் (பகவத்ஜ்ஞாநத்துக்கித்யாதி.) ஆங்கு - அந்த லோகத்திலே. அனையாய் - அப்படிப்பட்டவனே யித்யர்த்தः. இமையவர்க்குமென்னாதே, “தமக்கும்” என்று விசேஷித்ததுக்குபாவம் (அகிஞ்சநரானவித்யாதி.)

“செம்மடல்மலருந்தாமரை” என்று - புறத்தியில் தாமரையைச்சொல்லி, “கிடந்தாய்” என்று - அவனைச் சொன்னதுக்குபாவம் (உள்ளுமித்யாதி.)

"நம்முடை -" உம்முடைய வென்றபடி. உன்னடியாரென்றது - திருப்புளிங்குடியில் ஸ்ரீவைஷ்ணவர்களை. கவ்வை - ஆரவாரம். நலம் - ஸ்நேஹம். கூர - மிக்குவர.

மடப்பம் - அஜ்ஞாநம்.

ஓீழ்வாக்ய விவரணம் (நித்யசூரிகளுக்கித்யாதி.) "எங்கள்" என்றதுக்குபாவம் (உன்னுடையவித்யாதி.)

எம்மிடரித்யாதி, க்ரமேணாந்வயः...................................*

## எட்டாம்பாட்டு.

எங்கள்கண்முகப்பேயுலகர்களெல்லாமிணையடிதொழுதெழுதிறைஞ்சித்
தங்களன்பாரத்தமதுசொல்வலத்தாற்றலைத்தலைச்சிறந்துபூசிப்பத்
திங்கள்சேர்மாடத்திருப்புளிங்குடியாய்திருவைகுந்தத்துள்ளாய்தேவா
விங்கண்மாஞாலத்திதனுளுமொருநாளிருந்திடாய்வீற்றிடங்கொண்டே.

### ஆறாயிரப்படி.

(எங்கள்) "நீர்சொல்லிற்றெல்லாம்திருநாட்டிலேசெய்கிறோம்" என்றோ பேசாதிருந்தருளுகிறது, அங்ஙனே செய்தருளவமையாது, எங்கள்கண்ணெதிரே லௌகிகரெல்லாரு முன்திருவடிகளிரண்டையும் நிரந்தரமாகத்தொழுது க்ருதார்த்தராய், தங்களுடைய ஸ்நேஹாநுகுணமாகத் தங்களுடைய சக்த்யநுரூபமான சொற்களாலே மிகவும் மேல்விழுந்து கொண்டாட, இந்தலோகத்திலே யித்திருப்புளிங்குடியிலே பிராட்டியும் நீயுங்கூட வொருநா ளிருந்திடாயென்கிறார். ..............................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அந்த விபூதியிலன்றியே, சகல லோகங்களுங்கண்டு உன் திருவடிகளிலே விழுந்து தொழுதுவாழும்படி, இந்த விபூதியிலும் திருப்புளிங்குடியிலே யுன்வாசிதோற்ற வெழுந்தருளி யிருக்கவேணுமென்கிறார்.

திங்கள் - தேவலோகத்தில் மேலெல்லையிலே வர்த்திக்கிற சந்த்ரன். சேர் - சேரும்படி யோங்கின. மாடம் - மாடங்களையுடைய. திருப்புளிங்குடியாய்-திருப்புளிங்குடியிலே வர்த்திப்பானாய். திருவைகுந்தத்து - திருவைகுந்தத்திலே. உள்ளாய் - எழுந்தருளி நிற்பானாய். தேவா - இந்த சௌலப்ய தேஜஸ்ஸையுடையனானவனே. எங்கள் கண்முகப்பே-எங்கள் கண்முகப்பே. உலகர்கள்-லோகத்திலுள்ளார். எல்லாம் - எல்லாரும். அடி - உன்திருவடிகள். இணை - இரண்டையும். தொழுது - தொழுது. எழுது - எழுவதாய்க்கொண்டு. இறைஞ்சி - பாரதந்த்ர்யம் தோன்றும்படி ஸஸம்ப்ரமராய். தங்கள் - தங்களுடைய. அன்பு - பக்தியானது. ஆர-வர்த்தியாநிற்க. அத்தாலே, தமது - தங்களுடைய. சொல்வலத்தால் - உக்திபலாநுரூபமாக. தலைத்தலைச்சிறந்து - ஒருவர்க்கொருவர் அஹமஹமிகையாலே மேல்விழுந்து. பூசி

ப்ப - ஸ்பஹுமாந ஸ்தோத்ரங்களைப்பண்ணும்படி. இ - இந்த. கண் - இடமுடைத்தாய். மா - நீ வருகைக்கீடாக ஶ்லாக்யமான, ஶ்ரீமத்தான. ஞாலத்து - பூமியிலே. இதனுளும் - திருப்புளிக்குடிக்குள்ளேயும். வீற்றிடங்கொண்டு - உன்மேன்மையிடங்கொண்டு தோன்றும்படி. ஒருநாள்-ஒருநாள். இருந்திடாய்-இருந்தருளவேணும்.*

## ஈடு - எட்டாம்பாட்டு.

பரமபதத்திலேயன்றோ விருப்பழகுகாட்டலாவதென்ன; அவ்விருப்பைத் திருப்புளிங்குடியிலே யொருநாளிருந்தருளவேணுமென்கிறார்.

(எங்களித்யாதி) எங்கள்கண்முகப்பே - இருக்கவேணும். அது செய்யுமிடத்தில், லோகத்திலுள்ளாரடங்க, திருவடிகளிலுண்டான சேர்த்தியழகுகண்டு திருவடிகளிலே விழுவதெழுவதாய்க்கொண் டாஶ்ரயித்து. (தங்களன்பார) தங்கள் ப்ரேமம் மிக்குவர. (தமது சொல்வலத்தால்) சக்த்யநுரூபமான சொற்களாலேயென்னுதல்; தாந்தாஞ்சொல்லவல்லவளவிலேயென்னுதல்; “ யதாஜ்ஞாநந்துவக்ஷ்யாமி புருஷந்தம்ஸநாதநம்” (யதாஜ்ஞாநந்துவக்ஷ்யாமி புருஷந்தம்ஸநாதநம்) என்னக்கடவதிறே. அதாவது - “நூறுபிராயம்புகுவீர், பொன்னாலே பூணூலிடுவீர்” என்றாப்போலே சொல்லுகை. வங்கிப்புரத்துநம்பி “விஜயஸ்வ”. (விஜயஸ்வ) என்ன, ஆண்டான் சொன்னவார்த்தையை நினைப்பது. (தலைத்தலைச்சிறந்துபூசிப்ப) ஒருவர்க்கொருவர் மேல்விழுந்து மிகவுமாஶ்ரயித்துக் கொண்டாட. (திங்களித்யாதி) சந்த்ரனுக்கு இதஸ்ததஸ்ஸஞ்சரிக்கையாலுண்டான விளைப்பெல்லா மாறும்படியிருக்குமாயிற்று மாடங்களினுடையவோக்கம்; அதிலேசந்நிஹிதனானவனே. (திருவைகுந்தத்துள்ளாய்) அவ்வளவேயன்றிக்கே, திருவைகுந்தத்திலே நின்றருளினவனே. (தேவா) பரமபதத்திற்காட்டில் சம்சாரத்தில் நிலையால் வந்தபுகர். (இங்கண்மாஞாலத் திதனுளுமொருநாளிருந்திடாய்) இந்தமஹாப்ருதிவியிலே, திருப்புளிங்குடியிலேயு மொருநா ளிருந்தருளவேணும். இருக்குமிடத்தில் (வீற்றிடங்கொண்டு) பரமபதத்திலிருக்குமாபோலே, உன்னுடைய வ்யாவ்ருத்திதோற்ற விருக்கவேணும். (இதனுளும்) என்கிறதுக்குக் கருத்தென்னென்னில்; சாய்ந்தருளினவழகுகண்டோமுக்கு, “இவனிருந்தாலெங்ஙனேயிருக்கிறதோ” என்றும், “இப்படியிருக்கிறவன்றான்நின்றாலெங்ஙனேயிருக்கிறதோ” என்றும், இங்ஙனே சிலவபேக்ஷைகள் பிறக்குமிறேயிவர்களுக்கு; அது வேறொருபடியிறேநமக்கு- இவையெல்லாம் நரகாவஹமான விஷயங்களிலேயுண்டு; இவ்விஷயத்தில்தெரியாது. செய்ததெல்லாம் பரிதாகையும், அவ்வருகே சிலபரிமாற்றங்களை யாசைப்படுகையுமெல்லாம் நமக்கு ப்ராக்ருதவிஷயங்களிலேயுண்டாயிருக்கும். இப்படியிருக்குமோவென்றறியுமித்தனை. ..................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (எங்களித்யாதி.) "இதனுளுமொருநாளிருந்திடாய் வீற்றிடங்கொண்டே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (பரமபதத்திலேயித்யாதி.)

(எங்கள் கண்முகப்பே யிருக்கவேணுமென்றது-) அந்வயித்துச்சொன்னபடி.

"தமது - வலத்து - சொல்லால்" என்றந்வயித்து, தந்தாமுடைய பலத்துக்கீடான சொற்களாலே யென்னுதல்; வலம் - பலம்; தாந்தாம் சொல்லவல்ல வளவிலே யென்னுதல். இரண்டாமர்த்தத்துக்கு ப்ரமாணம் (யதாஜ்ஞாநமித்யாதி) "யதாஜ்ஞாநந்துவக்ஷ்யாமிபுருஷந்தம்ஸநாதநம் । தஸ்யைகஸ்யமஹத்த்வம்ஹிஸசைகஃபுருஷஸ்ஸ்ம்ருதஃ" (யதாஜ்ஞாநந்துவக்ஷ்யாமிபுருஷந்தம்ஸநாதநம் । தஸ்யைகஸ்யமஹத்த்வம்ஹிஸசைகஃபுருஷஸ்ஸ்ம்ருதஃ) இதி ஸ்ரீநாராயணே ப்ரஹ்மருத்ரசம்வாதே. அறிந்தவறிந்தவளவுகளிலே சொல்லுகையாவதேதென்ன (அதாவதித்யாதி.) இந்த ப்ரசங்கத்திலே ஐதிஹ்யம் (வங்கிப்புரத்து நம்பியித்யாதி.) அதாவது-வங்கிப்புரத்து நம்பி, பெருமாளை சேவிக்க வெழுந்தருளினவவிளலே, இடைச்சிகளண்டையிலே யிருந்து சேவித்தாராய், அத்தையாண்டான் கண்டருளி, "ப்ராப்யமான ஸ்ரீவைஷ்ணவ சமுதாயமிருக்க அவர்களண்டைக்கெழுந்தருளுவானென்" என்ன; "நாமல்பீம் விரகமாயிருப்போம், 'இவர்களொன்றுமறியாத கொச்சைகளாகையாலே, 'யஞ்சராமோநபஶ்யதி' (யஞ்சராமோநபஶ்யதி) என்கிறபடியே ஈஶ்வரனுடைய கடாக்ஷமிவர்களிடத்திலே பள்ளமடையாயிருக்குங்காணும்' என்றங்கேயிருந்தேன்" என்ன; "அவர்கள் சொன்னதேது, தேவரீரருளிச்செய்ததேது" என்றுண்டான்கேட்க; "'பாலுண்பீர், பழமுண்பீர், பொன்னாலே பூணுநூலிடுவீர், நூறுபிராயம்புகுவீர், அழுத்த விரட்டையுடுப்பீர்' என்கிறவிது அவர்கள் சொன்னவார்த்தை 'விஜயஸ்வ, விஜயீபவ' (விஜயஸ்வ, விஜயீபவ) என்று நான் சொன்னவார்த்தை" என்று நம்பியருளிச்செய்ய; "அங்கேபோயும் முருட்டு சம்ஸ்க்ருதம் விட்டீரில்லையே, எங்கேயிருந்தாலும் நாம் நாங்காணும், இங்கே யெழுந்தருளீர்" என்றுண்டானருளிச்செய்தவார்த்தை. தலைத்தலை - ஒருவர்க்கொருவர் சிறந்து - கிட்டி. பூசிப்ப - ஆஶ்ரயிக்க.

திங்கள் சேருகைக்கு ஹேதுவேதென்ன (சந்த்ரனித்யாதி.) சேருகை - படிகையாய், விஶ்ரமிக்கையாகிறது.

இங்கே தீப்தியேதென்ன (பர்மபதத்திலித்யாதி.) "திவ்க்ரீடா" (திவுக்ரீடா) இத்யாதி.

"கண்" என்று - இடமாய், இடமுடைத்தான விம்மஹாபூமியிலென்றபடி. "இதனுளும்" என்ற சப்தார்த்தம் (பரமபதத்திலித்யாதி.) அது நமக்குக்கண்கிறேமில்லையேயென்ன (அது வேறொருவித்யாதி.) "வேறொருபடி" என்றத்தை விவரிக்கிறார் (இவையெல்லாமித்யாதி.) இவ்விஷயத்தில் - பகவத்விஷயத்தில். ஏதத்விவரணம் (செய்ததெல்லாமித்யாதி.) பரிதாகை - ஸ்த்தூலமாகை. அதாவது - போராதேயிருக்குமென்றபடி.

திங்கள் சேர்மாடமித்யாரப்ய, தேவா - உலகர்களெல்லாமென்று தொடங்கி, இங்கண்மாஞாலத்திதனுளும் - இடங்கொண்டு - எங்கள் கண்முகப்பே-ஒருநாள்-வீற்று-இருந்திடா யித்யந்வயஃ.........................................................*

# ஒன்பதாம்பாட்டு.

வீற்றிடங்கொண்டுவியன்கொண்மாஞாலத்திதனுளுமிருந்திடாயடியோம்
போற்றியோவாதேகண்ணிணைகுளிரப்புதுமலராகத்தைப்பருகச்
சேற்றிளவாளைசெந்நெலூடுகளுஞ்செழும்பணைத்திருப்புளிங்குடியாய்
கூற்றமாயசுரர்குலமுதலரிந்தகொடுவினைப்படைகள்வல்லானே.

## ஆறாயிரப்படி.

(வீற்றிடங்கொண்டு) என்னுடைய கண்ணிணையானது விடாய் தீர்ந்து குளிர உன்னுடையசெவ்விப்பூப்போலேயிருக்கிற திருமேனியை யோவாதே பருகும்படியாக விஸ்மயநீயமான சம்சாரத்திலே யுன்னுடைய வ்யாவ்ருத்தி தோற்றும்படி யொருநாளிருந்தருளவேணும்; ஆஶ்ரிதருடைய துஃகத்தைப் போக்கவல்லையாயிருந்து அவை செய்யாதொழியலாமோவென்கிறார்.................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிரதிசயசுகுமாரமான வுன் வடிவை நாங்கள் கண்டநுபவிக்கை ப்ரயோஜநமாக விந்த விபூதியிலே யெழுந்தருளி யிருக்கவேணுமென்கிறார்.

சேறு - தன்னிலமான சேற்றிலே வளருகையாலே. இளம் - இளகிப்பதித்த. வாளை - வாளைகள். செந்நெலூடு - செந்நெலூடே. உகளும் - உகளிக்களித்து வர்த்திக்கக்கடவதாய். செழும் - சம்ருத்தமான. பணை - நீர் நிலங்களையுடைய. திருப்புளிங்குடியாய் - திருப்புளிங்குடியிலே வர்த்திக்கிறவனே. கூற்றமாய் - ப்ரதிபக்ஷத்துக்கு ம்ருத்யுவாய்க்கொண்டு. அசுரர்குலம் - அசுரகுலத்தை. முதல் - கர்ப்பபர்யந்தமாக. அரிந்த - அறுத்துப்பொகடுமவனே. கொடுவினை - அதுக்கீடான கொடுந்தொழிலையுடைய. படைகள் - ஆயுதங்களை. வல்லானே-விதேயமாகவுடையனானவனே. அடியோம் - உனக்கசாதாரண சேஷபூதரான நாங்கள். போற்றி - மங்களாசாசநம்பண்ண. ஓவாதே - இடைவிடாதே. கண்ணிணை - கண்ணிணையானது. குளிர - பரிதாபம் தீர்ந்து குளிரும்படியாக. "லோசநாஹ்லாதகம்" (லோசநாப்ராம்பகம்) என்கிறபடியே, புதுமலர் - செவ்விப்பூப்போலே புஷ்பஹாஸசுகுமாரமான. ஆகத்தை - உன்வடிவை. பருக - த்ருஷ்ணாநுரூபமாக வநுபவிக்கும்படி. வீற்றிடங்கொண்டு - உன்னுடைய சர்வாதிகத்வத்தால்வந்த வேறுபாடு விஸ்த்ருதமாய்க்கொண்டுதோற்றி. வியன்கொள் - விஸ்தாரவத்தாய். மா - ஶ்லாக்யமான. ஞாலத்திதனுளும் - இந்த ஜகத்தினுள்ளேயும். இருந்திடாய் - இருந்தருளவேணும்.*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

இவ்விருப்பில் வாசியறியாத சம்சாரத்திலேயிருக்கிறதென்னென்னில்; ருசியுடைய நாங்கள்கண்டநுபவிக்கவென்கிறார்.

(வீற்றிடங்கொண்டு) சேஷித்வத்தால்வந்த வேறுபாடுதோற்றும்படி. (வியன்கொள்ளித்யாதி) விஸ்மயநீயமான மஹாப்ருதிவியானவிதிலேயுமிருந்திடாய். உன்னைக்கொண்டொரு கார்யமில்லாத சம்சாரத்தி

லே. (இதனுளுமிருந்திடாய்) இந்தத் திருப்புளிங்குடியாகிற திருப்பதியிலேயுமிருந்திடாய். உன்னை யொழியச் செல்லாமையுடையார்முன்னே யிருந்தாயென்னுமிதுபோருமோ. (இதனுளு மிருந்திடாய்) சாய்ந்தருளினபோ திருக்குமிருப்பை யநுபவிப்பித்தருளிற்று, இனி, இருந்தாலிருக்குமழகையு மநுபவிப்பித்தருளவேணும். "நமக்கிவையெல்லாமிங்கே காணலாமிறே - சாய்ந்தருளினவழகு, பெரியபெருமாள்பக்கலிலேகாணலாம்; நின்றருளினவழகு, நம்பெருமாள்பக்கலிலே காணலாம்; இருப்பிலுண்டானவழகு, பெரியபிராட்டியார்பக்கலிலேகாணலாம்" என்றுபட்டரருளிச்செய்வர். நாமிங்கிருந்து நீர்பெறப்புகுகிறபேறேதென்ன (அடியோமித்யாதி) (அடியோம்) அவ்விருப்பைப்படிவிட, அதுவே ஜீவநமாகவிருக்கிறநாங்கள். (போற்றி) இவ்விருப்பிங்ஙனே நித்யமாகச் செல்லவேணுமென்று மங்களாசாசநம்பண்ணி. (ஓவாதே) உச்சிவீடுவிடாதே. (கண்ணிணைகுளிர) காணப்பெறுமையாலே கமர்பிளந்துகிடக்கிறகண்கள், விடாயெல்லாந்தீர்ந்து குளிரும்படியாக. (புதுமலரித்யாதி) செவ்விப்பூப்போலேயிருக்கிற திருமேனியை யநுபவிக்கும்படியாக. புஷ்பஹாஸ சுகுமாரமானவடிவை, "ஔவ நாஹ்ரா ஜிவனிவ" (லோசநாப்யாம்பிபந்நிவ) என்கிறபடியே நிரந்தரமாக வநுபவிக்கப்பெறுகை. (சேற்றிளவித்யாதி) அவ்வூரில் பதார்த்தங்களடைய அபிமதலாபத்தாலே களித்து வர்த்திக்குமாயிற்று செந்நெலின் நடுவே சேற்றிலே, பஞ்சவிம்ஶதிவார்ஷிகரான முக்தரைப்போலேயிருக்கிற வாளைகள் களித்துத்துள்ளாநிற்பதான வழகியநீர்நிலத்தையுடைய. (செழும்பணை) அழகியமருதநிலமென்றுமாம். (கூற்றமாயித்யாதி) ப்ரதிபக்ஷத்துக்கு ம்ருத்யுவான திவ்யாயுதங்களை தரித்துக்கொண்டிருக்கிறவென்னுதல்; அன்றிக்கே, ப்ரதிபக்ஷத்துக்குக்கூற்றமாய்க்கொண்டு அவர்களுடைய குலத்தை முதலிலேயரிந்து போகடுமவனாய், அதுக்குடலாகக் கொடியதொழில்களையுடைய திவ்யாயுதங்களையுடையனாயிருக்கிறவனென்னுதல். இப்போதுசொல்லுகிறது, இதுக்குமுன்பு தம்முடைய ப்ரதிபந்தகங்களைப்போக்கினபடிக்கு த்ருஷ்டாந்தமென்னுதல்; உனக்கென்னகுறையுண்டாயிழக்கிறேனென்னுதல்.*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (வீற்றிடமித்யாதி.) "வீற்றிடங்கொண்டு" என்று தொடங்கி "புதுமலராகத்தைப்பருக" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (இவ்விருப்பிலித்யாதி.)

இடங்கொண்டு - இத்தை ஸ்த்தாநமாகக் கைக்கொண்டு. "இதனுளும்" என்றதுக்கிரண்டர்த்தம். மாஞாலமான விந்த பூமியிலுமென்று மூந்தினது; இத்தையருளிச்செய்கிறார் (விஸ்மயநீயமான வித்யாதி.) மாஞாலத்தில் வைத்துக்கொண்டு இந்தத் திருப்புளிங்குடியிலுமென் றிரண்டாமர்த்தம்; இத்தை யருளிச்செய்கிறார் (இந்தத் திருப்புளிங்குடியித்யாதி.) "இதனுளும்" என்கைக்கு இதுக்குத்தன்மையே

தென்ன (உன்னைக்கொண்டித்யாதி.) நித்யசூரிகள் நடுவே யிருக்கக்கட்வ நமக்கு இங்கே யிருக்கவேண்டுவானென்னென்ன (உன்னையொழியவித்யாதி.) த்விதீயார்த்தத்துக்கு "இதனுளும்" என்ற சப்தார்த்தம் (சாய்ந்தருளினவித்யாதி.) இங்கே காணலாமென்றது - கோயிலிலே காணலாமென்றபடி. இவையெல்லாமென்றது - இடையழகும், இருப்பழகும், நிலையழகும்.

ஆகத்தை-திருமேனியை. ஆகம்-திருமேனி. விவரணம் (புஷ்பஹாஸேத்யாதி) " 𑌤𑌸𑍍𑌯 𑌤𑌦𑍍𑌵𑌚𑌨𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 𑌰𑌾𑌮𑍋 𑌵𑌚𑌨𑌮𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 । 𑌵𑌚𑌸𑌾 𑌸𑌾𑌨𑍍𑌤𑍍𑌵𑌯𑌿𑌤𑍍𑌵𑍈𑌨𑌂 𑌲𑍋𑌚𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌪𑌿𑌬𑌨𑍍𑌨𑌿𑌵 " (தஸ்யதத்வசநம்ஶ்ருத்வாராமோவசநமப்ரவீத் | வசஸாஸாந்த்வயித்வைநம்லோசநாப்யாம்பிபந்நிவ) இதியுத்தகாண்டே. "புதுமலராகத்தை - ஓவாதே - பருக" என்றந்வயிப்பது.

இப்பதத்துக்குபாவம் (அவ்வூரிலித்யாதி) உகளுகை - சம்ப்ரமமாக சஞ்சரிக்கை. செழும்பணை - சம்ருத்தமானவயல். மருதநிலம் - நாடுசார்ந்தப்ரதேசம். ஜலஸ்த்தலமாதல்.

"கூற்றமாய்" என்றது-திவ்யாயுதவிசேஷணமாதல். ஈஶ்வரவிசேஷணமாதல். இரண்டையுமருளிச்செய்கிறார் (ப்ரதிபக்ஷத்துக்கித்யாதி வாக்யத்வயத்தாலே) த்விதீயார்த்தத்திலே" கொடுவினைப்படைகள்வல்லானே " என்றதுக்கர்த்தம் (அதுக்குடலாகவித்யாதி) இதுசொல்லுகிறதுக்கு ப்ரயோஜநத்தை யிரண்டுவகையாக வருளிச்செய்கிறார் (இப்போதித்யாதிவாக்யத்வயத்தாலே) என்னகுறையுண்டாயிழக்கிறேனென்றது - விரோதியைப்போக்க பரிகரமில்லாமலோ, சக்தியில்லாமலோவிழக்கிறேனென்றபடி.

சேற்றிளவாளையென்றுதொடங்கி, படைகள்வல்லானே - அடியோம்போற்றி-கண்ணிணைகுளிரப் புதுமலராகத்தை-ஓவாதே-பருகும்படி-வியன்கொள்மாஞாலத்திதனுளும்-இடங்கொண்டு-வீற்று-இருந்திடா யித்யந்வயஃ ......................*

## பத்தாம்பாட்டு.

கொடுவினைப்படைகள்வல்லையாயமரர்க்கிடர்கெட்வசுரர்கட்கிடர்செய்
கடுவினைநஞ்சேயென்னுடையமுதேகலிவயற்திருப்புளிங்குடியாய்
வடிவிணையில்லாமலர்மகண்மற்றைநிலமகள்பிடிக்குமெல்லடியைக்
கொடுவினையேனும்பிடிக்கநீயொருநாள்கூவுதல்வருதல்செய்யாயே.

### ஆறாயிரப்படி.

(கொடுவினை) ஆஶ்ரிதவிரோதிநிரஸநஸமர்த்தனுமாய், ஆஶ்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவனுமாய், எனக்கு நிரதிசயபோக்யனாய், திருப்புளிங்குடியிலேவந்து ஸந்நிஹிதனானவனே, வடிவழகுக்கொப்பில்லாத பெரியபிராட்டியாரும், அப்படியேயிருக்கிற ஸ்ரீபூமிப்பிராட்டியும்கூசி ஸ்பர்ஶிக்கவேண்டும்படி சுகுமாரமான வுன்னுடையதிருவடிகளை, அதில்போக்யதையையறிந்துவைத் திழக்கைக்கிடான பாபத்தைப்பண்ணினநானும் பிடிக்கும்படி, என்னையொருநாளங்கே யழைத்துக்கொள்ளுதல், இங்கேவருதல் செய்தருளவேணுமென்கிறார் ......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நாய்ச்சிமாரை யடிமைகொண்டருளினாப்போலே நானுமுன்றிருவடிகளிலே யடிமைசெய்யும்படி, என்னை யங்கேயழைத்தல் இங்கே வருதல் செய்தருளவேணுமென்கிறார்.

கொடுவினை - விரோதிவிஷயத்தில் கொடுந்தொழிலான. படைகள் - ஆயுதங்களை. வல்லையாய் - கார்யங்கொள்ளவல்லையாய். அமரர்க்கு - அநுகூலரான தேவர்களுடைய. இடர் - துஃகம். கெட - தீரும்படி. அசுரர்கட்கு - ப்ரதிகூலரானவசுரர்கட்கே. இடர் - துஃகத்தை. செய் - விளைக்குமிடத்தில். கடு-சடக்கென்னும். வினை-ப்ரவ்ருத்தியையுடைய. நஞ்சே - நஞ்சானவனாய். என்னுடை - அநந்யப்ரயோஜநனாயநந்யகதியான வெனக்கு. அமுதே - அலப்யமானவம்ருதமாய். அத்யாசந்நமாம்படி, கலி - சம்ருத்தமான. வயல் - வயலையுடைய. திருப்புளிங்குடியாய் - திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே. "அஸிதேக்ஷணா" (அஸிதேக்ஷணா) என்னும்படி, வடிவு - வடிவழகுக்கு. இணையில்லா - நீயும் தகுதியல்லாதபடியானவதிசயிதவைலக்ஷண்யத்தையுடைய. மலர்மகள் - கமலவாஸிநியானலக்ஷ்மியும். மற்றை - ஏவம்பூதவைலக்ஷண்யத்தையுடைய. நிலமகள் - ஸ்ரீபூமியும். பிடிக்கும்-தங்களுடைய ஸ்வாபாவிகமார்த்தவத்தையுடையதிருக்கைகளாலே பிடிக்கும்படியான. மெல் - நிரதிசயஸௌகுமார்யத்தையுடைய. அடியை - திருவடிகளை. கொடுவினையேனும் - ப்ராப்தனாய்வைத்து நெடுங்காலமிழக்கும்படி கொடியபாபத்தை யுடையநானும். பிடிக்க - பிடிக்கும்படியாக. நீ - நீ. கூவுதல் - அங்கேயழைத்துக்கொள்ளுதல். வருதல் - நானபேக்ஷித்தபடி யிங்கேவந்தருளுதல். ஒருநாள் - ஒருநாள். செய்யாய் - செய்யவேணும். ...........................................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

நிரதிசயபோக்யமான வுன்னுடைய திருவடிகளிலே நானும் வந்தடிமைசெய்யும்படி, என்னை யங்கேயழைத்தல், நீயிங்கேவருதல்செய்யவேணுமென்கிறார்.

( கொடுவினைப்படைகள்வல்லையாய் ) நீரிலேநெருப்பெழுந்தாப்போலே, உனக்குசேஷமாய்வைத்து ப்ரதிகூலித்தவர்கள்பக்கல்சீறி, ஆயுதமெடுக்கவல்லையாய். அவன்மாட்டாதது சிலரையழியச்செய்கையாயிற்று; "யதிவாராவணஸ்ஸ்வயம்" (யதிவாராவணஸ்ஸ்வயம்) என்னுமவனிறே. கட்டலையணைசெய்து, ஊரைச்சூழப்போந்து, பின்னை அங்கதப்பெருமாளைப்புகவிட்டு, கையிலேவந்தகப்பட்டவனை "கச்சாநுஜாநாமி" (கச்சாநுஜாநாமி) என்றுதப்பவிட்டது, "இன்னமொருக்காலநுகூலிக்குமோ" என்று; "நான்முடிந்தேபோமித்தனை" என்று அவனதிலேமூதிரகின்றபின்பு, கண்ணுங்கண்ணீருமாயிறே நின்றுகொன்றது. இவர்கள் பண்ணும் ப்ராதிகூல்யத்தாலே யழியச்செய்யுமித்தனைபோக்கி, தானாகவழியச்செய்யமாட்டானாயிற்று. (அமரரித்யாதி) அசுரர்களாலே தேவர்களுக்குண்டான துஃகந்தீரும்படி, அசுரர்களுக்கு துஃகத்தைவிளைக்கும். (கடுவினைநஞ்சே) அப்போதே சடக்கெனமுடிக்கவற்றாய், ப்ரத்யௌஷ

தமில்லாதநஞ்சானவனே. (என்னுடையமுதே) அந்நஞ்சுதானே யிவர்க்கம்ருதமாயிருக்கிறபடி. தேவர்களுடைய வுப்புச்சாறன்று. (கலிவயலித்யாதி) இவ்வம்ருதத்துக்குக் கடல்கடைதல், ஸ்வர்க்கத்திலேபோதல் செய்யவேண்டா, திருப்புளிங்குடியிலே ஸந்நிஹிதமாயிற்றிவ்வம்ருதம். (கலிவயல்) சம்ருத்தமானவயல்.

(வடிவிணையித்யாதி) வடிவில்வந்தாலொப்பின்றிக்கேயிருக்கும். பகவத்தத்த்வமுமொப்பன்று; "தஞ்சேயமஸி தேக்ஷணா" (தஞ்சேயமஸிதேக்ஷணா) என்றேற்றமாயேநின்றதிறே. (மற்றைநிலமகள்) ஏவம்பூதையென்னுமத்தனையவளையும். (பிடிக்கும்மெல்லடியை) அவர்களுந்திருவடிகளைப் பிடிக்கப்புக்கால், பூத்தொடுவாரைப்போலே "கன்றுகிறதோ" என்றுகூசித் தொடவேண்டும்படியாயிற்று சௌகுமார்யமிருப்பது; அப்படிப்பட்டதிருவடிகளை. (கொடுவினையேனும்பிடிக்க) * கண்கள்சிவந்துக்குப்பின்பு இவர்க்கு நிகர்ஷாநுசந்தாநமில்லையிறே. "அவர்களும் சந்நிஹிதராய், ப்ராப்தியுமுண்டாயிருக்க, நானிகழ்ந்திருப்பதே!" என்று, "பாவியேன்" என்பாரைப்போலே (கொடுவினையேன்) என்கிறார். (நீயொருநாள் கூவுதல்வருதல்செய்யாயே) (நிரதிசயபோக்யனாய் சந்நிஹிதனனநீ, சத்தையைநோக்குகைக் கொருநாளங்கேயழைத்தல், இங்கேவருதல் செய்தருளவேணும்) முற்பட (வருதல்) என்றிலராயிற்று, அஸ்ஸமுதாயத்தைக் குலைக்கவொண்ணாதென்னுமத்தாலே. அபேக்ஷையுடையார்பக்க லவனைத்தனிவிட்டிரார்களிறே, கூடக்கொடுவருவர்களென்னுமத்தைப்பற்றச்சொல்லுகிறார் ...... ............................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (கொடுவினையித்யாதி.) "வடிவிணையில்லா மலர்மகள்' என்றுதொடங்கி, "கூவுதல்வருதல்செய்யாய்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (நிரதிசயேத்யாதி.)

கீழேயெல்லாம் ஸந்நிஹிதனாகவருளிச்செய்து, இங்கே, "கூவுதல்வருதல் செய்யாய்" என்றது - மாநசாநுபவ வைஶத்யத்தாலே ஸந்நிஹிதனாகவும், அதுகலங்கினவாறே, தாமிங்கும், அவனங்குமாகத்தோற்றுகையாலே. கொடிதான வ்யாபாரத்தையுடைய சத்ருசேனையைமுடிக்கவல்லையாயென்று சப்தார்த்தம். * ப்ரஸக்தஸ்யஹிப்ரதிஷேதঃ அன்றோ, "வல்லையாய்" என்று, சர்வசக்திக்கு அசக்திப்ரஸங்கமேதென்ன (நீரிலேயித்யாதி) அப்படிமாட்டானோவென்ன (யதிவேத்யாதி) "[illegible]" (ஆநயைநம்ஹரிஶ்ரேஷ்டதத்தமஸ்யாபயம்மயா। விபீஷணோவாஸுக்ரீவயதிவாராவணஸ்ஸ்வயம்) இதியுத்தகாண்டேராமঃ. ஆனாலும் சம்ஹரித்தானேயென்ன (கடலையித்யாதி) "[illegible]" (கச்சாநுஜாநாமிரணார்த்திதஸ்த்வம் ப்ரவிஶ்யராத்ரிம்

சராராஜலங்காம் । ஆஸ்வஸ்யநிர்யாஹிரதீஸதக்வீததாபலம்தரக்ஷயஸிமேரதஸ்த்த:) இதியுத்தகாண்டே. "ஊணாஞா நிமெவாணி" (மரணாந்தாநிவைராணி) "ஸஞாதவாஷ்ஃவரவீரஹஞா" (ஸஞ்ஜாதபாஷ்பஃபரவீரஹந்தா) இத்யாத்யுக்த ஸ்வபாவத்தைப்பற்ற (கண்ணுங்கண்ணீருமாயென்றது) கண்ணும் கண்ணீருமானு ல் கொல்லக்கூடுமோவென்ன (இவர்கள்பண்ணுமித்யாதி)

க்ரூரவ்யாபாரத்தையுடைய நஞ்சேயென்றுசப்தார்த்தம். நஞ்சின் க்ரௌர்யத்தை த்வேதாவருளிச்செய்கிறார் (அப்போதேயித்யாதி)

(அந்நஞ்சுதானே) இத்யாதிக்கு - அசுரவர்க்கத்துக்கு பாதகனுயிருக்குமிருப்பு, தமக்கு போக்யமாயிருக்குமென்றுகருத்து. "என்னுடையமுதே" என்றதுக்கு வ்யாவர்த்யம் (தேவர்களுடையவித்யாதி)

"கலிவயற்றிருப்புளிங்குடியாய்" என்கிறத்தாலும் அவ்வம்ருதத்தில் வ்யாவ்ருத்தி (இவ்வம்ருதத்துக்கித்யாதி) கலி - ஸம்ருத்தி.

இணை-ஒப்பு. ஒப்பில்லாமையின் சரமாவதி (பகவத்தத்த்வமுமித்யாதி) ஆதிக்யமேதென்ன (தஞ்சேயமித்யாதி) "துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜனலக்ஷணாம் । ராகவோர்ஹதி வைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணா" (துல்யஶீலவயோவ்ருத்தாம்துல்யாபிஜநலக்ஷணும் । ராகவோர்ஹதிவைதேஹீம்தஞ்சேயமஸிதேக்ஷணு) இதி ஸுந்தரகாண்டே ஹநூமாந். மற்றை-தத்துல்யையான. "மெல்லடி" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (அவர்களுமித்யாதி) "கொடுவினையேன்" என்றவிது, அயோக்யதாநுசந்தாநபரமோவென்ன; அன்றென்கிறார் (கண்களித்யாதி) ஆனுல் "கொடுவினை" என்கிறதுக்கர்த்தமேதென்ன (அவர்களுமித்யாதி)

முந்துற "வருதல்" என்னுதொழிவானென்னென்ன (முற்படவித்யாதி) பிற்படத்தான் "வருதல்" என்றால் அஸ்ஸமுதாயங்குலையாதோவென்ன (அபேக்ஷயித்யாதிவாக்யத்வயம்.) க்ரமேணுந்வயஃ..........................................*

---

# பதினொன்றாம்பாட்டு.

கூவுதல்வருதல்செய்திடாயென்றுகுரைகடல்கடைந்தவன்றன்னை
மேவிநன்கமர்ந்தவியன்புனற்பொருநல்வழுதிநாடன்சடகோபன்
னாவியல்பாட்டாயிரத்துள்ளுமிவையுமோர்பத்தும்வல்லார்க
ளோவுதலின்றியுலகமூன்றளந்தானடியிணையுள்ளத்தோர்வாரே.

## ஆறாயிரப்படி.

(கூவுதல்) குரைகடல்கடைந்தவன்றன்னை பரமப்ராப்யமாகப்பற்றி, கூவுதல் வருதல் செய்திடாயென்றபேக்ஷித்த வியன்புனல் பொருநல் வழுதிநாடன் சடகோபன் நாவியல்பாட்டாயிரத்தி லித்திருவாய்மொழியைவல்லார், ஆஸ்ரிதசுலபனான வெம்பெருமானுடைய திருவடிகளை நிரந்தரமாக ஹ்ருதயத்திலே யநுபவிக்கப்பெறுவரென்கிறார் ..............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக பகவத்ஜ்ஞாநலாபத்தையருளிச்செய்கிறார்.

ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களுக்காக, குளா - அதிகோஷத்தை யுடைத்தான. கடல் - கடலை. கடைந்தவன்றன்னை - கடைந்தவனான ஸர்வேஶ்வரனை. கூவுதல் - அங்கேயழைத்துக்கொள்ளுதல். வருதல் - நாணிருந்தவிடத்தில்வருதல். செய்திடாய் - செய்யவேணும். என்று - என்றபேக்ஷித்து. மேவி - அவனுடைய வங்கீகாரத்தைப்பெற்று. அத்தாலே, நன்கு - நன்றாக. அமர்ந்த - தரித்தவராய். வியன் - ஸம்ருத்தமான. புனல் - ஜலத்தையுடைத்தான. பொருநல் - திருப்பொருநலையுடைத்தான. வழுதிநாடன் - திருவழுதிநாட்டுக்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வாருடைய. நாவியல் - ஜிஹ்வாவ்யாபாரமான. பாடல் - பாடல். ஆயிரத்துள்ளும் - ஆயிரத்துள்ளும்வைத்துக்கொண்டு. ஓர் - அத்விதீயமான. இவையும்பத்தும் - இப்பத்தையும். வல்லார்கள் - வல்லவர்கள். மூன்றுலகம் - த்ரைலோக்யத்தையும். அளந்தான் - அளந்துகொண்ட ஸர்வஸுலபன். அடி - திருவடிகள். இணை - இரண்டையும். ஓவுதல் - ஓவுதல். இன்றி - இன்றி. உள்ளத்து - நெஞ்சிலே. ஓர்வார் - அநுஸந்திக்கப்பெறுவர்கள்.

இது எழுசீராசிரியவிருத்தம். ........................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார், அவனை நிரந்தரமாக வநுபவிக்கப்பெறுவரென்கிறார்.

(கூவுதலித்யாதி) (குளாகடல்கடைந்தவன்றன்னை-கூவுதல்வருதல்செய்திடாய்) என்றாயிற்றிவர்சொல்லிற்று. முறைகெடவுமாம், முறையிலேயாகவுமாம், காணுமித்தனையேவேண்டுவது. (குளாகடலித்யாதி) இவ்வபேக்ஷையில்லாதார்க்கு மூடம்புநோவக்கடல்கடைந் தம்ருதங்கொடுக்குமவனையாயிற் றிவரபேக்ஷித்தது. (மேவிநன்கமர்ந்த) இந்தஸ்வபாவாநுஸந்தாநத்தாலேபொருந்திக் கால்தரையிலேபாவினராயிற்று. (வியனித்யாதி) விஸ்மயநீயமான நீரையுடைய திருப்பொருநலையுடைய திருவழுதிவளநாட்டுக்கு நிர்வாஹகரானவாழ்வார். (நாவியல்பாடல்) மநஸ்ஸஹகாரமுமொழியவாயிற்றுச்சொல்லிற்று. (ஓவுதலித்யாதி) ஆஶ்ரிதஸுலபனானவனுடைய திருவடிகளை நிரந்தரமாக ஹ்ருதயத்திலே யநுபவிக்கப்பெறுவர். இத்தனைபோதும், இவர்தாம் "இவற்றைப்பெறவேணும்" என்னுமபேக்ஷையோடே, "திருக்கண்களாலே குளிரநோக்கியருளவேணும், திருவடிகளைத்தலைமேலேவைத்தருளவேணும், தேவரீரெழுந்தருளியிருக்குமிருப்பைக்காணவேணும், நாய்ச்சிமாரும் தேவரீருமாயிருக்கும்படிகாணவேணும், உலாவும்படிகாணவேணும், ஸ்மிதமிருக்கும்படிகாணவேணும்" என்றாசைப்பட்டவிவர்க்கு அப்போதே கிடையாமையாலே, "இவற்றைப்பெறவேணும்" என்னும் மநோரதந்தானே வேறாய்த் தோற்றிற்று; இத்தையப்யஸித்தவர்களுக்கும் இம்மநோரதம்மாறாதே

முடியச்செல்லுமென்கிறார். " [illegible] " (யதிநாஸம்நவிந்தேததாவதாஸ்மிக்ருதிஸதா) என்கிறபடியே......*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( கூவுதலித்யாதி. ) " இவையும்பத்தும்வல்லார்கள் " என்றுதொடங்கி, " உள்ளத்தோர்வாரே " என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை ( இத்திருவாய்மொழியித்யாதி. )

அந்வயித்தர்த்தம் ( குரைகடலித்யாதி. ) " வருதல் " என்னாதே, " கூவுதல் " என்று முற்படவழைப்பானென்னென்ன (முறைகெடவுமாமித்யாதி.)உடைமையிருந்தவிடத்தே யுடையவன் வந்து கைப்பிடித்துக்கொண்டுபோகை ப்ராப்தமாகையாலே, வருகைமுறை; பார்யையை யாளிட்டழைக்கை முறைகேடானவோபாதி, கூவுகையும் முறைகேடு. குரை - கோஷிக்கிற. "குரைகடல்கடைந்தவன்றன்னை" என்று விசேஷித்ததுக்கு பாவம் ( இவ்வபேக்ஷையித்யாதி. ) " குரைகடல்கடைந்தவன்றன்னை - கூவுதல்வருதல்செய்யாய் " என்றுசொல்லி, ( இந்தஸ்வபாவாநுசந்தாநத்தாலே ) இவனைக்கிட்டி யென்றுகூட்டுவது. நன்கமர்ந்த - நன்றாகத்தரித்த. தறையில் கால்பாவிநின்றவென்றபடி. பொருநல் - திருத்தாம்ரபர்ணி.

" நாவியல் " என்று விசேஷித்ததுக்கு பாவம் ( மநஸ்ஸஹகாரமித்யாதி. ) நாவியல்பாடல் - ஜிஹ்வாவ்யாபாரமான பாடலென்று சப்தார்த்தம்.

உலகமூன்றளந்தானடியிணை - ஓவுதலின்றி - உள்ளத்தோர்வார் " என்றந்வயிப்பது. " ஓவுதலின்றி " என்றதுக்கர்த்தம் ( நிரந்தரமாகவென்று. ) ஓர்வார் - அநுசந்திக்கப் பெறுவார். அநுபவிக்கப்பெறுவாரென்றபடி. இது கற்றார்க்கு ப்ராப்தியை பலமாகச்சொல்லாதே, மநோரதத்தை பலமாகச்சொல்லுவானென்னென்ன (இத்தனைபோதுமித்யாதிவாக்யத்வயம்.)மநோரதம்பலமோவென்ன,அதுக்குப்ரமாணம் ( யதிநாசமித்யாதி ) ஜிதந்தாயாம், " [illegible] " ( தர்க்கதாவபிஜாதாயாம்த்வத்கதோமே மநோரதः ) இதி பூர்வார்த்தம்.

குரைகடல்கடைந்தவன்றன்னை - கூவுதல்வருதல் செய்திடா யென்றுதொடங்கி, இவையும்பத்தும்வல்லார்கள் - உலகமூன்றளந்தானடியிணை - ஓவுதலின்றி - உள்ளத்தோர்வாரேயித்யந்வயः.........................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( பண்டைநாளாலே )

[illegible]

[illegible]

[illegible]

[illegible] (கூச)

(லக்ஷ்மீசம்பந்தபூம்நா) நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு - பெரியபிராட்டியாரோடே யொருக்காலும் பிரிவற்றவனுகையாலும்; (மிததரணிதயா) நீ யொருநாள் படிக்களவாக நிமிர்த்த - த்ரிவிக்ரமரூபத்தைக் கொண்டு பூமியையெல்லாமளக்கையாலும்; (பத்மநேத்ரத்வயோகாத்) தடங்கொள்தாமரைக்கண்விழித்து -ஸரஸிஜஸத்ருஶநயநனுகையாலும்; (ஸ்த்தித்யாத்யைஸ்ஸ்வைஶ்சரித்ரைஸ்ஸ்வஹ்ருதபஹரணுத்) புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்துவைகுந்தத்துணின்று - திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தும், வரகுணமங்கையிலே வீற்றிருந்தும், ஸ்ரீவைகுண்டத்திலே நின்றருளியும், ஏவம்பூத சேஷ்டிதங்களாலே ஆஸ்ரிதருடைய ஹ்ருதயத்தை யபஹரிக்கையாலும்; (ஸ்ரீகஜேந்த்ராவநாச்ச) கவளமாகளிற்றினிடர்கெடத்தடத்து - மதமுதிதமாயிருக்கவும், ப்ரபலமான முதலையின் கையிலே யகப்படுகையாலே மிகவுமிடர்பட்ட ஸ்ரீகஜேந்த்ராழ்வானை ரக்ஷிக்கையாலும்; (தார்க்ஷ்யாம்ஸௌசாதிருஹ்யாரிகணநிரஸநாத்) காய்சினப்பறவையூர்ந்தித்யாதி - ப்ரதிபக்ஷத்தின்மேலே காயாநிற்கிற பெரியதிருவடிமேலே யேறியருளி, மேருசிகரத்திலே நீலமேகமிருந்தாப்போலே சோபமானனாய்க்கொண்டு, மாலி சுமாலி மால்யவான்முதலான சத்ருஸமூஹங்களை நிரஸிக்கையாலும்; (தேவதுஷ்ப்ராபதாத்யை:) இமையவர்தமக்குமாங்கனையாய்-தேவர்களுக்கும் ரக்ஷகனுமத்தனைபோக்கி, அவர்களாலும் ஸ்வயத்நத்தாலே ப்ராபிக்க துர்லபனுகையாலும்; ஆதிசப்தத்தாலே - மேலிரண்டுபாட்டர்த்தங்களான தீப்திமத்வ திவ்யாயுதவத்வங்கள் ஸங்க்ருஹீதங்கள். திருப்புளிங்குடியாய் திருவைகுந்தத்துள்ளாய்தேவா - பரமபதத்திற்காட்டிலு மிஸ்ஸம்ஸாரத்தில் நிலையால் மிக்கதேஜஸ்ஸையுடையனுகையாலும்; கொடுவினைப்படைகள்வல்லானே - விரோதிகளிடத்திலே க்ரூரசேஷ்டிதங்களைப் பண்ணக்கடவ திவ்யாயுதங்களை யுடையனுகையாலும்; (துஷ்கர்மோந்மூலநாத்யை:) கடுவினைநஞ்சேயித்யாதி - ஆஸ்ரிதருடைய துஷ்கர்மங்களை ஸவாஸநமாகப்போக்குமவனுகையாலும்; திருப்புளிங்குடியெம்பெருமானிச்சேதநனிடத்திலே நெடுநாளே தொடங்கி க்ருபையைப்பண்ணுநின்ருனென்று "பண்டைநாள்" என்கிறதசகத்திலே ஆழ்வார் ப்ரதிபாதித்தருளினுரென்கிருர்.......................................(கூச)

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

பண்டையுறவானபரனைப்புளிங்குடிக்கே
கண்டெனக்கெல்லாவுறவின்காரியமும் - தண்டறநீ
செய்தருளென்றேயிரந்தசீர்மாறன்ருளிணையே
யுய்துணையென்றுள்ளமேயோர். (அஉ)

(பண்டையுறவானபரனை) இதில்-"பந்துக்ருத்யமெல்லாஞ்செய்யவேணும்" என்றுபேசினவாழ்வார் பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிருர். எங்ஙனேயென்னில்; "இப்படி நிருபாதிகபந்துவான சர்வேஸ்வரனுக்கு சர்வவிதபந்துக்ருத்யமும் செய்யவேணும்" என்று திருப்புளிங்குடியிலேபோய்ப்புக்கு, அங்கே பிராட்டியோடேகூடப் பள்ளிகொண்டருளுகிற * காய்சினவேந்தைக்குறித்து, "திருப்பவளத்தைத்திறந்து ஒரு இன்சொல்லுச்சொல்லவேணும், திருக்கண்களை யலரவிழித்துக் குளிரநோக்கியருளவேணும், திருவடிகளைத் தலைக்கலங்காரமாகவைத்தருளவேணும், பிராட்டியும் தேவருமாக திவ்யஸிம்ஹாஸநத்திலே யெழுந்தருளி யிருக்கவேணு

ம், கண்முகப்பேராங்கள் ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணும்படி யுலாவியருளவேணும்'' என்றாப்போலே, ஒருகோடிவெள்ளங்களை யவர்ஸந்நிதியிலே யசலறியாதபடி ப்ரார்த்திக்கிற * பண்டைநாளிலர்த்தத்தை "பண்டையுறவான" இத்யாதியாலேயருளிச்செய்கிறாரென்கை.

(பண்டையுறவானபரனை) "உலகுக்கோர் முந்தைத்தாய்தந்தையே முழுவேழுலகமுண்டாய்," "தாயிருக்கும்வண்ணமே யும்மைத்தன்வயிற்றிருத்தி யுய்யக்கொண்டான்" என்னும்படி, "எண்டிசையும்கீழும் மேலும்முற்றவுமுண்டபிரான்" என்று அநாதிசித்தமான சம்பந்தத்தையுடைய சர்வஸ்மாத்பரனை. அன்றிக்கே, * கண்கள்சிவந்துதொடங்கி நடந்துவருகிற திருமந்த்ர ப்ரதிபாத்யமான நவவிதசம்பந்தயுக்தனான சர்வஸ்மாத்பரனையென்றாகவுமாம். (புளிங்குடிக்கேகண்டு) "திருப்புளிங்குடிக்கிடந்தானே" என்னும்படி திருப்புளிங்குடியிலேகண்டு. "என்மனக்கே" என்னுமாபோலே, (புளிங்குடிக்கே) என்றிருக்கிறது. (எனக்கெல்லாவுறவின்காரியமும்) "குடிகுடிவழிவந்தாட்செய்யுந்தொண்டர்" என்றும், "வழிவருகின்றவடியார்", என்றும், "தொல்லடிமைவழிவருந்தொண்டர்" என்றும் சொல்லும்படியானவெனக்கு, "ஹ்ராத-ஃஸ்ஸிஷ்ய ஸ்ய தாஸஸ்ய" (ப்ராதுஶ்ஶிஷ்யஸ்யதாஸஸ்ய) என்னும்படி சர்வவிதபந்துத்வகார்யமும். (தண்டறநீசெய்தருளென்றேயிரந்த) விளம்பமின்றிக்கேயென்னுதல், பரப்ரோரிதனுயன்றிக்கேயென்னுதல்; இவற்றிலொன்று மிடைவிடாமல் தடையறதேவர்நடத்தியருளவேணுமென் றர்த்தித்தவென்னுதல். அதாவது - "சோதிவாய்திறந்துன் தாமரைக்கண்களால்நோக்காய்," "நின்பாதபங்கயமே தலைக்கணியாய்," "நீயெழுந்துன் தாமரைமங்கையும் நீயுமிடங்கொள் மூவுலகுந்தொழவிருந்தருளாய்," "கனிவாய்சிவப்ப நீகாணவாராய்," "நின்திருக்கண்டாமரைதயங்கநின்றருளாய்," "காய்சினப்பறவையூர்ந்து - காய்சினவாழிசங்குவாள்வில்தண்டேந்தி யெம்மிடர்கடிவானே," "இம்மடவுலகர்காண நீயொருநாளிருந்திடாயெங்கள்கண்முகப்பே," "இருந்திடாய்வீற்றிடங்கொண்டே," "வடிவிணையில்லாமலர்மகள்மற்றை நிலமகள்பிடிக்கும் மெல்லடியைக் கொடுவினையேனும் பிடிக்க நீயொருநாள் கூவுதல்வருதல்செய்யாயே" என்று இப்படி ஆத்மதர்ஶந பலாநுபவ பரம்பரையை "கூவுதல்வருதல்" என்று முடிகவிட்டபடியென்கை. இப்படிசெய்தருளவேணுமென்றர்த்தித்த. (சீர்மாறன்) கைங்கர்யசம்பத்தையுடையவனென்னுதல்' பக்த்யாதிகுணங்களை யுடையவனென்னுதல்; ஏவம்விதரான வாழ்வார்திருவடிகளை. (உய்துணையென்றுள்ளமேயோர்) நாசத்தைவிளைக்குந்துணைபோலன்றிக்கே, உஜ்ஜீவநத்தைப்பண்ணுந்துணையென்று, மநஸ்ஸே. அநுசந்தித்துப்போருவென்கிறார். அஉ

ஒன்பதாம்பத்தில் - இரண்டாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - அஉ.—பாட்டு - கூ0ச.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஒன்பதாம்பத்து.

## மூன்றாந்திருவாய்மொழி.

### ஓராயிரம் - ப்ரவேஶங்கள்.

### ஆறுயிரப்படி.

(ஓராயிரம்) இப்படியாழ்வாரபேக்ஷிக்க, "நீரிங்ஙனேப்ரார்த்திக்க வேணுமோ, நம்மோட்டைக்குட்றுட்கறியீரோ" என்றெம்பெருமானருளிச்செய்ய, அவற்றையநுசந்தித்தினியராகிறுர் ...........  .........*

### பன்னீராயிரப்படி.

மூன்முந்திருவாய்மொழியில், கீழே - கைங்கர்யப்ரார்த்தனையைப்பண்ணி "கூவுதல்வருதல்செய்யவேணும்" என்றபேக்ஷிக்க, அவனும் தன் நிருபாதிகபந்தத்தாலே "நீரபேக்ஷிக்கவேணுமோ நம்முடையகார்யஞ்செய்கைக்கு" என்று தன்னுடைய ப்ரகாரப்ரகாரி சம்பந்த த்யோதகமான நாராயணத்வத்தை ப்ரகாசிப்பிக்கக் கண்டு; அதினுடைய கார்யமான சர்வலோகரக்ஷண சமர்த்தமாயுள்ள திவ்யநாம சம்பத்தையும், ரக்ஷணர்த்த வ்யாபாரத்தையும், அகிலவேதவேத்யதாப்ரகாரத்தையும், நித்யசூரிபோக்யதையையும், அதினுடைய நிருபமவைலக்ஷண்யத்தையும், அநிஷ்டநிவ்ருத்தீஷ்டப்ராப்திஹேதுவான லக்ஷ்மீசம்பந்தத்தையும், ப்ரபலாநிஷ்டபஞ்சகத்வத்தையும், அபீஷ்டதேசவர்த்தித்வத்தையும், ஆஶ்ரயணம் மிகையான வதிசயிதசீலத்வத்தையும், அதினுடைய வாசாமகோசரமஹத்தையையுமநுசந்தித்து, ஏவம்வித ஸ்வபாவனான சர்வேஶ்வரனை யநுபவிக்கவாசைப்பட்டு அவனுடையசீலத்திலே வித்தராய் அநுபவந்தன்னிலு மக்ஷமரான ப்ரகாரத்தை யருளிச்செய்கிறுர்.

### ஈடு.

"நீரிங்ஙனே யர்த்திக்கவேணுமோ, நம்மோட்டைக் குட்றுட்கையறியீரோ" என்ன; அத்தை யநுசந்தித்தினியராகிறுர். "கூவுதல்வருதல்செய்யாய்" என்று ப்ரார்த்தித்தார்கீழ்; "ஆர்ப்ரார்த்திக்கக்கடவவற்றை யார்ப்ரார்த்திக்கிறுர், உம்முடையலாபத்துக்கு நாம் ப்ரார்த்திக்கவேண்டும்படியன்றே வும்மோடு நமக்குண்டான ரக்தஸ்பர்ஶம், ஆனபின்பு, உம்முடைய சர்வாபேக்ஷிதங்களுஞ்செய்யக்கடவோம், நீர்வெறுக்கவேண்டா" என்று சமாதானம்பண்ணினுன். "மையலேற்றிமயக்கவுன்முகம்

மாயமந்திரந்தான்கொலோ'' என்னக்கடவதிறே; ஸ்ரீகௌசலையார், "ஏகபுத்ரையான நானும்மைப்பிரிந்து தனியிருக்கமாட்டேன், கூடப்போருமித்தனை'' என்று பின்தொடர; புரிந்துபார்த்து, "ஆய்ச்சி, நீரென்னைப் பின்தொடருகிறவிடம் தர்மஹாநிகிடீர்'' என்றுமுகத்தைப்பார்த் தொரு வார்த்தை யருளிச்செய்ய; மீட்கைக்காகப்போனவிவள் மங்களாசாசநம் பண்ணிமீண்டாளிறே; இதிறே யவனுடைய பார்வைகளு மூக்திகளுமிருக்கும்படி. அவனொருவார்த்தைசொன்னால் பின்னை யவன்வழியேபோகவேண்டும்படியாயிறே யிருப்பது. ஆக, அவன் நாராயணனாயிருக்கிற விருப்பை யநுசந்தித்தார்; அந்நாராயணசப்தத்தினுடைய வர்த்தத்தையாராயவென்றிழிந்தவாறே, ஒருவஸ்துவுக்கும் தன்னுடைய பேறிழவுக்குத் தனக்கு ப்ரார்த்திக்கைக்கு ப்ராப்தியற்றிருந்தது; இப்படி யிருக்கிறவன் தன்பக்கலிலே விசேஷகடாக்ஷம்பண்ணினபடியையும், இந்நாராயணசப்தார்த்தத்துக்கெல்லையான வவனுடைய சீலகுணத்தையு மநுசந்தித்து, "இப்போதே யிப்படிசீலவானானவனைக்காணவேணும்'' என்னுமபேக்ஷை பிறந்தது; அதில் தமக்கு அவனிருந்தவிடத்தளவும் கால்நடைதாராதபடிக்கீடாகவாயிற்று அவனுடைய சீலாதிகளிலே யீடுபட்டுத் துவக்குண்டபடி. இனித்தான், இவர்போனாலு மொன்றுசெய்கை மிகையாம்படியிருப்பானொருவனாயிருந்தானவன்; இவர்தாம், ஒன்றுசெய்தநுபவிக்கவல்லவரன்றிக்கேயிருந்தார், அவனுடைய சீலகுணங்களிலே கால்தாழ்ந்திருக்குமவராகையாலே. இப்படிப்பட்டவனுடைய சீலகுண ப்ராசுர்யத்தையேசொல்லித் தலைக்கட்டுகிற இத்திருவாய்மொழி.

அன்றிக்கே, * கண்கள்சிவந்திலே-ப்ரணவார்த்தத்தை யநுசந்தித்தார்; அதில் முதலிரண்டுபாட்டாலே - அகாரார்த்தத்தை யருளிச்செய்து, மேலொன்றைப்பாட்டாலே - சதுர்த்யர்த்தத்தையும் மத்யமாக்ஷரத்தி லர்த்தத்தையும் த்ருதீயாக்ஷரத்திலர்த்தத்தையு மருளிச்செய்து, அவைபிரித்தருளிச்செய்யாதொழிந்தது, சதுர்த்யர்த்தமும் மத்யமாக்ஷரத்திலர்த்தமும் ஸாபேக்ஷமாயல்லதிராமையாலே கூடவருளிச்செய்தார்; மேல்நாலுபாட்டாலே - த்ருதீயாக்ஷரவாச்யனுடைய வைலக்ஷண்யத்தை யருளிச்செய்து; மேலிரண்டுபாட்டாலே - இவ்வடைவிலே ப்ரணவார்த்தாநுசந்தாநம்பண்ணாத பாஹ்யகுத்ருஷ்டிகளை நிரஸித்து; ஆக, ப்ரணவார்த்தத்தை யருளிச்செய்து; மேல், நமஸ்ஸப்தார்த்தத்தை, * கருமாணிக்கமலை, * நெடுமாற்கடிமை, இரண்டாலுமருளிச்செய்து; நமஸ்ஸப்தத்துக்கு சாப்தமாகவு மார்த்தமாகவு மிரண்டிறே அர்த்தம், அதில்சாப்தமானவர்த்தத்தை * கருமாணிக்கமலையிலே யருளிச்செய்து, ஆர்த்தமானவர்த்தத்தை * நெடுமாற்கடிமையிலே யருளிச்செய்தது. நமஸ்ஸப்தத்துக்கு சாப்தமானவர்த்தம் - "நானெனக்குரியேனல்லேன்'' என்கையிறே; ஒரு கந்யகையானலொருவனுக்கேயாயிருக்கையும், தான் தனக்குரியளன்றிக்

கேயிருக்கையுமிறே ஸ்வரூபம்; அத்தையருளிச்செய்தார் - * கருமாணிக்கமலையாலே; மேல், * நாராயண சப்தார்த்தத்தை யருளிச்செய்தார்- * கொண்டபெண்டிராலே; நாராயணசப்தத்துக்கர்த்தம் - ஸ்வாமித்வ வாத்ஸல்யோபாயத்வோபேயத்வ வ்யாபகத்வ மித்யாதியிறே; மேலே, சதுர்த்யர்த்தத்தை யருளிச்செய்தார் - * பண்டைநாளாலே; சதுர்த்திக்கர்த்தம்-கைங்கர்யப்ரார்த்தனையிறே. ப்ரணவார்த்தமும், நமஸ்ஸப்தார்த்தமும், வ்யாபகத்வமும், அவ்யாபகத்வமும், அல்லாத வ்யாபக மந்த்ரங்களிலுமுண்டு; அதில், தாமாதரித்தருளிற்றுத் திருவஷ்டாக்ஷரமென்னுமிடத்தை * ஓராயிரத்தாலே யருளிச்செய்கிறார். இது நடுவில் திருவீதிப்பிள்ளை யருளிச்செய்யும்படி ................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஓராயிரம் ப்ரவேஸே, "நாராயணன் நங்கள்பிரானவனே" என்றத்தைக்கடாக்ஷித்து சங்க்ரஹஸங்கதி (நீரிங்ஙனேயித்யாதி)

விஸ்தரசங்கதி (கூவுதலித்யாதி) கீழே "குடற்றுடக்கு" என்றதின்விவரணம் (ரக்தஸ்பர்ஸமென்றது) (சமாதானம்பண்ணினுன்) சமாஹிதரானுரென்றுகூட்டுவது.

ஒருக்திமாத்ரத்தாலே சமாஹிதராகக்கூடுமோவென்ன (மையலேற்றியித்யாதி) உன்னுடைய தாழ்ந்தபேச்சுக்களும் வ்யாபாரங்களு மெங்களைப்பிச்சேற்றியறிவுகெடுக்க, உன்முகமம்மான்பொடியோ வித்யர்த்தঃ. நாய்ச்சியார்திருமொழி, "பெய்யுமாமுகில்" இத்யாதி. "உக்தி ஆகர்ஷகம்" என்னுமதுக் குதாஹரணம் (ஸ்ரீகௌசலையாரித்யாதி) " நஹிதாவத்... ஏகபுத்ராவிநாபுத்ர... " (நஹிதாவத்குணேர்ஜுஷ்டம்ஸர்வஶாஸ்த்ரவிஶாரதம் । ஏகபுத்ராவிநாபுத்ரமுத்ஸஹே) என்றத்தைப்பற்ற (ஏகபுத்ரையானவித்யாதி) "... " (அகந்த்வாநுகமிஷ்யாமிபுத்ரயத்ரகமிஷ்யஸி) என்றத்தைப்பற்ற (கூடப்போருமித்யாதி) புரிந்துபார்த்து - திரும்பிப்பார்த்து. "... " (பர்த்துঃபுநঃபரித்யாகோந்ருஶம்ஸঃகேவலம்ஸ்த்ரியாঃ) இத்யாதியைப்பற்ற (ஆய்ச்சியித்யாதி) "... " (யந்மங்களம் ஸுபர்ணஸ்ய) இத்யாதியைப்பற்ற (மீட்கைக்காகவித்யாதி) பார்வைகளுமென்றது - "மையலேற்றி" இத்யாதியிலேசித்தம். உக்திகளுமென்றது-"ஆய்ச்சி, நீர்" இத்யாதிகளை. "உக்திகளுமிருக்கும்படி" என்றத்தைவிவரிக்கிறார் (அவனொருவித்யாதி.)

இத்திருவாய்மொழியில் ப்ரமேயத்தை விசதமாக வுபபாதியாநின்றுகொண்டு, இவர் சமாஹிதரானபடியை விஸ்தரிக்கிறார் (ஆகவித்யாதி) முதற்பாட்டிலர்த்தம் (அவன்நாராயணனுயித்யாதி) இரண்டாம்பாட்டைப்பற்ற (ஒருவஸ்துவுக்குமித்யாதி) "அறிந்தனமே," "நங்கள்பிரான்" என்றத்தைப்பற்ற (விசேஷகடாக்ஷம்பண்ணினபடியையுமென்றது) "கடைவதுங்கடலுளமுதம்" என்றத்தைப்பற்ற (சில

குணத்தையுமென்றது) "என்மனமேகமெண்ணுமிராப்பகலின்றி" என்றத்தைப்பற்ற (காணவேணுமென்னு மபேக்ஷைபிறந்ததென்றது) அபேக்ஷைபிறந்தா லவனிருந்தவிடத்தே போகவொண்ணாதோவென்ன (அதில்தமக்கித்யாதி) அவனிருந்தவிடத்தளவுமென்றது - "நின்றவேங்கடம்" என்றத்தைப்பற்ற. கால்நடைதாராதபடியென்றது - "தேவர்கள் கைதொழுவார்கள்" என்றத்தைப்பற்ற. "சீலமெல்லையிலான்" என்றத்தைப்பற்ற (சீலாதிகளிலேயித்யாதி) துவக்குண்டபடி - வசீகரிக்கப்பட்டபடி. "எழுதுமென்னுமிதுமிகை" என்றத்தைப்பற்ற (இனித்தானித்யாதி) ஒன்றுசெய்கை - ஒருகைங்கர்யத்தைச்செய்கை. "தழுவுமாறறியேன்" என்றத்தைப்பற்ற (இவர்தாமித்யாதி) "சீலமெல்லையிலானடிமேல்" என்றத்தைப்பற்ற (இப்படிப்பட்டவனுடையவித்யாதி)

யோஜநாந்தரம் (அன்றிக்கேயித்யாதி) * கண்கள்சிவந்துதொடங்கி * ஓராயிரமளவும் திருமந்த்ரார்த்தத்திலே யேறிடுகிறுர். இதுவே யிரண்டாம்யோஜநைக்குவாசி. அநுசந்தித்தபடி யெப்படியென்ன (அதில் முதலிரண்டாயித்யாதி) அதாவது-முதற்பாட்டாலே-ப்ராப்யமாயிருந்துள்ள விக்ரஹவைலக்ஷண்யத்தையும், இரண்டாம்பாட்டாலே - ததாதாரமான திவ்யாத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தையு மநுசந்திக்கையாலே. அகாரத்தில் பதரூபத்தால்வந்த சேஷித்வத்தினுலும், அர்த்தபலத்தால்வந்த ஸ்ரீய:பதித்வத்தாலும் சித்தமான ப்ராப்யத்வத்தையும், மேல் அனைப்பாட்டாலே - "தீவினைதருளால்" என்று - "அவரக்ஷணே" என்கிற தாத்வர்த்தமானரக்ஷகத்வத்தாலும், ப்ரக்ருத்யர்த்தமான காரணத்வத்தாலும் சித்தமான வுபாயத்வத்தையு மருளிச்செய்கையாலே, முதலிரண்டைப்பாட்டாலே அகாரார்த்தத்தையருளிச்செய்தானென்றபடி. இந்தப்ரகாரம், "𑌏𑌵𑌮𑌕𑍍𑌷𑌰𑌰𑍂𑌪𑍇𑌣𑌕𑌾𑌰𑌣𑌤𑍍𑌵𑌮𑌿𑌹𑍋𑌦𑌿𑌤𑌮𑍍 । 𑌰𑌕𑍍𑌷𑌕𑌤𑍍𑌵𑌞𑍍𑌚𑌤𑌾𑌦𑌰𑍍𑌥𑍍𑌯𑌾𑌚𑍍𑌛𑍇𑌷𑌿𑌤𑍍𑌵𑌂𑌪𑌦𑌰𑍂𑌪𑌤𑌃 ॥ ஸ்ரீ𑌮𑌤𑍍𑌤𑍍𑌵𑌂𑌵𑌾𑌚𑍍𑌯𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌚𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 । 𑌰𑌕𑍍𑌷𑌕𑌤𑍍𑌵𑌮𑍁𑌪𑌾𑌯𑌤𑍍𑌵𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌪𑍇𑌕𑍍𑌷𑌾𑌵𑌿𑌶𑍇𑌷𑌿𑌤𑌮𑍍 ॥ 𑌅𑌭𑍀𑌷𑍍𑌟𑌾𑌰𑍍𑌥𑌨𑌿𑌦𑌾𑌨𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌕𑌾𑌰𑌣𑌤𑍍𑌵𑌂𑌤𑌦𑌨𑍍𑌵𑌿𑌤𑌮𑍍 । 𑌶𑍇𑌷𑌿𑌤𑍍𑌵𑌮𑍇𑌵𑍋𑌪𑍇𑌯𑌤𑍍𑌵𑌂 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍𑌕𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌿𑌤𑌮𑍍 ॥ ஸ்ரீ𑌮𑌤𑍍𑌤𑍍𑌵𑌂𑌸𑌰𑍍𑌵𑌤𑍋𑌤𑍍𑌕𑌰𑍍𑌷𑌾𑌦𑍁𑌪𑍇𑌯𑌤𑍍𑌵𑌮𑌪𑍂𑌰𑌯𑌤𑍍" (ஏவமக்ஷரரூபேண காரணத்வமிஹோதிதம் । ரக்ஷகத்வஞ்சதாதர்த்யாச்சேஷித்வம்பதரூபத:॥ ஸ்ரீமத்வம்வாச்ய ஸக்த்யாச யுஜ்யதே பரமாத்மந: । ரக்ஷகத்வமுபாயத்வமர்த்யபேக்ஷாவிஶேஷிதம் ॥ அபீஷ்டார்த்தநிதாநத்வாத் காரணத்வந்ததந்விதம் । ஶேஷித்வமேவோபேயத்வம்கிஞ்சித்கார்யத்வரூபிதம் ॥ ஸ்ரீமத்வம்ஸர்வதோத்கர்ஷாதுபேயத்வ மபூரயத்) என்று தீபசங்க்ரஹத்திலே சொல்லப்பட்டது. (மேலொன்றைப்பாட்டாலேயித்யாதி) அதாவது-"இறவேறி" என்று ஆத்மஸ்வரூபம் தனக்கத்யந்தசேஷமென்னுமிடத்தைக்காட்டித்தந்தானென்கையாலே - லுப்தசதுர்த்யர்த்தமான சேஷத்வத்தையும், "யானும்தானுயொழிந்தான்" என்று சமாநாதிகரணமாக வருளிச்செய்கையாலே - மத்யமாக்ஷரப்ரதிபாத்யாநந்யார்ஹசேஷத்வத்தையும், "தேனும்பாலுங்கன்னலுமமுதுமாகித்தித்து"என்று-த்ருதீயாக்ஷர வாச்யனுன வாத்மாவினுடைய, "மஜ்ஞாநே" என்கிறதாது ஸித்தஜ்ஞாநாநந்த விசிஷ்டதையால்வந்த போக்யதையையு மருளிச்செய்கையாலே- மேலொன்றைப்பாட்டாலே சதுர்த்யர்த்தத்தையும், மத்யமாக்ஷரத்திலர்த்தத்தையும், த்ருதீயாக்ஷரத்தி லர்த்தத்தையு மருளிச்செய்தென்றபடி. ஆனல் "இது சேஷத்வம், இது அநந்யார்ஹத்வம், இது ததாஸ்ரயமானவாத்மா"என்று பிரித்துச்சொல்லாதே, த்ருதீயாக்ஷர வாச்யனுன வாத்மாவோடேகூட்டி யருளிச்செய்

வானென்னென்ன (அவையித்யாதி) வைலக்ஷண்யத்தை-ஜ்ஞாநாநந்தாதிவைலக்ஷண்யத்தையென்றபடி..அருளிச்செய்தப்ரகாரமேதென்ன (நமஶ்ஶப்தத்துக்கித்யாதி) சாப்தமானவர்த்தமேது, ஆர்த்தமானவர்த்தமேதென்ன (நமஶ்ஶப்தத்துக்கு சாப்தமானவித்யாதி.) இது * கருமாணிக்கமலையிலேயெப்படிசித்திக்கிறதென்ன (ஒரு கந்யகையித்யாதி) ஆர்த்தமானவர்த்தம் - ததியசேஷத்வபர்யந்தமாகை. (அத்தையருளிச்செய்தார்) * நெடுமாற்கடிமையிலே என்றுகூட்டுவது. அதெப்படி யென்ன (நாராயணசப்தத்துக்கித்யாதி) தத்புருஷனாலே - ஸ்வாமித்வமும், பஹுவ்ரீஹியாலே - வ்யாபகத்வ வாத்ஸல்யங்களும், அயநசப்தத்தில் வ்யுத்பத்தி த்வயத்தாலும்-உபாயோபேயத்வங்களும் சொல்லப்பட்டதிறே. இந்த ஸ்வாமித்வாதிகளாகிற நாராயணசப்தார்த்தத்தை * கொண்டபெண்டிரிலே யருளிச்செய்தார். எங்ஙனேயென்னில்; "நம்மதாதுமவனன்றிமற்றில்லை," "தொண்டரோமாய்" இத்யாதியாலே - ஸ்வாமித்வத்தையும், "வண்புகழே" என்றும், "கணையொன்றாலேயேழ்மரமுமெய்த" என்றும் - ஆஶ்ரிதரிருந்தவிடத்தே சென்று கார்யமென்றுவாத்ஸல்யத்தையும், "கண்ணனல்லாலில்லைகண்டீர்" என்று-உபாயத்வத்தையும், "குற்றமில்சீர்கற்றுவைகல்வாழ்தல்கண்டீர்" என்று - உபேயத்வத்தையுமருளிச்செய்தார். "நம்மதாதுமவனன்றி மற்றில்லை" என்றதிலே - வ்யாபகத்வமும் ஸித்தம். அதெப்படியென்ன (சதுர்த்திக்கித்யாதி.) அர்த்தத்தை யருளிச்செய்தால்போராதோ, இத்திருவாய்மொழியிலே சப்தத்தை யருளிச்செய்வா னென்னென்ன (ப்ரணவார்த்தமுமித்யாதி.) ஆதர்த்தவ்யதைக்காக ஆப்தோபதிஷ்டமென்கிறார் (இது நடுவிலித்யாதி.)

சரமசதுர்த்தியில் தாதர்த்யே சதுர்த்தியென்று சேஷத்வத்தைச்சொல்லுமளவில், அது லுப்தசதுர்த்தீ ஸித்தமாகையாலும், "விधிஸ்த்வத்யந்தமப்ராப்தே" (விதிஸ்த்வத்யந்தமப்ராப்தே) என்று ப்ராப்தார்த்தத்தில் விதி கோசரியாமையாலும், "நாகிஞ்சித்குர்வதஶ்ஶேஷத்வம்" (நாகிஞ்சித்குர்வதஶ்ஶேஷத்வம்) என்கிற ந்யாயத்தாலே - சேஷத்வ ஸ்த்திரீகரணரூபமான கைங்கர்யத்தை சரமசதுர்த்திசொல்லுகிறது. "ஈத்ருஶகைங்கர்யந்தான் ஸித்தமோ, அஸித்தமோ" என்று விசாரிக்குமளவில்; அது ஸித்தமாகையாலே, தத்ப்ரார்த்தனை உபபத்திபலத்தாலும், "ப்ரார்த்தநாயாஞ்சதுர்த்தீ" (ப்ரார்த்தநாயாஞ்சதுர்த்தீ) என்கிற சாப்திக ப்ரக்ரியையாலும், ஸித்திக்கிறது. ..............................................*

---

## மூன்றுந்திருவாய்மொழி.

# முதற்பாட்டு.

---

ஓராயிரமாயுலகேழளிக்கும், பேராயிரங்கொண்டதோர்பீடுடையன்
காராயினகாளநன்மேனியினன், நாராயணனங்கள்பிரானவனே.

### ஆறாயிரப்படி.

ஒரொருதிருநாமமே யாயிரம்படியா யுலகேழளிக்கும் பேராயிரமுடையவனாய், ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வ சத்யசங்கல்பத்வ காருண்ய

சௌசில்ய வாத்ஸல்யாத்யஸங்க்யேயகல்யாணகுணவிசிஷ்டனாய், *சௌந்தர்ய சௌகந்த்ய சௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யபரிமிதகுணவிசிஷ்ட நீலமேகநிப திவ்யரூபனாயிருந்த நாராயணனே ஸர்வேஶ்வரனாகப் பெறுவதே! என்று, தம்முடைய திருவுள்ளத்தி லின்னாப்பெல்லாந்தீர்ந்து எம்பெருமானுடைய சர்வேஶ்வரத்வத்தை யநுபவிக்கிறார். .........*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், நாராயணத்வகார்யமான சர்வரக்ஷகமாயுள்ள நாமசம்பத்தையுடையவன் நமக்குபகாரகனென்றறுதியிட்டு, நெஞ்சைநோக்கி யருளிச்செய்கிறார்.

“ஸம்ஹர்த்தா” (ஸம்பர்த்தா) இத்யாதி வசநக்ரமத்தாலே யுண்டான வ்யுத்பத்திபேதத்தாலும் நிர்வசநபேதத்தாலும், ஓர் - ஓரோதிருநாமங்கள். ஆயிரமாய்-ஸஹஸ்ரமுகமாய்க்கொண்டு. உலகேழு - சர்வவிதமான சகல சேதநாசேதநங்களையும். அளிக்கும் - ரக்ஷிக்கக்கடவதான. பேர் - திருநாமங்கள். ஆயிரம்-ஆயிரத்தை. கொண்டது - உடைத்தான. ஓர் - அத்விதீயமான. பீடு-பெருமையை. உடையன்-உடையனாய். இந்தநாமங்களாலே ப்ரதிபாத்யமாயிருக்கிற, காளகாராயின - காளமேகம்போலே ஶ்யாமளமாய். நன் - அப்ராக்ருதமான. மேனியினன் - திவ்யவிக்ரஹத்தையுடையனாய். நாராயணனவனே - அவற்றுக்கடங்க மூலபூதமான நாராயணசப்தவாச்யனானவனே. நங்கள் - நமக்கு. பிரான் - உபகாரகன். ...............*

## ஈடு - முதற்பாட்டு.

“அவன் நாராயணனன்றோ, நம்மபேக்ஷிதஞ்செய்கைநிஶ்சிதம்” என்று திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்கிறார்.

(ஓராயிரமாய்) ஓரோருதிருநாமங்களே யாயிரம்முகத்தாலே ரக்ஷிக்கவற்றாயிருக்கும். “ஐஶ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யஶஸஶ்ஶ்ரியஃ” (ஐஶ்வர்யஸ்யஸமக்ரஸ்யவீர்யஸ்யயஶஸஶ்ஶ்ரியஃ) என்று - நிர்வசநபேதத்தாலே அநேகம்படி ரக்ஷிக்கவற்றாயிறேயிருப்பது. (உலகு) ரக்ஷிக்குமிடத்தில், ஓரொருத்தராகவன்றிக்கே லோகமாகரக்ஷிக்கும். (ஏழு) அதுதன்னிலு மொருலோகமாத்ரமன்றிக்கே, சர்வலோகங்களையும் ரக்ஷிக்கும். ஆஶ்ரிதரொருத்தரை ரக்ஷிக்குமதுண்டிறே யவனுக்கு; அங்ஙனன்றென்கை திருநாமங்கள். (அளிக்கும்) இவைபண்ணினபாபங்களைப்பார்த்து, “க்ஷமிஷ்யாமி” என்பதுமொருபோதுண்டு அவனுக்கு; அளிக்குமதொன்றுமேயாயிற் றிவற்றுக்கு ஸ்வபாவம். (பேர்) - ரக்ஷிக்கைக் கொருபேர்காணும்வேண்டுவது. அப்படிப்பட்ட திருநாமங்களைத்தானெத்தனையுடையனென்னில் (ஆயிரங்கொண்டதோர்பீடுடையன்) “தேவோ நாம ஸஹஸ்ரவாந்” (தேவோநாமஸஹஸ்ரவாந்) என்னுமாபோலே. பல பசுவுடையவனென்னுமாபோலே. சர்வாதித்யம்பண்ணினைத்தவர்கள், சோறுந்தண்ணீருங்குறையறுத்துக்கொண்டிருக்குமாபோலே, ஜகத்ரக்ஷ

ணசிந்தைபண்ணின விஸ்வரனுக்கு, அதுக்குபாயமாக வாயிரந்திருநாம ங்களுண்டாயிருக்குமாயிற்று. கோயிலாய்த்தான், புத்ரவியோகத்தாலே பட்டர் ஸ்ரீபாதத்திலேவந்து தன்சோகமெல்லாந்தோற்றவிழுந்துகிடக்க, அவரருளிச்செய்தவார்த்தையை நினைப்பது. ஆயிரந்திருநாமத்தையுடை யனுகையால் வந்த பெருமையையுடையவன். அவைதாம் கரைகட்டாக் காவேரிபோலே பரந்திருந்தால், அவற்றையெல்லா மொருமுகஞ் செய்த நுபவிக்கைக்கீடான வடிவையுடையனுயிருக்கும் (காராயினகாளநன்மே னியினன்) காரென்றேயிருக்கிருரா யிற்று. ரூபகம்முற்றுகையாலே. கறு த்திருந்துள்ள காளமேகம்போலே யிருப்பதாய்; அதுதானும், பெருக் காற்றிலிழிவார் ஒருதெப்பந்தேடியிழியுமாபோலே, ஒன்றைச்சொல்லும் போது உபமாநம் முன்னுகவல்லது சொல்லவொண்ணுமையாலேசொன் னவித்தனைபோக்கி, திருமேனியைப்பார்த்தால் உபமாநரஹிதமா யாயிற் றிருப்பது. இப்படியிருக்கிறவை தன்னையுடையவன்முறுனொன்ன ( நாரா யணன் ) ஜ்ஞாநசக்த்யாதிகளும் குணங்களா யிருக்கச்செய்தே, ஜ்ஞாநா நந்தாமலத்வர்திகள் ஸ்வரூபநிரூபகமாயிருக்குமிறே; அப்படியே, "பே ராயிரங்கொண்டதோர்பீடுடையன்" என்றவனுகிருனுனொன்ன ; "இன் னுன்" என்று விசேஷிக்கிறவிடத்தில், ( நாராயணன் ) என்கையாலே- நிரூபகமாய்ப்புக்கதிறே யிது. ஆயிரந்திருநாமங்களைச் சொல்லி, அவற்றி லே மூன்றை ப்ரதாநமாக வெடுத்தது வ்யாபகமந்த்ரங்க ளாகையாலே ; அவற்றிலே யிரண்டை மற்றையவற்றுடொக்கச்சொல்லலாம்படியாயிற் றிதுக்குண்டான ப்ராதாந்யம். "அந்தணர்மாட்டந்திவைத்தமந்திரத்தை" என்றும், "நின்திருவெட்டெழுத்துங்கற்றுநான் - உற்றதும்" என்றும், "நாராயணுவென்னும்நாமம்" என்றும், "நமோநாராயணம்" என்றும், இவையிறே திருமங்கையாழ்வார்படி ; நம்மாழ்வாரும், "வண்புகழ்நார ணன்" என்றுதொடங்கி, திருவாய்மொழி முடியவநுசந்தித்த திதுவாயி ருக்குமிறே. வேதங்களும், ஆழ்வார்களும், நம்மாசார்யர்களு மெல்லாம் போனவழியிதுவாயிற்று ; நமக்குமெல்லா மிப்போது மவற்றை யாதரித் தாலொருகுற்றமில்லையிறே; இதுதன்னை சூத்ராதிகள் மற்றையார் பரிக்ர ஹிக்கை சுட்டியிறே நாமதுதன்னைத்தவிர்ந்தது. நம்மாசார்யர்கள் போ னதுபோருமிறே நமக்காதரிக்கவேண்டுவது. ( நங்கள்பிரானவனே ) நம க்கு ரக்ஷகனுன வுபகாரகனவனே. "கூவுதல்வருதல்செய்திடாய்" என்று நம்பேற்றுக்கு நமக்கு ப்ரார்த்திக்க ப்ராப்தியில்லையென்கிறது - அவதார ணத்தால். ......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. ( ஓராயிரமித்யாதி. ) "நாராயணன்நங்கள்பிரானவனே" என்றத்தைக்கடாக்ஷித்து, அதில் சப்தசித்தமான வர்த்தத்தையும்,தாத்பர்யசித்தமா னவர்த்தத்தையும் கடாக்ஷித்தவதாரிகை ( அவனித்யாதி. ) திருவுள்ளத்தைக்குறித்

தென்றது - நாலாம்பாட்டில் "மனமே" என்றத்தைக் கடாக்ஷித்தாதல், "மன மே - சோரேல்கண்டாய்" என்றது - முதல் மூன்றுபாட்டுக்கும் க்ரியையாக விவக்ஷித்தாதல். இதுவேமுக்யம்.

ஆயிரம்முகத்தாலே ரக்ஷிக்கும்ப்ரகாரமேதென்ன (ஐஶ்வர்யஸ்யேத்யாதி.) நிர்வசநபேதம் - நிருக்திபேதம். பகவானென்கிற திருநாமத்தைச் சொன்னால், அதினர்த்தமான ஐஶ்வர்யவீர்யாதிகளெல்லாவற்றையும் கொடுக்குமென்றபடி. "ஐஶ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யஶஸஶ் ஶ்ரியஃ । ஜ்ஞாநவைராக்யயோஶ்சைவ ஷண்ணாம்பக இதீரணா" (ஐஶ்வர்யஸ்யஸமக்ரஸ்ய வீர்யஸ்யயஶஸஶ் ஶ்ரியஃ। ஜ்ஞாநவைராக்யயோஶ்சைவ ஷண்ணாம்பகஇதீரணா) இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே. "உலகு" என்றதுக்கு வ்யாவர்த்யம் (ரக்ஷிக்குமித்யாதி.) "ஏழு" என்றதுக்கு வ்யாவர்த்யம் (அதுதன்னிலுமித்யாதி.) இத்தாலீஶ்வரவ்யாவ்ருத்தி (ஆஶ்ரிதரித்யாதி.) "அளிக்கும்" என்றதுக்கு வ்யாவர்த்யம் (இவைபண்ணினவித்யாதி.)

"பேர்" என்கிற வேகவசநத்தைக் கடாக்ஷித்து ரஸோக்தி (ரக்ஷிக்கைக்கித்யாதி.) சாடுவுக்கு, பேர்காணும் - வ்யாஜங்காணுமென்றபடி. அப்படிப்பட்ட - ஒரொன்றே யாயிரம்முகமாக ரக்ஷிக்கவற்றான. பீடு - பெருமை. "ஆயிரந்திருநாமத்தையுடையனாகை யவனுக்குப்பெருமை" என்னுமதுக்கு ப்ரமாணம் (தேவோநாமேத்யாதி) "ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ராஸ்யஸ் ஸஹஸ்ரசரணோ விபுஃ। ஸஹஸ்ரபாஹுஸ்ஸர்வஜ்ஞோ தேவோ நாமஸஹஸ்ரவாந்" (ஸஹஸ்ராக்ஷஸ்ஸஹஸ்ராஸ்யஸ் ஸஹஸ்ரசரணோவிபுஃ। ஸஹஸ்ரபாஹுஸ்ஸர்வஜ்ஞோ தேவோநாமஸஹஸ்ரவாந்) இதி மஹாபாரதே. "நாமஸஹஸ்ரவாந் - தேவஃ" (நாமஸஹஸ்ரவாந் - தேவஃ) இத்யந்வயஃ. "ரக்ஷணார்த்தமாக வநேகந்திருநாமங்களையுடையவன்" என்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் (பலபசுவித்யாதி.) ஒருதிருநாமம் போராதோ, ஆயிரம் திருநாமமேதுக்கென்ன (ஸர்வாதித்த்யமித்யாதி.) திருநாமம்தஞ்சமாயிருக்குமென்கைக் கைதிஹ்யம் (கோயிலாய்த்தானித்யாதி) குமாரர்க்கு பட்டர்திருநாமம்சாற்றினான்; அந்தகுமாரர் பரமபதத்துக்குப்போக, அவன் பட்டர் சந்நிதியிலேவந்து க்லேஶப்பட, "நீ 'நம்முடைய திருநாமம்சாற்றின பிள்ளைபோனான்' என்றன்றோ து:கிக்கிறது, அதுக்கு து:கிக்கவேண்டா, அந்தத் திருநாமமுடையநாமிருந்தோமே!" என்று, பட்டர், தம்மைப்போலே யொருவிக்ரஹத்தை யேறியருளப்பண்ணி ப்ரஸாதித்தருளினார். சப்தார்த்தம் (ஆயிரந்திருநாமத்தையித்யாதி.) கொண்டது - கொண்ட. உடைத்தானவென்றபடி.

மேலுக்கவதாரிகை (அவைதானித்யாதி.) கார்போன்றவென்னாதே, "கார் தானாயிருக்கிற" என்றதுக்கு பாவம் (காரென்றேயித்யாதி.) ரூபகம் - உபமை. கார் - மேகம். "காள - காராயின - நன்மேனியினன்" என்றந்வயிப்பது. கறுத்த மேகம்போன்ற விலக்ஷணமான, உபமாநரஹிதமான திருமேனியையுடையவனென்றுபொருள். "நன்" என்றதுக்கர்த்தம் (அதுதானுமித்யாதி.) நன் - உபமாநரஹிதனென்றபடி.

அல்லாத திருநாமங்களிருக்க, "நாராயணன்" என்றித்தை யருளிச்செய்வானென்னென்ன (ஜ்ஞாநசக்த்யாதிகளுமித்யாதி.) அதாவது - ஜ்ஞாநசக்த்யாதி

களும் குணங்களாயிருக்கச்செய்தே, ஜ்ஞாநாநந்தங்கள் ஸ்வரூபநிரூபகங்களாய், ஜ்ஞாநசக்த்யாதிகள் நிரூபித ஸ்வரூபவிசேஷணங்களாகிறவோபாதி, இதுவும் திருநாமங்களிலே யொன்றாயிருக்கச்செய்தே, இது ஸ்வரூபநிரூபகமாய்க்கொண்டு ப்ரதாநமாய், அத்தாலே நிரூபிதமான வஸ்துவினுடைய குணசேஷ்டிதங்களுக்குவாசகம் அல்லாத திருநாமங்களென்று - இவ்வாக்யத்துக்குக்கருத்து. இது ப்ரதாநமானபடியென்னென்ன (ஆயிரந்திருநாமங்களையித்யாதி) விஷ்ணுகாயத்ரியிலே ப்ரதாநமாகவெடுத்ததென்றபடி. "நாராயணாய" என்று முற்படவெடுத்தமையைப்பற்ற (இதுக்குண்டானப்ராதாந்யம்) என்கிறார். ஸ்ருதியேயன்றிக்கே, ஆழ்வார்களும் விரும்பியிருப்பர்களென்கிறார் (அந்தணர்மாட்டித்யாதி) அந்தணர்தநமான வேதத்தினுடைய உத்தரபாகத்திலே யிருக்கிற மந்திரமென்று - திருமந்த்ரத்தைச்சொல்லுகிறது. அந்தணர் - ப்ராஹ்மணர். மாடு - தநம். நிகமிக்கிறார் (வேதங்களுமித்யாதி) நம்மாசார்யர்களு மெல்லாமென்றது-திருமந்த்ரத்தையே யுபதேசிக்கையைப்பற்ற. ஆசார்யர்கள் இத்தைப்ரதாநமாகையாலே யாதரித்தார்களேயாகிலும், நாமித்தையுமவற்றையுமொக்க விரும்பாமே யுபேக்ஷிப்பா னென்னென்ன (நமக்குமித்யாதி) ஆனால் பின்னைத்தவிருவானென்னென்ன (இதுதன்னையித்யாதி) அவற்றை - ஏதத்வ்யதிரிக்த வ்யாபகத்வயத்தையும், நாமாந்தரங்களையும். இதுதன்னையென்றது-ஜாத்யேகவசநமாய், மற்றை வ்யாபகமந்த்ரத்வயத்தையும், அல்லாததிருநாமங்களையும் சொல்லுகிறது. (அதுதன்னை) என்றதும் - கீழே (இதுதன்னை) என்றத்தையே சொல்லுகிறது. சுட்டியிறே - நிமித்தமாகவிறே. சூத்ராதிகள் - சைவரானசூத்ராதிகள். ஆதிசப்தத்தாலே - வைஶ்யக்ஷத்ரியாதிகளைச்சொல்லுகிறது. மற்றையார் - நிர்விசேஷசிந்மாத்ரவாதிகளான வத்வைதிகள். பரிக்ரஹிக்கையாவது - இந்தநாமங்களை தேவதாந்தரபரங்களாகவும் நயிப்பிக்கை. நாராயணசப்தம், ணத்வம்பாதிக்கையாலே, நயிப்பிக்கக்கூடாதென்றுகருத்து. எல்லாமென்றாலும் பகவந்நாமமன்றோ, பரிக்ரஹிக்கத்தட்டென்னென்ன (நம்மாசார்யர்களித்யாதி)

ஏவகாரத்துக்கர்த்தம் (கூவுதலித்யாதி)

ஓராயிரமாயென்றுதொடங்கி, அவனே - நங்கள்பிரானித்யந்வயக... ... ...*

# இரண்டாம்பாட்டு.

அவனேயகன்ஞாலம்படைத்திடந்தா
னவனேயஃதுண்டுமிழ்ந்தானளந்தா
னவனேயவனுமவனுமவனு
மவனேமற்றெல்லாமுமறிந்தனமே.

## ஆறாயிரப்படி.

(அவனே) ப்ரஹ்மருத்ராதிகளு மீஶ்வரரல்லரோ, நாராயணனே சர்வேஶ்வரனென்னுமிட மெங்ஙனே யறிந்தபடியென்னில்;

அவனே நிகிலஜகந்நிர்மாணோத்தரண நிகரணோத்கிரண் க்ரமணாதி சர்வேஶ்வராசாதாரண திவ்ய சேஷ்டிதங்களைப் பண்ணுகையாலும், சதுர்முகபசுபதி சதமக ப்ரப்ருதிஸ்த்தாவர பர்யந்தமான சர்வாத்மாக்க

ளுக்கு மாத்மபூதனுகையாலும், நாராயணனே சர்வேஸ்வரனென்னு மிட மறிந்தேனென்கிறுர்.......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அந்தநாராயணசப்தார்த்தமான ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரத்தைப் பண்ணிக்கொண்டு சர்வாத்மபூதனுனபடியை நமக்கு ப்ரகாசிப்பித்தானென்கிறுர்.

அகல் - விஸ்தீர்ணமான. ஞாலம் - ஜகத்தை. படைத்து - உத்பாதித்தானும். இடந்தான் - ப்ரளயாபத்திலே முழுகியிடந்தெடுத்தானும். அவனே - சஹாயாந்தர நிரபேக்ஷனுன்னவ்வனே. அவனே - அவனே. அஃது - அந்த பூமியை. உண்டு-மஹாப்ரளயத்திலே வயிற்றிலே வைத்துநோக்கி. உமிழ்ந்தான் - ப்ரளயாநந்தரமுமிழ்ந்தவனும். அளந்தான் - அந்யாபிமாநம் வாராமலளந்துகொண்டவனும். அவனுமவனுமவனும் - ஸ்ருஷ்டிசம்ஹார ரக்ஷணத்துக்குக்கடவராய், தனக்கு ப்ரகாரதயா வேதாந்தத்திலே "ஸஃஹாஸஶிவஸ்ஸேந்ரஃ" (ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ரஃ) என்று ப்ரசித்தரான ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகளும். அவனே - அவனே. மற்று - மற்றும் ஸ்ருஷ்ட்யாதிகளுக்குக் கர்மீபவித்த. எல்லாமும்-சகல சேதநாசேதநங்களும். அவனே - அவனேயாக, அறிந்தனம் - அவன் தந்த ஜ்ஞாநத்தாலே யறிந்தோம்.......................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

கீழ் ப்ரஸ்துதமான நாராயணசப்தத்துக் கர்த்தத்தையருளிச்செய்கிறுர்.

(அவனே யகல்ஞாலம் படைத்திடந்தான்) விஸ்த்ருதமான பூமியையுண்டாக்கி, ப்ரளயங்கொண்ட பூமியை மஹாவராஹமா யெடுத்தானுமவனே. அவதாரணத்தால் - ஸ்ருஷ்ட்யாதிகளில் சஹகாரி நைரபேக்ஷயஞ்சொல்லுகிறது. (அவனேயித்யாதி) ப்ரளயங்கொள்ளாதபடி பூமியையெடுத்து வயிற்றிலே வைத்து, வெளிநாடுகாணவுமிழ்ந்து, மஹாபலியாலே யபஹ்ருதமாக, எல்லைநடந்து மீட்டுக்கொண்டானவனே. இந்த வவதாரணத்தால் – ஆபத்ஸகத்வாதி ரக்ஷகத்வத்திலும் சஹகாரிநைரபேக்ஷயஞ்சொல்லுகிறது. (அவனேயித்யாதி) ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகளுடைய ஸ்வரூபஸ்த்திதி ப்ரவ்ருத்திகளவனிட்ட வழக்கு. "ஸஃஹாஸஶிவஸ்ஸேந்ரஃ" (ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ரஃ) என்கிற ப்ரசித்தியைப்பற்றச்சொல்லுகிறுர். "ஸஃ, ஸஃ, ஸஃ," என்றே போருகிறுர். (அவனே மற்றெல்லாமும்) "ஸொக்ஷரஃபரமஸ்வராட்" (ஸோக்ஷரஃபரமஸ்வராட்) என்கிறபடியே, ப்ரதாநரோடு, அப்ரதாநரோடுவாசியற, சகல சேதநாசேதநங்களும் தததீநமே. (அறிந்தனமே) ப்ரஹ்மாதிகள் "ஈஶ்வரோஹம்" (ஈஶ்வரோஹம்) என்றிருக்கையும், அவர்களை யாஶ்ரயிப்பாருமாய்ச் செல்லாநிற்க, நீர் (அவனே) என்கிறதென்கொண்டென்னில்; * மயர்வறமதிநல மருளப்பெற்றத்தாலே யறிந்தவனுகையாலே. ஆக, இர

ண்டுபோட்டாலும் - திருமந்த்ரத்தையும், அதிலர்த்தத்தையு மநுசந்தித்தாராய் நின்றார்..........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (அவனேயித்யாதி)

* நாராயணசப்தத்துக்கர்த்தம் - "நராஜ்ஜாநிதத்வாநி" (நராஜ்ஜாநிதத்வாநி) என்று காரணத்வமும், அந்தர்யாமித்வ பலிதரக்ஷகத்வமும், அந்தர்யாமித்வமுமாகையாலே, அம்மூன்றையும் பூர்வோத்தரார்த்தங்களாலே யருளிச்செய்கிறாரென்றபடி.

"அவனுமவனுமவனும் - அவனே" என்றால் ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகளைச் சொல்லும்படி யென்னென்ன (ஸப்ரஹ்மேத்யாதி.) விவரணம் (ஸஃஸஃ இத்யாதி.) ஸஃ ஸஃ என்றது - "ஸப்ரஹ்மா" (ஸப்ரஹ்மா) என்ற ஶ்ருதியில், தச்சப்தோபாதாநமன்று, "அவன் அவன்" என்றதுக்கு ப்ரதிபதமாக சம்ஸ்க்ருதத்தாலே வ்யாக்யாதா வருளிச்செய்தது.

"மற்று" என்கிற விது - அக்ஷரசப்தவாச்யரான முக்தாத்மாக்களைச் சொல்லுகிறது. "பரமஸ்வராட்" (பரமஸ்வராட்) என்று - முக்தாத்மஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. அக்ஷரஃ - விகாரரஹிதஃ. பரமஃ - ப்ரஹ்மாதிப்ய உத்க்ருஷ்டஃ. ஸ்வராட் - ஸ்வதந்த்ரஃ. முக்தோபீஶ்வராதீந இதி ஶ்ருதேரர்த்தஃ. ப்ரதாநரோடென்றது - கிழைக்கடாக்ஷித்து. "விஶ்வமேவேதம்புருஷஃ" (விஶ்வமேவேதம்புருஷஃ) என்றத்தைப்பற்ற (ப்ரதர்நரோடித்யாதி.)

க்ரமேணார்வயஃ..........................................................................*

---

## மூன்றாம்பாட்டு.

அறிந்தனவேதவரும்பொருணூல்க
ளறிந்தனகொள்கவரும்பொருளாத
லறிந்தனரெல்லாமரியைவணங்கி
யறிந்தனர்நோய்களறுக்குமருந்தே.

## ஆறாயிரப்படி.

(அறிந்தன) அபௌருஷேயமாகையாலே நிர்த்தோஷாதி துர்லப ப்ரயோஜநரூபார்த்தவத்தாய், பரமபுருஷ யாதாத்ம்ய ஜ்ஞாபநாயைவ ப்ரவ்ருத்தமான சகல வேதங்களாலும், * ஜந்மாந்தரஸஹஸ்ரார்ஜித தபோஜ்ஞாநஸமாதிகளாலே ப்ரக்ஷீணசேஷ கல்மஷராய்த் தன் திருவடிகளிலே ஸஞ்ஜாதபக்திகளான புருஷராலும், சாம்சாரிக சமஸ்த துஃகபேஷஜதயா பரமப்ராப்யதயா வறியப்படுகிற வவனை, நான் நிர்ஹேதுகமாக வறியப்பெற்றேனென்கிறார். வேதங்களாலும் வேதவித்துக்களாலு

மறியவொண்ணாதவனை, நான் நிர்ஹேதுகமாக வுள்ளபடியே யறியப்பெற்றேனென்றுமாம்........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சகல வேதங்களோடு வைதிகபுருஷர்களோடு வாசியற, தம்மைப்போலன்றியே யவனை யறிந்தவளவை யருளிச்செய்கிறார்.

அறிந்தன - "வெ௫ாஹஜெ௨தழ" (வேதாஹமேதம்) என்றறிந்தனவாயிருக்கிற. வேதம் - வேதங்களினுடைய. அரு - அறிதற்கரிய. பொருள் - பொருள்களையும் நிஷ்கர்ஷித்துத்தருவதான. நூல்கள் - ப்ரஹ்மசூத்ரேதிஹாஸ புராணாதிகளான சாஸ்த்ரங்கள். "யதொவாசொநிவத்ஞெ" (யதோவாசோநிவர்த்தந்தே) என்றும், "யஸ்ாமதஂதஸ்ஸமதழ" (யஸ்யாமதம்தஸ்யமதம்) என்றும், "அவிஜ்ஞாதஂவிஜாநதாழ" (அவிஜ்ஞாதம்விஜாநதாம்) என்றுஞ் சொல்லுகிற மர்யாதையாலே, அரு - அறியவரிய. பொருளாதல் - பொருளென்று. அறிந்தன - அறிந்தனவாக. கொள்க - கொள்ளவமையும். அறிந்தனர் - "அஹஂவெ௫ிஜஹாதாநழ" (அஹம்வேத்மிமஹாத்மாநம்) என்றறிந்த வைதிகபுருஷர்கள். எல்லாம் - எல்லாம். அரியை - சர்வபாபஹரணன சர்வேஸ்வரனை. வணங்கி - ஆஸ்ரயித்து. நோய்கள் - தங்களுடைய சாம்சாரிக மஹாவ்யாதியை. அறுக்கும் - அறுத்துக்கொள்ளும். மருந்தே - பரமௌஷதமாக. அறிந்தனர் - அறிந்தார்களித்தனை.

நாமப்படியன்றியே, அவன் போக்யதையையும், சீலாதிகளையும் பூர்ணமாகக்காட்ட வறியப்பெற்றோமென்று, கீழில் "அறிந்தனம்" என்கிற வாக்யத்தோடே யந்வயம்........................................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

வேதங்களும், வேதார்த்த வித்துக்களான ருஷிகளு மறிந்தவளவன்றிக்கே, தன்னை யெனக்குப் பூர்ணமாக வறிவித்தானென்று ப்ரீதராகிறார்.

(அறிந்தனவித்யாதி) துர்ஜ்ஞேயார்த்தத்தை யறிந்தனவாயிருக்கிற வேதங்களாகிற சாஸ்த்ரங்களென்னுதல்; அறிந்தனவாயிருக்கிற வேதங்களில் துர்ஜ்ஞேயார்த்தத்தை நிஷ்கர்ஷித்துத்தரும் ப்ரஹ்மசூத்ரம், இதிஹாசபுராணாதிகளென்னுதல். (அறிந்தனகொள்க வரும்பொருளாதல்) "துர்ஜ்ஞேயன்" என்னு மிவ்வள வறிந்தனவாகக்கொள்ள வமையும், "யதொவாசொநிவத்ஞெ" (யதோவாசோநிவர்த்தந்தே) "யஸ்ாமதஂதஸ்ஸமதழ" (யஸ்யாமதம்தஸ்யமதம்) "அவிஜ்ஞாதஂவிஜாநதாழ" (அவிஜ்ஞாதம்விஜாநதாம்) என்னு மிவ்வளவறிந்தது. (அறிந்தனரெல்லாம்) மற்றறிந்தாராயிருக்கிற பராசர வ்யாஸ வால்மீகி ப்ரப்ருதிருஷிகளும். (அரியை வணங்கி) சர்வ து:கநிவர்த்தகனை, வணங்கி-ஆஸ்ரயித்து. (அறிந்தனர் நோய்களறுக்கும் மருந்தே) "ஸஂஸாரது௶ிதபெஷஜழ" (ஸம்ஸாரதுரிதபேஷஜம்) என்னு மிவ்வளவறிந்தார்கள். "ஸஂஸாரஸவ௺ஸஂதஷ்டநஷ்டெசெஷ்டைகபெஷஜழ" (ஸம்ஸாரஸர்ப்பஸந்தஷ்டநஷ்

டசேஷ்டைகபேஷஜம்.) அவனுடைய போக்யதையிலிழிந்திலர்கள், அவனுடைய நிர்பேக்ஷோபாய பாவத்திலிழிந்திலர்கள்.......................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு. (அறிந்தனவித்யாதி.) பாட்டெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை (வேதங்களுமித்யாதி.) பூர்ணமாக வறிவித்தானென்று ப்ரீதராகிறரென்றது - அர்த்தாத்ஸித்தம்.

"அரும்பொருள் - அறிந்தனவேதம் - நூல்கள்" என்றந்வயித்தர்த்த மருளிச்செய்கிறர் (துர்ஜ்ஞேயார்த்தத்தையித்யாதி.) சர்வேஸ்வரனை யறிந்தனவாயிருக்கிற வேதங்களிலரும்பொருளை விசதீகரிக்கும் நூல்களென்றர்த்தாந்தரம் (அறிந்தனவாயித்யாதி.) "அரும்பொருளாதல் - அறிந்தனகொள்க -" அரும்பொருளானமையை யறிந்தனவாகக் கொள்ளென்று திருவுள்ளத்துக்கருளிச்செய்கிறர். இதுக்கு நியாமகமேதென்ன (யதோவாச இத்யாதி.)

சர்வதுஃக நிவர்த்தகனையென்றது - "[illegible]" (ஹரணுதேவதுஃகாநாம்ஹரிரித்யபிதீயதே) என்கிற வசநத்தைப்பற்ற. உக்தத்துக்கு ப்ரமாணம் (ஸம்ஸாரஸர்ப்பேத்யாதி) "[illegible]" (க்ருஷ்ணேதிவைஷ்ணவம்மந்த்ரம் ஸ்ருத்வாமுக்தோபவேந்நர꞉) இத்யுத்தரார்த்தம். நோய்களறுக்கும் மருந்தாக வறிந்தார்களாகில் அறியாதேதென்ன (அவனுடையவித்யாதி.) அர்த்தாந்தரம் (அவனுடைய நிரபேக்ஷத்யாதி.) அதாவது - "வணங்கி - நோய்களறுக்கும் மருந்தானமையை - அறிந்தார்கள்" என்கையாலே - சாபேக்ஷோபாயமென்றறிந்தார்களித்தனையொழிய, "அவனே நிரபேக்ஷோபாயம்" என்னுமத்தை யறிந்திலர்களென்றபடி.

அரும்பொருள் - அறிந்தனவேதம் - நூல்கள் - அரும்பொருளாதல் - அறிந்தனகொள்க - அறிந்தனரொல்லா மரியை வணங்கி-நோய்களறுக்கும் மருந்தென்று-அறிந்தனரித்யந்வய꞉...........................................*



## நான்காம்பாட்டு.

மருந்தேநங்கள்போகமகிழ்ச்சிக்கென்று
பெருந்தேவர்குழாங்கள்பிதற்றும்பிரான்
கருந்தேவனெம்மான்கண்ணன்விண்ணுலகந்
தருந்தேவனைச்சோரேல்கண்டாய்மனமே.

## ஆறாயிரப்படி.

(மருந்தே) உன்னழகாலே யெங்கள் போகத்துக்கு வர்த்தகனவனேயென்று பெருந்தேவர் குழாங்கள் பிதற்றும் பிரானயிருந்துவைத்து, இங்கேவந்து பிறந்தருளி, ஆஸ்ரிதசுலபனய், தன்னையாஸ்ரயித்தநம் போல்வார்க்கும் நித்யசித்தமான ஸ்வாநுபவத்தைத் தந்தருளும் ஸ்வபா

வனுன வெம்பெருமானை யொருவண்ணம்பெற்றேம், இனியவனைச்சோ ரவிடாதேகிடாய், நன்னெஞ்சேயென்கிறர். ..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நித்யசூரிபோக்யனாய், நிரதிசயசௌலப்ய விசிஷ்டனாய்க்கொண்டு அவ்வநுபவத்தை நமக்குத் தரவிருக்கிறவனை, நெஞ்சேவிடாதே கிடாயென்கிறர்.

நங்கள் - எங்களுடைய. போகம் - போகத்தினுடைய. மகிழ்ச்சிக்கு - வ்ருத்திக்கு. மருந்தே - வர்த்தகமானவம்ருதமே. என்று - என்று. பெரு - உத்க்ருஷ்டரான. தேவர் - சூரிகளுடைய. குழாங்கள் - சமூஹங்களானவை. பிதற்றும் - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே யடைவுகெடக் கூப்பிடும்படி. பிரான் - அவர்களைக்களிப்பிக்கும் மஹோபகாரகனாய். கரு - கருமையையுடைய. தேவன் - திவ்யமானவிக்ரஹத்தை யுடையனாய். எம்மான் - அவ்வடிவழகைக்காட்டி யென்னை யடிமைகொண்ட. கண்ணன் - சர்வசுலபனான க்ருஷ்ணனாய். அந்நிலையிலே, விண்ணுலகம் - பரமபதபோகத்தை. தரும் - தருவானான. தேவனை - சமாஶ்ரயணீயனை. மனமே - நெஞ்சே. சோரேல்கண்டாய் - உன் அந்யபரதையாலே யாதல், நிகர்ஷாநுசந்தாநத்தாலேயாதல் நழுவவிடாதேகிடாய்.

மருந்தென்று - போகத்தை சாத்மிப்பிக்கும் பரிஹாரமாகவுமாம். .........*

## ஈடு - நான்காம்பாட்டு.

நித்யசூரிகளுக்கு போக்யனாய்வைத்து, க்ருஷ்ணனாய்வந் தவதரித்து, நம்மையு மவர்கள்நடுவே வைப்பானாகவிருக்கிறவனை விடாதே கிடாயென்று திருவுள்ளத்தைக்குறித் தருளிச்செய்கிறர்.

(மருந்தேநங்கள்போகமகிழ்ச்சிக்கென்று) உன்னுடைய வநுபவத்தா லெங்களுக்குவரு மாநந்தத்துக்கு வர்த்தகனானவனே. இப்படி சொல்லுகிறவர்கள்தானாரென்னில் (பெருந்தேவர்) அஸ்ப்ருஷ்ட சம்சாரகந்தரான நித்யசூரிகள். (குழாங்கள்) அவர்கள், கிண்ணகத்திலிழிவாரைப்போலே திரள்திரளாகவாயிற்றிழிவது. (பிதற்றும்) ஜ்வரசந்நிபதிதரைப்போலே அக்ரமமாகக் கூப்பிடாநிற்பர்கள். (பிரான்) அவர்களுக்குத் தன்னை யநுபவிக்கக்கொடுத்த வுபகாரகன். (கருந்தேவன்) காளமேகநிபஶ்யாமமாய், திவ்யமான வடிவையுடையவன். (எம்மான்) அவ்வடிவைக்காட்டி யென்னை யெழுதிக்கொண்டவன். நித்யசூரிகளுக்குப்படிவிடும் வடிவைக்கிடீர்! எனக்குபகரித்தது. (கண்ணன்) தன்னிலைகுலையாமல்நின் றுபகரிக்கையன்றிக்கே, அவதரித்துவந்துபகரிக்குமவன். (விண்ணுலகந்தருந்தேவனை) பரமபதத்தைத் தருவானாயிருக்கிறசர்வேஶ்வரனை. (சோரேல்கண்டாய்மனமே) அவனை யுடம்புவெளுக்கப்பண்ணுதேகிடாய்நெஞ்சே. இவன் விடுகையாவது அவனுக்கிழவுபோலேகாணும். அவன்பண்ணின க்ருஷி பலித்ததில்லையாமே; இல்லையாகில், அவன்வைலக்ஷண்யத்தை, புத்திபண்ணுதே, "சுலபன்" என்னுக் காற்கடைக்கொள்ளாதேகிடாய். .........................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. ( மருந்தேயித்யாதி. ) "பெருந்தேவர்குழாங்கள்பிதற்றும்பிரான் - கண்ணன் விண்ணுலகம்தருந்தேவனைச் சோரேல்கண்டாய்மனமே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( நித்யஸூரிகளுக்கித்யாதி. )

"மருந்து" என்றால் - போக்குமென்றன்றோ வர்த்தம், வர்த்தகத்வத்தைக் காட்டுமோவென்ன ; வ்யாதிக்குமருந்தென்றால் - நந்நிவர்த்தகத்வமும், தீபநத்துக்குமருந்தென்றால் - தத்வர்த்தகத்வமும் தோற்றுகையாலே, இங்கு வர்த்தகத்வத்தையருளிச்செய்கிறார் ( ஆநந்தத்துக்கு வர்த்தகனானவனேயென்று. ) இவர்களுக்குப் பெருமையேதென்ன ( அஸ்ப்ருஷ்டேத்யாதி. ) "குழாங்கள்" என்றதுக்கு பாவம் ( அவர்களித்யாதி. ) கிண்ணகம் - ப்ரவாஹம். "பிதற்றும்" என்றதுக்குபாவம் ( ஜ்வரசந்நிபதிதனாயித்யாதி. )

"பெருந்தேவர்குழாங்கள் பிதற்றும்பிரான் கருந்தேவன்" என்றவநந்தரம், "எம்மான்" என்றதுக்கு பாவம் ( நித்யஸூரிகளுக்கித்யாதி. ) "எம்மான்" என்ற பதத்தோடே, "கண்ணன்" என்றபதத்துக்கு வாஸநை ( தன்னிலேயித்யாதி. )

"கருந்தேவன்" என்றத்தைக் கடாக்ஷித் தருளிச்செய்கிறார் ( அவனையித்யாதி. ) இவர்நெஞ்சுசோர்ந்தா லவனுடம்பு வெளுக்கவேணுமோவென்ன ( இவன் விடுகையித்யாதி. ) இழவெப்படியென்ன ( அவன்பண்ணினவித்யாதி. ) *ப்ரசக்தஸ்யஹிப்ரதிஷேதஃ, விலக்ஷணனானவனைவிட ப்ரஸக்தியேதென்ன (அவன்வைலக்ஷண்யத்தையித்யாதி.)

நங்கள்போகமகிழ்ச்சிக்கு - மருந்தே - என்று - பெருந்தேவரென்று தொடங்கி, சோரேல்கண்டாய் மனமே யித்யந்வயஃ.........................................*

---

# ஐந்தாம்பாட்டு.

மனமேயுன்னைவல்வினையேனிரந்து
கனமேசொல்லினேனிதுசோரேல்கண்டாய்
புனமேவியபூந்தண்டுழாயலங்க
லினமேதுமிலானையடைவதுமே.

## ஆறாயிரப்படி.

(மனமே) பரமபோக்யனாய்த் தன்னோடொப்பாரின்றிக்கே யிருக்கிறவனை விடாதே கிடாய்நெஞ்சமே, உனக்கடியேனாயிருக்கிறேனென்று பின்னையும் நெஞ்சையிரக்கிறார் ............... ................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், போக்யதையினுடைய நிருபக வைலக்ஷண்யத்தை யுடையவனை நாம் கிட்டவேணுமென்னுமிட்த்தைச் சிக்கெனச்சொன்னேன், இது நழுவவிடாதே கொள்ளென்கிறார்.

மனமே - நெஞ்சே. உன்னை-என்னிலுமிவ்விஷயத்தில் சத்வரமானவுன்னை. வல்வினையேன்-விளம்பாக்ஷமனும்படி ப்ரபலபாபத்தையுடையனுன வென்சாபலத்தாலே. இரந்து-அர்த்தித்து. கனமே-த்ருடமாகவே. சொல்லினேன்-சொன்னேன். இது-இத்தை. சோரேல்கண்டாய்-நழுவவிடாதேகொள். எத்தையென்னில்; புனம்-தன்னிலத்தில். மேவிய-வளர்த்தியாலே. பூ-செவ்விய. தண்டுழாய்-திருத்துழாய். அலங்கல்-மாலையையுடையனுய். இந்தபோக்யதைக்கு, ஏதும் - ஒருப்ரகாரத்தாலும். இனம்-ஒப்பு. இலானை-இல்லாதவைலக்ஷண்யத்தையுடையவனை. அடைவதும் - கிட்டவேணுமென்கிறவித்தை ......................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

நெஞ்சே யவனைவிடாதே கிடாயென்றார்கீழ்; அவ்வார்த்தை தன்னை யோலக்கவார்த்தையாக நினைத்திராதே கிடாயென்கிறுரிதில்.

(மனமேயுன்னை) மோக்ஷஹேதுவாய் முற்பட்டுநிற்கிறவுன்னையன்றே, பிற்பாடரைச்சொல்லுமாபோலே யிருக்கநான்சொல்லுகிறது. பகவத் ப்ராவண்யமுனக்கு ஸ்வாபாவிகமாயிருக்க, என்செல்லாமையாலே சொல்லுகிறேனத்தனையிறே. "முந்துற்றநெஞ்சே யியற்றுவாயெம்மொடுநீகூடி" என்று - எனக்குங்காற்கட்டவேண்டும்படி யநுபவத்திலே முற்பட்டுநிற்கிறவுன்னை. (வல்வினையேன்) பகவத்விஷயத்தில் க்ரமப்ராப்தி பற்றுதபடியான பாபத்தைப்பண்ணினேன். உன்னையிரக்கவேண்டி யிரக்கிறேனல்லேன், என் சாபலாதிசயத்தாலே யிரக்கிறேனித்தனை. (இரந்து கனமேசொல்லினேன்) உன்னைக்கால்பிடித்து த்ருடமாகச்சொன்னேன். இரந்துசொல்லுகைக்கு மணக்கால்நம்பியோடொப்பர்காணும். (இது சோரேல்கண்டாய்) இன்னம்நானே "பகவத்ப்ராவண்யமாகாது, இத்தைத்தவிரவேணும்" என்றுசொன்னாலும், நீயித்தைநெகிழவிடாதேகிடாய். கனம்-பொன். உனக்குப் பரமார்த்தத்தைச்சொன்னேனென்கை. "சாயால்கரியானை" இத்யாதி. (இதுசோரேல்) எத்தைத்தான் நீரிப்படிசொல்லுகிறதென்ன (புனமித்யாதி) நிரதிசயபோக்யனுனவனை யாப்ரயிக்கையை. புனத்திலே மேவியிருப்பதான வழகியதிருத்துழாய்மாலையை யுடையவனுகையாலே யொப்பின்றிக்கே யிருக்கிறவனை. அத்தோள்மாலையையுடையவனுகையிறே சர்வாதிகனுகையாவது. ஒருதிருமுளைத்திருநாளினன்றுக விப்பாட்டை யருளிச்செய்து, முன்னாள் * கையார்சக்கரத்துக்குப்புறப்பட்டருளினபடி திருவுள்ளத்திலேகிடந்து, " புனமேவியபூந்தண்டுழாயலங்க லினமேதுமிலானுகையாவது - நேற்றுப்புறப்பட்டருளினபடியிறே " என்றருளிச்செய்தார். அடைவது-சொல்லினேன், இதுசோரேல்கண்டாய் என்று க்ரியையாகவுமாம்; எத்தைநீர்சொல்லுகிறதென்ன; இனமேதுமிலானை யடைவதென்று க்ரியையாகவுமாம்...............*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (மனமேயித்யாதி) "சோரேல்கண்டாய்" என்றிரண்டிடத்திலும்சொன்னுல் புநருக்தமன்றோவென்ன; அல்பம் வாசியுண்டென்கிருர் (நெஞ்

சேயித்யாதி) "கனமேசொல்லினேன்" என்றத்தைப்பற்ற (ஓலக்கவார்த்தையித்யாதி) அதாவது-விடாதே கிடாயென்றது-அஹ்ருதயமல்ல, ஸஹ்ருதயமென்றுகருத்து.

"உன்னை" என்றதுக்குபாவம் (மோக்ஷஹேதுவாயித்யாதி) ஆனால்சொல்லுகிறதென்னென்ன (பகவத்ப்ராவண்யமித்யாதி) செல்லாமை - தரிக்கமாட்டாமை. "மோக்ஷஹேதுவாய் முற்பட்டுநிற்கிறவுன்னை" என்றதுக்கு ப்ரமாணம் (முந்துற்றவித்யாதி) இயற்றுவாய்-கார்யத்தைநடத்தப்பார். வல்வினையேதென்ன (பகவத்விஷயத்திலித்யாதி) "என்செல்லாமையாலேசொல்லுகிறேனத்தனை" என்றதின்விவரணம் (உன்னையிரக்கவேண்டியித்யாதி) "கனம்" என்றதுக்கிரண்டர்த்தம் - த்ருடமாகச்சொன்னேனென்னுதல்; கனமென்று - பொன்னாய், ஶ்லாக்யமானவர்த்தத்தைச்சொன்னேனென்னுதல். இரந்துசொல்லவேணுமோவென்ன (இரந்துசொல்லுகைக்கித்யாதி)

"சோரேல்கண்டாய்" என்றதினுறைப்பை யருளிச்செய்கிறார் (இன்னமும் நானேயித்யாதி)

"கனம்" என்றதுக்கு - த்ருடமாகவென்றருளிச்செய்து, சீரியவர்த்தத்தைச் சொன்னேனென்றர்த்தாந்தரம் (கனம்பொன்னித்யாதி)

அப்படிதாம் "பகவத்ப்ராவண்யமாகாது" என்றாரோவென்ன (சாயாலித்யாதி.)

மேலுக்கவதாரிகை (எத்தைத்தானித்யாதி) சங்கைக்குபரிஹாரம் (நிரதிசயேத்யாதி) கீழ் - தாத்பர்யசித்தார்த்தத்தை யருளிச்செய்து, சப்தார்த்தம் (புனத்திலேயித்யாதி) புனம்-நிலம். அலங்கல் - மாலை. இனம் - ஒப்பு. திருத்துழாய்மாலையையுடையனுடை லொப்பின்றிக்கே யிருக்கவேணுமோவென்ன (அத்தோள்மாலையித்யாதி)

ப்ராஸங்கிகம் (ஒருதிருமுலையித்யாதி) கையார்சக்கரம் - ஆழ்வார்திருநாள். (புறப்பட்டருளினபடி) சேனைமுதலியார் புறப்பட்டருளினபடி. சேனைமுதலியார் புறப்பாட்டைப் பெருமாள் புறப்பாடாகத் திருவுள்ளம்பற்றினாரென்றபடி. (அருளிச்செய்தார்) நஞ்சீயரென்றபடி.

மனமே யுன்னை வல்வினையேனிரந்து - புனமேவியவென்றுதொடங்கி, அடைவதும் - கனமேசொல்லினேன், இதுசோரேல் கண்டாயென்றந்வயமாதல்; மனமேயென்றுதொடங்கி, சோரேல்கண்டாய், எத்தைநீர் சொல்லுகிறதென்னில், புனமேவியவென்றுதொடங்கி யந்வயமாதல்.

பெரியதிருவந்தாதி பதிநாலாம்பாட்டு (சாயாலித்யாதி) [சாயால்கரியானை] காந்தியால் கறுத்திருக்கிற சர்வேஶ்வரனை. [உள்ளறியாராய்] உட்புக்கறியாதவளாய். [பேயார்] பூதனையானவள். [பேயாராய்] அறிவுகேட்டை யுடையளாய்க்கொண்டு, முலைகொடுத்தாள்; அப்படியே, நெஞ்சே. [போய்] விலக்ஷணவிஷயத்தைக்கிட்டி. [சுவைத்தூண்] ரஸித்தநுபவிக்கை. [தேம்பூண்] தேம்புதலை. விளைவிக்கும்-அவத்யத்தைவிளைக்குமென்று. [அறிந்தறிந்தும்] மிகவு மறிந்துவைத்தும். [தீவினையாம் பாம்பார்வாய்] நமக்கநிஷ்டமான பகவதநுபவ மநோரதமாகிற ஸர்ப்பாஸ்யத்திலே. [கைநீட்டல்பார்த்தி] கைநீட்டப்பாராநின்றாய். [நீயார்] "நீயந்தப்பேய்ச்சிக்கெந்தவுறவுடையாய்" என்று அயோக்யதாநுசந்தாநத்தாலே அகலுகிறானென்று பொருள். தேம்புதல் - குறைதலாய், அவத்யத்தைச்சொல்லுகிறது. தம்செயலில் பூதனைசெயல் நன்றென்று அத்தை கௌரவித்து "பேயார்" என்கிறார் ............*

# ஆறும்பாட்டு.

அடைவதுமணியார்மலர்மங்கைதோண்
மிடைவதுமசுரர்க்குவெம்போர்களே
கடைவதுங்கடலுளமுதமென்மன
முடைவதுமவற்கேயொருங்காகவே.

## ஆறுயிரப்படி.

(அடைவதும்) "அவனைவிடாதேகிடாய்" என்று நான்சொல்லிமுடிப்பதற்குமுன்னே அவனுடைய செயல்களிலே யென்னெஞ்சானது ஒருகடலுடைந்தாப்போலே யுடைந்து கிடக்கப்பெற்றேனென்றுதம்முடைய நெஞ்சைப் புகழுகிறார்.....................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநிஷ்டநிவ்ருத்தீஷ்ட ப்ராப்தி ஹேதுவான லக்ஷ்மீசம்பந்தத்தை யுடையனானவனைப்பற்ற வென்னெஞ்சொருபடிப்பட சிதிலமாகாநின்றதென்கிறார்.

மலர் - பத்மவாசிநியான வாபிஜாத்யத்தையும். மங்கை-பருவத்தையுமுடையளான லக்ஷ்மியினுடைய. அணி - ஆபரணங்களாலே. ஆர் - நெருங்கின. தோள்-திருத்தோளையே. அடைவதும்-சம்ஶ்லேஷிப்பதும். அத்தோளோடுண்டான பரிஷ்வங்கம் சித்திக்கைக்காக, அசுரர்க்கு-ப்ரதிகூலரான வசுரர்களுக்காற்றவரிய. வெம்-வெவ்விய; போர்களே-போர்களையே. மிடைவதும் - நெருங்கப்பண்ணுவதும். ஆஶ்ரிதார்த்தமாக, கடலுள்-கடலுக்குள்ளில். அமுதம்-அம்ருதத்தை. கடைவதும் - கடைவதும். அவற்கே -'இப்படி லக்ஷ்மீவிசிஷ்டனுமாய், அநிஷ்ட நிவர்த்தகனுமாய், இஷ்டப்ராபகனுமானவவனுக்கே. என்-என். மனம்-நெஞ்சானது. ஒருங்காகவே-ஒருபடிப்பட. உடைவதும்-சிதிலமாகாநின்றது.....................................*

## ஈடு - ஆறும்பாட்டு.

தம்முடைய வுபதேசம்பலித்து, இவ்விஷயத்திலே திருவுள்ளம் சிதிலமாகாநின்றதென்று ப்ரீதராகிறார்.

(அடைவதுமணியார் மலர்மங்கைதோள்) மிகவுமழகிதான பெரியபிராட்டியார் திருத்தோளோடே சம்ஶ்லேஷிப்பதும். அவன்றன் வைஶ்வரூப்யங்கொண்டிழிந்தாலும் தோளுக்கவ்வருகுபோகமாட்டான். (அணியார்மலர்மங்கை) "மார்வத்துமாலை" என்கிறபடியே திருமார்வுக்கெல்லாம் தானேயாபரணமாக்ப் போரும்படியாக விருப்பாளாய், போக்யதையால் குறைவற்றிருக்கிறவள் தோளோடேயாயிற்றணைவது. (மிடைவதுமசுரர்க்குவெம்போர்களே) அவள் தோளணைக்கைக்கிடும் பச்சை. "ஹர்த்தாரம்பரிஷஸ்வஜே" (பர்த்தாரம்பரிஷஸ்வஜே) என்றிறேயவளணைப்பது. ஆஶ்ரிதவிரோதிகளுக்கு வெம்போர்களே நெருங்கப்பண்ணுவது

மென்னுதல், அவர்களைமுடிக்கும்விரகே சிந்தியாநிற்குமென்னுதல். (க டைவதுங்கடலுளமுதம்) ப்ரயோஜநாந்தரபரருடைய ப்ரயோஜநத்துக் காகக்கடைவதுமென்னுதல், பிராட்டியைப்பெறுகைக்கு வ்யாபரிக்கும்ப டிசொல்லுகிறதென்னுதல். அவளை சம்ப்ச்லேஷிக்கும்படி சொல்லிற்று, அதுக்கிடும் பச்சைசொல்லிற்று, அவளைப்பெறுகைக்கு யத்நம்பண்ணி னபடிசொல்லிற்று. இவர்திருவுள்ள முடைகுலைப்படுகைக்கு ஹேதுக்க ளிவை (என்மனமித்யாதி) என்னுடையமநஸ்ஸு ஒருமடைப்பட வுடை குலைப்படாநிற்பதும் ஏவம்விதமான சேஷ்டிதங்களை யுடையவனுக்கே. அவன் * பனிக்கடலைக்கடைய, இவர் * மனக்கடலுடையப்புக்கது. விரக ராயிருப்பார், கோழைகளாயிருப்பாரை த்ரவ்யம்வாங்க நினைத்தால், மு ந்துற மிடுக்கராயிருப்பாரை நெருக்கிவாங்கவே யிவர்கள் தாங்களே கொ டுசென்று கொடுப்பர்களிறே; அவனும், மஹத்தத்த்வமானகடலை யுலக் கைவிடுநகமிட்டுநெருக்கி அதின் நல்லுயிரைவாங்கி, இவருடைய திருவு ள்ளமுடையத் தொடங்கிற்று *........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (அடைவதுமித்யாதி) "என்மனமுடைவதுமவற்கே" என்றத் தைக்கடாக்ஷித்தவதாரிகை (தம்முடையவித்யாதி) .

"அணி" என்று - அழகாய், ஆர்தல் - மிகுதியாய், அழகுமிக்கதோளென்று- தோளுக்குவிசேஷணமாதல்; இத்தை யருளிச்செய்கிறார் (மிகவுமித்யாதி) அவய வாந்தரங்களிருக்க, தோளைவிசேஷித்ததுக்குபாவம் (அவனித்யாதி) "அணி" என் று - ஆபரணமாய், ஆர்தல்-பூர்த்தியாய், ஆர்ந்தவணியான-ஆபரணமாகப்போரும்ப டியான மலர்மங்கையென்று - பிராட்டிக்கு விசேஷணமாக வர்த்தாந்தரம் (மார்வ த்துமாலையித்யாதி)

விரோதிநிரஸநம் பச்சையோவென்ன (பர்த்தாரமித்யாதி) " தந்த்ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் । பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே " ( தந்த்ருஷ்ட்வாஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணும் ஸுகாவஹம் । பபூவஹ்ருஷ்டாவைதேஹீ பர்த்தாரம்பரிஷஸ்வஜே ) இத்யாரண்ய காண்டே கரவதாநந்தரே. மிடுக்கை - நெருக்கமாதல், விசாரமாதல். முடிக்கும்வி ரகு சிந்திக்குமோவென்ன; "திங்கிழைக்கும்திருமால்" என்னக்கடவதிறே. "மிடை வதும்" என்றதி னர்த்தத்வயத்துக்கும் சேரவருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதேத்யாதி)

கீழில் பதத்வயாநுகுணமாக "கடைவதும் கடலுளமுதம்" என்றதுக்கு விநி யோகம் த்வேதாவருளிச்செய்கிறார் (ப்ரயோஜநாந்தரேத்யாதிவாக்யத்வயத்தாலே) த்விதீயார்த்தத்துக்கு ப்ரமாணம் - " தேவதாநவயத்நேந ப்ரஸூதாம்ருதமந்தநே " (தேவதாநவயத்நேநப்ரஸூதாம்ருதமந்தநே) என்று. அதாவது - "தேவர் களுக்கு" என்று வ்யாஜமாத்ரமாய், பிராட்டிக்காகக் கடைந்தானென்றபடி.

த்விதீயயோஜநாநுகுணமாக "அடைவதும்" இத்யாத்யர்த்தத்தை நிகமிக்கி றார் (அவளையித்யாதி) உடைகுலைப்படுகை - சிதிலமாகை. ஒருங்காக - ஏக ப்ரகார மாக. "கடைவதும்" இத்யாதியோடே "என்மனமுடைவதும்" என்றத்தைக்கூட்

டிரஸோக்தி (அவன்பனிக்கடலையித்யாதி) அவன் பனிக்கடலைக்கடைந்தா லிவர்மன க்கடலைக்கடைவானென்னென்ன; ரஸோக்தியாக வருளிச்செய்கிறார் (விரகராயித் யாதிவாக்யத்வயத்தாலே) கோழைகள் - ம்ருதுஸ்வபாவர். அப்படியே (அவனும்) என்றுகூட்டுவது. உலக்கைவிடுகம் - உலக்கையாலேகிட்டிகட்டி. நல்லுயிரையெ ன்றது - "அமுதம்" என்றத்தைப்பற்ற.

மலர்மங்கை - அணியார் - தோள் - அடைவதும் - அசுரர்க்கு வெம்போர்க ளே - மிடைவதும் - கடலுளமுதம் - கடைவதும் செய்யாநிற்குமவற்கே - என்மன ம் - ஒருங்காகவே - உடைவது மித்யந்வய:.............................................*

# ஏழாம்பாட்டு.

ஆகஞ்சேர்நரசிங்கமதாகியோ
ராகம்வள்ளுகிராற்பிளந்தானுறை
மாகவைகுந்தங்காண்பதற்கென்மன
மேகமெண்ணுமிராப்பகலின்றியே.

## ஆறாயிரப்படி.

(ஆகஞ்சேர்) இந்த வாஸ்சர்யத்தை யநுபவித்து, பின்னையும், ஏவம்விதசேஷ்டிதங்களைச் செய்தருளினவன்றன்னை அவனிருக்கிற திரு நாட்டிலேசென்று காணவேணுமென் றுசைப்படாநின்றது; அதுவோ அதிதூரமாயிராநின்றது; என்னெஞ்சைக்கொண் டென்செய்கே னென் கிறார்...............................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ரபலாநிஷ்டபஞ்சகனானவன் வர்த்திக்கிற ப்ராப்யபூமியே வே ணுமென்றெப்போது மென்னெஞ்சமெண்ணுகின்றதென்கிறார்.

ஆகம் - ஒருவடிவிலே. சேர் - பொருந்துவிக்கப்பட்ட. நரசிங்கமதாகி - நர த்வ ஸிம்ஹத்வங்களை யுடைத்தாய்க்கொண்டு. ஹிரண்யனுடைய, ஓர் - அத்விதீய மான. ஆகம் - மார்வை. வள் - வளைந்த. உகிரால் - உகிராலே. பிளந்தான் - பிளந் தவன். உறை - வர்த்திக்கிற. மாகவைகுந்தம் - ஸ்ரீவைகுண்டத்தை. காண்பதற்கு- காண்கைக்கு. என் - என். மனம் - நெஞ்சானது. இராப்பகல் - இராப்பகலாக. இ ன்றி - வேறுபாடின்றியே. ஏகம் - ஏகப்ரகாரமாக. எண்ணும் - எண்ணுகின்றது....*

## ஈடு - ஏழாம்பாட்டு.

அவன் நித்யவாஸம்பண்ணுகிற பரமபதத்தைச்சென்று காணவே ணுமென்னுகின்ற தென்னெஞ்சென்கிறார்.

(ஆகஞ்சேரித்யாதி) நரத்வஸிம்ஹத்வங்கள், சேர்ப்பாலும் கண் டசர்க்கரையும்போலே சுகடிதமான நரசிம்ஹமாயென்னுதல்; நரசிம்ஹ

த்தினுடையவடிவு இவர்நெஞ்சிலே சேர்ந்தபடி யென்னுதல்; "ஸ்மரந்ராகவபாணாநாம்" (ஸ்மரந்ராகவபாணாநாம்) என்கிறபடியே மறக்கவொண்ணுதபடி திருவுள்ளத்திலே சேர்ந்தபடியைச் சொல்லிற்றுதல்; இரண்டுவடிவையுஞ் சேர்த்துக்கொடுவந்து தோன்றினபோது, இவர்நெஞ்சுக் கினிதாய்ச் சேர்ந்திருந்தபடியைச் சொல்லுதல். (ஓராகம்) அத்விதியமான முருட்டுடம்பு. (வள்ளுகிரால்) கூரியவுகிர். வளைந்தவுகிரென்றுமாம். (பிளந்தானுறை) அநாயாஸேந கிழித்துப்பொகட்டவன் நித்யவாசம்பண்ணுகிற. (மாகவைகுந்தம்) அந்நரசிம்ஹம் வர்த்திக்கிற முழஞ்சுகாணவாயிற்றுசைப்படுகிறது. "பரமாகாஶம்" என்னக்கடவதிறே. என்னுடைய ஹ்ருதயமானது, எப்போதுமொக்க வுச்சிவீடுவிடாதே யித்தையே மநோரதியாநின்றது. (இராப்பகலின்றியே) இராவொருகார்யமும், பகலொருகார்யமுமாயிறே நாட்டார்க்கிருப்பது; இவர்க்கெல்லாக்காலத்திலு மிதுவேயாயிற்று. "ஸமாத்வாதஸ்ததராஹம்ராவவஸ்யநிவேஶநே" (ஸமாத்வாதஸ்தத்ராஹம்ராகவஸ்யநிவேஶநே) என்று பிராட்டி திருவயோத்யையை நினைத்தாப்போலேயாயிற்று, இவர் திருவுள்ளத்துக்குப் பரமபதம் ஸ்வதேசமாயிருக்கிறபடி..................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (ஆகமித்யாதி.) "உறைமாகவைகுந்தங்காண்பதற் கென்மனமேகமெண்ணும்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (அவன் நித்யவாசமித்யாதி.)

ஆகத்திலே - சர்வேஶ்வரன்திருமேனியிலே, சேர்ந்த - சுகடிதமான நரசிம்ஹமாயென்னுதல்; இத்தை யருளிச்செய்கிறார் (நரத்வ ஸிம்ஹத்வங்க ளித்யாதி.) ஆகத்திலே - ஆழ்வார்திருவுள்ளத்திலே, சேர்ந்த நரசிங்கமாயென் றிரண்டாமர்த்தமருளிச்செய்கிறார் (நரசிம்ஹத்தினுடையவித்யாதி.) நரசிம்ஹத்திஞகமான திவர் திருநெஞ்சிலேசேர்ந்த நரசிங்கமாயென்று மூன்றுமர்த்தமாதல், த்விதீயார்த்த விவரணமாதல் (ஸ்மரந்நித்யாதி) "ப்ரஹ்மதண்டப்ரகாஶாநாம்வித்யுத்ஸத்ருஶவர்சஸாம் । ஸ்மரந்ராகவபாணாநாம்விவ்யதேராக்ஷஸேஶ்வரஃ" (ப்ரஹ்மதண்டப்ரகாஶாநாம்வித்யுத்ஸத்ருஶவர்ச்சஸாம் । ஸ்மரந்ராகவபாணாநாம்விவ்யதேராக்ஷஸேஶ்வரঃ) இதி யுத்தகாண்டே. சேர்ப்பால் - குழம்புப்பால். முந்தினவர்த்தவிவரணம் (இரண்டுவடிவையுமித்யாதி.)

"பிளந்தானுறைமாக வைகுந்தங்காண்பதற்கு" என்றுசேர்த்து பாவம் (அஸிம்ஹமித்யாதி.) முழஞ்சு - குஹை. மாகம் - மஹத்தானகம். "மாகம்" என்றால் - பரமபதத்தைச் சொல்லுமோவென்ன (பரமாகாசமித்யாதி.)

"என்மனம் - இராப்பகலின்றியே - ஏகமெண்ணும்" என்றதுக் கர்த்தம் (என்னுடையவித்யாதி.) நாள்தோறுமென்னுதே, "இராப்பகல்" என்று விசேஷித்ததுக்கு, "நக்தந்த்யுதிதஆதித்யே" (நந்தந்த்யுதிதஆதித்யே) இத்யாதியைக்கடாக்ஷித்து பாவம் (இராவொருகார்யமுமித்யாதி.) திருநகரியைவிட்டு பரமப

தத்தை யெண்ணுகிறதென்னென்ன ; ஸஹிதர்ஶநமாக வருளிச்செய்கிறார் ( ஸமாத் வாதஶேத்யாதி ) சுந்தரகாண்டே ஹநூமந்தம் ப்ரதிஸீதா. "ஹநூமாநாநந்ஷாநுஹோஹாநு ஸவகாமஸம்ருத்தி:" ( புஞ்ஜாநாமாநுஷாங்போகாங் ஸர்வ காமஸம்ருத்திகீ ) இத்யுத்தரார்த்தம்.

ஆகம்சேரித்யாரப்ய, என்மனம்-இராப்பகலின்றி-ஏகமெண்ணுமித்யந்வய:.*

# எட்டாம்பாட்டு.

இன்றிப்போகவிருவினையுங்கெடுத்
தொன்றியாக்கைபுகாமையுய்யக்கொள்வா
னின்றவேங்கடநீணிலத்துள்ளது
சென்றுதேவர்கள்கைதொழுவார்களே.

## ஆறாயிரப்படி.

( இன்றிப்போக ) அவனைக் காண்கைக்குத் திருநாட்டிலே போக வேணுமோ, இங்கே யணித்தாகத் திருமலையிலேயன்றோ வவன் நின்றருளுகிறதென்னில் ; அத்தாலென் எனக்கு, அங்குச்சென்றடிமைசெய்வார் * அயர்வறுமமரர்களல்லரோ வென்கிறார். ..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸந்நமாக வவன்வர்த்திக்கிற வபீஷ்டதேசமாயுள்ள திருமலையைச்சென்றநுபவிப்பார் சூரிசமரானாரிறேயென்று தம்முடையசைதில்யத்தை யருளிச்செய்கிறார்.

இருவினையும் - புண்யபாபரூபமான கர்மங்களிரண்டையும். இன்றி - சத்தையழிந்து. போக - போம்படி. கெடுத்து - நசிப்பித்து. ஒன்றி - துர்விவேசமாம்படியசித்தோடே சம்ஸ்ருஷ்டனாய். ஆக்கைபுகாமை - தேவாதிசரீரப்ரவேசம் பண்ணுதபடி. உய்யக்கொள்வான் - அடிமைகொண்டுஜ்ஜீவிப்பிக்குமவன். நின்ற - அவசரப்ரதீக்ஷனாய்நிற்கிற. வேங்கடம் - திருமலையானது. நீணிலத்து-ப்லாக்யபூமியிலே. உள்ளது - உண்டாயிருப்பதொன்று. சென்று - கிட்டி. கைதொழுவார்கள் - கைதொழுமவர்கள், தேவர்களே - மநுஷ்யரல்லரோ, தேவர்களன்றோ...................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

இப்ஶரீரசம்பந்தமற்றால் போயநுபவிக்கும் பரமபதம் வேணுமோ, இஶ்ஶரீரத்தோடேயநுபவிக்கும் திருமலைபூமியதன்றோ, ஆனாலும் நமக்குத் திருமலையோடு பரமபதத்தோடு வாசியற்றதிறேயென்கிறார்.

( இன்றிப்போகவிருவினையுங்கெடுத்து ) புண்யபாபரூப கர்மங்களானவை, இன்றிப்போம்படி-சவாஸநமாகப் போம்படிபண்ணி. தானே போக்கிக்கொள்ளப் பார்க்குமன்றிறே சிறிது கிடக்கப்போவது. (ஒன்றி

யித்யாதி ) பின்னையும் ருசிவாசனைகிடக்கில், அசித்தத்த்வத்தோடேபோய்க்கலசி, சரீரப்ரவேசம்பண்ணி, அத்தால் வரும் க்லேசமநுபவிக்க வேணுமிறே; அதுசெய்யாமை. ( உய்யக்கொள்வானித்யாதி ) "உயிரளிப்பான்" என்கிறபடியே, சர்வரக்ஷணார்த்தமாக வவசரப்ரதீக்ஷனுய்க்கொண்டுநிற்கிற திருமலை. ( நீணிலத்துள்ளது ) திருமலையை யுடைத்தாகையாலே ஶ்லாக்யமான பூமியிலுள்ளது திருமலை. அத்தால் பெற்றதென் ( சென்றித்யாதி ) அவ்வளவு கால்நடைதந்து போகவல்லார் பாக்யாதிகரிறே ; "நதேமநுஷ்யாதேவாஸ்தே" ( நதேமநுஷ்யாதேவாஸ்தே ) என்னுமாபோலே, அவனுடைய சீலாதிகுணத்தை யநுசந்தித்துச் சொல்லுகிறார். ப்ரேமாந்தர்க் கவ்விடத்தோ டிவ்விடத்தோடு வாசியற்றதிறே யெட்டாமைக்கு. ........................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. ( இன்றிப்போகவித்யாதி. ) "நின்றவேங்கடம்" என்று தொடங்கி, "கைதொழுவார்களே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை ( இஶ்ஶரீரோத்யாதி. )

"இருவினையும் - இன்றிப்போக - கெடுத்து" என்றந்வயித்தர்த்தம் ( புண்யபாபேத்யாதி. ) கர்மங்கள் சவாஸநமாகப் போகக்கூடுமோவென்ன ( தானேயித்யாதி. )

கர்மம்க்ஷயித்தால் சரீரம் தன்னடையேபோம் ; ஆயிருக்க, "ஒன்றியாக்கை புகாமை" என்று விசேஷிப்பானென்னென்ன ( பின்னையுமித்யாதி. ) ருசிவாஸனை யென்றது - ப்ரக்ருதியினுடைய ருசிவாஸனை யென்றபடி. போய்க்கலசியென்றது- த்யுபர்ஜந்யக்ரமேணவந்தென்றபடி.

நிலத்துக்கு நீட்சியேதென்ன ( திருமலையையித்யாதி. ) நீள் - ஶ்லாக்யமானபடி.

இது சந்நிஹிதமானாலும் தமக்குப்போக பலமில்லையென்று விவக்ஷித்து (அத்தால் பெற்றதென் ) என்கிறார். சந்நிஹிதமானால் போயநுபவிக்கலாயிருக்க, "அத்தால் பெற்றதென்" என்று நிந்திராவானென்னென்ன ( அவ்வளவித்யாதி. ) தான் சேவிக்கமாட்டாவிட்டால் சேவிக்கிறவர்களை பாக்யாதிகரென்ற பேருண்டோவென்ன (நதேமநுஷ்யா இத்யாதி) "நதேமநுஷ்யாதேவாஸ்தேயேசாருஶுபகுண்டலம் । முகந்த்ரக்ஷ்யந்திராமஸ்ய வர்ஷேபஞ்சதஶேபுந:" (நதேமநுஷ்யாதேவாஸ்தே யேசாருஶுபகுண்டலம் । முகந்த்ரக்ஷ்யந்திராமஸ்ய வர்ஷேபஞ்சதஶேபுந: ) இத்யயோத்யாகாண்டே தஶரத:. சக்ரவர்த்திக்குப் பெருமாளைப் பிரிகையாலே "நதேமநுஷ்யா:" ( நதேமநுஷ்யா: ) என்னலாம்; இவர்க்கு பலஹாநியென்னென்ன ( அவனுடையவித்யாதி. ) பரமபதம்போலே திருமலையுமெட்டாநிலமோவென்ன ( ப்ரேமாந்தர்க்கித்யாதி. )

இருவினையும் - இன்றிப்போக - கெடுத்து - ஆக்கைபுகாமை யுய்யக்கொள்வான் நின்றவேங்கடமென்று தொடங்கி, சென்று - கைதொழுவார்கள் - தேவர்களென்றந்வயம். உய்யக்கொள்வான் - உஜ்ஜீவிப்பிக்கைக்காக. நின்றவேங்கடம் - அவசரப்ரதீக்ஷனாய் நிற்கிற திருமலையென்றபடி.......................................*

# ஒன்பதாம்பாட்டு.

தொழுதுமாமலர்நீர்சுடர்தூபங்கொண்
டெழுதுமென்னுமிதுமிகையாதலிற்
பழுதிறுல்புகழ்ப்பாம்பணைப்பள்ளியாய்
தழுவுமாறறியேனுனதாள்களே.

## ஆறுயிரப்படி.

(தொழுது) உமக்குத்தானங்கேசென் றடிமைசெய்கைக்குத் தட்டென்னென்னில்;

ஹேய ப்ரத்யநீக கல்யாணகுண விசிஷ்ட சேஷசேஷாஸந கருடப்ரமுக திவ்யபுருஷர்களாலே பரிசரித சரணயுகளனான வுன்றிருவடிமலர்களிலே, அத்யந்த மபக்ருஷ்டனான நானடிமைசெய்கைக் கர்ஹனோவென்கிறார் ...........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரயணோத்யோகமும் மிகையாம்படியான வுன்னுடைய சீலாதிசயத்தை யநுசந்தித்து, உன்றிருவடிகளி லொருப்ரவ்ருத்திக்கு க்ஷமனாகிறிலேனென்கிறார்.

மா-ஸ்லாக்யமான. மலர்-புஷ்பத்தையும். நீர்-அர்க்யாதிஜலத்தையும். சுடர் தூபம்-தீபதூபங்களையும். கொண்டு - ஸ்வீகரித்துக்கொண்டு. தொழுது-தொழுகைக்காக. எழுதும்-உத்யோகிப்போம். என்னுமிது-என்னுமிது. உன்சீலாதிசயத்தாலே, மிகை-மிகையாய். ஆதலில்-இருத்தலால். பழுது-தாராாதகையடியானபழுது. இல்-இன்றியே. தொல்புகழ்-ஸ்வாபாவிக ஸௌசீல்ய ப்ரதையையுடையையாய். அதுக்கு சூசகமாம்படி, பாம்பு - திருவனந்தாழ்வானை. அணை - படுக்கையாய்க்கொண்டு. பள்ளியாய்-நித்யசம்ஸ்லேஷம்பண்ணிக் கண்வளர்ந்தருளுகிறவனே. உன-உன். தாள்கள்-திருவடிகளை. தழுவும்-சம்ஸ்லேஷிக்கும். ஆறு-ப்ரகாரம். அறியேன் - அறிகிறிலேன்.

அங்குத்தைக்கொரு ப்ரவ்ருத்தி யபேக்ஷிதையல்ல, நானொரு ப்ரவ்ருத்திக்கு க்ஷமனாகிறிலேனென்று கருத்து ...........................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

இப்படி சுலபனான வுன்றிருவடிகளிலே கிட்டப்பெற்றாலும், ஆஸ்ரயணத்தில் ஆபிமுக்யத்திலே சந்துஷ்டனாமுன் சீலவத்தையையநுசந்தித்து, ஒருப்ரவ்ருத்திபண்ண க்ஷமனாகிறிலேனென்கிறார். அன்றிக்கே, "இங்ஙனேயொரு மூன்றுபாட்டுத் தம்முடையவயோக்யதையைச்சொல்லுகிறார்" என்பாருமுண்டு; அதில்லையிறே * கண்கள்சிவந்துக்குப்பின்பிவர்க்கு. "இத்தலையாலேயொன்றை யர்த்தித்துப்பெறுகை மிகையாம்படியாயிருக்கிறவனுடைய வுபாயபாவத்தைச்சொல்லுகிறார்" என்பாரு

முண்டு. "இவையெல்லாமல்ல, அவன் சந்நிதியில் க்ரமத்தில் பரிமாறவொண்ணுதபடியழிக்கு மவனுடைய சீலகுணத்தைச்சொல்லுகிறது" என்று நம்முடையவர்கள் நிர்வஹிக்கும்படி.

(தொழுதித்யாதி) "ஶ்லாக்யமான புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டடிமைசெய் துஜ்ஜீவிப்போம்" என்றால், இது மிகையாம்படியன்றோ வுன்னுடைய சீலவத்தையிருப்பது. "அந்யத்பூர்ணாதபாம்கும்பாத்" (அந்யத்பூர்ணுதபாம்கும்பாத்) என்கிறவிஷயமிறே. (ஆதலில்) இப்படி சீலாதிகனுகையாலே. "துராராதன்" என்கிறபழுதின்றிக்கே, ஸ்வாபாவிகமான ஸ்வாராதத்வ ப்ரதையையுடையையாய், அதுக்கடியாகத் திருவநந்தாழ்வானேடே சம்ஶ்லேஷிக்கிறவனே. (தழுவுமாறறியேன்) உன்றிருவடிகளையணையும் விரகறிகிறிலேன். பலஹாநியாலே முதலிலேகிட்டுகை யரிது, கிட்டினும் சீலாதிக்யத்தை யநுசந்தித்தொரு ப்ரவ்ருத்திபண்ண க்ஷமனுகிறிலேன் ......................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (தொழுதித்யாதி) "தொழுது - எழுதமென்னுமிது மிகையாதலில் - தழுவுமாறறியேன்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இப்படியித்யாதி) "தொழுது - எழுதும்' என்றதிலேநோக்காக நிர்வாஹாந்தரத்வயம் (அன்றிக்கேயித்யாதி) ப்ரதமாவதாரிகாவிவரணம் (இவையெல்லாமல்லவவன் சந்நிதியிலித்யாதி) மூன்றுபாட்டென்றது - எட்டாம்பாட்டுத்தொடங்கி மூன்றுபாட்டென்றபடி. (இத்தலே) இத்யாதிக்கு - ததாஶ்ரயண ஸௌகர்யஞ்சொல்லுகைக்காக வாஶ்ரயணீயனுனவனுடைய ஸ்வாராததையைச்சொல்லுகிறுனென்றுகருத்து.

"மாமலர்நீர்சுடர்தூபங்கொண்டு - தொழுது - எழுதுமென்னுமிதுமிகை" என்றந்வயித்தர்த்தம் (ஶ்லாக்யமானவித்யாதி) "மா" என்றத்தை - மலர்நீர்சுடர்தூபமெங்கும் கூட்டுவது. "இப்படியிவன்ஸ்வாராதன்" என்னுமதுக்குப்ரமாணம் (அந்யதித்யாதி) "அந்யத்பூர்ணாதபாம்கும்பாதந்யத்பாதாவநேஜநாத்। அந்யத்குஶலஸம்ப்ரஶ்நாந்நசேச்சதிஜநார்த்தந:" (அந்யத்பூர்ணுதபாம்கும் பாதந்யத்பாதாவநேஜநாத் । அந்யத்குஶலஸம்ப்ரஶ்நாந்நசேச்சதிஜநார்த்தந:) இதி ஸஞ்சய:.

அதுக்கடியாக - ஸ்வாராததைக்கடியாக. இத்தால் - திருவநந்தாழ்வான் அல்பாநுகூல்யங்கொண்டங்கீகரிப்பிக்குமென்றபடி.

விரகறியாமைக்கு ஹேதுவேதென்ன (பலஹாநியாலேயித்யாதி.)

மாமலர்நீர்சுடர் தூபங்கொண்டு-தொழுது-எழுதுமித்யாரப்யாந்வய:... ...*

## பத்தாம்பாட்டு.

தாளதாமரையானுனதுந்தியான்
வாள்கொணீண்மழுவாளியுன்னாகத்தா
னாளராய்த்தொழுவாருமமரர்க
ணாளுமென்புகழ்கோவுனசீலமே.

### ஆறாயிரப்படி.

(தாளதாமரையான்) தம்முடைய வநர்ஹாநுசந்தாநத்தாலே அவன்றிருவடிகளி லடிமைசெய்கையில் தமக்குப்பிறந்தகூச்சமெல்லாம் போம்படியாகத் திருவேங்கடமுடையானுடைய நிரவதிக சௌசீல்ய குணத்தைக்கண்டு புகழுகிறார். ........................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ரயோஜநாந்தரபரர்க்கும் முகங்கொடுக்கு முன்னுடையசீலம் வாசாமகோசரமஹிமாவன்றோவென்கிறார்.

தாள்-தாளையுடைத்தான. தாமரையான்-தாமரையிலேபிறந்தபிரஹ்மா. உன து, உந்தியான்-உந்தியை யாஸ்ரயமாகவுடையவன். வாள்-ஒளியை. கொள்-உடைத்தான. நீள்-பெரிய. மழு-பரசுவை. ஆளி-ஆண்டுகொண்டுபோருகிறருத்ரன். உன்-உன். ஆகத்தான்-திருமேனியிலொருபக்கத்தான். ஆளராய் - சூரிகளோபாதிசேஷபூதராய். தொழுவாரும்-தொழுமவர்கள். அமரர்கள்-ப்ரயோஜநாந்தரபரரானதேவதாந்தரவர்க்கம். இப்படி யநவதிகமான, உன-உன்னுடைய. சீலம் - சீலத்தை. நாளும் - காலதத்த்வமெல்லாங்கூடினாலும். என் - எத்தைச்சொல்லி. புகழ்கோ - புகழ்வேன் ........................................................*

### ஈடு - பத்தாம்பாட்டு.

தாஸ்யச்சுவட்டறியாத ப்ரஹ்மாதிகளுக்கும் சமாஸ்ரயணீயனாயிருக்கிறவுன்னுடையசீலமென்னால் புகழ்ந்து முடிக்கவொண்ணாதென்கிறார்.

(தாளதாமரையா னுனதுந்தியான்) தாமரைப்பூவை யுத்பத்திஸ்த்தாநமாக வுடைய ப்ரஹ்மா, உன் திருநாபியைப்பற்றி வர்த்தியாநின்றான். கமலயோநித்வத்தால் வந்த துர்மாநத்தையுடையவனுக்கிறே யிடம்புகொடுத்தது. (வாளித்யாதி) ஒளியையுடைத்தாய், தொடங்கினகார்யத்தை முடிய நடத்தவற்றான மழுவையுடைய ருத்ரன், உன்திருமேனியி லேகதேசத்தைப்பற்றி வர்த்தியா நின்றான். அநந்யசரணத்வ லக்ஷணமான * தொடையொத்ததுளபமுங் கூடையுமாய்ப் புகுந்திருக்கிறானல்லனே. (ஆளராய்த்தொழுவாருமமரர்கள்) அடியாரா யாஸ்ரயிக்கிறவர்களும் தேவர்கள். நித்யசூரிகள்செய்யு மடிமையிறே, அமரத்வ சாம்யத்

தாலே "நாங்களுமீஸ்வரர்கள்" என்றிருக்குமவர்கள் செய்கிறது. (நாளுமித்யாதி.) காலத்தையடைய வொருபோகியாக்கி யெனக்குப் புகழுகைக் குறுப்பாக்கி னற்றுனென்னுலே புகழ்ந்து தலைக்கட்டலா யிருந்ததோ வுன்னுடைய சீலகுணம். உனசீலம் - நாளுமென்புகழ்கோ. ......*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (தாளதாமரையானித்யாதி) "தாளதாமரையான்" இத்யாரப்ய "உனசீலமே" என்னுமளவும்கடாக்ஷித்தவதாரிகை (தாஸ்யேத்யாதி) "தாளதாமரையான், வாள்கொள் நீள்மழுவாளி" என்று - திருநாபிகமலத்திலே பிறந்தவன், ஹிம்ஸாபரிகரமான மழுவையுடையவன், "அமரரும்" என்று - என்றுமொக்கச்சாகாதிருக்கிறவர்கள் என்கிறவிசேஷணங்கள், (தாஸ்யச்சுவடறியாத) என்னும்த்தைக்காட்டுகிறது.

தாளையுடைய தாமரையென்று சப்தார்த்தம். இது சீலமானபடி யென்னென்ன (கமலயோநித்வேத்யாதி.)

வாள் - காந்தி. மழு-பரசு. மழுவாளி-மழுவையாளும் ருத்ரன். "நீள்" என்றதுக்கர்த்தம் (தொடங்கினவித்யாதி) இதுசீலமோவென்ன (அநந்யசரணத்வேத்யாதி) அநந்யசரணத்வலக்ஷணமான - பாரதந்த்ர்யலக்ஷணமானவென்றபடி.

இது சீலகார்யமோவென்ன (நித்யசூரிகளித்யாதி.)

"நாளும்" என்றுசொல்லி, "உனசீலம் - என்புகழ்கோ" என்றதுக்குபாவம் (காலத்தையித்யாதி) ஒருபோகியாக்கி-ஏகவிஷயமாக்கி. நாளும்-சர்வகாலமும். என்புகழ்கோ - என்னம்பென்று ஸ்தோத்ரம்பண்ணப்போகிறேனென்றபடி. எத்தைச்சொல்லிப்புகழ்வேனென்றபடி ........... ..................................................*

---

# பதினொன்றாம்பாட்டு.

சீலமெல்லையிலானடிமேலணி
கோலநீள்குருகூர்ச்சடகோபன்சொன்
மாலையாயிரத்துள்ளிவைபத்தினின்
பாலர்வைகுந்தமேறுதல்பான்மையே.

## ஆறுயிரப்படி.

(சீலம்) சீலமெல்லையிலானு யிருந்த திருவேங்கடமுடையான் திருவடிகளுக்குத் திருவணிகலமா யிருந்த வித்திருவாய்மொழியோடேயொருசம்பந்தமுடையார், வைகுந்தமேறுகை யாப்ரசர்யமன்றென்கிறுர்.

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக பரமபதப்ராப்தியை யருளிச்செய்கிறுர்.

சீலமெல்லையிலான்-அபர்யந்தமான சீலத்தையுடையவன். அடிமேல்-திருவடிகளின்மேலே. அணி-அணியப்பட்டதாய். கோலம் - தர்ஸநீயமானரூபமாய். நீள்-ஆயாமவிஸ்தாரவத்தான. குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வாருடைய. சொல்-சப்தாத்மகமான. மாலை-மாலையாயிருக்கிற. ஆயிரத்துள்-ஆயிரத்துள். இவைபத்தினின்-இப்பத்தினுடைய. பாலர்-பரிசரத்திலே, சப்தமுகத்தாலேயாதல், அர்த்தமுகத்தாலேயாதல் அந்வயமுடையவர்கள். வைகுந்தம்-பரமபதத்தில். ஏறுதல்-ஏறப்பெறுகை. பான்மை - ஸ்வபாவம்.

இது - கலிவிருத்தம்.......................................................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார் பரமபதத்தே செல்லுகை யாஸ்சர்யமன்று, ப்ராப்தமென்கிறார்.

( சீலமெல்லையிலானடிமேல் ) அமர்யாதசீலனானவனுடையதிருவடிகளிலே. இத்திருவாய்மொழியால் ப்ரதிபாதிக்கப்பட்டது - சீலாதிக்யமாயிற்று. அத்தை நிகமிக்கிறார் ( அணிகோலநீள் குருகூர்ச்சடகோபன்சொன்மாலை ) அழகுமிக்கிருந்துள்ள திருநகரியையுடைய வாழ்வார். அன்றிக்கே, கோலநீளென்று-சப்தந்தானேயுண்டாகையாலே, ( அடிமேலணி - மாலை ) என்று கூட்டிக்கொள்ளவுமாம். ( ஆயிரத்துள்ளிவைபத்தினின்பாலர் ) இப்பத்தின் பரிசரத்திலேயுளராமவர்கள். உக்திமாத்ரம், பாடதாரணம், அர்த்தாநுசந்தாநம், ஒருவழியாலேயிதிலேயந்வயமுடையவர்கள். ( வைகுந்தமித்யாதி ) பரமபதத்திலே செல்லுகை ப்ராப்தம். * மாகவைகுந்தம்காண்பதற் கேகமெண்ணினாரிவர்; இப்பாசுரத்தே யந்வயித்தவர்களுக்கு ப்ரார்த்யமன்று, ப்ராப்தம். பித்ருதநம் புத்ரனுக்கு தாயப்ராப்தமாயிருக்குமிறே. ......................................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (சீலமித்யாதி) "பத்தினின்பாலர் வைகுந்தமேறுதல்பான்மையே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி.)

இத்தால்பாவம் (இத்திருவாய்மொழியாலித்யாதி.)

"கோலநீள்" என்றத்தை - * குருகூருக்கு விசேஷணமாக்கி யருளிச்செய்து, "கோலநீள் - அடிமேலணி" என்று - திருவடிகளுக்கு விசேஷணமாக வர்த்தாந்தரம் (அன்றிக்கேயித்யாதி) அர்த்தத்வயத்திலும், "அணி" என்றது - சாத்தப்பட்டவென்றாய், * சொன்மாலைக்குவிசேஷணம். யத்வா, முந்தினவர்த்தத்தில், "அணி" என்றது - விலக்ஷணமென்றாய், * குருகூருக்குவிசேஷணமாதல். இப்பத்தின் பரிசரத்திலேயுளராகையாவதென்னென்ன (உக்திமாத்ரமித்யாதி)

இவர்க்கு "ஏகமெண்ணும்" என்று ப்ரார்த்யமாயிருக்க, இவர்களுக்குப்ராப்தமாகக்கூடுமோவென்ன (மாகவைகுந்தமித்யாதி) பான்மை - ப்ராப்தம். அதெப்படியென்ன (பித்ருதநமித்யாதி.)

சீலமெல்லையிலானடிமேலணியப்பட்டதாய், கோலநீள் குருகூர்ச்சடகோபனுடைய சொன்மாலையித்யாரப்யாந்வயঃ ..................................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

( ஓராயிரமாய் )

நைகஶ்ரீநாமவத்த்வாஜ்ஜகதுதயலயஸ்தாபநாத்யைர்ஹரித்வா-
த்தாநாந்மோக்ஷஸ்ய ஹேயப்ரதிபடகடகஶ்ரோணிஸம்பத்திமத்த்வாத் ப்ர-
ஹ்லாதாஹ்லாதகத்வாத்வ்ருஷகிரிகடகே ஸந்நிதாநாதிக்ருத்யை: ஸர்வாதே-
ஶஸ்வாங்கதாநாதயம்பவதி ஶீலரத்நாகரோऽஸௌ॥ (௧௫)

( நைகஶ்ரீநாமவத்வாத் ) பேராயிரங்கொண்டதோர்பீடுடையன் - ஸ்வகீயகுணவிபவசேஷ்டிதாதி ப்ரதிபாதகங்களாய், ஒரொன்றுதானே பஹுப்ரகாரமாகரக்ஷிக்கக்கடவதான வநேகந்திருநாமங்களையுடையனுகையாலும்; (ஜகதுதயஸம்ஸ்த்தாபநாத்யை:) அவனேயகல்ஞாலம்படைத்திடந்தானித்யாதி - லோகங்களுடைய ஸ்ருஷ்டி ஸ்த்திதி சம்ஹாரங்களைப்பண்ணுமவனுகையாலும்; (ஹரித்வாத்) அரியை வணங்கியதிந்தனர் - ஆஶ்ரிதருடைய வநிஷ்டங்களை ஹரிக்குமவனுகையாலும்; (தாநாந்மோக்ஷஸ்ய) விண்ணுலகந்தருந்தேவனை - பரமபதத்தைக்கொடுக்குமவனுகையாலும்; (ஹேயப்ரதிபட) புனமேவியபூந்தண்டுழாயலங்கலித்யாதி - தர்ஶநீய சீதளதுளஸீமாலாலங்க்ருத தயாநிரவத்யனுபிருக்கையாலும்; (கடகஶ்ரோணிஸம்பத்திமத்த்வாத்) அடைவதுமணியார்மலர்மங்கைதோள் - தன்னோடே பிரிவற்ற பெரியபிராட்டியையும், பூமிநீளைகளையும் புருஷகாரமாகவுடையனுகையாலும்; மலர்மங்கையென்று பெரியபிராட்டியாரைச்சொன்னது - உபலக்ஷணமென்றுதிருவுள்ளம். (ப்ரஹ்லாதாஹ்லாதகத்வாத்) ஆகஞ்சேர் நரசிங்கமதாகியித்யாதி - ந்ருஸிம்ஹரூபத்தைக்கொண்டு விரோதியான ஹிரண்யனைஸம்ஹரித்து, பக்தரான ப்ரஹ்லாதரிடத்தி லாஹ்லாதத்தைப்பண்ணுமவனுகையாலும்; (வ்ருஷகிரிகடகேஸந்நிதாநாதிக்ருத்யை:) உய்யக்கொள்வான் நின்றவேங்கடம் - சர்வோஜ்ஜீவநார்த்தமாகத் திருமலையிலே நின்றருளுகையாலும்; ஆதிசப்தத்தாலே - மேலிற்பாட்டில் "பழுதில்தொல்புகழ்ப்பாம்பணை" என்று சொல்லுகிற சேஷசாயித்வம் ஸங்க்ருஹீதம். (ஸர்வாதேஸஸ்வாங்கதாநாத்) தாளதாமரையானுனதுந்தியாணித்யாதி - ப்ரஹ்மருத்ரர்களுக்கும் தன்திருமேனியிலே யிடங்கொடுக்கையாலும்; எம்பெருமான், சீலகுணாகரனாக, "ஓராயிரம்" என்கிறதஶகத்திலே ஆழ்வாராலேயுபபாதிக்கப்பட்டானென்கிறார். ௧௫

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

---

ஓராநீர்வேண்டினவையுள்ளதெல்லாஞ்செய்கின்றேன்
நாராயணனன்றோநானென்று - பேருறவைக்
காட்டவவன்சீலத்திற்கால்தாழ்ந்தமாறன்அருள்
மாட்டிவிடுநம்மனத்துமை. (அ௫)

(ஓராநீர்) இதில் - சீலாதிகுணங்களிலே யாழங்காற்பட்டு, ஆழ்வார்பேசினபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; "உம்முடையபேற்றுக்குநீர் ப்ரார்த்திக்கவேணுமோ, நாமேப்ரார்த்தித்துச்செய்யும்படியன்றோ நமக்குண்டான நாராயணத்வ ப்ரயுக்தமான ரக்தஸ்பர்ஶம், ஆனபின்பு, நாமேயும்முடை

ய சர்வாபேக்ஷிதங்களும் செய்யக்கடவோம் " என்று அவனருளிச்செய்ய; " தன் பெருமைபாராதே என்சிறுமைபாராதே யிப்படியருளிச்செய்வதே!, இதொருசீல மிருக்கும்படியே! " என்று அவனுடைய சீலகுணத்திலேவித்தராகிற *ஓராயிரத்தி லர்த்தத்தை, "ஓராநீர்வேண்டினவை" இத்யாதியாலே யருளிச்செய்கிறொன்கை.

(ஓராநீர் வேண்டினவையுள்ளதெல்லாஞ்செய்கின்றேன்) ஓர்ந்து - "அதுவேணும், இதுவேணும்" என்றுராய்ந்து, நீரர்த்தித்தவை யுள்ளதெல்லாமென்னுதல்; அன்றிக்கே, நீரர்த்தித்தவற்றையெல்லாம், " இன்னதுபகரிக்கவேணும், இன்னதுபகரிக்கவேணும் " என்றுநாம் நிரூபித்தென்னுதல். இப்படி பந்துக்ருத்யமாயுள்ளதெல்லாம் நாமேயர்த்திகளாய்ச்செய்கிறோம். அதுக்குடலாக (நாராயணனன்றோநானென்றுபேருறவைக்காட்ட) "நமோநாராயணஶ்ரீமாந்" என்னும்படி-ஸர்வவிதபந்துத்வமும் நடத்தும்படிக்கு நாம் நாராயணசப்த வாச்யனன்றோவென்று, அத்தாலே பெரிதான சர்வவிதபந்துத்வத்தையும்காட்ட. அத்தை " ஓராயிரமாயுலகேழளிக்கும் - பேராயிரங்கொண்டதோர்பீடுடையன் - நாராயணன்நங்கள்பிரானவனே " என்றநுசந்தித்து (அவன்சீலத்தில் கால்தாழ்ந்தமாறனருள்) அதாவது - " அவனே மற்றெல்லாருமறிந்தனமே " என்றும், " அரியைவணங்கியறிந்தனர்நோய்களறுக்கும்மருந்தே " என்றுவெறுத்தும், " விண்ணுலகந்தருந்தேவனைச்சோரேல் கண்டாய்மனமே " என்றும், " இனமேதுமிலானையடைவதுமே " என்றும், " என்மனமுடைவதுமவற்கேயொருங்காகவே " என்றும், " ஆகஞ்சேர்நரசிங்கமதாகி " என்றும், " நின்றவேங்கடம் நீணிலத்துள்ளது " என்றும், " தொழுது - எழுதுமென்னுமிதுமிகை " என்றும், " தாளதாமரையான் " என்றுதொடங்கி "நாளுமென்புகழ்கோவுனசீலமே" என்றும், "சீலமெல்லையிலான்" என்றும், இப்படி குணவானென்னும்படியான சீலகுணத்திலே யாழங்காற்பட்டருளிச்செய்த வாழ்வாரருளுண்டுக்ருபை. அது (மாட்டிவிடும்நம்மனத்துமை) நம்முடைய வஜ்ஞானத்தை நிஶ்ஶேஷமாகப்போக்கும். " அம்மானாழிப்பிரானவனெவ்விடத்தான்யானார் " என்று பிற்காலிக்கிறகலக்கத்தை, சீலகுணப்ரகாசகத்வத்தாலே சேஷியாதபடிநஶிப்பிக்கும் சாமர்த்யமான வஜ்ஞானமாகவுமாம்............................................ (அ௲)

ஒன்பதாம்பத்தில் - மூன்றாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி - அ௲.—பாட்டு - ௧௧௫.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஒன்பதாம்பத்து.

## நான்காந்திருவாய்மொழி.

### மையார் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(மையார்கருங்கண்ணி) இப்படி யெம்பெருமானுடைய சௌசீல்யாநுசந்தாநத்தாலே நிர்ப்பீகராய், ததநுபவத்திலே ப்ரவ்ருத்தராய் அனுகைவாராமையாலே தாமவஸந்நராய், அவஸந்நஸர்வகரணருமாயிருந்தவாழ்வார்..........................................................*

### பன்னீராயிரப்படி.

நாலாந்திருவாய்மொழியில், கீழே அவன்சீலாதிசயத்தை யநுசந்தித்து சிதிலரானவர், "சீலவானாய் ஸ்ரீயஃபதியானவனை யநுபவிக்கவேணும்" என்றபிநிவேசித்து; அந்தவபிநிவேசாநுரூபமான லக்ஷ்மீவிசிஷ்டத்வத்தையும், அத்யபிநிவேசவிஷயத்வத்தையும், ஆஸ்ரிதரக்ஷகத்வத்தையும், அசேஷப்ரதிசம்பந்தித்வத்தையும், காரணத்வாதி குணயோகத்தையும், பரமபத நிலயத்வத்தையும், ஹ்ருத்யதாதிசயத்தையும், சர்வாந்தராத்மத்வாதிகளையும், கிஞ்சித்காரவிஷயத்வத்தையும், நிருபாதிக சம்பந்தத்தையு மநுசந்தித்து, "எவம்பூதனானவனையநுபவிக்கவேணும்" என்கிற வாகாங்க்ஷையாலே, தம்மோடு கரணங்களோடு வாசியற வீடுபட்ட விவருடைய வார்த்திதீரும்படி முகங்காட்ட வநுபவித்து சந்துஷ்டராய், ஆஸ்ரிதாநுபாவ்யமான திருவாய்மொழியை யவன்திருவடிகளிலே பாடி யுஜ்ஜீவிக்கப்பெற்றேனென்று மிகவும் ஹ்ருஷ்டராகிறார்..........................................................*

### ஈடு.

ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்துக்கடியவன்றானாயிருக்கும்; சீலாதிகுணங்களுக்கடி பிராட்டியாயிருக்கும். இதிலேவந்தவாறே ஸ்வாதீநமென்றிக்கேயொழிகிறதோவென்னில்; அங்ஙனுமாயிராது; நிரூபித்தால், அந்தஸ்வாதந்த்ர்யத்தோபாதி யிவளோட்டைச்சேர்த்தி நித்யமாயிருக்கையாலே. பாஷ்யகாரர்மேலே "ஸ்ரீவல்லப:" (ஸ்ரீவல்லபஃ) என்னநினைத்து, ஸ்வரூபத்தை நிரூபிக்கிறவிடத்திலே, ஜ்ஞாநாநந்தங்களுக்குமுன்னே "ஸ்ரிய:பதி:" (ஸ்ரியஃபதிஃ) என்றாரிறே. இப்படியிருக்கிறவனுடைய சீலகுணத்

தையும், அதுக்கடியான ஶ்ரிய:பதித்வத்தையு மநுசந்தித்தார் – கீழ்த்திரு வாய்மொழியிலே; கடுகப்பெறவேண்டும்படி குணாதிகனுமாய், பெறுவிப்பாருமருகேயுண்டாயிருக்கையாலே, இப்போதே பெறவேண்டும்படியான சாபலம்பிறந்தது; அப்போதே பெறக்காணாமையாலே விஷயாநுரூபமாக விடாய்த்தார். பெறவேண்டும்படி குணாதிகனுமாய், பெறுவிப்பாரு மருகேயுண்டாயிருக்க, பெறாவிட்டா லாறியிருக்கப்போகாதே. ஆகையாலே, சேதநசமாதியாலே தனித்தனியே கரணங்களும்விடாய்த்து, தாமும்விடாய்த்தார் * முடியானேயில் வாசனையாலே. இதுதானெல்லாத்திருவாய்மொழியோடுங்கூடியிருப்பதொன்றாயிற்று-ஒரு "செஞ்சொற்கவி," "வீற்றிருந்தேழுலகு," "என்றைக்குமென்னை," "முடியானே," இவையித்தனையிலுமோடுகிற பாவவ்ருத்தியையுடைத்தாயாயிற்றிருப்பது. இப்படியிந்த்ரியங்களுந் தனித்தனியேவிடாய்த்துத் தாமும் விடாய்த்தபடி, ஶ்ரீகஜேந்த்ராழ்வானுடைய வார்த்திக்குத்தோற்றினவிதுதான் "க்ரமத்திலே வந்தான்" என்னலாம்படி ஆற்றாமைக்கு க்ரமத்திலேதோற்றப்பற்றாதே, தூணிலேவந்துதோற்றினாப்போலே தோற்றவேண்டும்படியாயிற்று. இப்படிப்பட்ட தம்தசையையும், அதுக்கடியான விடாயையும், அவன்விடாயறிந்து அதுக்குதவவந்து முகங்காட்டினபடியையு மநுசந்தித்து ஹ்ருஷ்டராய், "நான்க்ருதக்ருத்யனானேன், அடிமைசெய்யப்பெற்றேன், வாழ்ந்தேன், ஶ்ரீவைஷ்ணவர்களுக்குமெல்லாம் நானுபகாரகனும்படியானேன், இதொருவன்பெறும்பேறிருந்தபடியே!" என்று தமக்குப்பிறந்தலாபத்தையநுசந்தித் தினியராய், அத்தைப்பேசித்தலைக்கட்டுகிறார் ... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

மையார்ப்ரவேஶம், கீழ்த்திருவாய்மொழியிலே - சீலகுணத்தையும், அதுக்கடியான ஶ்ரிய:பதித்வத்தையு மருளிச்செய்தாரென்று விவக்ஷித்து, "சீலகுணத்துக்கடி பிராட்டியானால், ஔபாதிகமாகையாலே அநித்யமாகாதோ" என்றாசங்கித்துபரிஹரிக்கிறார் (ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்துக்கித்யாதி) (ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்துக்கடியவன்றானாயிருக்கும்) என்கிறவித்தை யிப்போதருளிச்செய்தது - ஸ்வாதந்த்ர்யம் ஸ்வாபாவிகமாகையாலே, அதுக்கநித்யத்வ ப்ரசக்தியில்லையென்று தோற்றுகைக்காக. இதிலேயென்றது - சீலாதிகுணங்களிலேயென்றபடி. ஸ்வாபாவிகமன்றிக்கேயொழிகிறதோ - ஸ்வாபாவிகமல்லாமையாலே ஔபாதிகமாய் நித்யமன்றிக்கேயொழிகிறதோவென்றபடி. அங்ஙனுமாயிராது - ஔபாதிகமானாலும் அநித்யமாயிராதென்றபடி. அதுக்கு ஹேதுவேதென்ன (அந்த ஸ்வாதந்த்ர்யேத்யாதி) அதாவது - உபாதியான பிராட்டியோட்டைச்சேர்த்தி நித்யமாகையாலே யிதுவும் நித்யமென்றபடி. நித்யமாகைக்கடி ஸ்வரூபநிரூபகையாகையாலே யென்னப்பார்த்து, அப்படி ஸ்வரூபநிரூபகை யாகையோவென்ன ( பாஷ்யகாரரித்யாதி. ) (ஶ்ரிய:பதி: என்றாறிறே) கீதாபாஷ்யத்திலே யென்றபடி. "ஶ்ரிய:பதிர்நிகிலஹேயப்ரத்யநீககல்யாணைகதாநாநந்த ஜ்ஞாநாநந்தைகஸ்வரூப:" இத்யாரப்ய, "ஸ்வாபிமதாநுரூப நித்ய நிரவத்ய ஸ்வரூப ரூபகுண விபவைஶ்வர்ய சீலாத் யநவதிகாதிஶயாஸங்க்யேய கல்யாணகுணகணஶ்ரீவல்லப:" இதி ஶ்ரீகீதாபாஷ்யே.

ப்ராஸங்கிகசங்கையை பரிஹரித்து, இத்திருவாய்மொழிக்கு சங்கதி (இப் படியித்யாதி.) ஶ்ரியஃபதித்வத்தையுமென்றது - "அணியார்மலர்மங்கைதோள்" என்றத்தைப்பற்ற. சீலாதிகுணங்களும் ஶ்ரியஃபதித்வமு மித்திருவாய்மொழியி லிவர்க்கோடுகிற விடாய்க்குத் தம்பகமென்னுமத்தை யருளிச்செய்கிறார் (கடுகவித்யாதி.) விடாய்க்கிறதென், ஆறியிருக்கவொண்ணாதோ வென்ன (பெறவேண்டும்படியித்யாதி.) உக்தார்த்தநிகமநபூர்வகமாக விடாயினுடைய வெல்லையை யருளிச்செய்கிறார் (ஆகையாலேயித்யாதி.) விடாய்மாத்ரமோ, சந்தோஷமில்லையோவென்ன (இதுதானித்யாதி.) ஏதத்விவரணம் (ஒருசெஞ்சொலித்யாதி.)

இவர்க்கித்திருவாய்மொழியில் பிறந்த விடாயினுடைய வுறைப்பெவ்வளவென்ன (இப்படியிந்த்ரியங்களுமித்யாதி.) தனித்தனியேயென்றது - "கண்ணே," "என்கருத்தே," "உன்னையுள்ளுமென்னுள்ளம்" இத்யாதியைப்பற்ற. தாமும்விடாய்த்தென்றது - "நானழைப்பன்," "பேதுறுவன்" இத்யாதியைப்பற்ற. தூணிலேவந்தென்றது - "நரசிங்கமதாய" என்றத்தைப்பற்ற.

இத்திருவாய்மொழியில் பத்துப்பாட்டில் ப்ரமேயங்களையும் கொய்சுபிடித்தருளிச்செய்கிறார் (இப்படிப்பட்டவித்யாதி) "என்னுள்ளமுகந்தே" என்றத்தைப் பற்ற (ஹ்ருஷ்டராயென்றது) "கண்டுகொண்டேனே" என்றத்தைப்பற்ற (க்ருதக்ருத்யனானேனென்றது) "தொண்டர்க்கமுதுண்ண" இத்யாதியைப்பற்ற (ஶ்ரீவைஷ்ணவர்களுக்குமித்யாதி) "உய்ந்தவாறே" என்றத்தைப்பற்ற (இதொருவனித்யாதி) அஞ்சுபாட்டு - * முடியானேயில்ப்ரமேயம்; மூன்றுபாட்டு - * வீற்றிருந்தேழுலகில் ப்ரமேயம்; ஒன்பதாம்பாட்டு - * என்றைக்கும் ப்ரமேயம்; பத்தாம்பாட்டு - * செஞ்சொற்கவியில் ப்ரமேயம்...............................................*

---

## நான்காந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

மையார்கருங்கண்ணிகமலமலர்மேற்
செய்யாடிருமார்பினிற்சேர்திருமாலே
வெய்யார்சுடராழிசுரிசங்கமேந்துங்
கையாவுன்னைக்காணக்கருதுமென்கண்ணே.

### ஆறாயிரப்படி.

லக்ஷ்மீகடாக்ஷ ஸம்ஶ்லேஷைக போகனாய், தத்பரவசனாய், சங்க சக்ர திவ்யாயுத விபூஷிதகரனான வுன்னழகை யென்கண்ணானது காண வாசைப்படா நின்றதென்கிறார். ...........................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், நிரதிசயபோக்யதாப்ரகாசகமான லக்ஷ்மீஸம்பந்தத்தையும், அந்தபோக்யதையைக்காத்தூட்டு மாயுதபூர்த்தியையுமுடைய வுன்னைக்காண வாசைப்படாநின்றதென் கண்ணென்கிறார்.

மையார் - அஞ்சநாலங்காரத்தையுடைத்தாய். கரு-"அஸிதேக்ஷணா" (அஸிதேக்ஷண) என்னும்படி ஸ்வாபாவிகமான கருமையையுடைத்தான. கண்ணி-திருக்கண்களையுடையளாய், கமலமலர்மேல்-தாமரைப்பூவின்மேலேயிருப்பாளாய். செய்யாள் - பத்மவர்ணையாகையாலே சிவந்தநிறத்தையுடையளான லக்ஷ்மியானவள். "அகலகில்லேனிறையும்" என்று, திருமார்வினில் - திருமார்பினழகிலேயீடுபட்டு. சேர் - சேரும்படியாய். அவளுடைய அவயவசோபையிலு மாபிஜாத்யத்திலும் துவக்குண்டு, திரு-அவள்பக்கலிலே. மாலே-அதிசயிதவ்யாமோஹத்தைப்பண்ணுமவனுய். இந்தச்சேர்த்திக் கஸ்த்தாநேபயமங்கிகளாய், ரக்ஷணேத்யோகத்தாலே ப்ரதிபக்ஷத்திலே. வெய்யார்-வெம்மைமிஞ்சின. சுடர்-ஜ்வாலையையுடைய. ஆழி-திருவாழியையும். சுரி-வடிவுதானே யெதிரிகளையுமழித்து ஆஸ்ரிதர்க்கநுபாவ்யமாம்படியான வடிவிலே ரேகாவலயத்தையுடைய. சங்கும்-ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும். ஏந்தும்-ஏந்தும். கையா-திருக்கையையுடையவனே. உன்னை-இப்படி ஸ்ரியஃபதியாய் சங்கசக்ரகதாதரனனவுன்னை. என்-என்னுடைய. கண் - சபலமானகண்ணுனது. காண-சூரிகளோயாதி ஸதாதர்மநம்பண்ண. கருதும்-மநோரதியாநின்றது ...... ........*

## ஈடு - முதற்பாட்டு.

"ஸ்ரியஃபதியானவனைக்காணவேணும்" என்று தம்முடைய சக்ஷுரிந்த்ரியத்துக்குப் பிறந்த சாபலத்தை யருளிச்செய்கிறார்.

(மையார்கருங்கண்ணி) "அவனைப்பெறவேணும்" என்றிருப்பா ராசைப்படுவது மவள்முன்னாகவாய், பெற்றால் பின்னை கைங்கர்யம்பண்ணுவது மிருவருமான சேர்த்தியிலேயாயிருக்குமிறே. (மையார்கருங்கண்ணி) ஒன்றால் சமாதாநம் பண்ணவேண்டாதபடி ஸ்வாபாவிகமான வழகையுடைத்தாயாயிற்றுத் திருக்கண்களிருப்பது. இனி மங்களார்த்தமாக தரிக்குமித்தனையிறே யஞ்சநம். (கருங்கண்ணி) என்னநிற்கச்செய்தே, (மையார்) என்னும்போது - மங்களார்த்தமாக வஞ்சநம்தரித்தா மித்தனையிறே. (கமலமலர்மேற்செய்யாள்) இதுவாயிற்று சௌகுமார்யமிருக்கும்படி. (திருமார்வித்யாதி) தாமரைப்பூவில் பரிமளமும் தாதும் அடிக்கொதித்தால், உன்மார்விலே யடிமாறியிடவேண்டும்படிமார்வுபடைத்தவனே. இவளிவ்வேற்றமெல்லாங்கொண்டு மம்மார்வுக்கவ்வருகுபோகமாட்டாள். அவ்வகல மெல்லாம் போக்யமா யிருக்கையாலே, அவ்வருகுபோகவேண்டாவே. (திருமாலே) அவனும், இவள், மார்வில் படும்பாட்டை, இவளுடைய சர்வாவயவங்களிலும் பிச்சேறியிருக்குமாயிற்று. அவனுக்குத் திருக்கண்கள் சிவந்தாயிற்றிருப்பது. அவனிவளை நிரந்தரகடாக்ஷம்பண்ணுகையாலே, அவன்கண்ணின்சிவப் பிவள்மேலேயூறி யிவள்திருமேனி சிவந்திருக்கும்; இவளவனை நிரந்தரகடாக்ஷம் பண்ணுகையாலே, இவள்கண்ணில்கறுப் பவன்திருமேனியிலேபரந்து அவன்திருமேனி ஶ்யாமளமாயிருக்கும். இவளுக்குத் திருக்கண்கள் குளிர்ந்திருக்கும்; அவனுக்கு வாத்ஸல்யம் விஞ்சி யிருக்கும். அவனேட்டைச் சேர்த்தியாலேயாயிற் றிவளுக்குத் தண்ணளிவிஞ்சியிருப்பது; இவளோ

ட்டைச் சேர்த்தியாலேயாயிற் றவனுக்கு வாத்ஸல்யம் விஞ்சியிருப்பது. ஆக, இருவர்க்கு மிரண்டும் குறைவற்றிருக்கும்ப்ரணயித்வத்தாலே. வர விட்டவாளழியச்செய்யப்புக, "நகஸ்ரீனாவபராய)தி" (நகப்ஶ்சிந்நாப ராத்யதி) என்னுமிவள்; "என்னடியாரதுசெய்யார்" என்று அவள்த ன்னோடே மறுதலிக்கும்படியாயிற் றவனிருப்பது; ஆகையாலே, இருவ ருமானசேர்த்தியிலே யிவை யிருவர்க்கும் குறைவற்றிருக்குமென்றுமாம். வ்யதிரேகித்தவன்றும் தனித்தனியே குறைவற்றிருக்குமென்றுமாம். (தி ருமார்வினில்சேர்) நித்யாநுபவம் பண்ணுகிற்கச்செய்தேயும், "அகலகி ல்லேனிறையும்" என்று இன்று வந்து கிட்டின புதியார்படுவதையெல் லாம் படாநிற்கும். சேரேன்கிற வர்த்தமாநம் — இத்தைக் காட்டுகிறது. (வெய்யாரித்யாதி) இவள்கையில் லீலாரவிந்த மவனுக்கு போக்யமாயி ருக்குமாபோலேயாயிற்று அவன்கையில் திவ்யாயுதங்க ளிவளுக்கினிதா யிருக்கும்படி. இவளுகப்புக்காக ஆஶ்ரிதவிரோதிகளை யழியச்செய்கைக் குமுதலாய் தர்ஶநீயமாயிருக்குமாயிற்று. ப்ரதிபக்ஷத்தின்மேலே மிக்க வெம்மையையுடைத்தாய், புகரோடு கூடியிருக்கிறதிருவாழி. சந்நிவேச மேயமைந்து வேறொருகார்யங்கொள்ளவேண்டாதே, வைத்தகண்வாங்கா தே கண்டுகொண்டிருக்கவேண்டும்படியான ஸ்ரீபாஞ்சஜந்யம். (ஏந்துங் கையா) வெறுமிவையுமன்று, கையுமன்று, இரண்டினுடையவுஞ் சேர் த்தியாயிற் றிவராசைப்படுகிறது. "கூராராழிவெண்சங்கேந்தி-வாராய்" என்னுமவரிறே. (உன்னை) லக்ஷ்மீசம்பந்தத்தோடும், திவ்யாயுதங்க ளோடும், திவ்யவிக்ரஹத்தோடுங் கூடியிருக்கிற வுன்னை. இவருடையவு த்தேஶ்யவஸ்து விருக்கிறபடி யிதுகாணும். (காணக்கருதும்) "ஶங்க சக்ரகதாதர: - ஸ்ரீவத்ஸவக்ஷா:" (ஶங்கசக்ரகதாதர: - ஸ்ரீவத்ஸவக்ஷா:) என்கிற வுன்வடிவைக்காண வாசைப்படாநின்றது. அவனை யாசைப்படு வாராசைப்படுவது ஒருகார்யங்கொள்ளவன்று, காணவாயிற்று. * திரு வேங்கடத்தானைக் காணவிறே. * காரார்திருமேனிகாணுமளவுமிறே. நித் யசூரிகளும் சதா தர்ஶநம்பண்ணுமித்தனையிறே. "அணியரங்கனென்ன முதனைக்கண்டகண்கள் மற்றொன்றினைக்காணா" என்று இவ்வளவிலே தேக்கிட்டுவிடுவர்களிங்குள்ளார்; "ஏததேவாம்ருதம்த்ருஷ்ட்வா த்ருப்யந்தி" (ஏததேவாம்ருதம்த்ருஷ்ட்வாத்ருப்யந்தி) என்று இவ்வளவிலேதேக்கி ட்டுவிடுவர்களங்குள்ளார். (என்கண்ணே) சம்சாரிகளில் தமக்குண்டா ன சாபலத்தோபாதியும் போருமாயிற்று, இவர்தம்மிற்காட்டிலு மிவரு டைய திருக்கண்களுக்கு. இவர்க்கு நேத்ரபூதரான வேற்றமுண்டிறே ய வற்றுக்கு. ........................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (மையாரித்யாதி) "திருமாலே" என்னுமளவும், "உன்னைக்கா ணக்கருதுமென்கண்ணே" என்றவற்றையும்கடாக்ஷித்தவதாரிகை (ஸ்ரிய:பதீத்யாதி)

பிராட்டிசேர்த்திசொன்னதுக்கு பாவமேதென்ன (அவனையித்யாதி) ஆசைப்படுவதுமென்றது - உபாயமாக ப்ரார்த்திப்பதுமென்றபடி. இது, பூர்வகண்டத்தைப்பற்ற. "கருங்கண்ணி" என்றதுக்குபாவம் (ஒன்றுலித்யாதி) ஆனால் "மையார்" என்பானென்னென்ன (இனியித்யாதி) "மங்களார்த்தம்" என்கிறதென், அழகுக்குடலானுலோவென்ன (கருங்கண்ணியித்யாதி)

இத்தால் சௌந்தர்யஞ்சொல்லிற்று; மேல் சௌகுமார்யம் சொல்லுகிறதென்கிறுர் (இதுவாயிற்றித்யாதி) அதாவது - மலர்மேலேயிருப்பதத்தனைபோக்கி, மற்றையிடம்பொறுத சௌகுமார்யமென்கை.

"திரு" என்று - அழகைவிவக்ஷித்துப்பாவமாதல், "சேர்" என்றதுக்குபாவமாதல் (தாமரைப்பூவிலித்யாதி) "மார்வு" என்று ஏகாவயவகதநத்துக்குபாவமாதல், "சேர்" என்கிறவர்த்தமாநார்த்தமாதல் (இவளிவ்வேற்றமித்யாதி) இவ்வேற்றமென்றது-கீழ்ச்சொன்ன சௌந்தர்ய சௌகுமார்யாதிகளை. மாட்டாமைக்குஹேதுவேதென்ன ( அவ்வகலமித்யாதி ) அகலம் - வைபுல்யம். மார்வென்று ஸ்வபாவார்த்தம்.

"மார்வு" என்று ஓரவயவத்தை விசேஷியாதே, வெறுமனே "திருமால்" என்றதுக்குபாவம் (அவனுமித்யாதி) திருவினிடத்திலே வ்யாமுக்தனென்றுசப்தார்த்தம். அஞ்சநாலங்க்ருதமாய் ஸ்வாபாவிகமான கருமையையுடைத்தான திருக்கண்களையுடையளாய், தாமரைப்பூவின்மேலே யிருப்பாளாய், பத்மவர்ணையாகையாலே சிவந்தநிறத்தையுடைய லக்ஷ்மியானவள், அழகியமார்விலேசேரும்படியாய், திருவினிடத்திலே வ்யாமோஹத்தையுடையவனேயென்று சப்தார்த்தம்.

"மையார்கருங்கண்ணி, செய்யாள்" என்றப்ரசங்கத்திலே, பரஸ்பரகடாக்ஷங்களாலே திருமேனிகளுக்கு நிறம்வந்ததாகரஸோக்தி (அவனுக்குத் திருக்கண்களித்யாதி) இருவருடையவும் திருமேனியில் சிவப்பும் கறுப்பும் பரஸ்பரகடாக்ஷங்களால் வந்தவளவேயன்று, இவர்களுடைய தயாவாத்ஸல்யங்களும் பரஸ்பரகடாக்ஷங்களாலேவந்ததென்கிறுர் (இவளுக்கித்யாதி) ஏதத்விவரணம் (அவனேட்டையித்யாதி.)

அந்யோந்யம் சேர்த்தியாலே க்ருபாவாத்ஸல்யங்களானல், ஔபாதிகமாயநித்யமாகாதோவென்ன; உபாதி-நித்யமாகையாலே நித்யமென்கிறுர் (ஆகவித்யாதி) கறுப்பு - குளிர்த்தியாய், க்ருபையைச்சொல்லுகிறது. அப்படி யிருவர்க்கு மிரண்டும் விஞ்சியிருக்குமென்கைக்கு நியாமகமேதென்ன; இருவருடையவு முக்திகளென்கிறுர் (வரவிட்டவாளித்யாதிவாக்யத்வயத்தாலே) கீழ் - பரஸ்பரம் சேர்த்தியாலே க்ருபாவாத்ஸல்யங்கள் வந்ததாகச்சொல்லி, இவளுக்கு அஸிதேக்ஷணத்வமும், அவனுக்கு புருஷோத்தமத்வப்ரயுக்தமான புண்டரீகாக்ஷத்வமும் ஸ்வதஸ்ஸித்தமாகையாலே, க்ருபாவாத்ஸல்யங்களும் பாஸ்பரம் சேர்த்தியால்வந்ததன்றிக்கே ஸ்வாபாவிகங்களென்கிறுர் (வ்யதிரேகித்தவித்யாதி.)

இவளம்மார்வுவிட்டவ்வருகுபோகமாட்டாமையி னெல்லையை யருளிச்செய்யாநின்றுகொண்டு, இது "சேர்" என்கிறவர்த்தமாநசித்தமென்று முக்தகண்டமாகவருளிச்செய்கிறுர் (நித்யாநுபவமித்யாதிவாக்யத்வயத்தாலே.)

பிராட்டியைச்சொல்லி, அநந்தர மாயுதங்களைச்சொன்னதுக்குப்பாவம் (இவள்கையிலித்யாதி) இவ்விடத்திலே - [illegible]

ஸிஹாரகாஶ்ரீரங்கராஜமணிமஞ்ஜரிகாஹரேதகவாம்" (ஸாமாந்யபோக்யமபி கௌஸ்துபவைஜயந்தீ பஞ்சாயுதாநிரமணஸ்வயமேவபிப்ரத் । தத்பாரசேதமிவதே பரிஹர்த்துகாமஶ்ஶ்ரீரங்கராஜமணிமஞ்ஜரிகாஹரேத்வாம்) இத்யாத்யநுசந்தேயம். ஸ்ரீகுணரத்நகோஶே. ஆனால், "வெய்யார்சுடர்" என்று விசேஷிப்பானென்னென்ன (இவனுகப்புக்காகவித்யாதி) சப்தார்த்தம் (ப்ரதிபக்ஷத்தினித்யாதி.) "சுரி" என்றதுக்கு பாவம் (சந்நிவேசமித்யாதி.) சந்நிவேசம் - சம்ஸ்த்தாநம். "ஸந்நிவேஶஸ்ஸம்ஸ்தாநம்" (ஸந்நிவேஶஸ்ஸம்ஸ்த்தாநம்) இதிநிகண்டு. "ஏந்தும் கையா" என்றதுக்கு பாவம் (வெறுமிவையுமித்யாதி.) இரண்டினுடையவும் சேர்த்தியழகை யாசைப்பட்டிருப்ப றென்னுமதுக்கு ப்ரமாணம் (கூராராழியித்யாதி.)

கீழெல்லாவற்றையும் கடாக்ஷித்து (லக்ஷ்மீசம்பந்தமித்யாதி.) திவ்யவிக்ரஹத்தோடுமென்றது - "ஏந்தும்கையா" என்றத்தைப்பற்ற. இவர்க்கநுபாவ்யவஸ்து இப்படிப்பட்டதென்கிறார் (இவருடையவித்யாதி.) "காண" என்றதுக்குபாவம் (சங்கசக்ரேத்யாதி) "தமஸ: பரமோதாதா ஶங்கசக்ரகதாதர:। ஶ்ரீவத்ஸவக்ஷா நித்யஶ்ரீரஜய்யஶ்ஶாஶ்வதோத்ருவ:" (தமஸ:பரமோதாதா ஶங்கசக்ர கதாதர: । ஸ்ரீவத்ஸவக்ஷாநித்யஸ்ரீரஜய்யஶ்ஶாஶ்வதோத்ருவ:) இதிராவணவதாநந்தரே மண்டோதரீ. ஸ்ரீஶ்சவத்ஸஶ்சவக்ஷஸியஸ்யஸ: - ஸ்ரீவத்ஸவக்ஷா: என்றிங்கு சமாசம் விவக்ஷிதம். வத்ஸம் - மறு. "காண" என்கிறதென், கார்யம்கொள்ளவேண்டாவோவென்ன (அவனையித்யாதி.) காண்கைக்கே யாசைப்பட்டிருப்பறென்னுமதுக்கு ப்ரமாணம் (திருவேங்கடத்தானையித்யாதி) ஸ்பஷ்டோர்த்த:. அங்குமப்படியென்கிறார் (நித்யசூரிகளுமித்யாதி.) இவ்விரண்டுக்கு மடைவே ப்ரமாணங்கள் (அணியரங்கனித்யாதி.) "என்" என்றவிசேஷணத்துக்கு பாவம் (சம்சாரிகளிலித்யாதி.) நேத்ரபூதர் - ப்ரதாநர்.

க்ரமேணாந்வய:. ............................................................*

---

# இரண்டாம்பாட்டு.

கண்ணேயுன்னைக்காணக்கருதியென்னெஞ்ச
மெண்ணேகொண்டசிந்தையதாய்நின்றியம்பும்
விண்ணோர்முனிவர்க்கென்றுங்காண்பரியாயை
நண்ணுதொழியேனென்றுநானழைப்பனே.

## ஆறாயிரப்படி.

(கண்ணே) என்னெஞ்ச முன்னைக்காண வாசைப்படாநின்றது, ப்ரஹ்மாதிகளுக்கும் காண வரிதாயிருக்கச்செய்தே, எனக்கு த்ருஷ்டிபூதனாயிருந்த வுன்னையொழிய வேறெனக்குச் செல்லாமையாலே யுன்னைக் காணுதொழியில் தரியேனென்று நான்கிடந்து கதறாநின்றேனென்கிறார்*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், "உன்னைக்காணவேணும்" என்கிற வபிநிவேசத்தாலே, என்னெஞ்சும் நானு மலற்றாநின்றோமென்கிறார்.

கண்ணே - எனக்கு தர்ஶநசாதநபூதனாய்க்கொண்டு த்ருஷ்டியானவனே. உன்னை - சாதநபூதனான வுன்னையே. காண - சதா தர்ஶநம்பண்ணி யநுபவிக்க. கருதி - ஏருதி. என்னிலும் சபலமான, என் - என். நெஞ்சம் - நெஞ்சானது. எண்ணே கொண்ட - பஹுசங்க்யாதமான. சிந்தையதாய் - மநோரதங்களைப் பண்ணி. நின்று - நின்று. காண்கையிலும், ப்ரதிபந்தகம்போகையிலும், அடிமைசெய்கையிலுமுண்டான வபிநிவேசத்தாலே, இயம்பும் - அலற்றாநிற்கும். நான் - கரணியானநான். விண்ணோர் - ப்ரஹ்மாதிகளுக்கும். முனிவர்க்கு - சநகாதிகளுக்கும். என்றும் - என்றும். காண்பு - காண. அரியாயை - அரிய வுன்னை. நண்ணுதொழியேன்-கிட்டாமல் விடேன். என்று - என்று வ்யவஸிதனாய்க்கொண்டு. அழைப்பன் - த்வனியாலே கூப்பிடாநின்றேன். ...................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

தமக்கும் தம்முடைய நெஞ்சுக்குமுண்டான சாபலத்தை யருளிச்செய்கிறார்.

(கண்ணே) எனக்கு த்ருஷ்டியானவனே. (உன்னைக்காணக்கருதி) நிரதிசயபோக்யனான வுன்னைக்காண வாசைப்பட்டு. கண்ணைக்கொண்டே கண்ணைக்காண விருக்குமாபோலேகாணு மிவரிருக்கிறது. காண்கைக்கு சாதநமான கண்ணும், காணப்படும் விஷயமு மவனென்கிறார். "வக்ஷுஶ்ச த்ரஷ்டவ்யஞ்ச நாராயணஃ" (சக்ஷுஶ்சத்ரஷ்டவ்யஞ்ச நாராயணஃ) என்னக்கடவதிறே. அவன்றன்னாலே யவனைப்பெறுமவரிறேயிவர். ப்ராப்யத்தில் நியதிபோலே, இவர்க்கு ப்ராபகத்தில் நியதியும். (என்னெஞ்சம்) பந்தஹேதுவாய்க்கொண்டு, விஷயங்களிலே "பரகுபரகு" என்று வாராநிற்குமிறே சம்சாரிகளுடைய நெஞ்சம்; * மயர்வறமதிநலமருளப்பெற்றார் நெஞ்சிறே, "தொழுதெழு" என்பது. (எண்ணேயித்யாதி) எண்கொண்ட மநோரதத்தையுடைத்தாய் - பஹுமநோரதங்களைப் பண்ணி. "காணவேணும், காணாதேபட்ட துஃகத்தைப்போக்கவேணும், அடிமைசெய்யவேணும்" என்று. (நின்றியம்பும்) நிரந்தரமாகக்கூப்பிடாநிற்கும். பரவ்ருத்தியையுந் தானே யேறிட்டுக்கொள்ளாநிற்கும். (கண்ணே) என்கையாலே - "ப்ராபகனவனே" என்றதாய், (உன்னைக்காண) என்கையாலே - "ப்ராப்யவஸ்துவுமவன்" என்றதாய், (எண்ணே கொண்ட) என்கையாலே – "அந்தப்ராபகத்தைக்கொண்டிந்தப்ராப்யத்தைப்பெறவேணும்" என்றிருக்குமதிகாரியுடைய யாத்ரையிருக்கும்படி சொல்லிற்று. (விண்ணோரித்யாதி) இதுதான் நெஞ்சுக்கேயாய் நான் கைவாங்கியிருக்கிறேனோ. ப்ரஹ்மாதிகளுக்கும் சநகாதிகளுக்குமென்று மொக்கக் காணவரியையா யிருக்கிற வுன்னை நான் கிட்டாதொழிவனோ. "பெற்றுமுடிப்பன்" என்று நான் கூப்பிடாநின்றேன். "பெற்றுமுடிப்பன்" என்கிறதிவனொன்கொண்டென்னில்; "விலக்ஷணதேசவாசிகளாய், தங்களுக்கென்ன வொரு கைம்முதலுண்டாயிருக்கிறவர்க ளாகையாலே, விளம்பஹேதுவுண்டு அவர்களுக்கு; அங்ஙனொரு கைம்முதலில்லா

தவர்களுக்கு விளம்பஹேதுவுண்டோ" என்று கூப்பிடாநின்றேன். (நண்ணுதொழியேன்) அவனைக்கிட்டாதொழியில் நான் தரியேன். இது ஆய்த்தான் நிர்வாஹம். (நண்ணுதொழியேன்) என்றவிடம் - மஹா விப்ரவாசஞ்சொல்லுகிறது. அவர்கள் விலக்ஷண தேசத்திலே யிருக்கையாலே க்ரமத்திலே யெடுக்கலாம்; அங்ஙனன்றிக்கே, சம்சாரத்தேயகப்பட்டுகிற்கிற விவளையிறே கடுகவெடுக்கவேண்டுவது. எடுக்கவேண்டும் நிலத்திலேயிருந்தேன்; எடுக்கவேணுமென்றிருந்தேன்; எடுப்பான் தானுயிருந்தான்; எடுத்தால் பெறுவது தன்னையாயிருந்தது; ஆனபின்பு, எனக்கென்ன கண்ணழிவுண்டு......................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (கண்ணேயித்யாதி.) "என்னெஞ்சமெண்ணேகொண்டசிந்தையதாய்" என்றத்தையும் "நானழைப்பன்" என்றத்தையும் கடாக்ஷித்தவதாரிகை (தமக்குமித்யாதி.)

ரஸோக்தி (கண்ணைக்கொண்டேயித்யாதி.) இத்தால் பலிதம் (காண்கைக்கித்யாதி.) அப்படி யிரண்டுமவனேவென்ன (சக்ஷுஸ்ஸேத்யாதி) "சக்ஷுஸ்ஸும், அத்தால் காணப்படுகிற பதார்த்தமும், அவனுக்கு ப்ரகாரதயாவாம்" என்று இந்த ஸ்ருதிக்கு. "ப்ரகார ப்ரகாரிபாவமன்றிக்கே சக்ஷுஸ்ஸும் சக்ஷுஸ்ஸாலே காணப்படும்விஷயமுமவனே" என்று இதுவுமோரர்த்த மிவர்க்கு விவக்ஷிதம்.

உபாயாந்தரங்களாலு மவனைப் பெறலாமேயென்ன (அவன்றன்னாலேயித்யாதி.) இந்நிர்ப்பந்தத்துக் கடியேதென்ன (ப்ராப்யத்திலித்யாதி.) "என்" என்றதுக்கு பாவம் (பந்தஹேதுவாயித்யாதி வாக்யத்வயம்.) பரகுபரகென்று - பரபரப்பாய்க்கொண்டு.

"எண்ணேகொண்ட-" எண்ணிக்கையை-ஸங்க்யையை, கொண்ட-க்ரஸித்த. ஸங்க்யையை யதிக்ரமித்திருக்கிறவென்றபடி.விவரணம் (பஹுமநோரதேத்யாதி.) பஹுமநோரதமேதென்ன (காணவேணுமித்யாதி.) இயம்பும் - கூப்பிடும். நெஞ்சுக்கு ஸ்மரணமொழிய கூப்பிடக்கூடுமோவென்ன (பரவ்ருத்தியையித்யாதி.)

"கண்ணே" என்றுதொடங்கி, "சிந்தையதாய்நின்றியம்பும்" என்னுமளவாலே - ஜ்ஞாதவ்யார்த்த த்ரயமும் சித்தித்ததென்கிறார் (கண்ணேயித்யாதி.)

உத்தரார்த்தத்துக்கு சங்கதி (இதுதானித்யாதி) சப்தார்த்தம் (ப்ரஹ்மாதிகளுக்குமித்யாதி.) பெற்று முடிப்பனென்றது - பலிதார்த்தம். ப்ரஹ்மாதிகளுக்கு துஷ்ப்ராபமான வஸ்துவைக் கிட்டுவேனென்கிற தென்னஹேதுவைக்கொண்டென்று - சங்காவாக்யத்துக்குக் கருத்து. பரிஹாரம் (விலக்ஷணேத்யாதி.) அதாவது - போகங்களெல்லாவற்றாலும் குறைவற்றதேசத்தி லிருக்கிறவர்களாகையாலே, "இப்போதே யவனைப்பெறவேணும்" என்னுமது பிறவாதாகையாலும், தந்தாம் சாதநம் முற்றி பலிக்கவேணுமென்னு மபிசந்தி நடக்கையாலு மவர்களுக்குவிளம்பமுண்டென்றபடி.

அர்த்தாந்தரம் (அவனையித்யாதி.) "நண்ணுதபோது, ஒழியேன் - தரியேன்" என்றுய்த்தான் நிர்வாஹம். "கிட்டியேவிடுவேன்" என்றத்தால் ப்லிதமானவர்த்தவிசேஷத்தை யருளிச்செய்கிறார் (நண்ணுதொழியேனித்யாதி.) (அங்ஙனொருகைம்முதல்) இத்யாதிவாக்யத்திலே, "முனிவர்" என்று - மாநசிலரொன்றதுக்கு

ப்ரதிகோடிகாட்டி, "விண்ணோர்" என்றதுக்கு ப்ரதிகோடிகாட்டுகிறார் (அவர்கள் விலக்ஷணேத்யாதி வாக்யத்வயத்தாலே.)

பாட்டெல்லாவற்றாலும் சித்தித்தவர்த்தத்தைக் கொய்சுபிடித்து நிகமிக்கிறார் (எடுக்கவித்யாதி.) (எடுக்கவேண்டுமித்யாதி) "விண்ணோர்" என்றதுக்கு ப்ரதிகோடியை விவக்ஷித்து. "அழைப்பன், கண்ணே, உன்னைக்காண" என்ற பதத்ரயத்தையும்பற்ற (எடுக்கவேணுமித்யாதிவாக்யத்ரயமும்.) என்ன கண்ணழிவுண்டென்றது - உக்தஹேதுக்களைப்பற்ற. கண்ணழிவு - விளம்பமும், குறையும்.

க்ரமேணார்வயஃ ..........................................................*

## மூன்றாம்பாட்டு.

அழைக்கின்றவடிநாயேனாய்கூழைவாலாற்
குழைக்கின்றதுபோலவென்னுள்ளங்குழையு
மழைக்கன்றுகுன்றமெடுத்தாநிரைகாத்தாய்
பிழைக்கின்றதருளென்றுபேதுறுவனே.

### ஆறாயிரப்படி.

(அழைக்கின்ற) என்னெஞ்சானது, தன்னுடையவயோக்யதையையும், சாமக்ரீவைகல்யத்தையும் பாராதே, தன்னுடையசாபலத்தாலே யுன்னையாசைப்பட்டு விடமாட்டுகிறதில்லை; இப்படி யென்னுடையசர்வகரணங்களும் தளராநிற்கச்செய்தே பேசாதிருந்தருளுகையாலே, உபாயசூந்யராயாபந்நராயிருப்பாரை ரக்ஷிக்கக்கடவதான வுன்னுடைய நிரவதிககாருண்யவெள்ளத்திலும் நானகப்படேனோவென் றஞ்சாநின்றேனென்கிறார்..........................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆர்த்தியேபற்றாசாக ஆஸ்ரிதரக்ஷகனான வுன்னுடைய க்ருபையானது என்னை நழுவவிடுகிறதோவென் றஞ்சாநின்றேனென்கிறார்.

அழைக்கின்ற - அபிநிவேசாதிசயத்தாலே யழைத்துக்கூப்பிடாநிற்பேனாய். அடி-அநந்யகதியான சம்பந்தத்தையுடையேனாய். நாயேன்-அணுகில் அவத்யாவஹமான நிகர்ஷத்தையுடையவென்னுடைய. என்னுள்ளம்- துஃகக்ஷீணமானநெஞ்சானது. உன்னுடையஸந்நிதியிலே, நாய்-நாயானது. தன்னினைவை, கூழை - கூழையான. வாலால்-வாலையசைத்து. குழைக்கின்றதுபோல-ப்ரகாசிப்பிக்குமாபோலே. குழையும் - சிதிலமாகாநின்றது. இந்த்ரன், அன்று - அஶ்மவர்ஷமுகத்தாலே ஆர்த்தியைஜநிப்பித்தவன்று. மழைக்கு - அந்தவர்ஷத்துக்கு நிவாரணமாம்படி. குன்றம்-மலையை. எடுத்து - எடுத்து. ஆ - ரக்ஷாபேக்ஷபண்ணவு மறியாதபசுக்களுடைய. நிரை-திரளை. காத்தாய்-ரக்ஷித்தவனே. உன்னுடைய, அருள் - நிரவதிகக்ருபையானது. என்னளவில், பிழைக்கின்றது-தப்புகிறதோ. என்று-என்று. பேதுறுவன்-கலங்காநின்றேன்.

உனக்குத்தப்புகிறதோவென்றுமாம்,..........................................*

## ஈடு - மூன்றும்பாட்டு.

இப்படி கூப்பிடச்செய்தேயும் வரக்காணாமையாலே, ஆர்த்தியே கைம்முதலாக ரக்ஷிக்கக்கடவ வுன்குணத்துக்குப் புறம்பானேனோவென்கிறார்.

(அழைக்கின்றவடிநாயேன்) அயோக்யனாய் க்ஷுத்ரனாயிருந்து வைத்து, ஆர்த்தியாலே கூப்பிடாநின்றேன். ருசியாலே தவிரமாட்டார். கிட்டினால் அத்தலைக்கவத்யமாம்படி யாயிற்றுத் தம்முடையநிலை. நாய், தன்னையுடையவனுக்குத் தன்னபிமதத்தில் ருசியைத்தெரிவிப்பது வாலாலேயாயிற்று; அவ்வால்தான்கூழையானால் தெரிவிக்கையரிதாமிறே; அதுபோலே, என்மநஸ்ஸானது நோவுபடாநின்றது. இத்தால்-தமக்கோடுகிற க்லேசம் பேச்சுக்கு நிலமன்றென்கை. நிஸ்ஸாதநனாய்வைத் தாசைப்படாநின்றேனென்றுமாம். (மழைக்கித்யாதி) இந்த்ரன் அஶ்மவர்ஷத்தை வர்ஷிக்கிறவளவிலே, மலையையெடுத்து இடையரையும் பசுக்களையுமார்த்தியே கைம்முதலாகரக்ஷித்தவனே. (பிழைக்கின்றதருளென்றுபேதுறுவனே) "'வரையாதேரக்ஷித்தமஹாகுணம் எனக்குதவாமையாலே யிழக்கப்புகாநின்றாய்' என்றுபேகணியாநின்றேன்" என்றாளவந்தாரருளிச்செய்யும்படி. அத்தை யெம்பெருமானார் கேட்டருளி, "இதுபொருளழகிது, ஆனாலிப்போ திவர்க்கோடுகிற தசைக்குச் சேராது, ஆனபின்பு, 'பசுக்களுமிடையரும் வர்ஷத்திலே நோவுபடாதபடி மலையையெடுத்துமறித்த விம்மஹாகுணத்துக்கு நான் புறம்பாகிறேனோ' என்று பேதுறாநின்றேன்" என்று.................................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (அழைக்கின்றவித்யாதி) "பிழைக்கின்றதருளென்றுபேதுறுவன்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இப்படியித்யாதி.)

"அடிநாய்-நாயேனானநான், அழைக்கின்றேன்" என்றந்வயித்தருளிச்செய்கிறார் (அயோக்யனாயித்யாதி) "நாய்" என்கையாலே - அயோக்யத்வமும், க்ஷுத்ரத்வமும் ஸித்தம். அடி - அடியனாய், நாயேன்-நிஹீநனான வென்னுடையவென்று சப்தார்த்தம். அயோக்யனானால் கூப்பிடுகிறதென், தவிரலாமேயென்ன (ருசியாலே யித்யாதி.)

வாலென்னாதே, "கூழை" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (நாய்தன்னையித்யாதி) "கூழைவாலால்" என்றத்ருஷ்டாந்தத்துக்கநுகுணமாக பாவத்வயமருளிச்செய்கிறார் (இத்தால் தமக்கித்யாதிவாக்யத்வயத்தாலே) த்ருஷ்டாந்தத்துக்குத்தெரிவிக்கையரிதென்கிறமாத்ரமேயபேக்ஷிதம்.

ஆளவந்தார்நிர்வாஹத்துக்கு, அவ்வருளன்னைத்தப்பிப்போதிறதென்று பேதுறாநின்றேனென்று சப்தார்த்தம். அருளென்னைத்தப்பிப்போகிறதென்று பேதுறாநின்றேனென்று எம்பெருமானார் நிர்வாஹத்துக்கு சப்தார்த்தம். பேகணியாநின்றேன் - க்லேசியாநின்றேன். இவர்க்கோடுகிறதசைக்குச் சேராதென்றது - அலாபத்தாலே நோவுபடாநிற்க வவனிழவுக்குநோவுபடுகை சேராதென்றபடி. பேதுறுகை-துக்கப்படுகை.

அழைக்கின்றவடிநாயேனை - என்னுள்ளம் - நாய் கூழைவாலால்குழைக்கின்றதுபோல - குழையும்; இவ்வவஸ்த்தையிலும் வரக்காணாமையாலே, மழைக்கன்றென்றுதொடங்கி, அருள் - பிழைக்கின்றது - என்று பேதுறவனித்யர்வய: ......*

## நான்காம்பாட்டு.

உறுவதிதுவென்றுனக்காட்பட்டுநின்கட்
பெறுவதெதுகொலென்றுபேதையேனெஞ்சு
மறுகல்செய்யும்வானவர்தானவர்க்கென்று
மறிவதரியவரியாயவம்மானே.

### ஆறாயிரப்படி.

( உறுவதிது ) நீ ஆஶ்ரிதசுலபனாயிருக்கச்செய்தே சிலருக்கரியையாயிருக்கையாலே, எனக்கு மரியையாயிருக்கிற் செய்வதென்னென்று, என்னெஞ்சு நடுங்காநின்றதென்கிறார். ... ..................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், உத்தேஶ்யமான சேஷத்வத்துக்கு ப்ரதிசம்பந்தியான வுனக்கடிமையாய்வைத்து, என்பேறேதாயிருக்கிறதோவென்று என்னெஞ்சு கலங்காநின்றதென்கிறார்.

சம்பந்தமொத்திருக்கச்செய்தேயும், வானவர் - அநுகூலரானவானவரோடு. தானவர்க்கு-ப்ரதிகூலரானதாநவரோடுவாசியற. ஆஶ்ரித சௌலப்யத்திலும் சர்வேஶ்வரத்வத்திலும், என்றும்-என்றுமொக்க. அறிவது-அறிய. அரிய-அரியையாம்படியான. அரியாய-நரஸிம்ஹமான. அம்மானே-ஸ்வாமியே. இது - இந்தசேஷத்வமாகிறஸ்வரூபமே. உறுவது-உத்தேஶ்யம். என்று-என்றறுதியிட்டு. உனக்கு-தத்ப்ரதிசம்பந்தியானவுனக்கு. ஆட்பட்டு-தாஸ்யாநுமதியைப்பண்ணி. நின்கண்-ஸ்வாமியானவுன்பக்கல். பெறுவது-பலமாகலபிக்கவருகிறது. எதுசொல்-ஸ்வரூபாநுரூபகைங்கர்யமோ, சம்சாரஸ்த்திதியோ, ஏதாயிருக்கிறது· என்று, பேதையேன் - ஏதேனுமொன்றை நீசெய்தபடிகண்டிருக்கை ப்ராப்தமென்னுமறிவில்லாத வென்னுடைய. நெஞ்சம்-நெஞ்சானது. மறுகல்செய்யும்-கலங்காநின்றது..........................*

### ஈடு - நான்காம்பாட்டு.

நீரிங்ஙன் பயப்படுகிறதென்னென்ன ; "தேவாதிகளுக்கரியையாகையாலே யெனக்குமரியையாகிறாயோ" என்றென்னெஞ்சு கலங்காநின்றதென்கிறார்.

( உறுவதிதுவென்று ) சீரியது - அடிமைசெய்யு மிதுவென்று. ( உனக்காட்பட்டு ) உனக்கடிமைபுகுந்து. "ஸ்வரூபம் பகவத்பாரதந்த்ர்யம்" என்றறிந்தால், சீரியப்ரயோஜநம் கைங்கர்யமேயிறே. ( நின்கட்பெறுவதெதுகொலென்று ) உன்பக்கல்பெறுவதேதோவென்று. ஸ்வரூபத்தையுமுணர்ந்து, "கைங்கர்யமே சீரியதும்" என்றறிந்து, "ஈஶ்வர

னநந்யப்ரயோஜநர்க்குவேறொன்றைக்கொடுத்துவிடுவானொருவனல்லன்" என்றுமறியுமிவர், "உன்பக்கல் பெறுவதெது" என்கைக்கு ஹேதுவென்னென்னில்; "க்ரமத்திலேசெய்கிறோம்" என்று சம்சாரத்திலிருப்பே சேஷித்துவிடப்புகுகிறதோ, என் த்வரையறிந்து சடக்கென முகங்காட்டுகிறாயோவென்கை. ( பேதையேன்நெஞ்சம்மறுகல்செய்யும் ) "நாமபிசந்திபண்ணினபடியே பலிக்கும்" என்னுமறிவின்றிக்கேயிருக்கிற வென்னெஞ்சம் கலங்காநின்றது. இங்ஙன் கலங்குகைக்கடி. யென்னென்னில்; நெஞ்சினுடைய விவேகசூந்யதையிறே யிதுக்கடி. நீதானுமிதுக்கடி (வானவரித்யாதி) "ஜெவாநாஂஷாநவாநாஂ" ( தேவாநாம்தாநவாநாம் ) அம்மானாயிருந்துவைத்து - சர்வேஶ்வரனாயிருந்துவைத்து, தேவர்களுக்கு மசுரர்களுக்கு மென்றுமொக்க வறியவரியையாய், அந்நிலைதன்னிலே ஒருசிறுக்கனுக் குன்னை யுள்ளபடி யறியலாயிருந்தாய், அதில் நானெக்கோடியிலே யாகிறேனோ வென்றறியாமை. தேவாசுரவிபாகம்பண்ணின வநந்தரம், அர்ஜுநன் "நரனெக்கோடியிலேயாகிறேனோ" என்றஞ்சினாப்போலே. பின்னை யவனிதுக்குப்பண்ணினபரிஹாரமென்னென்னில்; தன் சௌலப்யத்தை ப்ரகாசிப்பிக்கையிறே. எளியோமாகையு மொருகோடியுண்டாக நீர் சொன்னீராகில், நீர்தாமக்கோடியிலேயுள்ளாரொருவராயிருந்தீராகி லுமக்கினி நாம் கைப்புகுந்தோமென்றிருக்கையமையாதோவென்கையிறே.................................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (உறுவதித்யாதி) "என்னெஞ்சம்மறுகல்செய்யும், வானவர்தானவர்க்கென்று மறிவதரிய" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (நீரிங்கனித்யாதி) இந்தவவதாரிகை, "மழைக்கன்று" இத்யாதிக்கு - எம்பெருமானார்நிர்வாஹத்தைப்பற்ற.

உறுவது - யோக்யமானது. சீரியதென்றபடி. சீரியதென்றறிந்தபடியென்னென (ஸ்வரூபமித்யாதி) இவ்விடத்தில் - "ஆத்மாபிமாநாநுகுணபுருஷார்த்தவ்யவஸ்தயா । பகவத்பாரதந்த்ர்யாதிப்ரபுத்தஸ்யஸாயதே" ( ஆத்மாபிமாநாநுகுணபுருஷார்த்தவ்யவஸ்த்தயா । பகவத்பாரதந்த்ர்யாதிப்ரபுத்தஸ்யஸாயதே ) என்று பிள்ளையருளிச்செய்த வசநத்தை சம்வாதமாக வருளிச்செய்வர்.

"(க்ரமத்திலேசெய்கிறோம்) இத்யாதி பரிஹாரவாக்யத்துக்குக்கருத்து-ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குதவினாப்போலே சடக்கெனவுதவுகிறாயோ, ஸ்ரீபரதாழ்வானுக்குப்போலே க்ரமத்திலே செய்கிறாயோ" என்றருளிச்செய்வர்.

மேலுக்கவதாரிகை (நீதானுமிதுக்கடியென்று) இதுக்கு-விவேகசூந்யதைக்கு. "அம்மான்" என்றதைப்பற்ற (தேவாநாமித்யாதி) "ஜெவாநாஂஷாநவாநாஞ்சஸாமாந்யமதிதைவதஂ । ஸர்வதாசரணத்வஂ" (தேவாநாம்தாநவாநாஞ்சஸாமாந்யமதிதைவதம் । ஸர்வதாசரணத்வந்த்வம்) இத்யாதி.

எக்கோடியிலே யாகிறேனோவென்றது-தேவாசுரகோடியிலே யாகிறேனோ, ப்ரஹ்லாதகோடியிலே யாகிறேனோவென்றபடி. ஆழ்வாருடைய சம்சயம் விளம்பா விளம்பகோடிகமாகையாலும், அர்ஜுநனுடையசம்சயம் தேவாசுரகோடிகமாகையாலும், சம்சயமாத்ரத்திலே த்ருஷ்டாந்தமருளிச்செய்கிறார் (தேவாஸுரோத்யாதி) இவ்விடத்திலே - "'ஜ்வௌ ஹூதஸர்கௌ லோகேஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச। தைவீஸம்பத்விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா। த்விவிதோ பூதஸர்கோயம் தைவ ஆஸுர ஏவ ச। விஷ்ணுபக்திபரோ தேவோ விபரீதஸ்ததாஸுர:' (த்வௌபூதஸர்க்கௌலோகேஸ்மிந்தைவஆஸுரஏவச। தைவீஸம்பத்விமோக்ஷாயநிபந்தாயாஸுரீமதா। த்விவிதோபூதஸர்க்கோயம்தைவஆஸுரஏவச। விஷ்ணுபக்திபரோதேவோவிபரீதஸ்ததாஸுர:) என்று அவர்கள் ஸ்வரூபத்தைச் சொல்லி, இதுதன்னை, 'மஹாத்மாநஸ்துமாம்பார்த்த' இத்யாதியாலும், 'ஆஸுரீம் யோநிமாபந்நா' இத்யாதியாலும்விஸ்தரித்து, 'மாஶுச: ஸம்பதம் தைவீமபிஜாதோஸி பாண்டவ' (மாஶுசஸ்ஸம்பதம்தைவீமபிஜாதோஸிபாண்டவ) என்றுபரிஹரிப்பதும்செய்தான்" என்றருளிச்செய்வர். இதுக்கு - "மறுகல்செய்யும்" என்றதுக்கு "உகந்தேயுன்னையுள்ளுமென்னுள்ளம்" என்கிற ஏழாம்பாட்டைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (தன்சௌலப்யத்தையித்யாதி) விவரணம் (எளியோமித்யாதி) (சொன்னீராகில்) என்றவநந்தரம், "நரசிங்கமதாயவுருவே - உகந்தேயுன்னையுள்ளும்" என்றுநீரேசொல்லுகையாலே என்றுகூட்டுவது.

அம்மானாய்வைத்து - வானவர்தானவர்க்கென்று மறிவதரியையாய் அரியானவனே - உறுவதிதுவென்றுதொடங்கி, மறுகல்செய்யுமென்றந்வயம் ...........*

# ஐந்தாம்பாட்டு.

அரியாயவம்மானையமரர்பிரானைப்
பெரியானைப்பிரமனைமுன்படைத்தானை
வரிவாளரவினணைப்பள்ளிகொள்கின்ற
கரியான்கழல்காணக்கருதுங்கருத்தே.

## ஆறாயிரப்படி.

(அரியாய) உம்முடையவபேக்ஷிதந்தானேதென்னில்;

அண்டாதிபதியான ப்ரஹ்மாவுக்கும் காரணபூதனாகையாலே சர்வேஶ்வரனாய், * அயர்வறுமமரர்களதிபதியாய், சகலஜநமநோநயநஹாரி திவ்யசௌந்தர்யவிசிஷ்டனாய், ஆஶ்ரிதர்க்காத்மதாநம்பண்ணுகைக்காகத் திருப்பாற்கடலிலேவந்து கண்வளர்ந்தருளுகிற கரியான்கழல்காண வாசைப்படாநிற்குமென்னெஞ்சென்கிறார் ......... ..... ...............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், காரணத்வாதிகுண யோகத்தையுடையனான வுன்திருவடிகளைக் காணவேணுமென்று என்னுடைய நெஞ்சானது நினையாநின்றதென்கிறார்.

அரியாய-விரோதிநிரஸநசீலனுன. அம்மானே-ஸ்வாமியாய். அமரர் - நிரஸ்த சமஸ்தவிரோதிகளான சூரிகளுக்கு. பிரானே-போகப்ரதனுய். பெரியானே-அவர்களா லும் பரிச்சேதித்தநுபவிக்கவொண்ணுதபெருமையையுடையனுய். முமுக்ஷுஸிஸ்ரு க்ஷயாலே ஜகத்தைஸ்ருஷ்டிக்கைக்கு, முன்-முற்படவே. பிரமனே - ப்ரஹ்மாவை. படைத்தானே-உத்பாதித்தவனுய். உத்பந்நஜகத்ரக்ஷணார்த்தமாக, வரி - வரியையும். வாள்-ஒளியையுமுடைத்தான. அரவினணே-திருவரவணையிலே. பள்ளிகொள்கின்ற- பள்ளிகொண்டருளுகிற. கரியான்-படுக்கைக்குபரபாகமான ஸ்யாமளவிக்ரஹத்தை யுடையவனே. கழல்-திருவடிகளிலே. காண-காணவேணுமென்று. கருத்து-புத்தியா னது. கருதும்-நினையாநின்றது.

கரியானேயென்கிற விரண்டாம்வேற்றுமை யெஞ்சிக்கிடக்கிறது. கரியான்ற னையென்றும் பாடஞ்சொல்லுவர் ........................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

நாமெளியோமானகோடியிலேயன்றோ, நீர் உமக்குப்பேறுகைபு குந்திருக்க நீரிங்ஙன் படுகிறதென்னென்ன; என்னெஞ்சுகாண்கையிலே த்வரியாநின்றதென்கிறார்.

(அம்மானே) சர்வேஶ்வரனே. (அமரர்பிரானே) நித்யசூரிகளுக்குத் தன்னைக்காட்டிக்கொடுத்தநுபவிப்பிக்கு முபகாரகனே. (பெரியானே) அவ ர்களுடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகள் தன்னதீநமாய், தன்னை யவர்களால் பரிச்சேதிக்கவொண்ணுதவனே. (பிரமனையும்படைத்தானே) சதுர்முகனு க்கு ஜநகனுயுள்ளவனே, அரியாயவென்று-கீழேகூட்டுவது. ஸ்ருஷ்டமா னஜகத்திலே, ஆஶ்ரிதார்த்தமாகவவன் ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே தன்னை யழியமாறிவந்தவதரித்தவனே. (வரிவாளித்யாதி) ஆஶ்ரிதர்க்குதவுகையன் றிக்கே, தத்ஸம்ஶ்லேஷஸ்வபாவனுயுள்ளவனே. (வரிவாளரவு) வரியையு மொளியையுமுடையவரவு. வரி - அழகு. (கரியான்) வெளுத்ததிருநிறத் தையுடைய திருவநந்தாழ்வான்மேலே ஒருகாளமேகம் சாய்ந்தாப்போ லேயாயிற்றுக் கண்வளர்ந்தருளுவது. (காணக்கருதும்கருத்தே) காண் கையிலே த்வரியாநின்றதென்மநஸ்ஸு. படுக்கைக்கு பரபாகமானவடிவு ம், அதுக்குபரபாகமான திருவடிகளும் இத்தையாயிற்றுக்காணவாசைப் படுகிறது ................................................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (அரியாயவித்யாதி) "அரியாய" என்றத்தையும், "காணக்க ருதும்கருத்து" என்றத்தையும்கடாக்ஷித்தவதாரிகை (நாமெளியோமானவித்யாதி.)

கருத்து - நெஞ்சு.

கீழேகூட்டுவதென்றது - "பிரமனேமுன்படைத்தானே" என்றதுக்குப் பிற்பா டுகூட்டுவதென்றபடி. "அரியாய" என்றவிசேஷணத்துக்கர்த்தம் (ஸ்ருஷ்டமானவி த்யாதி) (ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே) என்றவிடத்திலே - "ப்ரஹ்லாதஸ்ய து வாக்யாந்தே ஸம்ரக்ஷிதவாநுஹரி: । தமாரக்ஷிதவாந் ஶ்ரீமாந் தாநவாநாம் நிபாதநம்

ஸஹா" (ப்ரஹ்லாதம்ஸகலாபத்ஸுயதாரக்ஷிதவாந்ஹரி꞉ । ததாரக்ஷதியஸ்தஸ்ய ஶ்ருணோதிசரிதம்ஸதா) என்று ப்ரஸாதிப்பர்.

"அரியாய" என்றவநந்தரம், "வரிவாளரவினணை" இத்யாதிக்ருசங்கதி (ஆஸ்ரிதர்க்கித்யாதி) வரி - அவயவசௌந்தர்யம். வாள் - சமுதாயசோபை. "அரவினணைப்பள்ளிகொள்கின்றகரியான்" என்றத்தால் பலித்தபாவம் (வெளுத்தவித்யாதி) "கரியான்" என்றத்தைக்கடாக்ஷித்து (படுக்கைக்கித்யாதி) அதுக்கு-வடிவுக்கு.

கரியானையும் கழலையும்காண-கருத்து-கருதுமென்றந்வயமாதல்; அன்றிக்கே, அம்மானாய், அமரர்பிரானாய், பெரியானாய், பிரமனைமுன்படைத்தானாய்-அரியானாய்-வரிவாளரவினணைப்பள்ளிகொள்கின்ற கரியானுடைய கழலைக்காண - கருத்து-கருதுமென்றந்வயமாதல்; இந்தயோஜனையில், த்விதீயை வாக்யாலங்காரம்...........*

---

# ஆறும்பாட்டு.

---

கருத்தேயுன்னைக்காணக்கருதியென்னெஞ்சத்
திருத்தாகவிருத்தினேன்றேவர்கட்கெல்லாம்
விருத்தாவிளங்குஞ்சுடர்ச்சோதியுயரத்
தொருத்தாவுன்னையுள்ளுமென்னுள்ளமுகந்தே.

## ஆறாயிரப்படி.

(கருத்தே) இப்படி நானுன்னைக்காண விச்சிக்குமளவில், திருநாட்டிலிருக்கும்படியேவந் தென்னெஞ்சிலே புகுந்தருளின வுன்னை யென்னெஞ்சுகந்து புஜியாநின்ற தென்கிறார். ..................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நான் மநோரதித்தபடியே, பரமபதநிலயனாய் சூரிசேவ்யனான வுன்னை யென்னெஞ்சானது கண்டநுபவியாநின்றதென்கிறார்.

கருத்தே - நான் தளராதபடி யெனக்கு பலகரனாகக்கொண்டு நெஞ்சுவலியானவனே. உன்னை - உன்னை. காண - கண்டநுபவிக்கவேணுமென்று. கருதி-மநோரதித்து. என் - என். நெஞ்சத்து - நெஞ்சுக்குள்ளே. இருத்தாக - எழுந்திராதபடி. இருத்தினேன் - இருத்திக்கொண்டேன். தேவர்கட்கெல்லாம் - சூரிகளுக்கெல்லாம். விருத்தா - மூப்பானசேஷியாய். விளங்கும் - உஜ்ஜ்வலமான. சுடர் - ப்ரபையையுடைத்தாய். சோதி - தேஜோமயமாய். உயரத்து - "விஶ்வத꞉ப்ருஷ்டேஷு ஸர்வத꞉ப்ருஷ்டேஷு" (விஸ்வதஃப்ருஷ்ட்டேஷு ஸர்வதஃப்ருஷ்ட்டேஷு) என்று சர்வோத்தரமான பரமபதத்திலே. ஒருத்தா - அத்விதீயனா யிருக்குமவனே. என்-என்னுடைய. உள்ளம் - அந்தஃகரணமானது. உன்னை - நிரதிசயப்ராப்யபூதனானவுன்னை. உகந்து - அத்யந்தப்ரேமவிசிஷ்டமாய்க்கொண்டு. உள்ளும் - அகவாயிலேயநுபவியாநின்றது. ........................................................................*

## ஈடு - ஆறும்பாட்டு.

காணவாசைப்பட்டவளவிலே அவன் தம்முடைய திருவுள்ளத்திலேபுகுந்தருள, தம்முடையநெஞ்சுகந்தநுபவிக்கிறபடியை யருளிச்செய்கிறார்.

(கருத்தேயுன்னைக்காணக்கருதி) எனக்குமிடுக்கான வுன்னைக்காண வாசைப்பட்டவளவிலே முகங்காட்டினாய், இவ்விஷயத்தை லபிக்கைக்கு ருசியேயமையுமென்கை. "கண்ணேயுன்னைக்காணக்கருதி" என்றார் கீழ்; (கருத்தேயுன்னைக்காணக்கருதி) என்றாரிங்கே. அநுபபத்தியைக்கொண்டு அர்த்தாபத்தியாலே கல்பித்தல், அநுமாநத்தாலே அதீந்த்ரியமென்றறிதல்செய்யும் வஸ்துவை சாக்ஷாத்கரிக்கவேணுமென்று மநோரதிக்கிறார். இவர்க்குக் கண்ணுங்கருத்து மவனாயிற்று. (என்னெஞ்சத்திருத்தாகவிருத்தினேன்) * மறுகல்செய்தநெஞ்சிலே, * மறுகலிலீசனை பரமபதத்திலேயிருக்குமாபோலேயிருத்தினேன். "இவர்பக்கலிசைவுபெற்றிலோம்" என்றிருக்கிறவன் இத்தனை யிசைவுபெற்றால் பின்னைத்தள்ளிக்கதவடைத்தாலும் போகானிறே. [யதீஹ ஸராதோநேகாஸ்த்வயாஸார்த்தமநிந்திதே । இஹவத்ஸ்யாமி ஸௌமித்ரே ஸார்த்தமேதேநபக்ஷிணா] ஐயர் கண்வட்டத்திலே வர்த்திக்கவேணுமென்று நினைத்திருந்தோம், நடுவிலாய்ச்சிக்கு ப்ரியஞ்செய்யவேண்டுகையாலே யதுசெய்யப்பெற்றிலோம், இனி இவர் சிறகின்கீழேயாகிலும் வர்த்திக்கப்பாராநின்றோ மென்றாரிறே. அன்றிக்கே, (இருத்தாக) மித்ரபாவமேகிடீ ரொன்பக்கலுள்ளதென்னுதல்.

(தேவர்கட்கெல்லாம்விருத்தா) "இனியவ்வருகில்லை" என்னும்படி யுயர்ந்தவர்களுக்கு மவ்வருகானவனே. தலைமகனையும் தலைமகளையும் "கிழவனும்கிழத்தியும்" என்று தமிழர் சொல்லக்கடவர்களிறே. அவளையும் "மலர்க்கிழத்தி" என்றார்களிறே. (விளங்குமித்யாதி) "அத யதஃபரோ திவோஜ்யோதிர்த்தீப்யதே" (அதயதத:பரோ திவோஜ்யோதிர்த்திப்யதே) என்கிறபடியே, எப்போது மொக்கவிளங்காநிற்பதாய், நிரவதிகதேஜோரூபமா யிருக்கிற பரமபதத்திலே யெழுந்தருளியிருக்கிற அத்விதீயனே. ப்ரகாரத்திலேயிறே நாநாத்வமுள்ளது; ப்ரகாரியொருவனேயிறே. (உன்னையித்யாதி) சடக்கென முகங்காட்டின வுன்னை, கண்டுகலங்கின வென்னெஞ்ச முகந்தே யநுபவியாநின்றது. (தேவர்கட்கெல்லாம்விருத்தா, விளங்குஞ்சுடர்ச்சோதி யுயரத்தொருத்தா) என்று சொல்லுகிற விவ்விசேஷணங்களுக்குக் கருத்து - மேலானார்க்கும்மேலாய் பரமபதத்திலே யெழுந்தருளியிருந்து அவர்களை யநுபவிக்குமாபோலே, தன்னை யநுபவிப்பிக்க வநுபவித்த வென்னெஞ்சம் ப்ரீதமாகாநின்றதென்கை..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. ( கருத்தேயித்யாதி. ) "என்னெஞ்சத்திருத்தாகவிருத்தினேன் - உன்னையுள்ளுமென்னுள்ளமுகந்து" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (காணவாசைப்பட்டவித்யாதி.)

கருத்து - மிடுக்கு. "கருதி" என்றது - முகங்காட்டினதுக்கு முபலக்ஷணமாதல்; "இருத்தாகவிருத்தினேன்" என்றத்தைக்கடாக்ஷித்து (முகங்காட்டினாய்) என்கிறாராதல். "ஆசைப்பட்டவளவிலே முகங்காட்டினாய்" என்றத்தால் பலிதம் ( இவ்விஷயத்தையித்யாதி. ) அஜ்ஞாநாசக்திகளை முன்னிட்டுப் பெறவிருக்கிறவெனக்கு, அவனுடைய ஜ்ஞாநசக்திகளே பேற்றுக்கு பர்யாப்தமென்னுமிடந்தோன்றவருளிச்செய்கிறார் ( கண்ணேயித்யாதி வாக்யத்வயத்தாலே ) ( கருத்தேயுன்னைக்காணக்கருதியென்றாரிங்கே ) என்றவநந்தரம், (இவர்க்குக்கண்ணும் கருத்துமவனுயிற்று) என்றந்வயித்துக்கொள்வது. ஜ்ஞாநசக்திகளிரண்டு மவனுயிற்றென்றபடி. த்வங்யர்த்தம் - "கண்ணும்கருத்தும் நன்றாயிருக்கவேணும்" என்று லௌகிகவார்த்தை. "உன்னைக்காணக்கருதி" என்கையாலே - சுதுஷ்ப்ராபனை வீஸ்வரனைக்காணவாசைப்படுகிறுனென்னுமிடந் தோன்றுகிறதென்கிறார் (அநுபபத்தியையித்யாதி) அநுபபத்தியைக்கொண்டர்த்தாபத்தியாலே கல்பித்தலாவது - மஹீமஹீதராதிரூபேண வேறொருவரால் செய்யமுடியாத விசித்ரகார்யங்களைக்கண்டு, "இவையெல்லாமுண்டாக்குகைக்கு யோக்யமான விசித்ரஜ்ஞாநசக்திகளையுடையானொருவன் கர்த்தாவாகவேணும்" என்றேரீஸ்வரனைக்கல்பிக்கை. "ஃஅநுபபத்ய மானார்த்த தர்ஸநாத்ததுபபாதகபூதார்த்தாந்தர கல்பநம் - அர்த்தாபத்தி:" ( அநுபபத்யமாநார்த்ததர்ஸநாத்ததுபபாதகபூதார்த்தாந்தரகல்பநம் - அர்த்தாபத்தி: ) இத்யர்த்தாபத்திலக்ஷணம். அர்த்தாபத்திவாதீ - ப்ராபாகரன். அநுமாநத்தாலே யதீந்த்ரியனென்றறிகையாவது - யுக்தியாலே இந்த்ரியங்களுக்கப்பாற்பட்டிருப்பானொருவன் கர்த்தாவாகவேணுமென்றறிகை. மஹீமஹீதராதி கிஷ்ட்டகார்யத்வாநுமாநத்தாலே தந்நிர்மாணாநுகுணவிசித்ரஜ்ஞாநசக்திகனாய் நிரவயவனானவீஸ்வரனை காரணத்வேநகல்பிக்குமவன் - தார்க்கிகன்.

"இருத்தாக" என்றதுக்கு - ஸ்த்தாவரமாகவென்று விவக்ஷித்தர்த்தம் ( மறுகலித்யாதி. ) சர்வாதிகன், பரமபதத்திலிருக்குமாபோலே யிவர்திருவுள்ளத்திலே யிருக்கக்கூடுமோவென்ன ( இவர்பக்கலித்யாதி. சர்வாதிக னிப்படி சுலபனானவிடமுண்டோவென்ன ( யதீஹேத்யாதி ) "[Grantha] ॥ [Grantha]" ( யதிஹாஸ ரதோநேகாஸ்த்வயாஸார்த்தமநிந்திதே । லக்ஷ்மணேநசவத்ஸ்யாமிநமாம்ஸோக:ப்ரதக்ஷ்யதி ) இதி சித்ரகூடே ஸீதாம்ப்ரதிராம:. "[Grantha] । [Grantha]" ( இதம்புண்யமிதம்மேத்யமிதம்பஹுமிருகத்விஜம் । இஹவத்ஸ்யாமிஸௌமித்ரேஸார்த்தமேதேநபக்ஷிணா ) இதி பஞ்சவட்யாம் ராம:. அண்டஜேநவென்னுதே, "பக்ஷிணா" என்றதுக்குபாவம் ( ஜயரித்யாதி. ) "இருத்தாக" என்றதுக்கு - இருக்கவேணுமென்கிற நினைவுமாத்ரத்தாலேயென்றர்த்தாந்தரம் ( மித்ரபாவமேயித்யாதி. )

விருத்தா - வ்ருத்தா என்றபடி. "விருத்தன்" என்று - ப்ரதாநனைச்சொல்லுமோவென்ன ( தலைமகனையுமித்யாதி. ) தலைமகனை "கிழத்தி" என்றவிடமுண்

டோவென்ன (அவனையுமித்யாதி.) கிழத்தி - கிழவி. "பூதலக்கிழத்தி" என்னவும்கடவதிறே.

"அத பர: தியோ" (அதயததபர) இத்யாதி சாந்தோக்யே. "அத:- திவ: - பர: - யத் - ஜ்யோதிர்தீப்யதே" (அத: - திவ: - பர: - யத் - ஜ்யோதிர்தீப்யதே) என்றந்வயம். பர: - பரஸ்தாத் என்றபடி. இந்த்ரப்ரஹ்மலோகாதிகளுக்கெல்லாம் மேலாயிருக்கிற வைகுண்டரூபமான யாதொருஜ்யோதிஸ்ஸூவிளங்காநின்றது என்றிந்த ஶ்ருதிக் கிங்கிப்படி அர்த்தம் விவக்ஷிதம். பாஷ்யத்திலே, ஜ்யோதிஶ்ஶப்தநிர்த்திஷ்டம் - பரம்ப்ரஹ்மமென்றர்த்தம். "விளங்கும்" என்றவர்த்தமாநார்த்தம் (எப்போதுமொக்கவென்றது.) "சுடர்ச்சோதி" என்று - மீமிசைச்சொல்லாய், (நிரவதிகதேஜோரூபமாய்) என்கிறது. ஒருவனேவுள்ளது நித்யசூரிகளில்லையோவென்ன (ப்ரகாரத்திலேயித்யாதி.)

என்னுள்ளம் - உன்னை - உகந்தே - உள்ளுமென்றந்வயம்.....................*

---

# ஏழாம்பாட்டு.

உகந்தேயுன்னையுள்ளுமென்னுள்ளத்தகம்பா
லகந்தானமர்ந்தேயிடங்கொண்டவமலா
மிகுந்தானவன்மார்வகலமிருகூறு
நகந்தாய்நரசிங்கமதாயவுருவே.

## ஆறாயிரப்படி.

(உகந்தே) என்னுள்ளேபுகுந்தருளின வுன்னழகையும் செயலையு மென்னெஞ்சுகந்துகொண் டநுஸந்திக்க, இதுகாரணமாக நீமிகவும் ப்ரீதனாய், உன்னைக்காணப்பெறாமையாலே கலங்கினவென்னெஞ்சு தெளியும்படி யென்னெஞ்சை யெற்றைக்கு மிடமாகக்கொண்டருளினா யென்கிறார்.....................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஹ்ருத்யனாய்க்கொண் டென்னெஞ்சிலே யிருந்து விரோதிநிரஸநசீலனான வுன்னை யென்னகவாயுகந்தநுபவியாநின்றதென்கிறார்.

அகந்தான் - அகவாயிலே. அமர்ந்து - பொருந்தி. இடங்கொண்ட - இடங்கொண்டு. அதுதானே ப்ரயோஜநமாகவிருந்த, அமலா - உஜ்ஜ்வலஸ்வபாவனாய். ப்ரபலமான தர்மாநத்தை யழித்திருந்தமைக்கு சூசகமென்னலாம்படி, மிகும்-வரபலபுஜபலங்களாலேமிக்க. தானவன்-அசுரனானஹிரண்யனுடைய. மார்வு-மார்பத்திலே. அகலம்-பெரியவிடத்தை. இருகூறு-இருகூறம்படியாக. நகம்-நகத்தை. தா - தாவும்படிபண்ணின. நரசிங்கமதாய-நரஸிம்ஹமான. உருவே - ரூபத்தையுடையவனே. என்-என். உள்ளத்து-உள்ளத்தின். அகம்பால்-அகவாயானது. உன்னை - உன்னை. உகந்தே-உகந்தே. உள்ளும்-அநுபவியாநின்றது ..............................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

தூணிலேதோற்றி ப்ரஹ்லாதனுடையவார்த்தியைத்தீர்த்தாப்போலே தம்மார்த்தியைத்தீர்த்தபடியை யநுசந்தித்தேத்துகிறார்.

(உகந்தேயுன்னையுள்ளும்) பிரிந்து க்லேசத்தோடே தலைக்கட்டுமுகப்பன்றிக்கே, ஏகரூபமாக வுன்னையநுபவிக்கும்படி.. (என்னுள்ளத்து) * எண்ணேகொண்ட சிந்தையுடைத்தான வென்னுள்ளத்து. (அகம்பாலகந்தான்) உள்ளுக்குமுள்ளே. "உள்ளுளாவி" என்னும்படியே கமர்பிளந்தவிடமெங்கும் மறுநனையும்படி. (அமர்ந்தே) தன்பேறாக வத்யபிநிவேசத்தைப்பண்ணி. (இடங்கொண்ட) அவகாசமுள்ள விடமெங்கும் தானேயாம்படிநிறைந்த. (அமலா) இவ்விருப்புக்கவ்வருகொருப்ரயோஜநத்தைக்கணிசித்தன்றிக்கே, ஒருஹேதுவைப்பற்றியு மன்றியேயிருக்கை. "எண்ணேகொண்டசிந்தையதாய்" என்றத்தை சாதநமாக நினைத்திருக்கிறிலர். (மிகுந்தானவன்) ப்ராதிகூல்யத்திலோரளவில் நில்லாததாநவன். தன்னையில்லைசெய்கையன்றிக்கே, தன்னுயிர்நிலையிலே நலிந்தவன்; "ஜ்ஞா நீக்வாமெதவ" (ஜ்ஞாநீத்வாத்மைவ) என்னக்கடவதிறே. (மார்வகலமிருகூறுநகந்தாய்) அகன்றமார்வானது இரண்டுகூறாம்படி பண்ணவல்ல நகத்தையுடையவனே. நகத்தாயென்கிற வல்லொற்றை மெல்லொற்றாக்கிக்கிடக்கிறது. (நரசிங்கமதாயவுருவே) "ஸைகரூபரூபாய" (ஸைகரூபரூபாய) என்கிற விக்ரஹத்தையே! இப்படிகொள்வது; இரண்டுவடிவைக்கொள்ளுவதே!

இத்தால்சொல்லிற்றாயிற்றென்னென்னில்; ஆஶ்ரிதருடைய ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலேவந்து தோற்றுமவனுகையாலே, தூணிலேதோற்றினாப்போலேவந்துதோற்றி, ஹ்ருதயாவகாசமுள்ளவிடமெங்கும் புகுந்து, கமர்பிளந்தவிடமெங்கும் நீர்பாய்ச்சுமாபோலே, நிரம்பவென்னை யநுபவிப்பித்தானென்கிறார் ...........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (உகந்தேயித்யாதி) "இருகூறுநகந்தாய் நரசிங்கமதாயவுருவே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (தூணிலேயித்யாதி.)

ஏவகாரார்த்தம் (பிரிந்தித்யாதி) விவரணம் (உள்ளுளாவியித்யாதி) "அமலா" என்றதுக்குபாவம் (இவ்விருப்புக்கித்யாதி) ஸ்வயம்ப்ரயோஜநமாகவும், நிர்ஹேதுகமாகவுமிருக்கை - அமலத்வமாவதென்றபடி. "ஒருஹேதுவைப்பற்றியன்றிக்கே" என்கிறதென், "எண்ணேகொண்டசிந்தையதாய்" என்றது சாதநமன்றோவென்ன (எண்ணேகொண்டவித்யாதி.)

மிகுதியெத்தாலேயென்ன (ப்ராதிகூல்யத்திலித்யாதி) ஏதத்விவரணம் (தன்னையித்யாதி) தானவன் - தாநவன். ப்ரஹ்லாதனுயிர்நிலையோவென்ன (ஜ்ஞாநீத்யாதி) "உதாராஸ்ஸர்வஏவைதே ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" (உதாரா

ஸ்ஸர்வஜைவதே ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்) இதிகீதாயாம். நகத்தாயென்றுலன்றே - நகத்தையுடையவனென்று காட்டுமென்ன (நகத்தாயென்கிறவித்யாதி.)

ஹார்த்தபாவம் (ஸதைகருபேத்யாதி) " ஸதைகரூபரூபாயவிஷ்ணவேஸர்வஜிஷ்ணவே " (ஸதைகரூபரூபாயவிஷ்ணவேஸர்வஜிஷ்ணவே) இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே. "நரசிங்கம்" என்றதுக்குபாவம் (இரண்டித்யாதி.)

பாட்டால்பலித்தபாவம் (இத்தாலித்யாதி) இத்தாலென்றது - இப்பாட்டாலென்றபடி.

மிகுந்தானவனென்றுதொடங்கி, உருவே - உகந்தேயுன்னையுள்ளும்படி யென்னுள்ளத் தகம்பாலென்றுதொடங்கி, ஏத்துகிறுரித்யர்வய8 ......................*

# எட்டாம்பாட்டு.

உருவாகியவாறுசமயங்கட்கெல்லாம்
பொருவாகிநின்றானவனெல்லாப்பொருட்கு
மருவாகியவாதியைத்தேவர்கட்கெல்லாங்
கருவாகியகண்ணனைக்கண்டுகொண்டேனே.

## ஆறாயிரப்படி.

(உருவாகிய) வேதபாஹ்யமான ஷட்சமயங்களில் நான்புகாதபடி பரிஹரித்து, சர்வாத்மபூதனான தன்னை யெனக்குக்காட்டியருளினவனை நான்காணவும்பெற்றேனென்கிறுர் ...............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வாந்தராத்மாவாய், சர்வகாரணபூதனாய், சர்வசுலபனான வுன்னைச்காணப்பெற்றேனென்கிறுர்.

உருவாகிய - ஆபாதப்ரதீதியிலொன்றுபோலே யிருக்கக்கடவதான. ஆறுசமயங்கட்கெல்லாம் - சார்வாக பௌத்த க்ஷபண வைசேஷிக சாங்க்ய பாசுபதரூபமான பாஹ்யசமயங்களாறுக்கும். பொருவாகி - "அறுவகைச்சமயமு மறிவருநிலையினை" என்கிறபடியே ப்ரதிபடனாய்க்கொண்டு. நின்றானவன்-அப்ரகம்ப்யனாயிருக்குமவனாய். எல்லாப்பொருட்கும்-சமஸ்தபதார்த்தங்களுக்கும். அருவாகிய-அந்தராத்மாவாய்க்கொண்டு. ஆதியை-ப்ரதானனாய். தேவர்கட்கெல்லாம் - ப்ரஹ்மாதிதேவர்களுக்கடங்க. கருவாகிய-காரணபூதனாய். கண்ணனை-ஆஸ்ரிதரக்ஷணார்த்தமாக க்ருஷ்ணனாயவதரித்தவனை. கண்டுகொண்டேன்-கண்டநுபவிக்கப்பெற்றேன்.

பொரு - எதிர்................................................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

சகலபதார்த்தங்களுக்கு மந்தராத்மாவாய் ப்ரஹ்மாதிகளுக்குக் காரணபூதனானவனைக் காணப்பெற்றேனென்றினியராகிறுர்.

(உருவாகியவாறுசமயங்கட்கெல்லாம்) ஆபாதப்ரதீதியிலொன்று போலேயிருக்க, சிலவற்றைவிதிப்பது, சிலவற்றைநிஷேதிப்பது, நிஷித்தபரிஹாரத்தைச்சொல்லுவதாய்க்கொண் டுபதேசிப்பாரும் கேட்பாருமாய்ப்போருகிற பாஹ்யசமயங்களெல்லாவற்றாலும். (பொருவாகிநின்றானவன்) பொருவென்று - தடை. அவற்றால் தன்னையில்லை செய்யவொண்ணாதபடி அப்ரதிஹதனாய்நின்றான். (எல்லாப்பொருட்கு மருவாகிய வாதியை) சகலபதார்த்தங்களுக்கு மந்தராத்மாவாய், நியாமகத்வத்தாலே ப்ரதாநனுமானவனை. (தேவர்கட்கெல்லாம்கருவாகிய) ப்ரஹ்மாதி தேவர்களுக்கெல்லாம் காரணபூதனாயுள்ளவனை. (கண்ணனை) கார்யங்களிலே யொன்றுக்குத்தான் கார்யமானவனை. (கண்டுகொண்டேனே) அவதாரத்துக்குப் பிற்பாட்டராயிருக்க, (கண்டுகொண்டேன்) என்கிறாரிறே; ப்ரேமார்த்ரசித்தர்க்கென்றுங்காணலாம், அவதாரசமகாலத்திலுங்காணவொண்ணாது சிசுபாலாதிகளுக்கு.

பாஹ்யசமயங்களா லவிசால்யனாய், சர்வாந்தராத்மாவாய்க்கொண்டு சர்வநியந்தாவாய், ப்ரஹ்மாதிகளுக்கு முத்பாதகனாயிருந்துவைத்து, ஆஶ்ரிதசுலபனானவனைக் காணப்பெற்றேனென்கிறார் ....................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (உருவாகியவித்யாதி) "எல்லாப்பொருட்குமருவாகிய - தேவர்கட்கெல்லாம் கருவாகியகண்ணனைக்கண்டுகொண்டேன்" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (சகலபதார்த்தங்களுக்குமித்யாதி.)

"உருவாகியவாறுசமயங்கட்கெல்லாம் -" அழகியதாயிருக்கிற வாறுசமயங்களெல்லாவற்றுக்குமென்று சப்தார்த்தம். அபார்த்தங்களைச்சொல்லுகிற சமயங்களுக்கழகேதென்ன (ஆபாதேத்யாதி) உருவாகிய - ஆபாதப்ரதீதியிலொன்றுபோலே யிருக்கிறவென்று சப்தார்த்தமாகவுமாம். பொருவாகிநின்றான் - தடையாய்நின்றான். ப்ரதிபடனென்றபடி. "தடை" என்றத்தால்பாவம் (அவற்றாலித்யாதி) அப்ரதிஹதனாய்நிற்கையாவது - த்ருடப்ரமாணசித்தனாய்நிற்கை.

மேலே "கருவாகிய" என்று - காரணத்வஞ்சொல்லுகையாலே, "ஆதியை" என்று - ப்ரதாநனைச்சொல்லுகிறது. கருவென்று - கர்ப்பமாய், அத்தாலே-காரணத்வஞ்சொல்லுகிறது. காரணத்வமேயாகில் சௌலப்யமில்லையோவென்ன (கார்யங்களிலேயித்யாதி) ஒன்றுக்கு - வசுதேவர்க்கு. (கண்டுகொண்டேனென்கிறாரிறே) என்றவநந்தரம், இதுக்குக்கருத்தென்னென்னில் என்றுகூட்டுவது.

பாட்டைநிகமிக்கிறார் (பாஹ்யேத்யாதி) ..........................................*

---

## ஒன்பதாம்பாட்டு.

கண்டுகொண்டென்கண்ணிணையாரக்களித்துப்
பண்டைவினையாயினபற்றோட்டறுத்துத்
தொண்டர்க்கமுதுண்ணச்சொன்மாலைகள்சொன்னே
னண்டத்தமரர்பெருமானடியேனே.

## ஆறுயிரப்படி.

(கண்டுகொண்டு) இப்படி கண்ணாரக்கண்டுகொண்டு அவனையே த்தவும் பெற்றேனென்கிறார்.........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்னுடைய ஸ்வரூபாநுரூபமாகக் கண்டநுபவித்து, விரோதியு ங்கழிந்து, ப்ராப்யபூதனானவன் விஷயத்திலே, பாகவதர்க்கு போக்யமாம்படி வாசிககிஞ்சித்காரம் பண்ணப்பெற்றேனென்கிறார்.

ஜ்ஞாநப்ரேமாத்மகமான, என் - என். கண் - கண்கள். இணை - இரண்டும். ஆர - வயிறுநிறையும்படி. கண்டுகொண்டு - கண்டுகொண்டு. களித்து - களித்து. இந்த ஸ்வரூபஜ்ஞாநமடியாக, பண்டை - அநாதிசித்தமான. வினையாயின - அஹங்காரமமகாராதி சமஸ்தவிரோதிகளையும். பற்றோடு - ஸவாசநமாக. அறுத்து-போக்கி. அண்டத்து - பரமபதத்திலே. அமரர்பெருமான் - * அயர்வறுமமரர்களதிபதியான ப்ராப்யபூதனுக்கு. அடியேன் - நித்யகிங்கரனான நான். தொண்டர்க்கு - அவனடியார்க்கு. அமுதுண்ண - உகந்தநுபவிக்கலாம்படி. சொன்மாலைகள் - சப்தசந்தர்ப்பரூபமான வாசிககைங்கர்யத்தை. சொன்னேன் - பண்ணினேன்.

இப்பாட்டில் - மந்த்ரத்தில் ப்ரதமபதார்த்தமான ஸ்வரூபஜ்ஞாநத்தையும், மத்யமபதார்த்தமான விரோதிநிவ்ருத்தியையும், சரமபதார்த்தமான கைங்கர்ய ப்ரதிசம்பந்தித்வத்தையும், கைங்கர்யவ்ருத்திவிசேஷத்தையும், மந்த்ரதாத்பர்யமான ததீயசேஷத்வத்தையுஞ் சொல்லிற்றாயிற்று.........................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

தன்னையநுபவிக்கப்பெற்று, அதுக்குமேலே, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யமாம்படி திருவாய்மொழி பாடவும்பெற்றேனென்கிறார்.

(கண்டுகொண்டு) "நானழைப்பன்" என்ற விடாயெல்லாங்கெடக் காணப்பெற்று. (என்கண்ணிணையார) "காணக்கருதுமென்கண்ணே" என்ற கண்கள்விடாய்கெட. (கண்ணிணையார - கண்டுகொண்டு) கலியர் "வயிறாரவுண்டு" என்னுமாபோலே. (களித்து) மறுகின நெஞ்சுகளித்து. (பண்டைவினையாயின பற்றோடறுத்து) இவ்வுகப்புக்கிடைச்சுவரான ப்ராக்தநகர்மங்களை சவாஸநமாகப்போக்கி. (தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்) என்னளவு மன்றிக்கே, வைஷ்ணவர்களுக்கு முபகாரகனாகப்பெற்றேன். "நானுமுண்டு, என்பரிகரமும் ஜீவித்து, என்பந்துக்களுக்கும் விருந்திடவல்லேனானேன்" என்பாரைப்போலே. (சொன்மாலைகள்சொன்னேன்) ததீயசேஷத்வபர்யந்தமான பேற்றைப்பெற்றேன். பெற்றபேற்றின் கனமிருந்தபடியாலே, இது தான்றோன்றியான கைப்பற்றடியாகவந்ததொன்றல்ல (அண்டத்தமரர்பெருமானடியேனே) சர்வேஶ்வரனாலே விஷயீக்ருதனானேன்.......*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (கண்டுகொண்டித்யாதி.) "கண்டுகொண்டென்கண்ணிணையாரக்களித்து - தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்சொன்னேன்" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (தன்னையித்யாதி.)

கண்டென்னாதே, "கண்டுகொண்டு" என்றதுக்குவாஸனை (நானழைப்பனித்யாதி.) "ஆர" என்றதுக்கர்த்தம் (கலியரித்யாதி.) கலியர் - பசியர். ஆர - பூர்ணமாக.

பண்டை - ப்ராக்தநமான. பற்ருடு - வாஸனையோடு. இடைச்சுவர் - ப்ரதிபந்தகம்.

நானுமுண்டென்றது - "கண்டுகொண்டு" என்றத்தைப்பற்ற. "என்கண்ணிணையாரக்களித்து" என்றத்தைப்பற்ற (என்பரிகரமுமித்யாதி.) "தொண்டர்க்கமுதுண்ண" என்றத்தைப்பற்ற (என்பந்துக்களுக்குமித்யாதி.) பலிதார்த்தம் (ததீயசேஷத்வேத்யாதி.) அதாவது - வாசிககைங்கர்யம் பண்ணப் பெற்றேனென்றுகருத்து.

மேலுக்கவதாரிகை (பெற்றபேற்றினித்யாதி.) தான்ருன்றியான கைப்பற்று - ஸ்வயத்நமூலமான சாதநம்.

அண்டத்தமரர்பெருமானடியேன் - களிக்கும்படி - என்கண்ணிணையார - கண்டுகொண்டு-பண்டையென்றுதொடங்கி, சொன்மாலைகள்சொன்னேனித்யந்வயஃ*

---

# பத்தாம்பாட்டு.

அடியானிவனென்றெனக்காரருள்செய்யு
நெடியானைநிறைபுகழஞ்சிறைப்புள்ளின்
கொடியானைக்குன்ருமலுலகமளந்த
வடியானையடைந்தடியேனுய்ந்தவாறே.

## ஆருயிரப்படி.

(அடியானிவன்) பெரியதிருவடி, தன்றிருவடிகளில்செய்யும்வ்ருத்திகளெல்லாவற்றையும், என்னையிட்டு, நிர்ஹேதுகமாகச்செய்வித்துக்கொண்டருளின னொருவனையாஸ்ரயித்து நானுய்யும்படியே! என்கிருர்.*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இந்த வநுபவத்துக்கடியான நிருபாதிகசம்பந்தத்தை யுடையவனைக்கிட்டி நானுஜ்ஜீவித்த ப்ரகார மென்னென்று ஹ்ருஷ்டராகிருர்.

இவன் - இவன். அடியான் - நமக்கு ஸ்வதஸ்ஸேஷபூதன். என்று - என்று திருவுள்ளத்திலேகொண்டு. எனக்கு - எனக்கு. ஆர் - பரிபூர்ணமான. அருள் - க்ருபையை. செய்யும் - பண்ணுநிற்கச்செய்தே. நெடியானை-ஒன்றுஞ்செய்யாதபடி மேன்மேலெனப் பாரிப்பையுடைய பெரியவனாய். நிறை-இந்த்ரக்ஷணத்துக் கநுரூபமா

ன. புகழ் - சீலசௌலப்ய ஜ்ஞாநசக்திப்ரமுகமான ப்ரதையை யுடையனாய். அம்-விலக்ஷணமான். சிறை - சிறகையுடைய. புள்ளின் - பெரியதிருவடியை. கொடியானை - ரக்ஷணப்ரதைக்குக் கொடியாகவுடையனாய். குன்றாமல் - அந்யாபிமாநமாகிற குறைவுவாராமல். உலகம் - லோகத்தை. அளந்த - அளந்துகொண்ட. அடியானை-நிருபாதிகசம்பந்தப்ரகாசகமான திருவடிகளையுடையவனை. அடைந்து - கிட்டி. அடியேன் - ப்ரகாசிதமான சேஷத்வஸ்வரூபத்தையுடைய நான். உய்ந்தவாறே - உஜ்ஜீவிக்கப்பெற்றபடியே. ...........................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

இப்படி யவனைப்பெற்று க்ருதார்த்தனானேனென்கிறார்.

(அடியானிவனென்று) "மேல் பண்ணப்புகுகிற வௌதார்யம் ப்ராப்தம்" என்றுசொல்லுகைக்காக, "அடியான்" என்றொருபேரையிட்டாயிற் றுபகரித்தது. (எனக்காரருள்செய்யும்நெடியானை) கொள்ளுகிறவென்னளவன்றிக்கே, தன்னளவிலே யுபகரித்தசர்வேஸ்வரனை. * அருள்பெறுவாரடியாரிறே. புத்ரர்களுக்கு அம்ஸமேயிறேயுள்ளது; எல்லாவற்றிலும் கூறுண்டாயிருக்குமிறே யடியார்க்கு. பிள்ளை யகளங்கப்ரஹ்மராயர், "பட்டரை சமாதாநம்பண்ணவேணும்" என்று, "இருகைமதவாரணம்" என்கிறவனை வரக்காட்டினராய், "அவனைத் திருவுள்ளத்திலே விஷயீகரித்திருப்பர்" என்னுமத்தைப்பற்ற; அவனும்வந்து சிலவார்த்தைகளை விண்ணப்பஞ்செய்து, திருவுள்ளமும் ப்ரசந்நமாயிருக்கிறவளவிலே; "இவனுடைய வைஷ்ணவத்வமிருக்கும்படி திருவுள்ளம்பற்றியிருக்கையுண்டே" என்றார்களாய்; "சொல்லவேணுமோ, கர்ப்பதாசர்களன்றோ" என்றது தொடக்கமாக, இப்பாட்டை யருளிச்செய்தார். (ஆரருள்செய்யும்) பெறுகிற வென்னளவிலேயன்றிக்கே, தருகிற தன்னளவிலே தந்தான். தனக்களவுதானென்னென்ன (நெடியானை) "சர்வேஸ்வரன்" என்னுமித்தனை. (நிறையித்யாதி) இதுதான் நானின்றிருந்துபபாதிக்கவேண்டியிருந்ததோ?. கட்டிக்கொண்டிருக்கிறகொடியிலே தெரியாதோ?. சௌர்யவீர்யாதி குணப்ரதையையுடையனாய் நிரந்தரபகவதநுபவத்தாலே தர்ஸநீயமான வேஷத்தையுடையனா யிருக்கிற பெரிய திருவடியை த்வஜமாகவுடையவனை. பெரியதிருவடியை விஷயீகரித்தாப்போலே யென்னை விஷயீகரித்தவனை. இப்படி விஷயீகரிக்கைக்கு இத்தலையிலென்ன நன்மையுண்டென்னில் (குன்றாமலுலகமளந்தவடியானை;)-குணகுண்நிரூபணம்பண்ணாதே திருவுலகளந்தருளினாப்போலே, நிர்ஹேதுகமாகவென்கிறார். ஓரடியுங்குறையாமே பூமிப்பரப்பை யளந்துகொண்ட திருவடிகளையுடையவனை. தன்பெருமையையும், சௌலப்யத்தையும் என்னை யநுபவிப்பித்தான். (அடைந்தடியேனுய்ந்தவாறே) சேஷத்வமே ஹேதுவாக வுஜ்ஜீவித்தபடியென்!, சேஷத்வ ஜ்ஞாநத்துக் கித்தனை ப்ரயோஜநமுண்டோ!..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (அடியானித்யாதி.) "அடைந்தடியேனுய்ந்தவாறே" என்றத்தைப்பற்றவவதாரிகை (இப்படியித்யாதி.)

அருள்செய்யுமென்னாதே, "அடியானிவன்" என்று விசேஷித்ததுக்குபாவம் (மேல்பண்ணவித்யாதி) அருள்செய்கைக்கு ஹேது "அடியான்" என்கிறவிதென்றபடி. "ஆரருள்செய்யும்" என்றவநந்தரம், "நெடியான்" என்றதுக்கு பாவம் (கொள்ளுகிறவித்யாதி.) அடியார்க்கருள்செய்கை ப்ராப்தமோவென்ன (அருள் பெறுவாரித்யாதி.) அருள்பெற ப்ராப்தியுள்ளது புத்ரர்களுக்கன்றோவென்ன (புத்ரர்களுக்கித்யாதிவாக்யத்வயம்.) அடியாரிடத்திலே ஈஸ்வராநுக்ரஹ மதிசயித்திருக்குமென்னுமதுக்கு சம்வாதம் (பிள்ளையகளங்கேத்யாதி) ஆழ்வான் ஸ்ரீபாதத்திலே யாஸ்ரயித்த பிள்ளையகளங்கப்ரஹ்மராயர், பட்டரிடத்திலே அபசாரப்பட, அதுநிமித்தமாகக் கோயிலைவிட்டு பட்டர் திருக்கோட்டியூரிலே யெழுந்தருள, "இருகைமதவாரணம்" என்கிறவனை பட்டர்திருவுள்ளத்திலே விஷயீகரித் திருப்பொன்னுமத்தைப்பற்ற சமாதாநம்பண்ணவேணுமென்று அந்தத்திருவெள்ளைக்காரனை வரக்காட்டினுரென்று சிலவத்யாஹரித்துக்கொண் டந்வயித்துக்கொள்வது. இருகைமதவாரணமென்கிறவன் - நம்பெருமாளுக்குப் பரிவனான கைக்கோளன். (இவனுடைய) இத்யாதிவாக்யம் - தடஸ்த்தபாஷணம். (சொல்லவேணுமோவித்யாதி) ப்ட்டர் ஸ்ரீசூக்தி. "கொள்ளுகிற" இத்யாதிவாக்யவிவரணம் (பெறுகிறவித்யாதி.)

இதுதானென்றது - சர்வேஸ்வரத்வந்தானென்றபடி.

மேலுக்கவதாரிகை (இப்படியித்யாதி.) இப்படி விஷயீகரிக்கைக்கென்றது- "ஆரருள்செய்யும்" என்றத்தைப்பற்ற. தாத்பர்யசித்தார்த்தம் (குணகுணேத்யாதி.) சப்தார்த்தம் (ஓரடியுமித்யாதி.) கீழே - "நெடியானை" என்று தொடங்கி "உலகமளந்தவடியானை" என்னுமளவும் - அருளுகைக்கு சேஷமாக யோஜித்து, இங்கே - பரத்வசௌலப்யங்களை யநுபவிப்பித்தானென்று ப்ரத்யேகமாக்கி பாவாந்தரம் (தன்பெருமையையுமித்யாதி.)

கீழே "அடியான்" என்று சொல்லியிருக்க, மீளவும் "அடியேன்" என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (சேஷத்வமேயித்யாதி.) "உய்ந்தவாறே!" என்கிற ஸ்வரத்துக் கர்த்தமாதல், விவரணமாதல் (சேஷத்வஜ்ஞாநத்துக்கித்யாதி.)

க்ரமேணாந்வயః ......................................................................*

---

## பதினொன்றாம்பாட்டு.

ஆறுமதயானையடர்த்தவன்றன்னைச்
சேறார்வயற்றென்குருகூர்ச்சடகோப
னாறேசொன்னவோராயிரத்துளிப்பத்து
மேறேதரும்வானவர்தமின்னுயிர்க்கே.

### ஆறாயிரப்படி,

(ஆறுமதயானை) ப்ரதிகூலநிரஸநம்பண்ணினாப்போலே யென்னுடைய துஃகத்தையெல்லாம்போக்கி யருளினவனைச்சொன்ன விப்பத்தும், வானவர்தம் இன்னுயிர்க்கேறானவனைத் தருமென்கிறார்...................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக இதினுடைய நித்யசூரிபோக்ய த்தையை யருளிச்செய்கிறார்.

ஆறு - ஒருக்காலும்மட்டுப்படாத. மதம்-மதத்தையுடைய. யானை-குவலயா பீடமாகிறவானையை. அடர்த்தவன்றன்னை - நிரசித்தக்ருஷ்ணனைப்பற்ற. சேறு-சே று. ஆர்-மிக்க. வயல்-வயலையுடைத்தான. தென்-அழகிய. குருகூர் - திருநகரிக்குநிர் வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். நூறே-நூறுநூறாக. சொன்ன - சொன்ன. ஓர், ஆயிரத்துள் - ஆயிரத்துள். இப்பத்தும்-இப்பத்தும். வானவர்தம்-நித்யசூரிகளுடை ய. இன்-உகந்த. உயிர்க்கு-நெஞ்சிலேசென்ற. ஏறேதரும்-ஏறுகிற்கும்.

வானவர்தமின்னுயிர்க்கேறான சர்வேஶ்வரனைத்தருமென்னுமாம்.

இது - கலிவிருத்தம்..........................................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழி, தன்போக்யதையாலே நித்யசூரி கள் ஹ்ருதயத்தை நோவுபடுத்துமென்கிறார்.

(ஆறுமதயானையடர்த்தவன்றன்னை) ஒருநாளும் மாறாதமதத்தை யுடைய குவலயாபீடத்தை நிரசித்தவனை. அத்தைநிரசித்தாப்போலே யென்விரோதியைப்போக்கினவனை. (சேறார்வயல்) குவலயாபீடமோதா ன், திருநகரியில் வயலையுழுவது நடுவதாகவொட்டாதேகிடந்தது!. (நூ றேசொன்னவோராயிரம்) கிழிகிழியாகக்கொடுப்பாரைப்போலே, நூறு நூறாகச்சொன்னபடி. பாரதராமாயணாதிகளில் காண்டபர்வாதிபேதம் போலே, தரிப்பார்க்கெளிதாம்படி செய்தாரென்கை. இத்திருவாய்மொ ழி, நித்யசூரிகள் ஹ்ருதயத்தைப்புண்படுத்துமென்னுதல்; நித்யசூரிகளு க்கேறான சர்வேஶ்வரனைத்தருமென்னுதல்..................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (ஆறுமித்யாதி.) "இப்பத்துமேறேதரும்வானவர்தமின்னுயிர்க்கு" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி.) நித்யசூரிகள் ஹ்ருதயத்தை நோவுபடுத்துகைக்கு ஹேது வருளிச்செய்கிறார் (தன்போக்யதையா லேயென்று.)

ஆறுகை - மாறுதல். ஹார்த்தபாவம் (அத்தையித்யாதி.) "யானையடர்த் தவன்றன்னைச்சேறார்வயல்" என்ற பதச்சேர்த்திக்கு பாவம் (குவலயாபீடமோ தானித்யாதி) இது வாக்யாதாவின் ரஸோக்தி. அதாவது - அங்குத்தைக்கொரு தீ ங்குவரில் ஆழ்வாருளராகமாட்டார், ஆழ்வார்க்கொரு தீங்குவரில் திருநகரியிலுள் ளார் சத்தையின்றிக்கே யிருக்கையாலே யவ்வூரில் வயலுழுவாரில்லை, ஆகையாலே, ப்ரதிபக்ஷம்போனவாறே சம்ருத்தமான வயலையுடைய திருநகரியென்கை.

"நூறு" என்கிறதுக்கு பாவம் (கிழியித்யாதி.) கிழி - ஜாளிகை. நூறுநூ றாகச் சொன்னதுக்கு பாவமேதென்ன (பாரதேத்யாதி.) முதல் ஆதிபதத்தாலே பாகவதமும், இரண்டாமாதிபதத்தாலே - ஸ்கந்தமும் சொல்லுகிறது.

"வானவர்தமின்னுயிர்க்கு - ஏறேதரும்" என்றந்வயித்தர்த்தம் (இத்திருவாய்மொழியித்யாதி.) "ஏறு" என்று - ப்ரஹாரமாய், ஈடுபாடு. ஒருவ னொருவன்கையிலே யடிபட்டால் "அவனேறுண்டான்" என்று லோகத்தார்சொல்லக்கடவர்களிறே. த்விதீயார்த்தத்துக்கு, "ஏறு" என்று - வ்ருஷபமாய், நித்யஸூரிகளுக்கு ப்ரதாநனான சர்வேஸ்வரனைச் சொல்லுகிறது. "உயிர்" என்று - நெஞ்சு. இன்னுயிர் - உகந்தநெஞ்சு.

ஆறுமதயானை யித்யாரப்ய, பத்தும் - வானவர்த மின்னுயிர்க்கு - ஏறேதருமித்யந்வய:..........*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(மையார்கருங்கண்ணி.)

லக்ஷ்மீவக்ஷஸ்ஸ்வபாவாத், ஸ்வஜநஸுலபதா, பர்வதோத்தாரணாத்யை:,
துர்ஜ்ஞேயத்வாத்ஸுராதே:, அகிலபதிதயா, நாகிநாம்வ்ருத்தபாவாத், ।
ஸ்வேஷாம்ஹ்ருத்வாஸிதாயா, ஸ்வஜநவஶ்யதயா, தத்ராஸக்திபூம்நா, ஸ்வா
மித்வாச்சைவ ந்யாஜ்ஜமதவதிஹ ஸம்ஶ்ருத்யஹாணீஶடாரி:॥ (கரு)

(லக்ஷ்மீவக்ஷஸ்த்வபாவாத்) [க] கமலமலர்மேற்செய்யாள் திருமார்பினிற்சேர்திருமாலே - பெரியபிராட்டியாரைத் திருமார்பிலேயுடையனாகையாலும்; (ஸ்வஜநஸுலபதா [உ] கண்ணேயுன்னை - நண்ணுதொழியேன் - சக்ஷுஸ்ஸுவஶம்வதமானுப்போலே, ஆஸ்ரிதருக்கு சுலபனாகையாலும்; (பர்வதோத்தாரணாத்யை:) [ங] மறைக்கன்றுகுன்றமெடுத் தாநிரைகாத்தாய் - இந்த்ரன் பசிக்கோபத்தாலேவர்ஷிக்க, மலையையெடுத்துப் பசுக்களையு மிடையரையும் ரக்ஷிக்கையாலும்; (துர்ஜ்ஞேயத்வாத்ஸுராதே:) [ச] வானவர்தானவர்க்கென்று மறிவதரிய - தேவர்களுக்கு மசுரர்களுக்கு மென்றுமொக்க வறியவரியனாயிருக்கையாலும்; (அகிலபதிதயா) [ரு] அரியாயவம்மானை யித்யாதி - சர்வஸ்வாமியாகையாலும்; (நாகிநாம்வ்ருத்தபாவாத்) [சு] தேவர்கட்கெல்லாம்விருத்தா - * அயர்வறுமமரர்களுக்குத்தலைவனாயிருக்கையாலும்; (ஸ்வேஷாம்ஹ்ருத்வாஸிதாயா:) [எ] உள்ளுமென்னுள்ளத்தகம்பாலகந்தானமர்ந்தேயிடங்கொண்ட - ஆஸ்ரிதருடைய ஹ்ருதயத்திலே வஸிக்கையாலும்; (ஸ்வஜநவஶ்யதயா) [அ] கண்ணனைக்கண்டுகொண்டேனே - அவர்களுக்கு வஶம்வதனாகையாலும்; (தத்ராஸக்திபூம்நா) [கூ] கண்டுகொண்டித்யாதி, [க0] அடியானிவனித்யாதி - அதிலுமவர்களிடத்தி லத்யந்தமாஸக்தியாலே யவர்களபேக்ஷித்தபடியே க்ருபைபண்ணி க்ருதார்த்தராக்கவல்லனாகையாலும்; எம்பெருமான் உடையவனாகையாலும், லோகமெல்லாமுடைமையாகையாலும்; இத்தை ஸ்வஸ்வாமிபாவஸம்பந்தத்தாலே ரக்ஷித்தருளுகிறானென்று * மையார்கருங்கண்ணியிலே மாறனருளிச்செய்தாரென்கிறார் ........................ (கரு)

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

மையார்கண்மாமார்பின்மன்னுந்திருமாலைக்
கையாழிசங்குடனேகாணவெண்ணி – மெய்யான
காதலுடன்கூப்பிட்டுக்கண்டுகந்தமாறன்பே
ரோதவுய்யுமேயின்னுயிர். (அச)

(மையார்கண்மா) இதில் – விலக்ஷணவிக்ரஹயுக்தனானவனைக்காண வாசைப்பட்டுக் கூப்பிடுகிறபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; கீழ் – "சீலாதிகனாய், அதுக்கூற்றுவரான பிராட்டியோடே நித்யஸம்யுக்தனாய், இரண்டிடத்திலு மழகுபெறத்தரித்த வாழ்வார்களையுடையனான வெம்பெருமானையநுபவிக்கவேணும்"என்று தாமும் தம்முடைய கரணக்ராமங்களுமாக விடாய்த்துக்கூப்பிட, தூணிலேதோற்றிச் சிறுக்கனுக்குதவினாப்போலே மாநஸமாகத்தோற்றித் தன்குணங்களை யநுபவிப்பிக்க, அத்தையநுபவித்து ஹ்ருஷ்டராகிற * மையார்கருங்கண்ணியிலர்த்தத்தை, "மையார்கண்மாமார்பில்மன்னும்" என்றுதொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

(மையார்கண்மாமார்பில்மன்னுந்திருமாலை) * அஸிதேக்ஷணையானலக்ஷ்மி, வக்ஷஸ்த்தலத்திலே நித்யவாஸம்பண்ணும்படியாய், அத்தாலே ஸ்ரீயஃபதியான சர்வேச்வரனை. (கையாழிசங்குடனேகாணவெண்ணி) அச்சேர்த்தியைக்காத்து ஊட்டவல்லவாழ்வார்களோடே யநுபவிக்கவெண்ணி. இத்தால் – "மையார்கருங்கண்ணி" என்றுதொடங்கி "உன்னைக்காணக்கருதுமென்கண்ணே" என்று முதற்பாட்டைக்கடாக்ஷித்தருளிச்செய்தபடி. "ஸ்ரீவைதேஹீம் லக்ஷ்மணம் ராமம் நேத்ரைரநிமிஷைரிவ," (வைதேஹீம்லக்ஷ்மணம்ராமம்நேத்ரைரநிமிஷைரிவ) "அவஷ்டப்ய ச திஷ்டந்தம் ததர்ச தநுரூர்ஜிதம்" (அவஷ்டப்யசதிஷ்டந்தம் ததர்சதநுரூர்ஜிதம்) என்னும்படியாயிற்றபேக்ஷித்தது. (மெய்யானகாதலுடன்கூப்பிட்டுக்கண்டுகந்த) யதாவத்தான ப்ரேமத்தோடேகூப்பிட்டு, அப்படியேகண்டு ஹ்ருஷ்டரான. அதாவது – "கண்ணேயுன்னைக்காணக்கருதி" என்றுதொடங்கி "நண்ணாதொழியேனென்று நானழைப்பன்" என்றும், "அழைக்கின்றவடிநாயேன்" என்றும், "உகந்தேயுன்னையுள்ளுமென்னுள்ளத்து" என்றுதொடங்கி "நரசிங்கமதாயவுருவே" என்றும், "தேவர்கட்கெல்லாம் கருவாகியகண்ணனைக்கண்டுகொண்டேன்" என்றும், "கண்டுகொண்டு" என்றுதொடங்கி "அண்டத்தமரர்பெருமானடியேனே" என்றும், "உலகமளந்தவடியானை யடைந்தடியேனுய்ந்தவாறே" என்றும், இவற்றாலே அவற்றை வெளியிட்டாரென்கை. (மாறன்பேரோதவுய்யுமே யின்னுயிர்) இப்படி பகவத்விஷயபக்தியையுடைய வாழ்வார்திருநாமத்தை யநுசந்திக்கவே யுஜ்ஜீவிக்கும், விலக்ஷணமானவாத்மவஸ்து ..............................(அச)

ஒன்பதாம்பத்தில் – நாலாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி – அச.—பாட்டு – கஉகூ.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஒன்பதாம்பத்து.

## ஐந்தாந்திருவாய்மொழி.

### இன்னுயிர் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(இன்னுயிர்ச்சேவலும்) இப்படி யெம்பெருமானை ப்ரத்யக்ஷித்தாப்போலே திருவுள்ளத்தாலே விஶதமாகவநுஸந்தித்து, பாஹ்யஸம்ஶ்லேஷத்திலே ப்ரவ்ருத்தராய், அதுகைவாராமையாலே, எம்பெருமானோடேகலந்து பிரிந்தாளொருபிராட்டியைப்போலே யவஸந்நராய், அவளுடையபாசுரத்தாலே தம்முடைய வ்யஸநத்தைப்பேசுகிறார். இப்பிராட்டிதான், எம்பெருமானைப்பிரிந்திருக்கிறஸமயத்திலே சிலகுயில்களுடையகூக்குரல்களைக்கேட்டுத் தனியேசிந்திக்கிறாள். எம்பெருமான் "என்னைமுடிக்கவேண்டும்" என்றுகோலி, முடிக்குமிடத்தில் ஸ்வவிஶ்லேஷத்தாலல்லது முடிக்கவொண்ணாமையாலே, விஶ்லேஷந்தான் ஸம்ஶ்லேஷத்தை யொழியக்கூடாமையாலே, விஶ்லேஷார்த்தமாக ஸம்ஶ்லேஷித்து, பின்னை விஶ்லேஷிப்பதுஞ்செய்து, "இந்தவிஶ்லேஷத்தாலும் முடியாதொழியிலோ" என்னும்சங்கையாலே, "மத்விஶ்லேஷத்திலும்கொடிதான வென்குணங்களை யவளுடையசந்நிதியிலேசொல்லி யவளைமுடியுங்கோள்" என்றுசொல்லிக் குயில்களைப்போரவிட்டானென்று தன்னிலே சிந்தித்து ..........................................................*

### பன்னீராயிரப்படி.

அஞ்சாந்திருவாய்மொழியில், கீழே - மாநஸமாக வபரோக்ஷித்தநுபவித்துப்ரீதரானவர், அவ்வநுபவாநுரூபமாக பாஹ்யஸம்ஶ்லேஷத்திலே யபிநிவேசம்பிறந்து; அநுபாவ்யனான ஸர்வேஶ்வரனுடைய வாஶ்ரிதஸௌலப்யத்தையும், ஸௌசீல்யத்தையும், தந்நிபந்தநமான வாகர்ஷகத்வத்தையும், ஆஶ்சர்யகுணநியோகத்தையும், அநந்யார்ஹத்வாபாதநத்தையும், அநுபாவ்யமான அவயவஶோபையையும், சைதில்யஜநகமான ரூபவைலக்ஷண்யத்தையும், அவஸாதகரமான நாமவத்தையையும், போக்யமான புண்டரீகாக்ஷத்வத்தையும், ப்ராப்யதேஶவர்த்தித்வத்தையு மநுசந்தித்து, ஏவம்பூதனானவனோடு யதாமநோரதங்கலந்து பரிமாறப்பெறாத ஆர்த்திக்கு

மேலே, ஸ்வச்சந்தவர்த்திகளான லௌகிகபதார்த்தங்களும் தத்குணவிக்ரஹாதிகளுக்கு ஸ்மாரகமாக, அத்தாலே சிதிலராய், கத்யந்தரஶூந்யதையாலே அவனுடைய குணாநுசந்தாநத்தாலேதரித்த ப்ரகாரத்தை, நாயகனான ஈஶ்வரனைப்பிரிந்தாளொரு நாயகி, தன்னாற்றாமையாலே "லௌகிகமான பக்ஷ்யாதிபதார்த்தங்களைக்கண்டாகிலும் போதுபோக்குவோம்" என்றபிசந்திபண்ணி, பரஸ்பரஸம்ஶ்லிஷ்டங்களாய் ரஸித்துத்திரிகிறவவை யவனுடைய சம்ஶ்லேஷத்துக்கும் வடிவுக்கும் பேச்சுக்கும் ஸ்மாரகமாய்க்கொண்டுநலிய, அத்தாலே யீடுபட்டுப் போலிகண்டிரங்கினவள், பின்னும் போக்கில்லாமையாலே அவனுடையகுணங்களை ஸ்மரித்து தரித்தபாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.......................................................*

## ஈடு.

"தொண்டர்க்கமுதுண்ணச்சொன்மாலைகள்சொன்னேன்" என்றுகளித்தவர், தம்முடைய ப்ராணரக்ஷணத்துக்கு திர்யக்குக்களின் காலிலேவிழும்படியாயிற்று. "தேவர்கட்கெல்லாம் கருவாகியகண்ணனைக்கண்டுகொண்டேனே" என்னும்படி வைசத்யம்பிறந்தபோதே, பாஹ்யசம்ஶ்லேஷத்திலே யபேக்ஷைபிறந்தது. "இவர்க்கின்னம் விடாயைப்பிறப்பித்து முகங்காட்டவேணும்" என்று இவரபேக்ஷிதத்தைச் சடக்கெனத்தலைக்கட்டிற்றிலன் ஈஶ்வரன். நினைத்தபோதே அபேக்ஷிதம் பெறாமையாலே தளர்ந்து, "லௌகிகபதார்த்தாநுசந்தாநத்தாலே ஹ்ருதயத்தை யந்யபரமாக்கி தரிப்போம்" என்றும், "அவனோடுபோலியானபதார்த்தங்களைக்கண்டாகிலும் தரிப்போம்" என்றும் லௌகிகபதார்த்தங்களிலே கண்வைத்தார். அவை யாஶ்வாசஹேதுவன்றிக்கே, ஸ்மாரகமாய் பாதகமாகப்புக்கது. ஏதேனுமொருபதார்த்தம் தோற்றிலும், அவற்றினுடைய சத்பாவ மவனையொழியவில்லாமையாலே, அவனைக்காட்டிக்கொண்டிறே தோற்றுவது.

லௌகிகபதார்த்தங்க ளவனுக்கு ஸ்மாரகமாய் நலிய, அவற்றால் நோவுபடுகிறபடியை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். எம்பெருமானோடேகலந்து பிரிந்தாளொருபிராட்டி, தன்னாற்றாமையாலே "அவனோடு போலியான பதார்த்தங்களைக் கண்டாகிலும் தரிப்போம்" என்று, அவ்வாற்றாமை கைகொடுக்க உத்யாநத்திலேபுறப்பட, அங்குண்டான குயில் மயில்தொடக்கமானவை அவனுடைய பேச்சுக்கும் வடிவுக்கும் ஸ்மாரகமாய்நலிய, "இவைநலிகைக் கிவற்றோடு நம்க்கொருபகையில்லை, இவை நலிகைக்கு ஓரடியுண்டாகவேணும், அவன், நம்மை 'முடிக்கவேணும்' என்று பார்த்தான், 'அதுக்குபாயம்விஶ்லேஷம்' என்றுபார்த்து, பிரிவு கலவியை யொழியக் கூடாமையாலே கலந்தான் பிரிந்தான், பிரிந்தவிடத்திலும் நாம் முடியாதிருந்தோம், பிரிந்து நோவுபட்டிருக்கிற சமயத்திலே 'நம்மோடுபோலியான பதார்த்தங்களைக்காட்டிமுடிப்போம்' என்று பார்த்து வரவிட்டானித்தனை; உங்களுக்கு நினைவிதுவாகில் விப்பாரிப்பெ

ல்லாம்வேணுமோ" என்று அவற்றுக்கு வார்த்தைசொல்லி, "நம்மைப் பார்த்தாலிறே யிப்படிநோவுபடவேண்டுவது, அவனைப்பார்த்தால் நோவு படவேண்டாவிறே" என்று அவன் குணஜ்ஞாநத்தாலே, வருந்தி தரித்துத் தலைக்கட்டுகிறதாயிருக்கிறது..........................................*

## ஜீயர் அரும்பதம்.

இன்னுயிர்ப்ரவேசம். கீழ்த்திருவாய்மொழியில் ப்ரமேயத்தையும், இதில் ப்ரமேயத்தையு மநுசந்தித்து வ்யாக்யாதாவினீடுபாடு (தொண்டர்க்கித்யாதி.) விஸ்தரசங்கதி (தேவர்கட்கித்யாதி.) ஆனால், ஈஸ்வரனநுபவிப்பியா தொழிவானென்னென்ன (இவர்க்கின்னமித்யாதி.) (அபேக்ஷிதம்பெருமையாலேதளர்ந்து) என்ற வநந்தரம், "லௌகிகபதார்த்தங்களிலேகண்வைத்தார்: விரக்தராயிருக்கிறவரிதிலே கண்வைப்பானென்னென்னில்" என்றித்தனையு மத்யாஹரிப்பது. இதுக்கு பரிஹாரத்வயம் (லௌகிகேத்யாதி.) அதாவது - ஹ்ருதயத்தை யந்யபரமாக்கி தரிப்போமென்றும், போலியான பதார்த்ததர்ஸநத்தாலே தரிப்போமென்றும் கண்வைத்தாரென்றபடி. போலியான பதார்த்தம் பாதகமானமையைக்காட்டுகிறார் (அவையாஸ்வாஸேத்யாதி.) ஹ்ருதயத்தை அந்யபரமாக்கி தரிக்கப்போகாமையைக் காட்டுகிறார் (ஏதேனுமித்யாதி) "நிற்கின்றதெல்லாம்நெடுமால்" என்னக்கடவதிறே.

அந்யாபதேசத்தாலே பேசும் ப்ரகாரத்தை விஸ்தரிக்கிறார் (எம்பெருமானோடேயித்யாதி.) குயில் - பேச்சுக்கும், மயில் - வடிவுக்கும் ஸ்மாரகம் நம்மைப்பார்த்தால் - நம்முடைய தோஷபூயஸ்தையைப் பார்த்தாலென்றபடி. அவனைப்பார்த்தால் - தயாதிகுணவிசிஷ்டனான வவனைப் பார்த்தாலென்றபடி. "தன்புகழேத்த" என்றத்தைப்பற்ற (குணஜ்ஞாநத்தாலேயித்யாதி.) இத்திருவாய்மொழியால் - "முமுக்ஷுவுக்கு விஷயதர்ஸநம் பாதகம்" என்கிறது. "இதுஎம்பெருமானுகந்ததிருவாய்மொழி" என்று அந்தப்ரசங்கத்திலே ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் கதையைப்ரசாதிப்பர்..........................................*

---

## ஐந்தாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

இன்னுயிர்ச்சேவலுநீருங்கூவிக்கொண்டிங்கெத்தனை
யென்னுயிர்நோவமிழற்றேன்மின்குயிற்பேடைகா
ளென்னுயிர்க்கண்ணபிரானைநீர்வரக்கூவுகிலீ
ரென்னுயிர்கூவிக்கொடுப்பார்க்குமித்தனைவேண்டுமோ.

### ஆறாயிரப்படி.

இக்குயில்களைநோக்கி "அவன்திருநாமங்களைச் சொல்லிக் கூவி யென்னை நோவுசெய்யாதே கொள்ளுங்கோள், இங்கத்தனைக்கு விஷயமுண்டோ" என்ன, இக்குயில்கள் "உன்னைநோவுசெய்கைக்காகவோ அ

வனை நாங்கள்கூவுகிறது" என்ன, அன்றாகில், அவனை வரக்கூவுகிறிலிகளோ, என்னைமுடிக்கவிறே கூவுகிறது, என்னை முடிக்கும்போ தித்தனைபாரிப்பு வேணுமோவென்கிறாள் ................................................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், ஆஶ்ரிதஸுலபனான க்ருஷ்ணனை வரவழையாதே உங்களில் நீங்களழைத்து மிழற்றி யென்னை நலியாதே கொள்ளுங்கோளென்று, சேவலோடே சேர்ந்த சில குயிற்பேடைகளைப்பார்த்துச் சொல்லுகிறாள்.

குயிற்பேடைகாள் - குயிற்பேடைகாள். இன்னுயிர் - பஹிஶ்சரமான ப்ராணன்போலே போக்யமாய் தாரகமான. சேவலும் - சேவலும். இன்னுயிர்நீரும்-அநுக்னியவுயிராய், என்னோடு ஸ்த்ரீத்வஸாஜாத்யத்தையுடைய நீரும். கூவிக்கொண்டு - ஒருவர்க்கொருவர் ஸம்ஶ்லேஷார்த்தமாக வழைத்துக்கொண்டு. இங்கு - என்சந்நிதியிலே. எத்தனை - மிகவும். என் - என். உயிர் - ப்ராணனானது. நோவ - ஈடுபடும்படிக்கீடாக. மிழற்றேன்மின் - அநக்ஷரரஸமான ஸம்ஶ்லேஷ சப்தங்களைப் பண்ணாதே கொள்ளுங்கோள். என் - எனக்கு. உயிர் - தாரகனாயுள்ள. கண்ணன் - க்ருஷ்ணனாகிற. பிரானை - உபகாரகனை. நீர் - நீங்கள். வரக்கூவுகிலீர் - வரும்படி அழைக்கிறிலிகோள். உங்கள் கூவுதலால், என் - என். உயிர் - ப்ராணனை. கூவி-அபஹரித்து. கொடுப்பார்க்கும் - அவனுக்குக்கொடுப்பார்க்கும். இத்தனை - இத்தனை வ்யாபாரம். வேண்டுமோ - வேணுமோ.................................................*

## ஈடு - முதற்பாட்டு.

சில குயிற்பேடைகளைக்குறித்து, என்னை முடிக்கைக் கித்தனைபாரிப்பு வேணுமோவென்கிறாள்.

(இன்னுயிர்ச்சேவலும்) நற்சிவனான சேவலும். பஹிஶ்சரப்ராணனைப்போலே கண்வட்டத்திலே வர்த்தியாநிற்கை. பிரிந்துபடுகுலையடிக்கும் சேவலைப்போலன்றிக்கே, பேடைக்கு தாரகமாயிருக்கும் சேவலுமுண்டாகாதே?. போக்யமுமாய் தாரகமுமா யிருக்கும் சேவலுமுண்டாகாதே!. (நீரும்) சேவலுக்கின்னுயிரான நீரும். (கூவிக்கொண்டு) சேர்த்தியைக்காட்டி நலிகிறதுக்கு மேலே, பேச்சாலும் நலியவேணுமோ!. ஸம்ஶ்லேஷார்த்தமாக பரஸ்பரநாமக்ரஹணம் பண்ணிக்கொண்டு. (இங்கெத்தனை) இங்கத்தனைக்கு விஷயமுண்டோ!. இங்குப்பிரிவாலேசென்றற்றது, உங்கள் பாரிப்புக்கு விஷயமுண்டோ!. "அதிகம் ஶோபதே" (அதிகம்ஶோபதே) என்னுமாபோலே நலியாநின்றதாயிற்று. அன்றிக்கே, (எத்தனை யென்னுயிர்நோவமிழற்றேல்மின்) பிரிவிலே தளர்ந்திருக்கிற வென்னுயிர்நோவ மிகவும்ப்ரணயகூஜிதத்தைப்பண்ணாதேகொள்ளுங்கோள். (உயிர்நோவ) என்கையாலே-உடல் பண்டேசென்றற்றதென்கை. ராமசரம்போலேஉயிரிலேபுக்குவ்யாபரிக்கவும்வற்றாயிற்றிந்தத்வநி. (என்னுயிர்) என்கையாலே-இவற்றின்பேச்சுக்கேட்கத்தளிர்க்குமவனில் வ்யாவ்ருத்தி. மிழற்றுகையாவது - நிரம்பாமென்சொல்; ஸம்ஶ்லேஷத

சையில் சொல்லத்தொடங்கித் தலைக்கட்டாதபேச்சுக்கள். (நோவமிழற்றேல்மின்) இப்பேச்சிவள் செவிப்படில் முடியுமென்றறிந்து, பேசாதிருக்கவேண்டாவோ!. ஸ்த்ரீவதமென்றறிந்தால் மீளவேண்டாவோ!. (குயிற்பேடைகாள்) விஜாதியர்செய்வதை நீங்களுஞ்செய்யவேணுமோ. சேவலைக்கொண்டு கார்யங்கொள்ளநினைத்தாலும், பேடையின்காலையிறே பிடிப்பது!.

(என்னுயிர்க்கண்ணபிரானை) "எங்களைக் காதுகைச்சொல்லுமாபோலே சொல்லுகிறதென்" என்றினவாகக்கொண்டு; எனக்கு தாரகனை க்ருஷ்ணனை வரக்கூவுகிறிலிகோள். தாரகங்கள், வ்யக்திதோறும் வ்யவஸ்த்திதங்களாயிறேயிருப்பது. திர்யக்குக்களுக்குத்ருணம், மநுஷ்யர்களுக்கு அந்நம், தேவர்களுக்கு அம்ருதம், இவளுக்கு க்ருஷ்ணன்; * எல்லாங்கண்ணனிறே. (கண்ணபிரான்) பாரார்த்தமாகத்தன்னை யோக்கிவைக்குமவன். (நீர்) அந்வயத்தில் ரஸமறியும் நீங்கள், வ்யதிரேகத்தில் நோவுமறியவேண்டாவோ!. (வரக்கூவுகிலீர்) நீங்களவன்முன்னேசென்று த்வநித்திகோளாகில், தானேசெல்லாமையை நினைத்துவாரானே; அதுசெய்கிறிலிகோள். என்னைநலியவேண்டுவன செய்திகோளித்தனை; நானுமவனும் சேருகைக்குவேண்டுவனசெய்திலிகோள். அழிக்கவல்லவை சேர்க்கவும் வற்றென்றிருக்கிறாள். இவற்றின் வாயதுவாணுளென்றிருக்கிறாள்.

(என்னுயிர்கூவிக்கொடுப்பார்க்குமித்தனைவேண்டுமோ) என்னையுமவனையுஞ்சேர்க்கிறிகோளல்லாதபின்பு, இனியென்னை முடிக்கையாயிருந்ததிறே யுங்களுக்குக்கருத்து; அதுக்கிப்பாரிப்பெல்லாம்வேணுமோ?. பண்டேசென்றற்றவென்னுயிரைவாங்கி யவன்கையிலேகொடுக்கையாகில்கருத்து, அதுக்கிதெல்லாம்வேணுமோ. நீங்கள்சேரவிருக்கையும், கலக்கையும், அந்யோந்யநாமக்ரஹணம்பண்ணுகையும், ப்ரணயகத்கதத்வநியும். இதெல்லாம்வேணுமோ?. கொந்தாரைஜீவிப்பிக்கையன்றோஅரிது?, முடிக்கையில் பணியுண்டோ?..........................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (இன்னுயிரித்யாதி.) "குயிற்பேடைகாள் - என்னுயிர் கூவிக்கொடுப்பார்க்குமித்தனைவேண்டுமோ" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (சில குயிலித்யாதி.)

இன்னுயிரான சேவலென்கிறார் (நற்சேவனுவித்யாதி.) விவரணம் (பஹிர்ஸசாேத்யாதி) பேடை கண்வட்டத்தைவிடாதே வர்த்திக்கிறமையைப்பற்ற "நற்சேவன்" என்கிறதென்றபடி. இதுக்கு ஹார்த்தபாவம் (பிரிந்தித்யாதி.) படுகொலையடிக்கும் - ஹிம்ஸிக்கும். இனிதுமா யுயிருமான சேவலென்றர்த்தாந்தரம் (போக்யமுமாயித்யாதி.) பேச்சு, நலிவானபடியைக் காட்டாநின்றுகொண்டு, சப்தார்த்தம் (ஸம்ஸ்லேஷார்த்தமாகவித்யாதி.)

"இங்கு" என்றது - என்னிடத்திலே என்றபடியாய், "எத்தனை" என்று - அல்பமாய், உங்கள் பாரிப்புக் கல்பமும் விஷயமில்லையென்று முந்தினவர்த்தம்

(இங்கத்தனைக்கித்யாதி.) அத்தனைகு-சேர்த்திக்கும் நாமக்ரஹணத்துக்கும். "அத்தனைக்கு விஷயம்" என்றதின்விவரணம் (இங்குப்பிரிவாலேயித்யாதி.) இவைதன்னை நலிகையாவது - அத்தலையை ஸ்மரிப்பித்து பாதகமாகையாலே, அத்தையுதாஹரணபூர்வகமாகத் தெரிவிக்கிறார் (அதிகமித்யாதி) "அதிகம்ஶோபதே பம்பா விகூஜத்பிர்விஹங்கமை: । தீபயந்தீவ மே காமம் விவிதா முதிதா த்விஜா:" (அதிகம்ஸோபதேபம்பாவிகூஜத்பிர்விஹங்கமை: । தீபயந்தீவமேகாமம்விவிதாமுதிதத்விஜா:) இதிகிஷ்கிந்தாகாண்டேப்ரதமே. "அதிகம்ஶோபதே" (அதிகம்ஸோபதே) என்கையாலே-விஷயத்தினளவல்லாத பாதகத்வஞ்சொல்லுகிறது.

இரண்டாமர்த்தம் (அன்றிக்கே எத்தனையித்யாதி) அதாவது - "இங்கு" என்று - இந்தஸ்த்தலமாய், "எத்தனை" என்று - மிகுதியாய், என்னுயிர்நோவ விந்தஸ்த்தலத்திலே மிகவும் மிழற்றேல்மினென்றபடி. இந்தவர்த்தத்துக்கு, "எத்தனை" என்றது - "மிழற்றேல்மின்" என்றத்தோடே யந்வயிப்பது. "என்னுயிர்" என்கிறதுக் கர்த்தகதந பூர்வகமாக கீழ்வாக்யவிவரணம் (பிரிவிலே யித்யாதி) "உயிர்நோவ" என்றதுக்குவாஸனை (உயிர்நோவவித்யாதி) "உயிர்நோவ" என்றதுக்குபாவாந்தரம் (ராமசரம்போலேயித்யாதி) அதாவது - உடல்குறியழியாதிருக்க உயிரிலே நலியவற்றென்றபடி. "என்னுயிர்" என்றதுக்கு வ்யாவர்த்யம் (என்னுயிரென்கையாலே யித்யாதி) "மிழற்றலும் மிழற்றலும் நிரம்பாமென்சொல்." நிரம்பாமென்சொல்லென்றது-அர்த்தோக்தியான ம்ருதுபாஷணம். "நிரம்பாமென்சொல்" என்றதின்விவரணம் (சம்ஶ்லேஷதசையிலித்யாதி) எங்களுக்கு ப்ரக்ருதியான மிழற்றுதலைத்தவிரப்போமோவென்ன (இப்பேச்சித்யாதி) விவரணம் (ஸ்த்ரீவதமித்யாதி.)

"பேடைகாள்" என்றதுக்குபாவம் (விஜாதீயரித்யாதி) விஜாதீயர் - புமான்கள். சேவலைக்கொண்டு கார்யங்கொள்ளநினைத்தமைதோற்ற "இன்னுயிர்ச்சேவல்" என்று முந்தறவெடுத்து, இங்கே "பேடைகாள்" என்றத்தை ப்ரதாநமாகச்சொல்லுவானென்னென்ன (சேவலையித்யாதி.)

"கூவுகிலீர்" என்றதுக்கவதாரிகை (எங்களையித்யாதி) என்றினவாக-என்று சொன்னதுகளாக. இவளுக்குக்ருஷ்ணன் தாரகமானபடியென்னென்ன (தாரகங்களித்யாதி) "வ்யவஸ்த்திதங்கள்" என்றத்தைக்காட்டுகிறார் (திர்யக்குக்களுக்கித்யாதி) "இவளுக்குக்ருஷ்ணன்" என்னுமதுக்கு ப்ரமாணம் (எல்லாமித்யாதி) "பிரான்" என்றதுக்கர்த்தம் (பரார்த்தமாகவித்யாதி) உனக்கு பாதகமாகிற தெங்களுக்குத் தெரியுமோவென்ன (அந்வயத்திலித்யாதி) அந்வயம் - சம்ஶ்லேஷம். வ்யதிரேகம்-விஶ்லேஷம். நாங்கள்கூவினு லவன்வருவனேவென்ன (நீங்களித்யாதி) விவரணம் (என்னை நலியவித்யாதிவாக்யத்வயம்) பக்ஷிகள் சேர்ப்பிக்கவற்றோவென்ன (அழிக்கவல்லவையித்யாதி) விவரணம் (இவற்றினித்யாதி) வாயதுவாணுளென்றது - வார்த்தையாலேவாழும்நாளான வாயுஸ்ஸென்றபடி.

நாங்கள்முடிக்கவந்ததுக்கு நியாமகமேதென்ன (என்னையுமித்யாதி) சப்தார்த்தம் (பண்டேயித்யாதி) கீழெல்லாவற்றையும்கடாக்ஷித்து "இதெல்லாம்" என்றத்தைக்காட்டுகிறார் (நீங்களித்யாதி) "வேண்டுமோ!" என்றஸ்வரத்துக்குபாவம் (நொந்தாரையித்யாதி.)

குயிற்பேடைகாள் - இன்னுயிர்ச்சேவலு மித்யாரப்யார்வய: ..............*

## இரண்டாம்பாட்டு.

இத்தனைவேண்டுவதன்றந்தோவன்றிற்பேடைகா
ளெத்தனைநீருநுஞ்சேவலுங்கரைந்தேங்குதிர்
வித்தகன்கோவிந்தன்மெய்யனல்லனொருவர்க்கு
மத்தனையாமினியென்னுயிரவன்கையதே.

### ஆறாயிரப்படி,

(இத்தனை) அன்றிற்பேடைகாள், நீரு நுஞ்சேவலும் கரைந்தேங்குதிர்; என்னுயிர் கூவிக்கொடுப்பார்க்கு மித்தனைவேண்டுவதில்லை என்றுசொல்ல; அவையும், "உன்னோடுள்ளகலவியே தாரகமாயிருக்கிறவனொரு க்ஷணமுன்னைப்பிரியுமளவி லவனை யிங்ஙனேகொடுமைசொல்லவேணுமோ, தானேவருகிறானிறே" என்ன; அவனங்ஙனே ப்ரணயஸ்வபாவனைப்போலே யிருக்குமத்தனைகாண், அவனொருவர்க்கும் மெய்யாகஸ்நேஹியல்லன், ஆனபின்பு, அவன்வருகையென்றொரு பொருளுண்டோ, இனியென்னுயிரானது முடிந்ததிறேயென்கிறாள்.................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், பசுக்களுக்கும் ரக்ஷகனும்படி சுசீலனான க்ருஷ்ணனை மெய்யனாகநினைத்து, என்னை யவனுக்காக என்செய்யநலிகிறீகோளென்று, சிலவன்றிற்பேடைகளைச்சொல்லுகிறாள்.

அன்றிற்பேடைகாள் - பிரிவில் தரிக்கமாட்டாத ஸ்வபாவத்தையுடையவன்றிற்பேடைகாள். நீரும் - சேவலின்நினைவறிந்து பரிமாறும்நீங்களும். நும் - உங்கள் நினைவறிந்து பரிமாறும். சேவலும் - சேவலுமாய்க்கொண்டு. எத்தனை - எத்தனைப்ரகாரம். கரைந்து - சம்ஶ்லேஷரஸத்தாலே யுள்ளழிந்து. ஏங்குதிர் - சப்திக்கிறீகோள். இத்தனை - இத்தனையதிப்ரவ்ருத்தி. வேண்டுவதன்று - வேண்டுவதன்று. அந்தோ! - என்னைநலியும்படி யுங்களைவரக்காட்டின. வித்தகன் - விஸ்மயநீயசேஷ்டிதனாய். கோவிந்தன் - பசுக்களையும் ரக்ஷிக்குமவனென்கிற சௌசீல்யத்தை ப்ரகாசிப்பித்து லோகத்தைவசீகரிக்கும் க்ருஷ்ணனானவன். ஒருவர்க்கும் - நாட்டாரோடு நல்லவர்களோடுவாசியற வொருவர்க்கும். மெய்யனல்லன் - மெய்பரிமாறுவானொருவனல்லன். ஆனபின்பு, அவன்நினைவின்படி யுங்கள் ப்ரவ்ருத்தியுண்டாகையாலே, இனி-இனி. என்னுயிர்-என்ப்ராணனானது. அவன்கையதேயாமத்தனை - அவன் கைய்தேயாமத்தனை ......... ..............................................*

### ஈடு - இரண்டாம்பாட்டு.

சிலவன்றிற்பேடைகளைக்குறித்து, உங்கள்சேவல்களும் நீங்களுமாய் ப்ரணயகூஜிதங்களாலே யென்னை நலிகிறதென்னென்கிறாள்.

(இத்தனைவேண்டுவதன்று) என்னைமுடிக்கைக் கித்தனைவேண்டுவதில்லை. குயில்களைப்பார்த்து, " இத்தனைவேண்டுமோ! " என்னுநிற்கச்

செய்தே, இடையிலே அன்றிலினுடைய த்வநிலிய, அப்பாசுரமே யிவ ற்றுக்குஞ்சொல்லவேண்டும்படியிறே பிறந்ததசை. மஹாராஜரும் வாலி யும் பொராநிற்க நடுவே யொளியம்பாகப் பெருமாள்விட்டாப்போலே; குயில்களு மிவளுமாய், "கூவாதேகொள்ளுங்கோள்" என்பது, அவையு யரக்கூவுவது, ஆகாநிற்கச்செய்தே, நடுவே அன்றிலானது, செவிவழி யே நெருப்பையுருக்கிவார்த்தாப்போலே த்வநிக்க, புரிந்துபார்த்து, "இ வையே யமையாதோ ! நீங்களும்வேணுமோ!" என்கிறாள். இவளிப்படி சொல்லச்செய்தேயும் த்வநிக்கத்தொடங்கிற்று - (அந்தோ!) "சரணம்" என்றவாயை யம்பாலே நிறைப்பாரைப்போலே, உங்கள்படி யிருந்தபடி யென்! ஐயோ! என்கிறாள். (அன்றிற்பேடைகாள்) குயிற்பேடைகளிற் காட்டி லுங்களுக்கொரு வாசிகண்டிலோம்; உங்கள்சேவலிற்காட்டி லொ ருவாசியுங்கண்டிலோம். நலிகைக்கு, ஸஜாதீயரிலும் விஜாதீயரிலு மவ் வருகாயிருந்திகோள். "நாங்களென்செய்தோம்" என்ன-(எத்தனை) மிக வும். (நீரும் நுஞ்சேவலும்) சேவலின்கருத்தறிந்து நடத்துகிறநீரும், உ ங்கள்கருத்தறிந்து பரியாறுகிறவுங்கள்சேவலும். "அஂதஜாதமபிவ்யக்தம்" (அந்தர்ஜாதமபிவ்யக்தம்) என்னுமாபோலே, பேடையின்கருத்தறிந்து பரிமாறுகின்றதாயிற்றுச்சேவல். (ஊரைந்தேங்குதிர்) பிறரைநலிகைக்காக த்தந்தாமையழித்துக்கொள்வாருண்டாகாதே!. ப்ரணயதாரையில் தான ழிந்தமைதோற்றப் பரிமாறுகின்றன. இருவர் கூடக்கலக்கும் சமயமோ விது!. கலந்தாற்றான், உங்கள்தசைதோற்ற வாய்விடவேணுமோ!. (வித் தகனித்யாதி) "அவனொரு க்ஷணகாலம் தாழ்க்குமளவில், எங்களையிட்டு அவன் நலிவிக்கிறானாகச் சொல்லவேணுமோ" என்ன; அவன்படிகளை யுட்புக்க வென்பக்கலிலேகேளுங்கோள் - (வித்தகன்) விஸ்மயநீயன். இப் போது, அநுகூலர்க்கு * அரியவித்தகன். ( கோவிந்தன் ) சர்வரக்ஷகன். இத்தால் - சர்வரக்ஷகனைப்போலேயிருந்து பாதகனுமவன். ரக்ஷகனெ ன்று பற்றப்போகாது, பாதகனென்று விடப்போகாது. (மெய்யனல்ல னொருவர்க்கும்) ".பரமப்ரணயி, சர்வரக்ஷகன்." என்றுநினைத்து அவன் கார்யம் செய்யப்போந்த வுங்களுக்கும் பொய்யேபலிப்பது. "ராமோத்விர்நாபிபாஷதே," (ராமோத்விர்நாபிபாஷதே) "நத்யஜேயம்," (நத்ய ஜேயம்) "ஏதத்வ்ரதம்மம" (ஏதத்வ்ரதம்மம) என்னும் ராமாவதாரம்போ லேயென்றிறே நீங்கள் நினைத்திருக்கிறது; பகலையிரவாக்குவது, "ஆயுத மெடேன்" என்றாயுதமெடுப்பதாகையிறே யிவ்வவதாரத்துக்கு க்ருத்ய ம். "ராமாவதாரத்தில் மெய்யும், க்ருஷ்ணாவதாரத்தில் பொய்யுமிறே. ஆஶ்ரிதர்க்குத்தஞ்சம்; அவன்பொய்யனாகிலென், மெய்யனாகிலென், இரு ந்தபடியுகக்குமத்தனையன்றோநாங்கள்" என்றுதொடங்கின கார்யத்திலே முதிரநின்றன - (அத்தனையாமினி) இனியத்தனையாகாதே!. இவற்றினொ ருப்பாடிருந்தபடியால், அவன்நினைவே தலைக்கட்டிவிட்டதாகாதே! என்

கிருள். என்ப்ராணனவன்கைப்பட்டபின்பு, என்னுடையரக்ஷணத்துக்குங்கள்கால் பிடிக்கவேண்டாவே ............................................ *

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (இத்தனையித்யாதி) "அந்தோவன்றிற்பேடைகாள் எத்தனைநீரு நுஞ்சேவலுங்கரைந்தேங்குதிர்" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (சிலவன்றிலித்யாதி.)

கீழேகுயிலுக்குச்சொன்ன வார்த்தையையே யன்றில்களுக்கும் சொல்லுவானென்னென்ன (குயில்களையித்யாதி) அதாவது - ஆற்றாமையினதிசயத்தாலே யென்றபடி. சத்ருஷ்டாந்தமாக விவரணமாதல், "இத்தனைவேண்டுவதன்று" என்றதுக்கு பாவாந்தரமாதல் (மஹாராஜருமித்யாதி) இவையே யமையாதோவென்றது-குயில்களேயமையாதோவென்றபடி.

"அந்தோ!" என்றதுக்கவதாரிகை (இவளிப்படியித்யாதி.) "அந்தோ!" என்றதுக்குவாஸனை (சரணமித்யாதி.)

இதுக்குபாவம் (குயிற்பேடைகளிலித்யாதி) அதாவது-குயிற்பேடைகளைப்பற்ற வன்றிற்பேடைகளுக்கு, வாயலகுநெகிழ்க்கிலும் பொறுக்கமாட்டாத விஶ்லேஷா ஸஹிஷ்ணுத்வமுண்டாகையாலே, அந்தவாசியைக் கண்டிலோமென்றபடி. "பேடைகாள்" என்றதுக்குபாவம் (உங்கள்சேவலிலித்யாதி) அதாவது - சேவல் புமானாகையாலே, கடிநப்ரக்ருதியாய்ப் பெண்ணினுடைய வ்யஸநமறியாத வாகாரத்தையுடையனாயிருக்கும்; அப்படியன்றிக்கே, பெண்கள்படும் வ்யஸநம் பெண்களுக்குத்தெரியும்படியான வேற்றமுண்டுங்களுக்கு; இப்போது நிர்த்தயமாய் நலிகையாலே யந்தவாசிகண்டிலோமென்றபடி. விவரணம் (நலிகைக்கித்யாதி) ஸஜாதியர் - குயிற்பேடைகள். விஜாதியர் - சேவல்கள்.

பேடையின்கருத்தறிந்து பரிமாறுகைக்கு த்ருஷ்டாந்தம் (அந்தர்ஜாதமித்யாதி) "𑌤𑌸𑍍𑌯𑌾𑌶𑍍𑌚 𑌰𑌾𑌮𑍋 𑌦𑍍𑌵𑌿𑌗𑍁𑌣𑌂 𑌹𑍃𑌦𑌯𑍇 𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 । 𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌜𑌾𑌤𑌮𑌪𑌿 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌿 𑌹𑍃𑌦𑌯𑌂 𑌹𑍃𑌦𑌾 । 𑌤𑌸𑍍𑌯 𑌭𑍂𑌯𑍋 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣 𑌮𑌥𑌿𑌲𑍀 𑌜𑌨𑌕𑌾𑌤𑍍𑌮𑌜𑌾" (தஸ்யாஶ்சராமோத்விகுணம்ஹ்ருதயேபரிவர்த்ததே । அந்தர்ஜாதமபிவ்யக்தமாக்யாதிஹ்ருதயம்ஹ்ருதா । தஸ்யபூயோவிஶேஷேணமைதிலீஜநகாத்மஜா) இதிபாலகாண்டே சரமே. "அஸ்யார்த்த꞉; தஸ்யாஶ்சஹ்ருதயேராம꞉, த்விகுணம் - ப்ரஶஸ்தம், பரிவர்த்ததே; தஸ்மாத்ஸராம꞉, தஸ்யா꞉ அந்தர்ஜாத மபிஹ்ருதயம்-அபிப்ராயம், ஹ்ருதா - மநஸா, வ்யக்தமாக்யாதி-ஜாநாதி. தஸ்ய-ராமஸ்ய, ஹ்ருதயே, மைதிலீ, பூயோவிஶேஷேண-அதிஶயேந, பரிவர்த்ததே; தஸ்மாத், தஸ்ய-ராமஸ்ய, ஹ்ருதயம்-அபிப்ராயம், மைதிலீ, மநஸா, ஆக்யாதி - ஜாநாதி, ஏததுக்தம்பவதி-பரஸ்பரஹ்ருதயாந்தர்வர்த்தநேந பரஸ்பரபாவமுபௌஜாநீத இத்யர்த்த இதி" என்றுஉடாலி. "கரைந்து" என்றதுக்குபாவம் (பிறரையித்யாதி) "ஏங்குதிர்" என்றதுக்குபாவம் (ப்ரணயதாரையிலித்யாதி) "கரைந்து-" ஈடுபட்டு. "ஏங்குதிர்-" சுகாதிசயத்தாலே வார்த்தைசொல்லப்புக்குத் தலைக்கட்டமாட்டாதே நடுங்குகை. இத்தால்பாவம் (இருவர்கூடவித்யாதிவாக்யத்வயம்) கலக்கும் சமயமோவிதென்றது-தன்தசையைப்பற்ற. வாய்விடவேணுமோவென்றது - "ஏங்குதிர்" என்றத்தைப்பற்ற.

பரமப்ரணயியாய் சர்வரக்ஷகனான (அவனொருக்ஷணகாலம் தாழ்க்குமளவில்) என்று கூட்டுவது. "விஸ்மயநீயன்" என்றத்தாலே அவனுடைய சாபட்யம் சொல்லிற்றேயென்ன (இப்போதித்யாதி) * பிறர்கட்கரியவித்தகனன்றிக்கே, இப்போது அநுகூலர்க்கு * அரியவித்தகனென்றபடி. சர்வரக்ஷகத்வம்சாபட்யமல்லவேயென்ன (சர்வரக்ஷகனித்யாதி.) மேலே "மெய்யனல்லன்" என்றிருக்கையாலே; "வித்தகன் -" ப்ரணயிபோலேயிருக்கிறானொழிய அநுகூலர்க்கு ப்ரணயியல்ல, துர்லபனென்றும், "கோவிந்தன் -" (ரக்ஷகரைப்போலேயிருந்து பாதகனுமவன்) என்றும், வ்யங்க்யமாக வ்யாக்யாநம்பண்ணுகிறார். "கோவிந்தன்" என்றதுக்கு பலிதம் (ரக்ஷகனென்றித்யாதி) ரக்ஷகனென்று பற்றப்போகாது, இப்போது பாதகனாகையாலே; பாதகனென்றுவிடப்போகாது, முன்பு பசுக்களை ரக்ஷிக்கையாலே.

"ஒருவர்க்கும்" என்ற சப்தத்துக்கு பாவம் (பரமப்ரணயியித்யாதி.) "வித்தகன்" என்றத்தைப்பற்ற (பரமப்ரணயியென்றது.) "கோவிந்தன்மெய்யனல்லன்" என்று கூட்டிபாவம் (ராமோத்விரித்யாதி) "[illegible]" (தத்ப்ரூஹிவசநம்தேவிராஜ்ஞோயதபிகாங்க்ஷிதம் | கரிஷ்யேப்ரதிஜாநேசராமோத்விர்நாபிபாஷதே) இதிகைகேயீம் ப்ரதிராமஃ. "அவன்வஞ்சகன்" என்னுமத்தை யவன்செயலே சூசிப்பிக்குமென்கிறார் (பகலையித்யாதி.)

மேலுக்கவதாரிகை (ராமாவதாரத்திலித்யாதி.) (ஆஶ்ரிதர்க்குத்தஞ்சம்) என்றவநந்தரம், "ஆகையாலே" என்றுகூட்டுவது. தொடக்கினகார்யத்தில்-இவளை நலிகையில். விவரணம் (இவற்றினொருப்பாடித்யாதி.) ஒருப்பாடு-உத்யோகம். "என்னுயிரவன்கையதே" என்றதுக்கு பாவம் (என் ப்ராணனித்யாதி.)

அன்றிற்பேடைகாள், எத்தனை நீரு நுஞ்சேவலும் கரைந்தேங்குதிர் - இத்தனைவேண்டுவதன்றந்தோ - வித்தகன் கோவிந்தன் - ஒருவர்க்கும் - மெய்யனல்லன் - இனியென்னுயிரவன்கையதே யாமத்தனையென்றந்வயம். ..........................*

---

# மூன்றாம்பாட்டு.

அவன்கையதேயெனதாருயிரன்றிற்பேடைகா
ளெவஞ்சொல்லிநீர்குடைக்தாடுதிர்புடைசூழவே
தவஞ்செய்திலாவினையாட்டியேனுயிரிங்குண்டோ
வெவஞ்சொல்லிநிற்றுநும்மேங்குகூக்குரல்கேட்டுமே.

## ஆறாயிரப்படி.

(அவன்கையதே) எம்பெருமானோடு கலந்து பரிமாறுகைக்கு பாக்யஹீநையானவென்னுயிர், நும்மேங்குகூக்குரல்கேட்டு மயங்கிக்கிடக்கச்செய்தே, அதின்மேலே யேதேனுஞ்சொல்லிக்கொண்டு என்குடைந்து ஆடுகிறீர்கோள் என்னருகே நின்று என்கிறாள். ........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய சௌசில்யாதிசயத்தாலே ஆக்ருஷ்டப்ராணையாயிருக்கிற நான் உங்கள் சப்தத்தைக்கேட்டும் எத்தைச்சொல்லி தரிப்பேனென்று, பின்னையும் அவ்வன்றிற்பேடைகளைக் குறித்துச் சொல்லுகிறாள்.

அன்றிற்பேடைகாள் - அன்றிற்பேடைகாள். அவன்கையதே - அந்த சுசீலனை கோவிந்தன்கையதே. எனதாருயிர் - என்னுடைய ப்ராணனைது. நீர்-நீங்கள். எவம்சொல்லி - எத்தனை உக்திவிசேஷங்களைப்பண்ணி. குடைந்து - ஒன்றுக்கொன்றுள்ளேயாம்படி சம்ஸ்லேஷித்து. புடைசூழவே - என்னுடையபரிசரத்திலே. ஆடுதிர் - சஞ்சரிக்கிறிகோள். தவம் - அவனைப்போலே பிரிவுக்காறியிருக்கும் பாக்யத்தை. செய்தில்லா - பண்ணாதே. வினையாட்டியேன் - போலிகண்டுபெடும்படியான பாபத்தைப்பண்ணின வென்னுடைய. உயிர் - ப்ராணன். அங்கே போனபடியாலே, இங்கு - இங்கு. உண்டோ - உண்டோ. நும் - உங்களுடைய. எங்கு - சம்ஸ்லேஷசிதிலமான. கூக்குரல் - சப்தங்களை. கேட்டும் - கேட்டும். எவம் - எத்தை. சொல்லி - சொல்லி. நிற்றும் - நிற்பது..............................................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

அவ்வன்றிற்பேடைகள் தம்மையே, திரியவும், தன்செயலறுதியாலே யிரக்கிறாள்.

(அவன்கையதேயெனதாருயிர்) என் ப்ராணன், அவன்கையதே. மிதுநமானால் ப்ராணங்கள் மாறாடியன்றோவிருப்பது?, உங்களுக்கிது அவ்யுத்பந்நமோ?. ( அன்றிற்பேடைகாள் ) அந்வயரசமறிவார், பிரிந்தார் படுவதுமறியவேண்டாவோ?. ( எவஞ்சொல்லி ) ஏதேனும் சிலவற்றைச்சொல்லி. அவைசொல்லுகிற பாசுரஞ்சொல்லில் தன்வாய் வேம்போலேகாணும்!. ( நீர்குடைந்து ) ஒன்றிலேயொன்றவகாஹித்து. (ஆடுதிர்) பரிமாறாநின்றிகோள். ( புடைசூழவே ) சுற்றிலே சஞ்சரியாநின்றிகோள் ; அடைமதிட்படுத்துவார் சுற்றிலேவிட்டுக்கொண்டிருக்குமாபோலே. செவியைப் புதைத்துப் பிழைப்பேனோ!, கண்ணைப்புதைத்துப் பிழைப்பேனோ!. பெருமாளும் பரிகரமும் லங்கையை யழிக்கைக்குச் சூழப்போந்தாப்போலேகாணும் இவளுக்கிதிருக்கிறது. பாவியேன்!, உங்கள்பாரிப்புக் கிங்குவிஷயமுண்டாகப் பெற்றதில்லை; – (தவஞ்செய்தில்லா) உயிரை யிங்கேவைத் துங்களுக் குபகரிக்க பாக்யம்பண்ணிற்றிலேன். “ அவனைப்போலே பிரிவுக்குச் சிளையாதபடி பாக்யத்தைப் பண்ணப்பெற்றிலேன்” என்று பிள்ளான்பணிக்கும். (உயிரிங்குண்டோ!) வல்லடிக்காரர்க்கு விளக்கேற்றிக் காட்டுமாபோலேகாணும், “ இங்குண்டோ! ” என்று காட்டுகிறபடி. ( எவஞ்சொல்லிநிற்றும் ) எத்தைச் சொல்லி தரிப்பது. ( நும்மித்யாதி) ப்ரணயபரவசமான, உங்களுடைய த்வநியைக்கேட்டும். பிரிவுக்கு தரித்திருக்கிலும், உங்கள் த்வநிக்குப் பிழைக்கவல்லோமோ!. உங்கள் த்வநி, கேட்டாரை முடிக்குமதன்றோ!. உங்கள்செவியைப்புதை

த்தோ நீங்கள் கூப்பிடுகிறது?. “𑌨𑌿𑌶𑍍𑌵𑌨𑌂 𑌚𑌕𑍍𑌰𑌵𑌾𑌕𑌾𑌨𑌾𑌂 𑌨𑌿𑌶𑌮𑍍𑌯 𑌸𑌹𑌚𑌾𑌰𑌿𑌣𑌾𑌮𑍍। 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌵𑌿𑌶𑌾𑌲𑌾𑌕𑍍𑌷𑍀 𑌕𑌥𑌮𑍇𑌷𑌾 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌿.” (நிஸ்வநம்சக்ரவாகாநாம் நிஸம்யஸஹசாரிணாம் । புண்டரீகவிஸாலாக்ஷீ கதமேஷாபவிஷ்யதி.) ..........................................................*

## ஜீயர் அரும்பதம்

மூன்றும்பாட்டு. (அவனித்யாதி.) மீளவும் அன்றிற்பேடைகளை யிரப்பானென்னென்ன (அவ்வன்றிலித்யாதி.)

“அவன்கையது” என்றறியும்படி யென்னென்ன (மிதுநமித்யாதி) “𑌅𑌸𑍍𑌯𑌾𑌦𑍇𑌵𑍍𑌯𑌾𑌃” (அஸ்யாதேவ்யாঃ) இத்யாதி அநுசந்தேயம். கீழிற்பாட்டிலே “அவன்கையதே” என்றது - நைராஸ்யத்தால் சொன்னவார்த்தை; இதிலே ப்ரணயித்வத்தாலே சொன்னவார்த்தை. “பிரிவில் நாங்கள்செய்கிறவையெல்லாம் பாதகமாகச் சொல்லாநின்றாய், பிரிவுனக்கு பாதகமென்கிற விதங்களுக்குத் தெரியுமோ” என்ன (அந்வயரசமித்யாதி.) அந்வயரஸம் - சம்ஶ்லேஷரஸம்.

இன்னதென்னாதே, “எவம்” என்பானென்னென்ன (அவைசொல்லுகிறவித்யாதி.) நீர் - நீங்கள். சூழ சஞ்சரிக்கிறதுக்கு த்ருஷ்டாந்தம் (அடைமதிளித்யாதி.) அடைமதிட்படுத்துகை - முத்திக்கைபோடுகை. “எவஞ்சொல்லி, புடைசூழ” என்கிற விரண்டுபதங்களாலும் - தனக்கிவற்றால்வந்த நலிவைத் தப்பவிரகில்லையென்கிறார் (செவியையித்யாதி.) “எவஞ்சொல்லி” என்றத்தைப்பற்ற (செவியையித்யாதி.) “புடைசூழவே” என்றத்தைப்பற்ற (கண்ணையித்யாதி.) “அடைமதிட்படுத்துவார்” என்றத்தை விசேஷநிஷ்டமாகக் காட்டுகிறார் (பெருமாளுமித்யாதி.)

மேலுக்கவதாரிகை (பாவியேனித்யாதி.) “தவம்செய்தில்லா” இத்யாதிக்கர்த்தம் (உயிரையித்யாதி.) அர்த்தாந்தரம் (அவனைப்போலேயித்யாதி.) பாக்யத்தைப்பண்ணாத பாவியேனான வென்னுடைய ப்ராணன்களிங்குண்டோவென்று சப்தார்த்தம். உயிருண்டோவென்னாதே, “இங்கு” என்று விசேஷித்ததுக்குபாவம் (வல்லடிக்காரரித்யாதி.) வல்லடிக்காரர் - ஹிம்ஸகர்.

நிற்றும் - தரிப்போம். “எங்குகூக்குரல்” என்றதுக்கு பாவமாதல், “கேட்டும்” என்ற சப்தத்துக்கு பாவமாதல் (பிரிவுக்கித்யாதி.) பிழைக்கப்போகாதோவென்ன (உங்களித்யாதி.) தனக்கு பாதகமாகையாலே யவற்றுக்குமிது பாதகமென்றுநினைத்து பாவம் (உங்கள்செவியையித்யாதி.) தனக்கு பாதகமென்றத்தைக் கொண் டிப்படி நினைத்தபேருண்டோவென்ன (நிஸ்வநமித்யாதி) “𑌨𑌿𑌶𑍍𑌵𑌨𑌂 𑌚𑌕𑍍𑌰𑌵𑌾𑌕𑌾𑌨𑌾𑌂 𑌨𑌿𑌶𑌮𑍍𑌯 𑌸𑌹𑌚𑌾𑌰𑌿𑌣𑌾𑌮𑍍। 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌵𑌿𑌶𑌾𑌲𑌾𑌕𑍍𑌷𑍀 𑌕𑌥𑌮𑍇𑌷𑌾 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌿” (நிஸ்வநம்சக்ரவாகாநாம் நிஸம்யஸஹசாரிணாம் । புண்டரீகவிஸாலாக்ஷீகதமேஷாபவிஷ்யதி) இதிராமஃ.

அன்றிற்பேடைகாள் - எனதாருயிர் - அவன்கையதே - எவஞ்சொல்லி நீரொன்றுதொடங்கி, உயிரிங்குண்டோ - நும்மேங்கு கூக்குரல்கேட்டும் - எவஞ்சொல்லி நிற்று மித்யந்வயঃ. ..........................................................*

## நான்காம்பாட்டு.

---

கூக்குரல்கேட்டுநங்கண்ணன்மாயன்வெளிப்படான்
மேற்கிளைக்கொள்ளேன்மினீருஞ்சேவலுங்கோழிகாள்
வாக்குமனமுங்கருமமுநமக்காங்கதே
யாக்கையுமாவியுமந்தரநின்றுழலுமே.

### ஆறாயிரப்படி.

(கூக்குரல்) கோழிகாள், நீரும் நுஞ்சேவலும் மேன்மேலுமவனை யென்செய்யக் கூவுகிறிகளென்ன; "நாங்களவனைவரக்கூவுகிறோம்" என்று அவைசொல்ல; அவன்வருகைக்குக் கூவுகிறிகளாகில் அவன் வாராதொழிகிறதென்?, ஆதலால், அவன்வரக்கூவுகிறீரல்லீர், என்னை முடிக்கைக்காகக் கூவுகிறீர்தானே?, முன்னமே யென்னுடைய சர்வகரணங்களும் முடிந்தன, இனி யென்செய்ய வருந்துகிறிகள்? என்ன; கரணங்கள் முடிந்தனவாகி லுன்னுடையபேச்சு மிச்சேஷ்டிதங்களுங் கூடுகிறபடி யெங்ஙனேயென்னில்; முடியச்செய்தே, என்னுடைய வாக்கையுமாவியும்நடுவேநின்று பழைய வ்யஸநவாஸநையாலே யுழைக்கிறனவத்தனையென்கிறாள்.............................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்சர்யகுணசேஷ்டிதனான க்ருஷ்ணன் வருகிறிலன், நீங்களெனக்கு பாதகமாம்படி கூப்பிடாதே கொள்ளுங்கோளென்று, சிலமயிற்பேடைகளைக் குறித்துச் சொல்லுகிறாள்.

கோழிகாள் - மயில்காள். கூக்குரல் - நீங்களொன்றுக்கொன் றழைக்கிறகுரல். கேட்டும் - அவனிருந்தவிடத்திலும் கேட்கும்படியாயிருக்கச்செய்தேயும். நம் - எல்லாரும் "நம்முடையவன்" என்னும்படி பவ்யனாய். மாயன் - கிட்டினாரை யாஶ்சர்யகுணசேஷ்டிதங்களாலே யீடுபடுத்தும். கண்ணன் - க்ருஷ்ணன். வெளிப்படான் - வருகிறிலன். நும் - உங்கள். சேவலும் - சேவலும். நீரும் - நீருமாகச்சேர்ந்துகொண்டு. மேல்-மேலே. கிளைக்கொள்ளேன்மின் - திரளாகக்கூப்பிடாதே கொள்ளுங்கோள். நமக்கு - எங்களுக்கு. வாக்கும் மனமும் கருமமும் - வாங்மநஃகாயங்கள். ஆங்கதே - அவன்பக்கலிலேயாயிற்று. ஆக்கையும் - சரீரமும். ஆவியும் - ப்ராணனும். அந்தரம் நின்று - நடுவே. உழலுமே - அலமருகிறவித்தனை.

கோழி - மயில். கிளைத்தல் - சப்தித்தல்...........................................*

### ஈடு - நான்காம்பாட்டு.

சிலமயில்களைக்குறித்து, நீங்களுஞ்சமாகக்கூவி யென்னை நலியாநின்றிகோளென்கிறாள்.

(கூக்குரல்கேட்டும்) நீங்கள் கூவுகிற த்வநியைக்கேட்டு வைத்தும். இவற்றின் த்வநி செல்லாதவிடமில்லை யென்றிருக்கிருள். (நங்கண்ணன்) வடயக்ஷப்ரசித்திபோலேகிடீர் பவ்யனென்னுமிது. (மாயன்) ஆஸ்சர்யசீலன்; கலக்கும் சமயத்தில் மெய்போலேபரிமாறவல்லவன். (வெளிப்படான்) "இவள் பிழையாள்" என்று தோற்றுகிறிலன்; "தாஸா ஊாவிரஹூ-ஐஃ" (தாஸாமாவிரபூத்) என்னுமவன்கிடீர். ருஷியும், "ஆவிரஹூ-ஐஃ" (ஆவிரபூத்) என்ருன்; இவளும், (வெளிப்படான்) என்ருள். (மேல்கிளைக்கொள்ளேல்மின்) மேலானகிளை - உச்சமானத்வநி. ஜாத்யுசிதமாய் ப்ரணயவ்ருத்தமான உச்சசப்தத்தைப்பண்ணுதே கொள்ளுங்கோள்.—இவளீடுபடப்பட, ஒருதானமெழ வைத்துக் கூவாநின்றனவாய்த்து. (நீருஞ்சேவலும்) ஒன்று தொடங்கின கார்யத்தை சஹசரமுந்தொடங்கிக் குறையுங்கூட முடியாநின்றது. (கோழிகாள்) ஸ்த்ரீவதம்பண்ணுகைக் கொருஜாதியாக வொருப்படவேணுமோ. கோழியென்கிறது - மயிலே. "'நீர் நலியாதே கொள்ளுங்கோள்' என்னுமளவும் பார்த்தன்றே நாங்களிருக்கிறது, சர்வகரணங்களையு மபஹரிக்கவந்த நாங்கள் தவிருவோமோ, தொடங்கினகார்யம் தலைக்கட்டவேணுமே யெங்களுக்கு" என்று கருத்தாக, அதுக்காகில் பின்னை அங்கே போங்கோளென்கிருள் (வாக்கும் மனமும் கருமமும் நமக்காங்கதே) என்னுடைய சர்வகரணங்களு மவன்பக்கலின. "அங்கேபோயிவை த்வநிக்க அவனுக்குத் தரிப்பரிதாய்வந்து முகங்காட்டும்" என்னும் நினைவாலே சொல்லுகிருள். அங்கேயாகி லிப்பேச்சும் சேஷ்டிதங்களும் கூடினபடியென்னென்ன (ஆக்கையுமாவியுமந்தரநின்றுழலுமே) வ்யஸநவாசனையாலே, தேஹமும் ப்ராணனும் நடுவே நின்று க்லேசப்படுகிற வித்தனை. பிடித்துவிட்ட கொம்புபோலே வாசனையேயுள்ளது. நோவுபடவேண்டுவதுண்டு, நலிகைக்காப்ரயமில்லை. .............................................*

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. (கூக்குரலித்யாதி.) "நீருஞ்சேவலும்கோழிகாள்-மேற்கிளைக்கொள்ளேன்மின்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை (சிலமயில்களையித்யாதி.)

பரமபதஸ்த்தனுக் கிதுகேட்குமோவென்ன (இவற்றினித்யாதி.) மேலே "மேற்கிளைக் கொள்ளேன்மின்" என்றத்தைப்பற்ற (செல்லாத விடமில்லையென்றது.)

"நம்" என்றதுக்கர்த்தம் (வடயக்ஷேத்யாதி.) "நம்" என்று-ப்ரசித்தி. வடயக்ஷப்ரசித்தியாவது - இஹவடேயக்ஷஸ்திஷ்ட்டதி-இந்த ஆலமரத்தில் பேயுண்டென்னுமது. இத்தால் பவ்யனென்கிறது ப்ரசித்திமாத்ரமொழிய அநுஷ்ட்டாநமில்லையென்கிறது.

"வெளிப்படான்" என்றதுக்குச்சேர, "நங்கண்ணன்மாயன்" என்றதுக்கு - வெறுப்பாக வ்யாக்யாநம் பண்ணுகிறார். மாயன் - ஆஸ்சர்யபூதன். ஆஸ்சர்யமேதென்ன (கலக்குமித்யாதி.)

வெளிப்பட ப்ரஸக்தியேதென்ன (இவளித்யாதி.) அதாவது - "இந்தத்வநி யிவளுக்கு பாதகம்" என்றால் ஓடிவரவேண்டியிருக்க, அதுசெய்கிறானில்லையென்றபடி. அப்படி விஸ்லேஷதசையில் தோற்றுமோவென்ன; ப்ரமாணம் (தாஸாமித்யாதி) "தாஸாமாவிரபூச்செளரிஸ் ஸ்மயமாநமுகாம்புஜ꞉" (தாஸாமாவிரபூச்செளரிஸ் ஸ்மயமாநமுகாம்புஜ꞉) இத்யாதி, கோபிகாகீதாஸமநந்தரே. சப்தமொத்திருக்கிறதென்கிறார் (ருஷியுமித்யாதி.) அதாவது - கோபிமார்க்கு சமீபஸ்தனாய்த் தோற்றுதிருந்தானென்றாப்போலே, இவளும் சந்நிஹிதனாயிருந்துவைத்தே வெளிப்படானென்கிறாளென்றபடி.

"கிளே" என்று - பக்ஷிசப்தமாகையாலே, (ஜாத்யுசிதமாய்) என்கிறார். "ஆந்தை கிளைக்கூட்டிற்று" என்னக்கடவதிறே. "மேல்" என்றதுக்குபாவம் (இவளீடுபடவித்யாதி.) "நீரும்சேவலும்" என்றிரண்டையும் சொல்லி, "கிளே" என்று ஏகவசநமாகச் சொன்னதுக்கு பாவம் (ஒன்றுதொடங்கினவித்யாதி.) "கோழிகாள்" என்கிற பஹுவசநத்துக்கர்த்தம் (ஸ்த்ரீவதமித்யாதி.)

பேச்சும் சேஷ்டிதமுமென்றது - "மேற்கிளைக்கொள்ளேன்மின், உழலும்" என்றத்தைப்பற்ற.

விவரணமாதல், தேஹமும் ப்ராணனும் நடுவே நின்று க்லேசப்படுகிறதுக்கு த்ருஷ்டாந்தமாதல் (பிடித்துவிட்டவித்யாதி.) பலிதம் (நோவுபடவித்யாதி,) "உழலும்" என்றதுக்கு பாவமாதல்.

கூக்குரல்கேட்டும் நங்கண்ணன் மாயன் வெளிப்படான் - வாக்குமென்று தொடங்கி, உழலுமே - கோழிகாள் நீரும்சேவலும் மேற்கிளைக்கொள்ளேன்மினித்யந்வய꞉..........................................................................................*

---

# ஐந்தாம்பாட்டு.

அந்தரநின்றுழல்கின்றயானுடைப்பூவைகா
ளுந்திறத்தேதுமிடையில்லைகுழறேன்மினோ
விந்திரஞாலங்கள்காட்டியிவ்வேழுலகுங்கொண்ட
நந்திருமார்வனம்மாவியுண்ணநன்கெண்ணினான்.

## ஆறாயிரப்படி.

(அந்தரநின்று) உங்களுக்கு நானென்ன அநிஷ்டம்பண்ணினேன்; நீங்கள் நடுவேநின்று அவன்றிருநாமங்களைச்சொல்லி யென்னைபாதியாதேகொள்ளுங்கோள் என்று பூவைகளைநோக்கிச்சொல்லி, பண்டிந்த லோகத்தைத் தனக்காக்கிக்கொள்ளுகைக்குச் சிலபொய்செய்தாப்போ

லே – என்னோடேகலந்து பரிமாறுகிறுனுகத் தோற்றும்படி சிலபொய்க ளைச்செய்தகன்றுபோனவிது; என்னைமுடிக்கைக்கு நல்லவிரகுபார்த்தா ன், என்னசதுரனே! என்று தன்னிலேநொந்து சொல்லுகிறுள் ......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், க்ருத்ரிமசேஷ்டிதங்களைக்காட்டி சர்வலோகத்தையும் பிறர்க்கா காதபடி பண்ணுமவன், உள்ளாளான வுங்களையிட்டு நம்முடைய ப்ராணபஹாரம்ப ண்ணுகைக்கு நன்ருக வெண்ணிறுனென்று, தன்னுடைய பூவைகளைக் குறித்துச் சொல்லுகிறுள்.

நலிகைக்கு விஷயமின்றிக்கே யிருக்கச்செய்தே, அந்தரநின்று - நடுவே. உ ழல்கின்ற - நிஷ்ப்ரயோஜநமாகவலமருகிற. யானுடைப்பூவைகாள் - நான் என்னு டையவை என்றபிமாநித்த பூவைகாள். நுந்திறத்து - உங்களிடையாட்டத்தில். என் னை நலிகைக்கு, ஏதுமிடையில்லை - ஓரவகாசமில்லை. குழறேன்மின் - நீங்கள், அந க்ஷரசமாம்படி சப்தியாதே கொள்ளுங்கோள். இந்திரஞாலங்கள்காட்டி - இந்த்ர ஜாலங்கள்போலே, மெய்யென்று ப்ரமிக்கும்படியாக குணவிக்ரஹ சேஷ்டிதங்களை க்காட்டி. இ - இந்த. ஏழுலகும் - சப்தலோகத்தையும். கொண்ட - பராபிமாநத்தை யும் ஸ்வாபிமாநத்தையு மறுத்துத் தனக்கேயாம்படி பண்ணிக்கொண்டு. நந்திருமார் வன் - நமக்கு, தன் திருமார்விலேயிருக்கிற பிராட்டிபக்கல் ப்ரணயித்வத்தைக்காட் டி யகப்படுத்தினவன். நம் - நம்முடைய. ஆவி - ப்ராணனை. உண்ண - க்ரஸித்துக் கொள்ளுகைக்கு. நன்கு - நன்ருக. எண்ணினுன் - நிருபித்தான்.....................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

தன்னினவாயிருந்துநலிகிற பூவைகளைக்குறித்து, அவன்றுனெ ன்னைமுடிக்கைக்கு நல்லவிரகுபார்த்தான், இனியுங்களுக்கிங்கு விஷயமி ல்லையென்கிறுள்.

(அந்தரநின்றுழல்கின்ற) உங்களுக்கிங்குநலிய விஷயமின்றிக்கே யிருக்க, நடுவேநின்று வ்யர்த்தமே க்லேஶப்படுகிறிகோளித்தனை. (யானு டைப்பூவைகாள்) என்னுடைப்பூவைகாள். சர்வசாதாரணராயிருப்பார் செய்பவற்றை, சிலர்க்குஸ்வம்மாயிருப்பார் செய்யக்கடவதோ?. நான் எ னக்கு என்னவமையுமாகாதே பாதிக்கைக்கு!; அவனும், என்னுடையவ னுகையிறே நலிந்தது!. (நுந்திறத்தேதுமிடையில்லை) உங்களிடையாட் டத்தில், என்னைநலிகைக்கோ ரவகாசமில்லை; உங்கள்பாரிப்புக் கென்பக் கலோரவகாசமில்லையென்றுமாம். (குழறேல்மின்) அநக்ஷரஸமானபே ச்சைக்காட்டி முடியாதேகொள்ளுங்கோள். அவன்தானதிகரித்தகார்யத் தில் நெகிழநின்றுனுகிலன்றே, நீங்களிப்படி முதிரநிற்கவேண்டுவது!; அதுக்குங்களுக்கவகாசம்வைத்தானே!.

(இந்திரஞாலங்கள்காட்டி) கண்டார்க்குவிடவொண்ணுதவடிவை யும், சீலத்தையும், சேஷ்டிதத்தையுங்காட்டி. இவைநிலைநில்லாமைய

லே, "பொய்கள்" என்கிறாள். இந்திரஜாலமென்றும், பொய்யென்றும், பர்யாயம். (ஏழுலகுங்கொண்ட) பிறருடைய வஸ்துவை யபஹரிக்கப்புக்கால், அவர்களுக்கொன்றும் சேஷியாதபடி யபஹரிக்குமவன். (நந்திருமார்வன்) ப்ரணயித்வத்தால்வந்த ப்ரஸித்தியை யெனக்குக்காட்டி, பிராட்டியோடே பழகிற்றும், ப்ரணயியாயன்று; அத்தைக்காட்டிக்கண்டாரை யகப்படுத்திக்கொள்ளுகைக்காக. சிலபொய்களைக்காட்டி பூமியைக் கொண்டாப்போலே, கலந்து பரிமாறுகிறானென்று தோற்றும்படி சில பொய்களைச்செய்து விப்லேஷிக்கை, என்னைமுடிக்கைக் குபாயமென்றுமாம். (நம்மாவியுண்ணநன்கெண்ணினான்) நம்மைமுடிக்கைக்கு நல்விரகுபார்த்தான். உங்களுக்கிங்கவகாசமில்லை. சர்வசக்தியுத்யோகித்த கார்யத்திலே குறைகிடப்பதாய், அதிலே நீங்களும் ஸஹகரிக்கிறிகோளோ!.

நம்மைமுடிக்கப்பார்த்தபார்வை அழகிதாகப்பார்த்தான் என்று தன்னிலே நொந்துசொல்லுகிறாளென்றுமாம் ...............................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (அத்தரமித்யாதி.) "யானுடைப்பூவைகாள் - நம்மாவியுண்ணநன்கெண்ணினான் - நுந்திறத்தேதுமிடையில்லை குழறேல்மினோ" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (தன்னினவாயித்யாதி. தன்னினவாயென்றது-"யானுடைப்பூவைகாள்" என்றத்தைப்பற்ற. தன்னினவாய் - தன்னுடையவைகளாய்; தனக்கு சேஷங்களாயென்றபடி.

"யானுடைப்பூவைகாள்" என்று விசேஷிக்கிறவளுடைய ஹார்த்தபாவம் சர்வசாதாரணேத்யாதி.) சர்வசாதாரணராயிருப்பாரென்றது - காட்டிலேவர்த்திக்கையாலே சர்வசாதாரணமான மயில்தொடக்கமான பக்ஷிகளையாதல், கீழ்ப்பாட்டில் "நங்கண்ணன்" என்ற க்ருஷ்ணனையாதல். "நந்திருமார்வன்" என்றத்தைக்கடாக்ஷித்து, என்னோட்டைசம்பந்தமே ஹேதுவாக பாதிக்கிறிகோளென்றுபாவாந்தரம் (நானெனக்கித்யாதி.) விவரணம் (அவனுமித்யாதி.)

இடை - அவகாசம். உங்களிடையாட்டத்திலென்றது - உங்களுக்கென்றபடி. த்விதியார்த்தத்துக்கு, "திறம்" என்று - சமூஹமாய், பரிப்பைச் சொல்லுகிறது.

மேலுக்கெல்லாமவதாரிகை (அவன்தானித்யாதி.)

அவகாசம் வையாமல் அவன்செய்த வ்யாபாரங்களைச் சொல்லுகிறதுமேல். "இந்திரஜாலங்கள்" என்கிற பஹுவசந விவக்ஷிதங்களையும், அவற்றை இந்திரஜாலமாக வருளிச்செய்கைக்கு ஹேதுவையு மருளிச்செய்கிறார் (கண்டார்க்கித்யாதி.) அதாவது - இந்திரஜாலமாவது, கண்டல்லது நிற்கவொண்ணாதபடி யாகர்ஷகமாயிருப்பதொரு வித்யையிறே; அப்படி, சௌந்தர்யாதிகளும் அநுபவித்தாலொழிய நிற்கவொண்ணாதபடி யாகர்ஷகமாயிருக்குமத்தைப்பற்ற, இவற்றை "இந்திரஜாலங்கள்" என்கிறதென்றபடி. பஹுவசநவிவக்ஷிதங்கள், சௌந்தர்யாதிகள். பொய்யாக வர்த்தாந்தரம் (இவையித்யாதி.) "இந்திரஜாலம்" என்றால் பொய்யைச்சொல்லுமோவென்ன (இந்திரஜாலமென்றும் பொய்யென்றும் பர்யாயமென்று) "ஏழுலகும்" என்றசப்தத்துக்குபாவம் (பிறருடையவித்யாதி) "நம்" என்றப்ரஸித்திக்

குபாவம் (ப்ரணயித்வத்தாலித்யாதி) ப்ரஸித்தனான திருமார்வனென்று சப்தார்த்தம். பிராட்டியோட்டைச் சேர்த்தியைக்காட்டி யென்னை யகப்படுத்திக்கொண்டவனென்று தாத்பர்யார்த்தம். "திருமார்வன்" என்றதுக்கு வெறுப்பாகவர்த்தம் (பிராட்டியோடேயித்யாதி) "இந்திரஞாலங்கள்" என்றுதொடங்கி, "நன்கெண்ணினான்" என்னுமளவும் - பக்ஷிகளைப்பார்த்துச்சொல்லுகிறாளென்றும், தன்னிலே நொந்துசொல்லுகிறாளென்றும். இத்தை த்வேதாவிவக்ஷித்து முந்தினவகையைக்காட்டுகிறார் (சிலபொய்களை) இத்யாதியாலே; இரண்டாம்வகையைக்காட்டுகிறார் (நம்மைமுடிக்க) இத்யாதிமுடிவில் வாக்யத்தாலே.

"நன்கு" என்கிறவிதுக்கர்த்தத்வயம் - நன்றாகவென்றும், வ்யதிரேகலக்ஷணையாய், க்ரூரமாகவென்றும். இந்தவிரண்டர்த்தத்தையு மருளிச்செய்கிறார் (நல்விரகுபார்த்தான்) என்றும், (அழகிதாகப்பார்த்தான்) என்றும், அழகிதாக - க்ரூரமாகவென்றபடி. "அவனும்செய்துபோகிறான், அவன்செய்தகுறைகளை நாங்கள்முடிக்கிறோம்" என்ன (சர்வசக்தியித்யாதி)

அந்தரநின்றுழல்கின்ற யானுடைப்பூவைகாள், இந்திரஞாலங்களென்றுதொடங்கி, நன்கெண்ணினான் - நூந்திறத்தேதுமிடையில்லை குழறேல்மினோவித்யந்வய:. நம்மாவியுண்ண நன்கெண்ணினான் - நம்முடையப்ராணன்களை க்ரஸித்துக்கொள்ளுகைக்கு நன்றாக நிரூபியாநின்றானென்று உரையில்சப்தார்த்தம் .....................*

---

# ஆறம்பாட்டு.

நன்கெண்ணிநான்வளர்த்தசிறுகிளிப்பைதலே
யின்குரனீமிழற்றேலென்னாருயிர்க்காகுத்த
னின்செய்யவாயொக்கும்வாயன்கண்ணன்கைகாலினன்
நின்பசுஞ்சாமநிறத்தன்கூட்டுண்டுநீங்கினான்.

## ஆறாயிரப்படி.

(நன்கெண்ணி) அவன்பிரிந்ததசையி லவன்றிருநாமங்களையும் சொல்லாமைக்கன்றோ வுன்னைநான்வளர்த்தது?, ஆனபின்பு, அவன்றிருவடிவுபோலேயிருக்கு முன்வடிவைக்காட்டி, அதின்மேலே அவன்றிருநாமங்களையுஞ்சொல்லி யென்னை நோவுசெய்யாதேகொள்ளாய் என்று தன்கிளியைக்குறித்துச்சொல்லுகிறாள் .................. ....... .........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தர்ஸநீயமான அவயவசோபையையுடைய சக்ரவர்த்தித்திருமகன் கலந்துபிரிந்தான், அவனுக்கு ஸ்மாரகமான வடிவோடேயிருந்து உன்னுடைய ம்ருதுபாஷணத்தாலே நலியாதேகொள் என்று, தான்வளர்த்ததொருகிளியைச்சொல்லுகிறாள்.

என் ஆருயிர் - எனக்கு வ்யதிரேகத்திலே தரிக்கவரிதான ப்ராணனாய். காகுத்தன் - "மற்றிலேன்தஞ்சமாகவே" என்னும்படியான சக்ரவர்த்தித்திருமகன். நின்- உன்னுடைய. செய்ய-சிவந்த. வாய்-வாயை. ஒக்கும்-ஒக்கும். வாயன்-வாயையுடை

யனுய். கண்ணன்-அத்தோடொக்கும் கண்ணையுடையனுய். கைகாலினன் - அத்தோடொக்கும் கைகாலையுடையனுய். நின்-உன்னுடைய. பசும் - பசுமையழியாத. சாமம்-ஸ்யாமநிறம்போலேயிருக்கிற. நிறத்தன்-நிறத்தையுடையனுய்க்கொண்டு. கூட்டுண்டு-என்னேடேசம்ஸ்லேஷித்து. நீங்கினுன்-பிரிந்தான். நன்கு-எனக்காபத்துக்குதவுவதியென்கிறநன்மையை எண்ணி-எண்ணி. நான்-நான். வளர்த்த - வளர்த்துப்போந்த. சிறு-சிறியவடிவையுடைத்தாய். பைதல் - முக்தமான. கிளியே - கிளியே. இன்-இனிமையாலே யென்னைநீடுபடுத்துகிற. குரல் - குரலை. நீ - அவன்வடிவுக்கு ஸ்மாரகமாய் நலிகிறநீ. மிழற்றேல்-அர்த்தோக்திசரசமாகப்பண்ணுதேகொள் ...*

## ஈடு - ஆரும்பாட்டு.

தன்தசையறியாதே திருநாமத்தைச்சொல்லுகிற கிளிப்பிள்ளையைக்குறித்து, எனக்கஸஹ்யமான தசையிலே சொல்லவோ வுன்னைவளர்த்தது என்று அத்தைநிவர்த்திப்பிக்கிருள்.

(நன்கெண்ணி) திருநாமம், சாத்மிக்கும்தசையறிந்துசொல்லவும் அஸஹ்யமானதசையில் தவிரவுமன்றே வுன்னைவளர்த்தது?. (நான்வளர்த்த) ஏகபுத்ரர்களைப்போலே யாய்த்துவளர்த்தது. நானுன்றையாதரிக்கவமையுமாகாதே அங்யதாவாகைக்கு!; அவனும் கிளியோபாதியவ்யனுயிறேயிருப்பது. (சிறுகிளிப்பைதலே) சிறுமை - பருவம். பைதல்-வயஸ்ஸுக்குத்தக்க பாகமுமின்றிக்கேயிருக்கை. உன்பசற்றனமிறே நலிகைக்கடி. (இன்குரல்) "கூரியவேல்" என்னுமாபோலே. (நீமிழற்றேல்) நிரம்பாமென்சொல்லா லென்னைமுடியாதேகொள். மாத்ருவதத்திலேயும் ப்ரவர்த்திப்பாருண்டோ!.

(என்னுருயிர்க்காகுத்தன்) வ்யதிரேகத்தில் தரிக்கையரிதாம்படியிறே கிட்டினபோது பரிமாறிற்று. "தயரதற்கு மகன்றன்னையன்றி மற்றிலேன்தஞ்சமாக" என்றிறே இவரிருப்பது. (நின்செய்யவாயொக்கும்வாயன்) உன்னுடையவாய்போலேயிருக்கும் வாயையுடையவன். உபமானத்தைச்சொல்லிச்சேர்த்துவிடு மித்தனையொழிய, உபமேயந்தன்னைப் பேசமுடியாது. (கண்ணன்கைகாலினன்) உன்னைப்போலே சிவந்தகண்ணையும், கையையும், திருவடிகளையுமுடையவன். (நின்பசுஞ்சாமநிறத்தன்) உன்னுடையகுளிர்ந்த ஸ்யாமமான நிறத்தையுடையவன். (பசுஞ்சாமம்) ஸ்யாமமாய் எரித்திருக்கையன்றிக்கே, குளிர்ந்திருக்கை. ஓருடம்பிலே இத்தனைபகைதேடிவைக்கலாமோ!. (கூட்டுண்டுநீங்கினுன்) கலந்து என் ப்ரக்ருதியையறிந்துவைத்துப்பிரிந்தான். அவன்கூடவிருந்தாலன்றே உன்படிக எனுகூலமாயிருப்பது?. தனியிருப்பில் நலிவார் ராவணுதிகளன்றே?, அநுகூலரும் நலிவரோ? ........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (நன்கெண்ணியித்யாதி) "நான்வளர்த்த சிறுகிளிப்பைதலே யின்குரல் நீமிழற்றேல்" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (தன்தசையையித்யாதி.)

வளர்க்கையிலே, நன்ருகவெண்ணி வளர்க்கையாவதேதென்ன வருளிச்செய்கிருர் (திருநாமமித்யாதி) "கிளிப்பைதலே" என்ற ஏகவசநத்தைக்கடாக்ஷித்தாதல், "வளர்த்த" என்றமாத்ரத்துக்காதல் அர்த்தமருளிச்செய்கிருர் (ஏகபுத்ரனை யித்யாதி) இத்தால் ஹார்த்தபாவமாதல், "நான்வளர்த்த" என்றதுக்கர்த்தமாதல் (நாஞென்றையித்யாதி) நீயாதரித்தாரில் அப்படி யந்யதாவாருருண்டோவென்ன (அவனுமித்யாதி) சிறுமையும் பைதலும் புநருக்தமன்ருேவென்ன (சிறுமையித்யாதி) "பைதல்" என்றத்தால்பாவம் (உன்பசற்றனமித்யாதி) பசற்றனம்-பால்யம்.

விஶ்லேஷதசையில் இதின்குரல் விரஹிணிகளுக்கு பாதகமாயிருக்குமென்று விவக்ஷித்தருளிச்செய்கிருர் (கூறியவேலித்யாதி) நிரம்பாமென்சொல்- அபூர்ணமாய் ம்ருதுவானவர்த்தோக்திகள். "யான்வளர்த்த" என்றத்தைக்கடாக்ஷித்து, "மிழற்றேல்" என்றதுக்குஹார்த்தபாவம் (மாத்ருவதத்திலேயுமித்யாதி)

கூட்டுண்டுநீங்கினவனை "என்னுருயிர்" என்பானென்னென்ன (வ்யதிரேகத்திலித்யாதி) வ்யதிரேகத்தில் - விஶ்லேஷத்தில். பெருமானை யிவர்தஞ்சமென்றிருப்பரோவென்ன (தயரதற்கித்யாதி) செய்யவாயனென்ருல்போராதோ, "செய்யவாயொக்கும்" என்பானென்னென்ன (உபமாநத்தையித்யாதி) உன்னைப்போலே சிவந்தவென்றது - உன்வாயைப்போலே சிவந்தவென்றபடி. பசுமை - குளிர்த்தி. "சாமம்" என்ருல் போராதோ, "பசும்" என்று - குளிர்த்தியை விசேஷிப்பானென்னென்ன (ஶ்யாமமாயித்யாதி) "நின்செய்யவாயொக்கும்" இத்யாதியால்பலிதம் (ஒருடம்பிலேயித்யாதி.)

இவைபகையோ, அவனுக்கு ஸ்மாரகமா யநுகூலமாயிராதோவென்ன (அவன்கூடவித்யாதி) "நீமிழற்றேல்" என்றக்ரியாபதத்துக்குச்சேரபாவம் (தனியிருப்பிலித்யாதிவாக்யத்வயம்.)

நன்கெண்ணிநான்வளர்த்த சிறுகிளிப்பைதலே - என்னுருயிர்க்காகுத்தனென்றுதொடங்கி, நீங்கினுன் - இன்குரல்நீமிழற்றேலித்யந்வயம்.......................*



## ஏழாம்பாட்டு.

கூட்டுண்டுநீங்கியகோலத்தாமரைக்கட்செவ்வாய்
வாட்டமிலென்கருமாணிக்கங்கண்ணன்மாயன்போற்
கோட்டியவில்லொடுமின்னுமேகக்குழாங்கள்காள்
காட்டேன்மினும்முருவென்னுயிர்க்கதுகாலனே.

### ஆருயிரப்படி.

(கூட்டுண்டு) என்னோடே கூட்டுண்டுநீங்கி, அதினுலொருவாட்டமின்றியே ஆஶ்சர்யமான அழகையுடையவனுய், சார்ங்காதிதிவ்யாயுதோபேதனுய், ஹாரகேயூராதி திவ்யபூஷண பூஷிதனுயிருந்த கண்ணனைப்போலேயிருந்த, கோட்டியவில்லொடு மின்னுமேகக்குழாங்கள்காள், இந்த வ்யஸநத்தின்மேலே, காட்டேல்மின் நும்முரு, என்னுயிர்க்கது காலன் என்கிருள் .......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தன்னையீடுபடுத்தின க்ருஷ்ணன்வடிவுக்குப் போலியான மேக சமூஹத்தைக்கண்டு, என்னை முடிக்கைக்கு ஹேதுவான வுங்களுடையருபத்தைக்காட்டாதே கொள்ளுங்கோளென்கிருள்.

கூட்டுண்டு - என்னோடேகரஸமாம்படி சம்ஶ்லேஷித்து. நீங்கிய - பிரிந்ததசையில். கோலம்-தர்ஶநீயமான. தாமரை-தாமரைபோலேயிருக்கிற. கண்-கண்ணையும். செ-சிவந்த. வாய் - அதரத்தையுமுடையனாய். வாட்டமிலென்கருமாணிக்கம்-இடைவிடாமலெனக்கு ஸ்ம்ருதிவிஷயமான நீலரத்நம்போலேயிருக்கிற வடிவையுடையனாய்க்கொண்டு. எனக்கு, கண்ணன்-பவ்யனான க்ருஷ்ணனாகிற. மாயன்போல்-ஆஶ்சர்யபூதனைப்போலேயிருக்கிற. கோட்டிய - வளைக்கப்பட்ட. வில்லொடு - வில்லோடேகூட. மின்னும்-மின்னுகிற. மேகக்குழாங்கள்காள் - மேகஸமூஹங்காள். என்-என்னுடைய. உயிர்க்கு - ப்ராணனுக்கு. அது-அத். காலன் - ம்ருத்யுருபமாயிருக்கும். நும்முரு-உங்கள்வடிவை. காட்டேல்மின்-காட்டாதேகொள்ளுங்கோள் ... *

## ஈடு - ஏழாம்பாட்டு.

அவன்வடிவுக்குப்போலியான மேகமாலையைக்கண்டு, உங்கள்வடிவைக்காட்டி யென்னை முடியாதே கொள்ளுங்கோளென்கிருள்.

(கூட்டுண்டித்யாதி) "ஏகதத்த்வம்" என்னும்படிகலந்து பிரிந்தபின்பு அவனுடைய அவயவசோபையிருந்தபடி யென்னுதல்; இவளோட்டைக்கலவியால்வந்த சோபையென்னுதல். (கோலத்தாமரைக்கட்செவ்வாய்) அழகியதாமரைபோலேயிருக்கிற திருக்கண்களையும், சிவந்தவதரத்தையுமுடையனாய். (வாட்டமித்யாதி) கலந்தபோதைச்செவ்வி, விரஹத்திலும் தலைச்சாவிவெட்டப்போகிறதில்லைகாணும்?. இத்தலையைவெறுந்தறையாக்கினபின்பு இரட்டித்தபடி. (என்கருமாணிக்கம்) பிரிந்தபின்பும் மறக்கவொண்ணுதபடி நவிகிற, நீலரத்நம்போலேயிருக்கிற திருநிறத்தையுடையனாய். "நைவதம்ஶாந்மஶகாந்" (நைவதம்ஶாந்மஶகாந்) என்று அவனிருக்க, அரைக்ஷணங்காழ்த்தானென்று இவ்வார்த்தையைச்சொல்லுகிருளிறே!. (கண்ணன்மாயன்போல்) ஆஶ்சர்யபூதனான க்ருஷ்ணனைப்போலே; கலந்தபோது காலைக்கையைப்பிடித்துப் பரியாறி பவ்யனாயிருந்தபடி. (கோட்டியவில்லித்யாதி) வளைத்தவில்லோடேகூடி மின்னுகின்றுள்ள மேகஸமூஹங்காள். கௌஸ்துபம் திருமேனிக்கு ப்ரகாசகமாமாபோலே யிராநின்றதுமின். (காட்டேன்மின்நும்முரு) ம்ருத்யு ஸத்ருஶமான வுங்கள்வடிவைக்காட்டாதேகொள்ளுங்கோள். அவ்வடிவைக்கொண்டு அகலவிருந்தவனோடு உங்களோடு வாசியில்லையாயிருந்ததி!. "அதுவென்" என்னில் (என்னுயிர்க்கதுகாலனே) விரஹம் தின்றுபண்டேதற்பற்ற வென்ப்ராணனுக்கு, அது ம்ருத்யுவாகாநின்றது. (குழாங்கள்காள்காட்டேல்மின்நும்முரு) என்றுவைத்து, (அது) என்கிறது, காணமாட்டாமை, முகத்தைமாறவைத்துச்சொல்லுகிருள் ... ...*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (கூட்டுண்டித்யாதி) "கண்ணன்மாயன்போல்கோட்டியவில்லொடு மின்னுமேகக்குழாங்கள்காள்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (அவன்வடிவுக்கித்யாதி)

"கோலத்தாமரைக்கட்செவ்வாய்" என்று அவயவசோபைசொன்னதுக்கு பாவத்வயம் (ஏகதத்த்வமித்யாதிவாக்யத்வயத்தாலே.)

முந்தினபாவம்வெறுப்பிலே. கீழிற்பதத்தில் பாவத்வயாநுகுணமாக வ்யுத்க்ரமமாக பாவத்வயம் (கலந்தபோதையித்யாதிவாக்யத்வயம்) தலைச்சாவிவெட்டப்போகிறதில்லை - எழுச்சியறுக்கப்போகிறதில்லை. தலைச்சாவிவெட்டுகையாவது-பயிர் மதாளிச்சுப்போனால் நுனிகளையறுத்துப்பொகடுகை. இத்தால் - கலந்தபோதைச்செவ்வியினுதிக்யஞ்சொல்லுகிறது. "என்" என்றதுக்குபாவம் (பிரிந்தபின்புமித்யாதி) வாட்டமின்றிக்கேயிருக்கிற, என்னுடைய நீலரத்நம்போன்ற வடிவையுடையவனென்றுசப்தார்த்தம். "என்-" எனக்கெப்போதும் ஸ்ம்ருதிவிஷயமானவென்றபடி. "நஜீவெயம்க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) என்றிருக்கிறவனை, விஶ்லேஷத்தாலே உஜ்ஜ்வலனாயிருக்கிறானென்பானென்னென்ன (நைவதம்ஶாநித்யாதி) ஆற்றாமையாலேயென்றபடி. "நைவதம்ஶாந்மஶகாந்கீடாந்ஸரீஸ்ருபாந் । ராகவோபநயேத்காத்ராத்த்வத்கதேநாந்தராத்மநா" (நைவதம்ஶாந்மஶகாந்கீடாந்ஸரீஸ்ருபாந் । ராகவோபநயேத்காத்ராத்த்வத்கதேநாந்தராத்மநா) இதி வைதேஹீம் ப்ரதிமாருதிஃ. ஆஶ்சர்யமேதென்ன (கலந்தபோதித்யாதி.)

கோடுதல் - வளைதல். "மின்" என்றதுக்கு த்ருஷ்டாந்தமேதென்ன (கௌஸ்துபமித்யாதி) "கோட்டியவில்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - ஸ்ரீஶார்ங்கமென்று கண்டுகொள்வது. "நும்" என்றதுக்குபாவம் (அவ்வடிவையித்யாதி) என்னுதல்; ஆஶ்வஸிப்பிக்கவந்த வெங்களை யிங்ஙன் சொல்லுவானென்னென்ன (அவ்வடிவையித்யாதி) என்னுதல். அது வென்னென்னிலென்றது - உம்முருவைக்காட்டாதேகொள்ளுங்கோளென்கிறதுக்கடி யென்னென்னிலென்றபடி. தற்பற்ற - பலமற்ற. "நும்முரு" என்று ப்ரத்யக்ஷமாகச்சொல்லிவைத்து, "அது" என்கிறதென்னென்ன (குழாங்கள்காளித்யாதி.)

அடைவே அந்வயம்..........................................................*

# எட்டாம்பாட்டு.

உயிர்க்கதுகாலனென்றும்மைநானிரந்தேற்குநீர்
குயிற்பைதல்காள்கண்ணன்நாமமேகுழறிக்கொன்றீர்
தயிர்ப்பழஞ்சோற்றொடுபாலடிசிலுந்தந்துசொற்
பயிற்றியநல்வளமூட்டினீர்பண்புடையீரே.

## ஆறாயிரப்படி.

(உயிர்க்கது) கண்ணனுடைய திருநாமங்களைச்சொல்லில் நான் முடிவன், அவற்றைச்சொல்லாதொழியவேணும் என்றுங்களைநானிரக்க,

பின்னையு மவற்றையேசொல்லிக்கொன்றிகோள்; நானுங்களைவளர்த்த ப்ர யோஜநமழகிதாகப்பெற்றேனென்று, தன்குயில்களை யின்னதாகிறாள்...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவஸாதகரமானக்ருஷ்ணன் நாமங்களைச்சொல்லவேண்டாவெ ன்கைச் செய்தேசொல்லிமுடித்திகோளே! என்று, தான்வளர்த்த சிலகுயில்களைச் சொல்லுகிறாள்.

நான்-நான். இவ்வவஸ்த்தையில், அது-அது. உயிர்க்கு - ப்ராணனுக்கு. காலனென்று-ம்ருத்யுரூபங்கிடிகோளென்றுசொல்லி. உம்மை - உங்களைக்குறித்து. இரந்தேற்கு-ப்ரார்த்தித்தவெனக்கு குயிற்பைதல்காள் - குயிற்பிள்ளைகாள். நீர் - நீங்கள். உங்கள் பிள்ளைத்தனத்தாலே, கண்ணன்நாமமே - பவ்யனை க்ருஷ்ணனுடைய திருநாமங்களை. குழறி-அநக்ஷரமதுரமாகச்சொல்லி. கொன்றீர் - முடித்துவிட்டிகோளிறே. உங்கள்பால்யத்துக்கீடாக, தயிர்ப்பழஞ்சோற்றொடு - இளம்போதைக்குத்தயிரையுடைத்தான பழஞ்சோற்றோடே. பாலடிசிலும் - பிற்காலுக்குப்பாலுஞ்சோறுமாக. தந்து-உங்களுக்குத்தந்து. சொல் - அவன்திருநாமங்களாகிறசொற்களை. பயிற்றிய-அப்யஸிப்பித்தவதுக்கு ப்ரத்யுபகாரமாக. நல்வளம் - நல்லசம்பத்தை. ஊட்டினீர்-அநுபவிப்பித்தீர். பண்பு-நல்லநீர்மையை. உடையீர்-உடையீராயிருந்தீர்... ...*

## ஈடு - எட்டாம்பாட்டு.

சில குயில்களைக்குறித்து, திருநாமஞ் சொல்லவேண்டாவென்று நானிரக்க, அத்தையே சொல்லி நலிந்திகோள், உங்களை வளர்த்த ப்ரயோஜநம்பெற்றேன் என்கிறாள்.

(உயிர்க்கது) தோற்புரையேபோமதன்று; அதுவென்கிறாள், தன் வாயாலே சொல்லமாட்டாமையாலே. (காலனென்று) நலிகையன்றிக்கே முடிக்குமென்று. (உம்மை) இரந்தென்கார்யஞ்செய்யுமுங்களை. (நான்) உங்களுக்கு மறுக்கவொண்ணாதபடி ஜநநியானநான். (இரந்தேற்கு) உங்களைநியமித்தேனோ, என்செல்லாமையாலே சரணம்புகுந்தவெனக்கு. (நீர்) நியாம்யரானநீங்கள். சரணாகதகாதகரானிகோள். (குயிற்பைதல்காள்) உங்கள்பால்யம் என்ப்ராணனோடே போய்த்திறே'; பருவம்நிரம்பாமையிலும் தாய்வாசியறியவேண்டாவோ!. "நாங்கள்செய்ததென்" என்ன (கண்ணனநாமமே குழறிக்கொன்றீர்;) தீராமாற்றால், நெஞ்சைப்புண்படுத்திவைக்கும் க்ருஷ்ணன் திருநாமங்களையே அவ்யக்தமாகச்சொல்லிமுடித்திகோள். * ம்ருதசஞ்சீவநமான ராமகுணங்களையு மொருக்கால் சொன்னாலாகாதோ!.

(தயிரித்யாதி) தயிரும்பழஞ்சோறும், பாலும்வெஞ்சோறும் அவ்வவகாலங்களிலேதந்து திருநாமங்களைக்கற்பித்த வதுக்கு ப்ரத்யுபகாரம்பண்ணினிகோள்!. (நல்வளமூட்டினீர்) நல்லசம்பத்தை புஜிப்பித்திகோள்!. நான் காலந்தோறு முங்களுடைய ரக்ஷணம்பண்ணிப்போந்தேன், நீங்களும் இவ்விடங்களிலேவந்து நலிந்துபோந்திகோள். இக்குயில்

களுக்கு அந்நதோஷம்பலித்துவிட்டதோ!. (பண்புடையீரே) ப்ராப்தியும் பவ்யதையும்கிடக்க, சாலநீர்மையுடையீராயிருந்திகோள்!. ரக்ஷகவிஷயத்தில் நிர்த்தயராயிருந்திகோள்! ..........................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (உயிர்க்கித்பாதி.) "உம்மைநானிரந்தேற்கு - கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர் - சொல்பயிற்றியநல்வளமூட்டினீர்" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (சிலகுயில்களையித்யாதி.) வளர்த்த ப்ரயோஜநம் பெற்றேன் என்றது - வெறுப்பு.

"உயிர்க்கு" என்றதுக்குவாஸனை (சோற்புனாயித்யாதி) இன்னதென்னுதே, "அது" என்கிறதென்னென்ன (அதுவென்கிருளித்யாதி) "அது" என்கிறது-வக்ஷ்யமாணமானகண்ணன் நாமத்தை. "இரந்தேற்கு - கொன்றீர்" என்றுகூட்டி ஹார்த்தபாவம் (சரணுகதேத்யாதி) * ப்ரார்த்தநாமதியிறே சரணுகதியாவது. "பைதல்காள்" என்றதுக்கிரண்டுபாவம். அநர்த்தமறியாத பருவமென்று மூந்தினது; அத்தையருளிச்செய்கிருர் (உங்கள்பால்யமித்யாதி) தாய்வாசியறியாத பருவமென்று பாவாந்தரம் (பருவம்நிரம்பாமையிலுமித்யாதி) அதாவது - தாய்க்கும் பேய்க்கும் வாசியறிந்துமுடித்த க்ருஷ்ணனைப்போலே யிருக்கவேண்டாவோவென்றபடி. தீராமாற்றாலே - மாற்றாலேதீராத - ப்ரத்யௌஷதத்தாலே தீராதபடி. மாற்று - ப்ரத்யௌஷதம். "கண்ணன் நாமமே" என்றவவதாரணார்த்தம் (ம்ருதஸஞ்சீவநீத்யாதி)

சொல்-திருநாமங்களை. பயிற்றிய - பயில்வித்ததுக்கு; அப்யஸிப்பித்ததுக்கென்றபடி. இத்தால்பாவம் (நான்காலந்தோறுமித்யாதி) ரஸோக்தி (இக்குயில்களுக்கித்யாதி) அதாவது - பலிபுக்கினுடைய வந்நத்தைபுஜிக்குமென்று ரஸோக்தி; நானிட்டசோறு விஷமாய்விட்டதோவென்று ஸ்வபாவார்த்தம்.

"பண்புடையீர்" என்றது - வ்யங்க்யோக்தி. பண்பு - ஸ்வபாவம். நீர்மையுடையீராயென்று - விபரீதலக்ஷணை. விவரணம் (ரக்ஷகவிஷயத்திலித்யாதி)

குயிற்பைதல்காள் -உயிர்க்கதுகாலனென்றுதொடங்கி, இரந்தேற்குநீர்-கண்ணன்நாமமே குழறிக்கொன்றீர்; தயிர்ப்பழமென்றுதொடங்கி, பண்புடையீர் இத்யந்வய: ..........................................*

---

## ஒன்பதாய்பாட்டு.

பண்புடைவண்டொடுதும்பிகாள்பண்மிழற்றேன்மின்
புண்புரைவேல்கொடுகுத்தாலொக்குநும்மின்குர
றண்பெருநீர்த்தடந்தாமரைமலர்ந்தாலொக்குங்
கண்பெருங்கண்ணனம்மாவியுண்டெழநண்ணினன்.

### ஆறுயிரப்படி.

(பண்புடை) பண்புடைவண்டொடுதும்பிகாள், அவனைப்பிரிந்த வ்யஸநத்தின்மேலே அவன் திருநாமங்களைப்பாடுகிற விதுவொன்றும்

பொறுக்கலாயிருந்ததில்லை, பண்மிழற்றேல்மின் என்ன; "அவன்றிருநாமங்களைப்பாடுகை யுனக்கத்யந்த ப்ரியமல்லவோ?" என்று அவைசொல்ல; அவன் தன்னழகைக்காட்டி யென்னை மாய்த்துப்போனான்காண் என்கிறாள்.....................................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிரதிசயபோக்யமான கண்ணழகையுடைய க்ருஷ்ணனெங்களுடைய ப்ராணாபஹாரம் பண்ணிப்போனான், புண்ணிலேவேலைக்கொடு குத்தினாப்போலே பாடாதே கொள்ளுங்கோள் என்று, சிலவண்டுகளையும் தும்பிகளையுங்குறித்துச்சொல்லுகிறாள்.

பண்புடை - பாட்டின்நீர்மையையுடைத்தான. வண்டொடுதும்பிகாள் - வண்டுகளோடுகூடினதும்பிகாள். நும்மின்குரல் - உங்களுடைய இனியகுரலானது. புண்புரை - புண்ணின்புரையிலே. வேல்கொடு - வேல்கொண்டு. குத்தாலொக்கும்- குத்தினாப்போலேயிராநின்றது. நீங்கள், பண்மிழற்றேன்மின் - பண்ணைமதுரமாக சப்தியாதேகொள்ளுங்கோள். தண் - குளிர்ந்து. பெரு - நிரம்பின. நீர் - நீரையுடைய. தடம் - தடாகம். தாமரைமலர்ந்தாலொக்கும் - தாமரைமலர்ந்தாப்போலே. பெருங்கண் - கண்ணின்பெருமையையுடைய. கண்ணன் - க்ருஷ்ணனானவன். நம்-நம்முடைய. ஆவி - ப்ராணனை. உண்டு—அபஹரித்து. எழநண்ணினான்-அகலப்போனான்.

(பண்புரை) என்று பாடமானபோது, ஸ்வாபாவிக சப்தத்தையுடையவையென்றுமாம் ...............................................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

மதுபாநமத்தமாய்ப்பாடுகிறன சிலவண்டுகளையும் தும்பிகளையுங் குறித்து, உங்கள் த்வநி யெனக்கு துஸ்ஸஹமாயிருந்தது, நீங்கள்பாடாதேகொள்ளுங்கோள், என்கிறாள்.

(பண்புடைவண்டொடுதும்பிகாள் பண்மிழற்றேன்மின்) நீர்மையுடைய வண்டோடேகூடினதும்பிகாள், பண்மிழற்றேன்மின்-பண்மிக்க ஆளத்திவையாதேகொள்ளுங்கோள். (பண்புரை) என்று பாடமானபோது, பண்பானவுரையாய், முரலுகையைச்சொல்லுகிறது; பண்ணைமுரலாநின்றவென்றுமாம். (புண்புரைவேல்கொடுகுத்தாலொக்கும் நும்மின் குரல்) முன்பே மற்றையவற்றின் த்வநியாலே புண்பட்டிறேயிருக்கிறது, அதிலே வேலைக்கொடுகுத்தினாப்போலேயிராநின்றது உங்கள் த்வநி.

(தண்பெருநீரித்யாதி) குளிர்ந்த பெரியநீரையுடைய பொய்கையிலே தாமரைப்பூவலர்ந்தாப்போலேயாய் அவ்வளவன்றிக்கே பெரியகண்ணையுடையக்ருஷ்ணன். (நம்மித்யாதி) அவ்வடிவழகைக்காட்டி யென்னைமுடித்துப் பிரிந்துபோனான் ...........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (பண்புடையித்யாதி) "வண்டொடுதும்பிகாள் - வேல்கொடுகுத்தாலொக்கும் நும்மின்குரல் - மிழற்றேல்மின்" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (மதுபாநமத்தமாயித்யாதி.)

நீர்மையென்று - காநாநுகுணமான ஸ்த்தாநமூர்ச்சநங்களையறிகை. "வண்டு" என்றும், "தும்பி" என்றும் - ப்ருங்கஜாதியில் அவாந்தரபேதம். ஆளத்தி-ஆலாபம். "பண்புரை" என்றபாடத்திலே, "பண்பு" என்று - அழகாய், "உரை" என்று-சப்தமாய், அழகிதான சப்தத்தையுடைய வண்டென்றபடி. (பண்ணைமுரலாநின்ற) என்றத்விதியார்த்தத்துக்கு, "பண்" என்று - காநமாய், "புரை" என்று - நெருக்கமாய், காநப்ராசுர்யத்தையுடைய வண்டென்று சப்தார்த்தம்.

"புண்புரை" புண்ணினுடைய, புரையிலே - வாயிலேயென்றபடி. இவளுக்குப்புண்ணேதென்ன (முன்பேயித்யாதி)

"பெருங்கண் - கண்ணன்" என்றந்வயிப்பது. நம்மாவியுண்டு - நம்முடைய ப்ராணனை ப்ரஹரித்து. எழநண்ணினான் - அகலப்போனான்; பிரிந்துபோனான் என்னுசப்தார்த்தம்.

பண்புடைவண்டொடு தும்பிகாள் - தண்பெருநீரொன்றுதொடங்கி, எழநண்ணினான்; ஆகையாலே, நும்மின்குரல்-புண்புரைவேல்கொடு குத்தாலொக்கும்-பண்மிழற்றேல்மினித்யர்வயঃ ..................................................................*

# பத்தாம்பாட்டு.

எழநண்ணிநாமுநம்வானநாடனோடொன்றினோம்
பழனநன்னாரைக்குழாங்கள்காள்பயின்றென்னினி
யிழைநல்லவாக்கையும்பையவேபுயக்கற்றது
தழைநல்லவின்பந்தலைப்பெய்தெங்குந்தழைக்கவே.

## ஆறாயிரப்படி.

(எழநண்ணி) அவன்கருத்துப்படியே நானும்முடிந்தேன், என்னுடையவாக்கையுந் தளர்ந்தது, பழனநன்னாரைக் குழாங்கள்காள் பயின்றென்னினி, என்றுசொல்லி, பின்னையும், நான்பட்டபாடொருவரும் படாதொழிந்திடுக என்று சொல்லிக்கொண்டு முடிந்தாளென்கிற திப்பாட்டு. ..................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பரமபதநிலயனோடே நாங்களொன்றுபட்டுவிட்டோம், இனியுங்கள் திரட்சிக்கு ப்ரயோஜநமென்? என்று, சில நாரைத்திரளைக்குறித்துச் சொல்லுகிறாள்.

அவன் நினைவுக்கீடாக, நாமும் - நாமும். எழநண்ணி - போக்கிலேயொருப்பட்டு, நம் வானநாடனோடு - நமக்கு ப்ராப்யமான பரமபதத்திலே யிருக்கிறவனோடே. ஒன்றினோம் - ஏகஹ்ருதயராய்விட்டோம். பழனம் - நீர்நிலத்திலே. நல்-தர்ஸநீயமாய்க்கொண்டு. நாரைக்குழாங்கள்காள் - திரண்டிருக்கிறநாரைக்குழாங்கள்காள். இனிபயின்றென் - இனிச் செறிந்து விசாரிக்கிறதுக் கென்னப்ரயோஜநமுண்டு. இழைநல்ல - அவனுக்காபரணம்போலே ஸ்ப்ருஹணீயமான. ஆக்கையும்-சரீரமும். பையவே - க்ரமத்திலே. புயக்கற்றது - கைவிட அப்யசியாநின்றது. இனி என் துஃக

ங்காணுமையாலே, எங்கும் - எல்லாதேசமும். தழை - விஸ்தீர்ணமாய். நல்லவின்பம் - நன்ருனசுகத்தை. தலைப்பெய்து - பெற்று. தழைக்க-சம்ருத்தமாகக்கடவது.

புயக்குதல் - புயத்தல் - வாங்குதலாய், விடுகையைச்சொன்னபடி..........*

ஈடு - பத்தாம்பாட்டு.

திரளவிருக்கிற நாரைக்குழாங்கள் தன்னைமுடிக்க மந்த்ரிக்கிறனவாகக்கொண்டு, நான் முடிந்தேன், இனி நீங்கள் திரண்டு ப்ரயோஜநமென் என்கிருள்.

(எழுநண்ணி) போக்கிலே யொருப்பட்டு. (நாமும்நம்வானநாடனேடொன்றினேம்) கடலைக் குளப்படியிலே மடுத்தாப்போலே தன்னை யிலக்காக்கி இத்தலையை வெறுந்தறையாக்கித் தன்னைக்கொண்டகன்ருன். நாமும், * அயர்வறுமமரர்க ளதிபதியோடே யொருமிடருனேம். நித்யசூரிகளு மவனுமாகவிருந்து நம்மை முடிக்க வெண்ணினபடியே, நாமுமிசைந்தோம். அவன் முடிக்க நினைக்க, நாம் ஜீவிக்கவெண்ணி, இடக்கைப்புரி முறுக்குகைதவிர்ந்து, நாமும் முடிகையிலேதுணிந்தோம். நித்யசூரிகளும் சந்தாநுவர்த்திகளாகையாலே, அவன்கருத்தே கருத்தாயிருப்பர்களிறே. (பழனநன்னாைக்குழாங்கன்காள்) நீர்நிலங்களிலே வர்த்திப்பனவாய், தொடங்கினகாரியம் முடிக்கவல்ல சாமர்த்யத்தை யுடைத்தான நாரைக்குழாங்கள்காள். (பயின்றென்னினி) இனி நீங்கள் திரண்டு ப்ரயோஜநமென். நானவன்கருத்தைப் பின்செல்லாதவன்றன்ருே உங்கள் மந்த்ரத்துக்கு ப்ரயோஜநமுள்ளது. முதலிகள் திரள்திரளாகவிருந்து பெருமாளையும் பிராட்டியையும் சேர்க்கைக்கு விரகு பார்த்தாப்போலே, இவை திரள்திரளாகவிருந்து தன்னையு மவனையும் பிரிக்கைக்கு விரகுபார்க்கிறனவென்றிருக்கிருள். "அவன் வேண்டுவாரைச்சேர்க்கையும், வேண்டாதாரை முடிக்கையும், திர்யக்குக்களுக்குப்பணி" என்றிருக்குமிறே ராமாவதாரத்தில் வாஸனையாலே. (வானநாடன் – நாரைக்குழாங்கள்காள்) என்கையாலே, உபயவிபூதியும் வேணுமோ ஓரபலையை முடிக்கைக்கு. (இழைநல்லவாக்கையும்) ஆபரணத்தாலே அழகிதானசரீரமென்னுதல், ஆபரணம் பூண்டாப்போலேயிருக்கிற விலக்ஷணசரீரமென்னுதல். (பையவேபுயக்கற்றது) க்ரமேண பசையற்றதென்னுதல், க்ரமத்திலே போகத்தொடங்கிற்றென்னுதல். புயத்தலென்று - போதலாதல், புயக்கென்று – ஆகர்ஷகமாதல்.

(தழைநல்லவித்யாதி) ஈச்வரவிபூதி சம்ருத்தமாகவேணுமென்கிருள். "தாந்தாம் முடியநினைப்பார் 'நாடுவாழ்க' என்பாரைப்போலே சொல்லுகிருள்" என்று ஆளவந்தார் நிர்வாஹம்; "நான்பட்டபாடு நாடுபடாதொழியவேணும்" என்று எம்பெருமானர்; "நான் முடிய என்னர்த்திகண்டு நோவுபடாதே, லோகமடங்கப் பிழைக்குமாகாதே" என்று பட்டர்..................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (எழநண்ணியித்யாதி.) "நாமும் நம்வானநாடனோடொன் றினோம் - நாரைக்குழாங்கள்காள் பயின்றென்னினி" என்றபதங்களைக்கடாக்ஷித்த வதாரிகை (திரளவித்யாதி.) மந்த்ரிக்கிறனவாகக்கொண்டென்றது - "பயின்றெ ன்னினி" என்றத்தைப்பற்ற.

போக்கிலே யொருப்பட்டென்றது - திருவடிசாருகையிலே யொருப்பட் டென்றபடி. "வானநாடு" என்று விசேஷித்ததுக்கு பாவம் (நித்யஸூரிகளுமித்யா தி.) "ஒன்றினோம்" என்றதுக்கு பாவம் (அவன்முடிக்கவித்யாதி.) இடக்கைப் புரி முறுக்குகையாவது - வலக்கைப்புரி முறுக்குகைக்கெதிராக விடக்கைப்புரியாக முறுக்குகை. அதாவது - ப்ராதிகூல்யஞ் செய்கையென்றபடி. "ரக்ஷந்திஸகலாப வத்ஸ:" (ரக்ஷந்திஸகலாபத்ய:) என்ற தயாளுக்களான நித்யஸூரிகள் ஹிம் ஸையிலே யொருப்படுவர்களோவென்ன (நித்யஸூரிகளுமித்யாதி.) (சந்தாநுவர்த் திகள்) என்றவிடத்திலே, "பெருமாளையநுவர்த்தித்து இளையபெருமாள் பிராட்டி யைக் காட்டிலே விட்டுவந்தாரிறே" என்றருளிச்செய்வர்.

"நல்" என்றதுக்கர்த்தம் (தொடங்கினவித்யாதி.) திரண்டு ப்ரயோஜந மென் - மந்த்ரித்து ப்ரயோஜநமென்னென்றபடி. பயிலுகை - திரண்டு மந்த்ரிக்கை. ப்ரயோஜநமில்லையோவென்ன (நானவன்கருத்தையித்யாதி. திரளாகவிருந்துமு டிக்க மந்த்ரிக்கிறபடியை த்ருஷ்டாந்தபூர்வகமாகக் காட்டுகிறார் (முதலிகளித்யா தி.) பக்ஷிகளுக்கு, பிரிக்க ப்ரஸக்தியுண்டோவென்ன (அவன் வேண்டுவாரை யித் யாதி.)

ஆபரணத்தாலே அழகிதானவென்றது - பூர்வாவஸ்த்யைப்பற்ற. பையவே- க்ரமேண. "புயக்கற்றது" என்றதுக்கர்த்ததத்வயம், பசுமையற்றதென்னுதல்; பு யக்கிலே - போகையிலே, அற்றது - உத்யோகித்த தென்னுதல். இவ்வர்த்ததத்வயத் துக்கும் வ்யுத்க்ரமமாக சப்தநிர்வாஹம் (புயத்தலித்யாதி.) பசுமையாலே,ஆகர்ஷ கத்வம் பலிதம்.

"எங்கும் - தழைநல்லவின்பம் தலைப்பெய்து - தழைக்க" என்றந்வயிப்பது. எங்கும் - விபூதியெங்கும், தழைத்து, நன்றானவின்பத்தைப்பெற்று, தழைக்க - சம் ருத்தமாகவேணுமென்று சப்தார்த்தம். தாத்பர்யம் (ஈஶ்வரவிபூதியித்யாதி.) தா ன்முடிகிறவள் "லோகம் சம்ருத்தமாகவேணும்" என்கிறதென்னென்ன; த்ரிவித மாகபாவம் (தாந்தாமித்யாதி.) பட்டர் நிர்வாஹம், வெறுப்பிலே.

பழனநன்னாரைக் குழாங்கள்காள் - எழநண்ணி நாமும் நம்வானநாடனோ டொன்றினோம் - பயின்றென்னினி; இழை நல்லவாக்கையும் பையவேபுயக்கற்றது- எங்கும் - தழைநல்லவின்பந் தலைப்பெய்து - தழைக்கவே இத்யந்வய:. ............*

---

# பதினொன்றாம்பாட்டு.

இன்பந்தலைப்பெய்தெங்குந்தழைத்தபல்லூழிக்குத்
தன்புகழேத்தத்தனக்கருள்செய்தமாயனைத்
தென்குருகூர்ச்சடகோபன்சொல்லாயிரத்துள்ளிவை
யொன்பதோடொன்றுக்குமூவுலகுமுருகுமே.

## ஆறுயிரப்படி.

( இன்பம் ) பின்னையும், "விரோணஸம்ஜ்ஞாம்ப்ரதிலப்ய" ( விரோணஸம்ஜ்ஞாம்ப்ரதிலப்ய ) என்னும்படியாலே தாமுளராய் மேலருளிச்செய்கிறார்.

அநுபவிதாக்களுக்கு நிரவதிக சுகாவஹமாய் லோகமெல்லாம் நிறைந்த தன்புகழை, சர்வகாலமு மேதேனும் தூர்த்தசைகளிலு மேத்தும்படி தனக்கருள்செய்தமாயனை, தென்குருகூர்ச்சடகோபன் சொல்லாயிரத்துள் இத்திருவாய்மொழியில் சொன்னவார்த்தியை அநுசந்திப்பார் என்படுவார்களோ வென்கிறார்..............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக, இதுகேட்ட சர்வலோகத்தினுடையவும் மநோவிகாரத்தை யருளிச்செய்கிறார்.

இன்பம்தலைப்பெய்து - இன்பத்தை உண்டாக்காநின்றுகொண்டு. எங்கும் தழைத்த - எங்கும் வ்யாப்தமான. தன்புகழ் - தன்னுடைய குணப்ரதையை. பல்லூழிக்கு - காலதத்த்வமுள்ளதனையும். ஏத்த - ஏத்தும்படியாக. தனக்கு - தமக்கு. அருள்செய்த - நிரவதிக க்ருபையைப்பண்ணின. மாயனை - ஆஸ்சர்யபூதனை. தென்-கட்டளைப்பட்ட. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வார். சொல் - அருளிச்செய்த. ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளே. இவை ஒன்பதோடொன்றுக்கு - கீழொன்பதுபாட்டில் க்லேஸமொருகூறும், பத்தாம்பாட்டில் க்லேஸமொருகூறுமான விவற்றுக்கு. மூவுலகும் - த்ரைலோக்யமும். உருகும் - ப்ரேமத்தாலே த்ரவியாநிற்கும்.

இது கலித்துறை..............................................*

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழியிற் பாசுரம் ஹ்ருதயத்திலேபடில், ஆரேனுமாகிலும் தரியாரென்கிறார்.

( இன்பந்தலைப்பெய்தெங்குந்தழைத்த ) எங்குந்தழைத்த வின்பந்தலைப்பெய்து - லோகமெல்லாம் வெள்ளமிட்ட நிரதிசயப்ரீதியையுடையராய்க்கொண்டு. ( பல்லூழிக்குத்தன்புகழேத்த ) காலமுள்ளதனையும் குணங்களை யேத்தும்படி. ( தனக்கருள்செய்த ) சம்சாரிகளிலே அந்யதமரானவர்க்கு, * மயர்வறமதிநலமருளிச்செய்தபடி. ( மாயனை ) சம்சாரிகள்நடுவே யென்னை யொருவனையும் விசேஷகடாக்ஷம்பண்ணின வாஸ்சர்யபூதனை. அங்ஙனன்றிக்கே, ( இன்பந்தலைப்பெய்தெங்குந்தழைத்த-தன்புகழேத்த - பல்லூழிக்கு - தனக்கருள்செய்தமாயனை ) அநுபவிப்பார்க்கு நிரதிசயாநந்தத்தை விளைப்பதாய் எங்குமொக்கப் பரம்பின தன்கல்யாணகுணங்களை, காலதத்வமுள்ளதனையும் நானநுபவிக்கும்படி பண்ணினானென்றுமாம். இவர் "குணஜ்ஞாநத்தாலேதரித்தார்" என்கிறது,

(தன்புகழேத்தத்தனக்கருள்செய்த) என்ற வித்தைக்கொண்டிறே. நித்யசூரிகளநுபவத்தையும், தமக்கவர்களோடொத்த ப்ராப்தியையு மநுசந்தித்து நோவுபட்டார்; என்றுமொக்க விழுந்திருக்கிற சம்சாரிகள் படியைப்பார்த்தவாறே, இந்நோவுதானே பேருய்த்தோற்றிற்று. (சடகோபன்சொல்) என்று பரோக்ஷநிர்த்தேசத்தாலே, (தனக்கருள்செய்த) என்னலாமிறே; "𑌵𑌾𑌲𑍍𑌮𑍀𑌕𑌿𑌰𑍍𑌭𑌗𑌵𑌾𑌨𑍃𑌷𑌿𑌃" (வால்மீகிர்ப்பகவாந்ருஷி:) என்னுமாபோலே. (ஒன்பதோடொன்றுக்கும்) "கீழொன்பதுபாட்டிலுமுண்டான வ்யஸநம் சுகம்" என்னும்படி வ்யஸநம் மிக்க பத்தாம்பாட்டையுடையவிவை. ஸ்மாரகபதார்த்தங்களாலே ஜீவநத்தில் நசையோடே நோவுபட்ட வொன்பதுபாட்டோடே, ஜீவநத்தில் நசையற்ற வொருபாட்டுக்கும். (மூவுலகுமுருகுமே) ஆனேனுமாகிலும் தரியார். என்னுடைய ஆர்த்தநாதத்தாலே நாடழியவேண்டாவாகாதே என்றவர்க்கு, பின்னையும் நாட்டார்க்கு சைதில்யமே பலித்துவிட்டது.

எங்குந்தழைத்த - இன்பந்தலைப்பெய்து - பல்லூழிக்குத்தன்புகழேத்த, - தென்குருகூர்ச்சடகோபன் - தனக்கருள்செய்தமாயனை - சொல்லாயிரத்துள் ளிவையொன்பதோ டொன்றுக்கும் மூவுலகு முருகும்.*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம். (இன்பமித்யாதி.) "ஒன்பதோடொன்றுக்கும்மூவுலகுமுருகும்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியிலித்யாதி.) ஆனேனுமாகிலுமென்றது - "உலகும்" என்றத்தைப்பற்ற.

"இன்பந்தலைப்பெய்தெங்குந்தழைத்த" என்றது - ஆழ்வாருக்கு விசேஷணமானபோது, "எங்குந்தழைத்த - இன்பந்தலைப்பெய்து" என்றந்வயம்; *புகழுக்கு விசேஷணமானபோது, இருந்தபடியே. அந்வயாநுகுணமாகவர்த்தம் (லோகமெல்லாமித்யாதி.) யோஜநாந்தரத்துக் கர்த்தம் (அநுபவிப்பார்க்கித்யாதி.) ப்ரவேசத்திலே "குணஜ்ஞாநத்தாலேதரித்தார்" என்றதுக்கு நியாமகம் காட்டுகிறார் (இவர்குணஜ்ஞாநத்தாலே யித்யாதி.) "தன்புகழேத்த" என்கைக்கு, அவனோடே சம்ஶ்லேஷித்து குணாநுபவம்பண்ணினரோ வென்ன (நித்யசூரிகளித்யாதி) இவ்விடத்திலே, "𑌉𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌰𑌿𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌸𑍍𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵 𑌦𑌰𑌿𑌦𑍍𑌰𑌤𑌿 । 𑌅𑌤𑍋𑌤𑍋𑌦𑌰𑍍𑌶𑌕𑌸𑍍𑌯𑌮𑌹𑌿𑌮𑌾𑌨𑍋𑌪𑌜𑌾𑌯𑌤𑍇" (உபர்யுபரிபஶ்யந்தஸ் ஸர்வ ஏவதரித்ரதி। அதோதோதர்ஶகஸ்யமஹிமாநோபஜாயதே) என்றத்தை அருளிச்செய்வர். எனக்கருள்செய்தவென்னாதே, "தனக்கு" என்கிற தென்னென்ன (சடகோபனித்யாதி) பரோக்ஷநிர்த்தேசம்பண்ணினதுக்கு த்ருஷ்டாந்தம் (வால்மீகிரித்யாதி.)

பத்தென்னாதே, "ஒன்பதோடொன்று" என்றதுக்கு பாவம் (கீழொன்பதித்யாதி.) ஏதத்விவரணம் (ஸ்மாரகேத்யாதி.) "தழைநல்ல" இத்யாதியில் பட்டர் நிர்வாஹத்துக்குச்சேர வ்யாக்யாதாவிநீபொடு (என்னுடையவித்யாதி.)...*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

(இன்னுயிர்ச்சேவலும்)

ப்ராணத்வாத், அத்புதத்வாத், அபிசஸம்விஹிதஸேவந, பவ்யத்வயோகாத், லக்ஷ்மீவக்ஷஸ்த்வபாவாத், ரகுகுலஜநநாத், நீலரத்நாபிமூர்த்யா, ।
க்ருஷ்ணத்வாத், அப்ஜத்ருக்த்வாத், பரமபதிதயா, ஸ்வாம்ஸம்ஸ்ம்ருதாநாம் ஶஶ்வத்
யீஶாம் ஸ்மாரிஸ்வபாவம் ஸமபி ஸம்ஸ்மாரகம் ஸ்வஸ்ய ஶௌரி: ॥ (கஎ)

(ப்ராணத்வாத்) என்னுயிர்க்கண்ணபிரானை - ஆஶ்ரிதர்க்கு ப்ராணபூதனாயிருக்கையாலும்; (அத்புதத்வாத்) வித்தகன்கோவிந்தன் - விஸ்மயநீயனாயிருக்கையாலும்; (அபிசஸம்விதிதத்வேஷ) அவன்கையதே - அதிப்ரஸித்தனாகையாலும்; (பவ்யத்வயோகாத்) நங்கண்ணன்மாயன் — ஆஶ்ரிதர்க்கு பவ்யனாயிருக்கையாலும்; (லக்ஷ்மீவக்ஷஸ்த்வபாவாத்) நந்திருமார்வன் - பெரியபிராட்டியாரைத் திருமார்விலேயுடையனாகையாலும்; (ரகுகுலஜநநாத்) என்னாருயிர்க்காகுத்தன் - ரகுவம்ஶத்திலே சக்ரவர்த்தித்திருமகனா யவதரிக்கையாலும்; (நீலரத்நாபிமூர்த்யா) வாட்டமில்கருமாணிக்கம் - ஒளிமாறாதநீலரத்நம்போலேயிருக்கிற திவ்யவிக்ரஹத்தையுடையனாகையாலும்; (க்ருஷ்ணத்வாத்) கண்ணன்நாமமே - க்ருஷ்ணனாய்வந்தவதரிக்கையாலும்; (அப்ஜத்ருக்த்வாத்) தடந்தாமரைமலர்ந்தாலொக்குங்கண்பெருங்கண்ணன் - சரஸிஜஸத்ருஶமான திருக்கண்மலரை யுடையனாகையாலும்; (பரமபதிதயாச) நம்வானநாடனோடொன்றினோம் - பரமபதநிர்வாஹகனாகையாலும்; எம்பெருமான், ஆஶ்ரிதர்க்குமறக்கவொண்ணாதபடி ஸ்வகீயகுணங்களை ஸ்மரிப்பிக்கிறவனாக, "இன்னுயிர்ச்சேவலும்" என்கிறதசகத்திலே ஆழ்வாரருளிச்செய்தாரொன்கிறார் ........... (கஎ)

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

---

இன்னுயிர்மால்தோற்றினதிங்கென்னெஞ்சிலென்றுகண்ணா
லன்றவனைக்காணவெண்ணியாண்பெண்ணாய்-பின்னையவன்
றன்னைநினைவிப்பவற்றால்தான்தளர்ந்தமாறனரு
ளுன்னுமவர்க்குள்ளமுருகும். (அ௫)

(இன்னுயிர்மால்) இதில், ஸ்மாரகபதார்த்தங்களாலே நோவுபட்ட ஆழ்வார் பாசுரத்தை அநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; கீழ்ப்பிறந்தவநுபவம் மாநஸாநுபவமாகையாலே, அவனை பாஹ்யகரணங்களாலே அநுபவிக்கவேணுமென்றாசைப்பட்டு, அப்போதே அதுகிடையாமையாலே சிதிலசித்தராய், அவன்குணசேஷ்டிதாதிகளுக்கு ஸ்மாரகமான லௌகிக பதார்த்தங்களைக்கண்டு, அவ்வழியாலே ஸ்மர்யமாணமான அவன்குணசேஷ்டிதாதிகளை அநுஸந்தித்து, அவனை யதாமநோரதமநுபவிக்கப்பெறாமல், இப்படி, ஸ்மாரகபதார்த்தத்தாலே தாமீடுபட்டுச் செல்லுகிறபடியை அந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிற * இன்னுயிர்ச்சேவலி லர்த்தத்தை, "இன்னுயிர்மால்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

(இன்னுயிர்மால்தோற்றினதிங்கென்னெஞ்சிலென்று) ஷீழ்திருவாய்மொழியிலே, "நரசிங்கமதாயவுருவே - உகந்தேயுன்னையுள்ளுமென்னுள்ளத்து" என்றும், "தேவர்கட்கெல்லாம் கருவாகியகண்ணனைக்கண்டுகொண்டேனே" என்றும், "கண்டுகொண்டென் கண்ணிணையாரக்களித்து" என்றுமருளிச்செய்தவை, மாநஸஸாக்ஷாத்காரமாத்ரமாய் ப்ரத்யக்ஷ ஸாக்ஷாத்காரமல்லாமையாலே, இத்தசையிலெனக்குதாரகனுன சர்வேஶ்வரன் ஸாக்ஷாத்கரித்தது மாநஸஜ்ஞாநவிஷயமென்று. (கண்ணுலன்றவனைக் காணவெண்ணி யாண்பெண்ணுய்) சக்ஷுர்விஷயமாக வவனை தர்ஶிக்கவெண்ணி, அதுலபியாமையாலே பும்ஸ்த்வம்குலைந்து ஸ்த்ரீத்வாபத்தியைபஜித்து. (பின்னையவன்றன்னை நினைவிப்பவற்ருல்) இப்படி ஸ்த்ரீத்வாபத்தியை பஜித்த வநந்தரம், அவனை ப்ரணயகத்கதஸ்வரத்தாலும் ரூபவத்தையாலும் ஸ்மரிப்பிக்குமவற்ருலே. "விகூஜத்பிர்விஹங்கமை:" (விகூஜத்பிர்விஹங்கமை:) என்னும்படியான பக்ஷிஸமூஹங்களாலும், மேகஸமூஹங்களாலும். (தான்தளர்ந்த) "தாநேவாரமணீயாநி" (தாந்யேவாரமணீயாநி) என்னும்படி அஸஹ்யமாய், மிகவும் பாரவஶ்யத்தையடைந்த. அதாவது - "இங்கெத்தனை என்னுயிர் நோவமிழற்றேல்மின் குயிற்பேடைகாள்" "இத்தனைவேண்டுவதன்றந்தோ வன்றிற்பேடைகாள்" "எவஞ்சொல்லிநிற்றும் நும்மேங்குகூக்குரல்கேட்டுமே" "மேற்கிளைக்கொள்ளேல்மின் நீருஞ்சேவலும்கோழிகாள் - ஆக்கையுமாவியுமந்தரநின்றுழலுமே" "அந்தரநின்றுழல்கின்ற யானுடைப்பூவைகாள் நுந்திறத்தேதுமிடையில்லை குழறேன்மினே" என்றும், "நன்கெண்ணிநான்வளர்த்த சிறுகிளிப்பைதலே இன்குரல் நீமிழற்றேல் - நின்பசுஞ்சாமநிறத்தனன் கூட்டுண்டுநீங்கினன்" "கண்ணன்மாயன்போல் கோட்டியவில்லொடுமின்னு மேகக்குழாங்கள்காள் - காட்டேன்மின்நும்முருவென்னுயிர்க்கதுகாலனே" "குயிற்பைதல்காள் கண்ணன்நாமமே குழறிக்கொன்றீர்" "பண்புடைவண்டொடுதும்பிகாள் பண்மிழற்றேன்மின், புண்புரைவேல்கொடுகுத்தாலொக்கும்நும்மின்குரல்" "நாரைக்குழாங்கள்காள்பயின்றென்னினி" என்றிப்படி, ரூபதர்ஶநத்தாலும் நாமசங்கீர்த்தநத்தாலும் ப்ரணயகூஜிதத்தாலும் மிகவும் தளர்ந்து, ஜீவநாத்ருஷ்டத்திலும் நசையற்றபடியென்கை. இப்படி மிகவும் பாரவஶ்யத்தையடைந்த. (மாறனருள்) "அருள்கண்டீரிவ்வுலகினில்மிக்கதே" என்னும்படியான ஆழ்வார்க்ருபையை அநுசந்திக்குமவர்களுக்கு மாநஸ்ஸு நீராயுருகும். "இதொரு க்ருபாதிக்யமிருந்தபடியே" என்று, ஹ்ருதயம் த்ரவீபூதமாம். (மாறனுரையுன்னுமவர்க்கு) என்று பாடமானபோது, ஆழ்வார் திவ்யசூக்தியை அநுசந்திக்கப்புக்கால், "இதுவுமொரு ஸ்ரீஸூக்தியே" என்று மாநஸ்ஸு த்ரவீபூதமாம்; "இவையொன்பதோடொன்றுக்கும்மூவுலகுமுருகுமே" என்றத்தைப் பின்சென்றபடி யென்றுகவுமாம். ......(அ௫)

ஒன்பதாம்பத்தில் - ஐந்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக, திருவாய்மொழி - அ௫.—பாட்டு - கூ௩ள.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஒன்பதாம்பத்து.

## ஆறுந்திருவாய்மொழி.

### உருகுமால் - ப்ரவேஶங்கள்.

#### ஆறுயிரப்படி,

(உருகுமால்) இப்படி யெம்பெருமானைப் பிரிந்த வ்யஸநத்தாலே முடிந்து பின்னையும் நெடும்போது கூட லப்த ஸம்ஜ்ஞரா யிருந்தவாழ்வார். ...... ............ ......... .............................................*

#### பன்னீராயிரப்படி.

ஆறுந்திருவாய்மொழியில், கீழ் இவர் ஸ்மாரகதர்ஶநத்தாலே அத்யந்தமவசந்நரானவளவிலே, ஆஶ்வாசகரமாம்படி ஈஶ்வரன் தன்குணங்களை ப்ரகாசிப்பிக்க; அவனுடைய வாஶ்சர்யப்ரகாரத்தையும், அநுபஹிதபந்தத்தையும், ஔதார்யஸ்வபாவத்தையும், அதிசயிதசீலத்தையும், ஆஶ்ரிதபவ்யதையையும், அத்யந்தவ்யாமோஹத்தையும், வ்யாமோஹபர்யவசாநத்தையும், அபேக்ஷா நிரபேக்ஷமான நித்யாதரத்தையும், அநுபாவ்யசௌந்தர்யத்தையும், அபிநிவேஶைசக்ர்யத்தையுமநுசந்தித்து, இந்தகுணங்களினுடைய வைலக்ஷண்யாநுபவத்தால் பிறந்த ப்ரீத்யதிசயத்தாலே, மிகவும் சிதிலராகிறார். ...............................................................................*

#### ஈடு.

“ எழுநண்ணினாமும்நம்வானநாடனேடொன்றினோம்” என்று தம்ஜீவநத்தில் நசையற்றுச் சொன்னவார்த்தையிறே கீழ்; இவ்வளவில் வந்து முகங்காட்டி யிவளைப் பெறுதல், இல்லையாகி விழத்தல் செய்யவேண்டும்படியான தசையாய்த்து. இவ்வவஸ்த்தையிலே; திருவடி சென்று கிட்டினபோது, முன்பு நெடுநாள்பட்டவ்யஸநமுங்கிடக்கச்செய்தே, பெருமாளும் வாராதிருக்க, “ [illegible] ” (ஸமாத்வா தஶதத்ராஹம் ராகவஸ்யநிவேஶநே । புஞ்ஜாநாமாநுஷாந்போகாந் ஸர்வ

காமஸம்ருத்திநீ ) என்கிறபடியே, பன்னிரண்டாண்டு பெருமாளுந்தானு மொருபடிப்படக் கலந்த கலவிவந்து பிராட்டிக்கு ஸ்ம்ருதிவிஷயமானாப் போலே; * இருத்தும்வியந்தில் தலைதடுமாறாகப்பிறந்த கலவிவந்து ஸ்ம் ருதிவிஷயமாய்த்து. அதுக்கடி, இவரதிகரித்த கைங்கர்யத்தை முடியச் செய்து தலைக்கட்டுகைக்கீடான இவருடைய ஜீவநாத்ருஷ்டமாவது; அ ன்றிக்கே, இவர் சொல்லக் கேட்கையிலே பாரித்துக்கொண்டிருக்கிற வீ ப்ஸவானுடைய பாக்யமாவது; பகவதநுபவப்ரீதி யுள்ளடங்காமை வழிந் து புறப்பட்ட விவர்சொல்லுக்கேட்டு பகவத்விஷயத்திலே ருசிபிறக்கவி ருக்கிற சேதநருடைய பாக்யமாவது. இப்படி, * இருத்தும்வியந்தில் சம் ஸ்லேஷம் வாரா ஸ்ம்ருதிவிஷயமாய்த்து. [ஸமாத்வாதஸ] [ஸமாத்வாதஸ] பிள்ளாய், இன்றிங்ஙனே வெறுந்தரையாயிருக்கிறநான், எங்கள் மாமனார் மாளிகையிலே பன்னிரண்டாண்டொருபடிப்பட ராமகுணங்களை விளைநீ ரடைத்துக்கொண்டேன்காண்! என்றருளிறே. இங்கு; *இருத்தும் வியந்து தன்னில் “மூவுலகுந்தன்னெறியா வயிற்றிற்கொண்டு - சிறியேனுடைச் சிந்தையுள்ளே - நின்றொழிந்தான்” என்று புறம்பெங்கும் முறையிலே பரிமாறினவன், இவரொருவரளவிலுமிறே முறைகெடப் பரிமாறிற்று; அப்படிப்பட்ட பரிமாற்றந்தான், இப்போதொரு ஸ்ம்ருதிமாத்ரமாயிருக் கையன்றிக்கே, ததாநீந்தநபுத்திபிறந்தது; அப்படியே, மேன்மையுடைய வன், அம்மேன்மையுங்கிடக்கச்செய்தே தாழநின்று பரிமாறினகுணத் தையும் வடிவழகையும்சொல்லி, அதுதான் “இப்போதையநுபவமே” என்னும்படியாயிருப்பதொரு புத்திபிறந்து, அவனுடைய சீலகுணாநுச ந்தாநத்தாலே சிதிலராகிறார்.

“கடலைத்தரைகாண்பாரைப்போலே, * இருத்தும்வியந்தி லநுப வத்தை யிதிலேகொண்டுவந்து சேர்ப்பதேநம்முதலிகள்!” என்று வித்த ராயருளிச்செய்வர். அப்ராப்தியுங்கிடக்கச்செய்தே, சீலகுணாநுசந்தாந த்தாலே சிதிலராகிறாராய்த்து. “அப்ரீதிகர்ப்பகுணாநுசந்தாநம்” என்ரு ளவந்தாரருளிச்செய்யும்சந்தை இதுக்கு.

[பஹவோந்ருப] [பஹவோந்ருப] சக்ரவர்த்தி, “பெருமாளைத் திருவபிஷேகம்பண்ணவேணும்” என்றுகோலி, “நாம் அறுபதினாயிர மாண்டுகூட ஒருதலைமிதிக்க ஒருதலைகிளர இப்படிவருந்தி யடிப்படுத்தின ராஜ்யத்தை இன்று சிறியவன்றலையில்வைத்தால் இதுபொறுக்குமோ” என்றுபார்த்து, “இதுதன்னை நாட்டோடேசேர விசாரித்துச்செய்வோம்” என்று, ராஜலோகத்தோடேகூட்டினவிடத்து, “ஜநௌகோத்குஷ்டஸந் நாதோ விமாநம் கம்பயந்நிவ” ( ஜநௌகோத்குஷ்டஸந்நாதோ விமாநம் கம்பயந்நிவ ) என்று - சக்ரவர்த்திமாளிகையழித்துச் செய்யவேண்டும் படி யார்த்துக்கொள்ள, அத்தைக்கேட்டு, நாம்நினைத்தகார்யம் வாய்க்கப் போய்த்து; ஆனாலுமிவர்கள் நினைவுதன்னை யிவர்கள்வாக்காலே சொல்ல

க்கேட்டாலாகாதோ'' என்னுமத்தைப்பற்ற, ''வாரிகோள், 'கயம்நமயி யரோண' (கதம்நுமயிதர்மேண) என்று - அறுபதினுயிரமாண்டு சிறிய த்தைப்பெரியது நலியாதபடியாக பூமிப்பரப்படையநோக்கிக்கொண்டு, 'பாண்டரஸ்யாதபத்ரஸ்யச்சாயாயாம்ஜரிதம்மயா' (பாண்டரஸ்யாதபத்ர ஸ்யச்சாயாயாம்ஜரிதம்மயா) என்று "மூத்தின்குடைநிழலிலேதிரிந்து எனக்கென்ன வொருசுகம்கோலாதே உங்களுடைய ரக்ஷணதர்மத்தை யேசெய்துகொண்டுபோந்தேன், நானொருவார்த்தைகேட்டவிடத்து 'இப்போது நீயிருக்கச்செய்தேவேணுமோ, க்ரமத்திலேசெய்துகொள்ளுகிறோம்' என்னுதல், அன்றியே 'கார்யமாகில் செய்யலாகாதோ' என்று வார்த்தைசொல்லுகையன்றிக்கே, படுகுலையடித்தவனைத்தப்ப ஒருதார்மிகன்கீழேயொதுங்க நினைப்பாரைப்போலே, என்னைவிட்டு என்மகனையமையும் என்று நீங்கள்விரும்புகைக்கு நானுங்களுக்குப்பண்ணின அபராதமென்?'' என்ன; ''நீயெங்களுக்குப்பண்ணிற்றோரபராதமில்லை, உன்மகனுடைய குணபராதங்களிதுக்கடி - நீநோக்கிக்கொண்டுபோந்தபடிகளிலொருகுறையில்லை, குணவானுயிருப்பானொரு புத்ரனைப்பெற்று நாட்டைப்படுகுலையடித்தாய்காண்.

"[பஹவ:] [பஹவ:] உன்னளவல்லகாண் ரக்ஷணதர்மத்திலவர்க்குண்டானபாரிப்பு.'' [தாதுநாமிவ] [தாதுநாமிவ] நாட்டிலே சிலரை குணஹீநரென்று நிந்தித்தும், சிலரை குணவான்களென்றுகொண்டாடுகிறதும், ''இன்ன ஆகரத்திற்பொன்'' என்று விலைபெறுமாபோலே, "இவ்வாப்ரயத்திலேகிடக்கிறகுணம்" என்றுய்த்து புறம்புவிலைபோவது. "ஹ்ருதயாந்யாமமந்தேவ ஜநஸ்யகுணவத்தயா" (ஹ்ருதயாந்யாமமந்தேவ ஜநஸ்யகுணவத்தயா)...................................................*

## ஜீயர் அரும்பதம்.

உருகுமால் ப்ரவேஶே, வ்ருத்தாநுவாதபூர்வகமாக சங்கதி (எழநண்ணியித்யாதி) விவரணம் (இவ்வளவிலித்யாதி) இத்தால் - கீழிவர்க்கோடின வ்யஸநம் வாசாமகோசரமென்றபடி.

இத்திருவாய்மொழிக்கு சங்கதி (இவ்வவஸ்த்தையிலேயித்யாதி) பிராட்டிக்கு, திருவடியைக்காண்கையாலே ஸ்ம்ருதிகூடும், இவர்க்குக்கூடும்படி யென்னென்னில்; "ஸத்ருஶாத்ருஷ்டசிந்தாத்யாஸ்ஸ்ம்ருதபீஜஸ்யபோதகா:" (ஸத்ருஶாத்ருஷ்டசிந்தாத்யாஸ்ஸ்ம்ருதபீஜஸ்யபோதகா:) என்கிற ஸ்ம்ருதிஹேதுக்களில், இவ்விடத்தில் அத்ருஷ்டம் ஸ்ம்ருதிஹேதுவென்று விவக்ஷித்து, இத்தை த்ரிவிதமாக க்காட்டுகிறார் (அதுக்கடி யித்யாதிவாக்யத்ரயத்தாலே.)

ப்ரஸ்துதஶ்லோக வ்யாக்யாநம் (ஸமாத்வாதஶேத்யாதி.)

ஒருபடிப்படவென்றது- "காலாத்வநோரத்யந்தஸம்யோகேத்விதீயா" (காலாத்வநோரத்யந்தஸம்யோகேத்விதீயா) என்கிறசூத்ரத்தில், * அத்யந்தஸம்யோகத்தைப்பற்ற. இந்தசூத்ரத்துக் குதாஹரணம் - "மாஸமதீதே," (மாஸமதீதே)

“க்ரோஶங்குடிலா நதீ” (க்ரோஶம்குடிலாநதி) என்று. மாஸமதீதே என்றால்- ஒருமாஸமிடைவிடாதே அத்யயநம்பண்ணநின்றானென்றும், க்ரோஶம் குடிலா நதீ என்றால் - இரண்டரைநாழிகைதூர மிடைவிடாதே வக்ரையாயிருக்கிறது நதியென்றுமிறேயர்த்தம்.

*வீற்றிருந்தேழுலகுமுதலானவற்றிற் கலவியிருக்க, * இருத்தும் வியந்திலநுபவம் ஸ்ம்ருதிவிஷயமாய்த்தென்னுமதுக்கு நியாமகமேதென்ன; உபயமு மேகார்த்தமாகையாலேயென்கிறார் ( இங்கு இருத்தும்வியந்தித்யாதி ) முறைகெடப்பரிமாறுகையாவது - இவரை சேஷியாகவைத்து, தான் சேஷபூதனாகப் பரிமாறுகை. “பரிமாறிற்று என்று ரங்கு, அப்படியே, இங்கும் ‘அறிகிலேன்றன்னுள்ளனைத்துலகும்நிற்க’ என்றுதொடங்கி ‘சிறியவென்னுருயிருண்ட’ என்றார், முறைகெடப்பரிமாறினபடி தன்னையேசொன்னார், ஆகையாலே இரண்டு மேகார்த்தமாகையாலே, * இருத்தும்வியந்திலநுபவம் ஸ்ம்ருதிவிஷயமாய்த்து” என்றத்யாஹார்யம். “நினைதொறும்” என்றத்தைப்பற்ற (ஸ்ம்ருதிவிஷயமாய்த்தென்றது) பசித்தபோதுகண்ணுலத்தைநினைத்தாப்போலே, * இருத்தும்வியந்தி லநுபவம் ஸ்ம்ருதிவிஷயமானால் இப்போது சுகரூபமாகக்கூடுமோவென்ன (அப்படிப்பட்ட வித்யாதி) இவ்விடத்திலே - “ தவ ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ” (தச்சஸம்ஸ்ம்ருத்யஸம்ஸ்ம்ருத்ய) இத்யாதியையருளிச்செய்வர். கீழ்வாக்யவிவரணம் (அப்படியேமேன்மையித்யாதி) அம்மேன்மையுமென்றது - * இருத்தும்வியந்தில் மேன்மையுமென்றபடி. தாழநின்று பரிமாறினகுணத்தையுமென்றது - “நானுனக்காட்செய்யும்சீர்மை” என்றத்தைப்பற்ற. “கார்முகில்வண்ணன்” இத்யாதியைநினைத்து (வடிவழகையுமென்றது.)

* “ இருத்தும்வியந்திற் கலவி ஸ்ம்ருதிவிஷயமாய்த்து ” என்னுமதுக்கு ஆப்தசம்வாதம் ( கடலையித்யாதி. ) ( அருளிச்செய்வர் ) நஞ்சீயரென்றபடி. கீழ்த்திருவாய்மொழியிலே தன்னைக்காணவேணுமென்று வ்யஸநப்பட்டவர்க்கு, இங்கே தன்னை யநுபவிப்பித்தானோவென்ன ( அப்ராப்தியுமித்யாதி. ) அப்ராப்தியுமென்றது- ப்ரத்யக்ஷ சமாநாகார மாநசாநுபவமன்றிக்கே ஸ்ம்ருதிமாத்ரத்தால் வந்த வ்யஸநமும் கிடக்கச்செய்தேயென்றபடி. யத்வா, இவ்வாக்யம் - கீழே. “ குணஜ்ஞாநத்தாலே தரித்தார் ” என்றதுக்குச்சேர சங்கத்யந்தரமாய், * இன்னுயிர்ச்சேவலில் வ்யஸநமுங் கிடக்கச்செய்தே யென்னுதல். இதுக்குசம்வாதம் (அப்ரீதிகர்ப்பேத்யாதி.) ( இதுக்கு - ஆளவந்தாரருளிச்செய்யும் சந்தை - அப்ரீதிகர்ப்பகுணாநுசந்தாநம் ) என்றந்வயிப்பது. இதுக்கு - இத்திருவாய்மொழிக்கு.

குணங்களீடுபடுத்துமோவென்ன, ப்ரமாணம் ( பஹவஇத்யாதி. ) இதுக்கவதாரிகை ( சக்ரவர்த்தியித்யாதி. ) “ யஸ்ய ப்ரணவஸ்யாபி வீர்ய நஸ்யாவஸதி ” (தர்மேணப்ருதிவீமநுஶாஸதி ) என்றதுக்கர்த்தம் ( சிறியத்தையித்யாதி. ) முத்துக்களால் வந்த பாண்டரத்வமென்று திருவுள்ளம்பற்றி ( முத்தின்குடையென்றது. ) படுகொலையடித்தவனை - கொலையிலே பட்டுவிழும்படி யடித்தவனை; ஹிம்ஸகனையென்றபடி.

“ பஹவ: ” ( பஹவ: ) என்ற சப்தமாபேக்ஷிகமாகையாலே (உன்னளவல்லகாண்) என்கிறார். அப்படிகுணங்களுண்டோவென்ன (தாநாமித்யாதி) தாநு: - ரத்நசுவர்ணாதிகள். சிலரைநிந்திக்கிறது - இவருடையகுணம் இல்லாமையாலேயென்று சருத்து. குணமீடுபடுத்துமென்னுமதுக்கு ப்ரமாணாந்தரம் (ஹ்ருதயாநீத்யாதி) ஆமமந்தேவ-கடைந்தவர்போலே யானாரென்றபடி.

“ஷஹவொரூபகஸ்யாண ஜுணாஃபுத்ரஸ்யஸந்திதெ” (பஹுவோந்ருபகல்யாணகுணஃபுத்ரஸ்யஸந்திதே) இத்யயோத்யாகாண்டே தஶரதம்ப்ரதி ராஜலோகஃ. தத்ரைவ, “ஹிஹெஹா நாநாஜீவஜ்ஜெ தது ஹஷீஸீஸிதஃ। ஜநஸெொஜுஷ்லஸநாஷெவிநாநங்க யஷீவ। கயாநாயியஜெணவீ ஶிவீ நாஶாஸதி। ஸவணொஜுஷாவிஷியாவாராஜங்ஜாதுஜ। ஜஜஶ ரீரங்கூதுஸ்லொகஸ்வாதாஹிதழ। வாணுஸ்ாதவதூஸ்ஹா யாயாஜஸிதஜயா” (ஸ்நிக்தோநுநாதீஸஞ்ஜஜ்ஞேதத்ரஹர்ஷஸமீரிதஃ। ஜநௌகோத்குஷ்டஸந்நாதோவிமாநம்கம்பயந்நிவ। கதம்நுமயிதர்மேணப்ருதிவீமநுஶாஸதி। பவந்தோத்ரஷ்டுமிச்சந்தியுவராஜம்மமாத்மஜம்। இதம்ஶரீரம்க்ருத்ஸ்நஸ்யலோகஸ்யசரதாஹிதம்। பாண்டரஸ்யாதபத்ரஸ்யச்சாயாயாம்ஜரிதம்மயா) இதி. “ஜாநவிஜாநஸவணொநிஷெஶநிாதஃவிதஃயாதஹ நாஜிவஸெஶ்மெதூாஜுணாநாஜாகஸொஜஹாநு” (ஜ்ஞாநவிஜ்ஞாநஸம்பந்நோ நிதேஶேநிரதஃபிதுஃ। தாதூநாமிவஶைலேந்த்ரோகுணாநாமாகரோமஹாந்) இதி கிஷ்கிந்தாகாண்டே வாலிநம் ப்ரதிதாரா. “விராஜயநுராஜஸொதாராஜஜாமஜுநஸெவூஷதழ। ஹூஜயாநாஜஜெவஜநஸ்ஜுணவதுயா” (விராஜயந்ராஜஸுதோராஜமார்க்கம்நரார்வ்ருதம்। ஹ்ருதயாந்யாமமந்தேவஜநஸ்யகுணவத்தயா” இத்யயோத்யாகாண்டே. ..................................................................*

---

## ஆறுந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

உருகுமாலெனஞ்சமுயிரின்பரமன்றிப்
பெருகுமால்வேட்கையுமென்செய்கேன்கொண்டனேன்
றெருவெல்லாங்காவிகமழ்திருக்காட்கரை
மருவியமாயன்றன்மாயநினைதொறே.

### ஆறுயிரப்படி.

திருக்காட்கரைமருவியமாயன் பண்டென்னோடு கலந்து பரிமாறின பரிமாற்றங்களை நினைக்க நினைக்க ப்ரீத்யதிசயத்தாலே யென்னெஞ்சமிஞ்சு நீராயுருகாநின்றது, இப்படி படாநின்றால் மாயங்களை நினைக்கை தவிரலாமிறே, என்னுடைய நிரவதிகமான வபிநிவேசமானது தவிரவொட்டுகிறதில்லை, நானென்செய்கேனென்கிறார்..................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், திருக்காட்கரையில் நிற்கிற சர்வேஶ்வரனுடைய ஆஶ்சர்யப்ரகாரத்தை யநுபவித்து, அபிநிவேசத்தாலே யென்னெஞ்சு சிதிலமாகாநின்றதென்கிறார்.

தெருவெல்லாம் - வீதிகள்தோறும். காவிகமழ் - செங்கழுநீர் மணங்கமழும்படியான. திருக்காட்கரை - திருக்காட்கரையிலே. மருவிய-பொருந்திவர்த்திக்கிற. மாயன்றன் - ஆஶ்சர்யபூதனுடைய. மாயம் - அத்யாஶ்சர்யமான சௌந்தர்யஶீலாதிகளை. நினைதொறும் - அநுசந்திக்குந்தோறும். நெஞ்சம் - அநுபவப்ரகாரோபகரணமான நெஞ்சு. உருகும் - சிதிலமாய் த்ரவியாநின்றது. அநுபவ சாரஸ்யாதிசயத்தாலே, உயிரின்பரமன்றி - ஆத்மாவுக்குப் பொறுக்கவரிதாம்படி. வேட்கை - அபிநிவேசம். பெருகும் - அதிப்ரவ்ருத்தமாகாநின்றது. தொண்டனேன் - அத்யந்தசபலனான நான். என்செய்கேன் - மநஸ்ஸைஶைதில்யத்தைமாற்றவோ, அபிநிவேசத்தையஸங்குசிப்படுத்தவோ, அநுபாவ்யகுணாதிகளை விலக்கவோ, ஆஶ்ரயகதமான சாபல்யத்தைத் தவிர்க்கவோ, ஏதுசெய்வேன்.

"ஆல்" என்ற அசை - விஸ்மயத்தைக் காட்டுகிறது........................*

## ஈடு - முதற்பாட்டு.

திருக்காட்கரையிலெம்பெருமானுடைய ஆஶ்சர்யங்களான பரிமாற்றங்களை நினைதொறுமென்னெஞ்சு சிதிலமாகாநின்றதென்கிறார்.

(உருகுமால்நெஞ்சம்) அநுபவத்துக்கு ப்ரதமோபகரணமான நெஞ்சு சிதிலமாகாநின்றது. அநுபவிக்கைக்கும் அநுபவித்து நிர்வ்ருதராகைக்கும் நெஞ்சுவேணுமிறே. நீஞ்சப்புக்கவனுக்கு வாய்கரை தெப்பமொழுகுமாபோலே, பரிகரமான நெஞ்சு சிதிலமாகாநின்றது. "தொழுதெழு" என்கைக்கும், "நீயுநானுமிந்நேர்நிற்கில்" என்கைக்கும் நெஞ்சுவேணுமே. எதிர்த்தலையையுண்டாக்கிக் கலக்கவறியான்காணும். கலக்கைக்கிரண்டுதலையும் வேணுமென்றிரான். (உயிரின்பரமன்றிப்பெருகுமால்வேட்கையும்) ஆத்மாவுக்குப் பொறுக்கவொண்ணாதபடி அபிநிவேசம்பெருகாநின்றது. பிள்ளாய், அணுபரிமாணமான விவ்வஸ்துவினளவல்ல, ஆற்றுப்பெருக்குப்போலே மேன்மேலன பெருகாநின்றது. (ஆல்) விஷாதாதிசயஸூசகம். "நெஞ்சம் - உருகுமால் - வேட்கையும் - பெருகுமால்" என்று, தம்மால் நியமிக்கவொண்ணாத விஷாதந்தோற்றச்சொல்லுகிறார். (என்செய்கேன்) நெஞ்சையுருகாமல் கரைகட்டுவதோ, வேட்கைபெருகாமல் தகைவதோ, இவற்றுக்கடியான அவன்குணங்களைத் தவிர்ப்பனோ. (தொண்டனேன்) அதுக்கடியான வென் சாபலாதிசயத்தைத் தவிர்ப்பனோ. சாபலம், அபூமி என்று கைவாங்கவொட்டுகிறதில்லை; (வைலக்ஷண்யம்,) மறந்தும் தரிக்கவொட்டுகிறதில்லை. (தெருவெல்லாங்காவிகமழ்) நெஞ்சுருகுகைக்கும் வேட்கைபெருகுகைக்கும் ஹேதுசொல்லுகிறது. (தெருவெல்லாம்) குறுந்தெருவென்று அணைகட்டவொண்ணாதபடி, குறுந்தெருவோடு நெடுந்தெருவோடு வாசியறச் செங்கழுநீரின் பரிமளம் பரக்கிறபடி. ஊரோடுசேர்ந்த பொய்கைகளாகையாலே, உள்ளோடுபுறம்போடு வாசியறப் பரிமளமலையெறிகிறபடி. தெருவிலொருபரிமளம், உள்ளு * சர்வகந்தஃ. (திருக்காட்கரைமருவிய) இத்தால் - பரத்வத்திலு மவதாரத்திலு மேற்றஞ்சொல்லுகிறது. பரத்வம், நெ

டுங்கைநீட்டு; அவதாரம், காலாவதியுடைத்து. (மாயன்) சௌந்தர்ய சீலாதிகளாலே பிறரைப் பிச்சேற்றவல்லவன். (மாயம்) கிட்டினபோது தாழநின்று பரிமாறினபடி. குறைவாளர் நிறைவாளரைப்பற்றி யநுவர்த்திக்குமாபோலேயாய்த் தநுவர்த்தித்தபடி. (நினைதோறே) ஊரை நினைதோறும், சௌந்தர்யத்தை நினைதோறும், ஒரு ஊரும் வடிவுமில்லாதாரைப்போலே தாழநின்ற சீலவத்தையை நினைதோறும். (நினைதோறும்) எத்தனைகாலம் நினைக்கப்புக்கார், எத்தனைகாலம் மீண்டார்.-ஒன்றோடொன்று சேராதன நூறுயிரத்தை யநுபவிப்பிக்கவல்லனவன், ஒருகுணந்தன்னையே காலதத்த்வமுள்ளதனையும் கால்தாழ்ந்து க்ஷணந்தோறும் புதுமைபிறந்து அநுபவிக்கவல்லரிவர்; "அப்பொழுதைக்கப்பொழு தென்னாராவமுதம்" என்னுமவரிறே........................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (உருகுமாலித்யாதி.) "திருக்காட்கரைமருவிய மாயன்றன் மாயம் நினைதோறும் - உருகுமால்நெஞ்சம்" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (திருக்காட்கரையிலித்யாதி.)

கரணாந்தரங்களுமுருகாநிற்க நெஞ்சை விசேஷிப்பானென்னென்ன (அநுபவத்துக்கித்யாதி.) நெஞ்சுக்கு ப்ரதமோபகரணத்வ மெப்படியென்ன (அநுபவிக்கைக்குமித்யாதி.) அநுபவோபகரணமான நெஞ்சு சிதிலமானு லநுபவிக்க விரகில்லையென்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் (நீஞ்சவித்யாதி.) வாய்கரையிலே - ஆற்றருகே. "அநுபவிக்கைக்கும் அநுபவித்து நிர்வ்ருதராகைக்கும் நெஞ்சுவேணும்" என்னுமதுக்கடைவே ப்ரமாணத்வயம் (தொழுதெழுவித்யாதி.) "ஆல்" என்றதுக்கு பாவம் (எதிர்த்தலையையித்யாதி.) விவரணம் (கலக்கைக்கித்யாதி.)

கீழ்வாக்யத்துக்கு பாவமாதல், "பெருகும்" என்கிற வர்த்தமாநார்த்தமாதல் (பிள்ளாயித்யாதி.) பிள்ளாயென்றது - வார்த்தைப்பாடு. விஷாதாதிசயமேதென்ன (நெஞ்சமித்யாதி.) அதாவது,- "ஒருசீலமிருந்தபடியென்" என்று ஈடுபடுகிற மநஸ்ஸைதில்யத்தையும், "இந்தசீலாதிகளை உத்தரோத்தர மநுபவிக்கவேணும்" என்கிற அபிநிவேசப்பெருக்கையும் தம்மால் நியமிக்கப்போகாத விஷாதாதிசயமென்றபடி.

தம்மாலிதுக்கொரு ப்ரதிக்ரியை யில்லையென்னுமத்தை மூன்றுவாக்யத்தாலே தர்சிப்பிக்கிறார் (நெஞ்சையித்யாதி.) அவன்குணங்களையென்றது - "மாயன்" என்றத்தைப்பற்ற. ஆனால் கைவாங்கினாலோவென்ன (சாபலமித்யாதி.) மறந்தாலோவென்ன (வைலக்ஷண்யம் மறந்தித்யாதி.)

"தெருவெல்லாம்" இத்யாதிக்கவதாரிகை (நெஞ்சுருகுகைக்குமித்யாதி.) காவி - செங்கழுநீர். "தெருவெல்லாம்" என்றதுக்சர்த்தத்வயம். "தெரு" என்று-குறுந்தெருவாய், "எல்லாம்" என்று - நெடுந்தெருவாய், (குறுந்தெருவோடுநெடுந்தெருவோடு வாசியற) என்று முந்தினவர்த்தம்; அத்தை யருளிச்செய்கிறார் (குறுந்தெருவென்றளையித்யாதி.) "தெரு" என்று - புறம்பாய், "எல்லாம்" என்று-உள்ளாய், (உள்ளோடு புறம்போடு வாசியற) என்றிரண்டாமர்த்தம்; இத்தை யருளிச்செய்கிறார் (உள்ளோடித்யாதி.) தெருவெல்லாம் செங்கழுநீர் பரிமளமாகை

க்கு ஹேது (ஊரோடுசேர்ந்தபொய்கையாகையாலே யென்று.) தெருவிலே யன்றே பரிமளமுள்ளதென்ன (தெருவிலொருவித்யாதி.) "காட்கரை" என்கையாலே - பரத்வவ்யாவ்ருத்தி; "மருவிய" என்கையாலே - அவதார வ்யாவ்ருத்தி. அவற்றுக்குக் குற்றமேதென்ன (பரத்வமித்யாதி.) "மாயம்" என்று - பரிமாற்றம். தாழநின்று பரிமாறினதின் சரமாவதி (குறைவாளரித்யாதி.) "நினைக்குந்தோறும்" என்கைக்கு நினைவில் வைவித்யமேதென்ன; விஷயபேதத்தாலே நினைவும் விவிதமாயிருக்குமென்கிறார் (ஊணாயித்யாதி.) கீழ் விஷயபேதத்தாலே ஸ்ம்ருதிபேதமாகவருளிச்செய்வது; "மாயம்நினைதோறும்" என்கிற பதஸ்வாரஸ்யத்துக்காக ஏகவிஷயந்தன்னிலே ப்ரேமபாரவஶ்யத்தாலே நினைக்கப்புகுவது மாட்டாதொழிவது பின்னையும் நினைக்கப்புகுவது ஈடுபாட்டாலே மாட்டாதொழிவதாய் இப்படி ஸ்ம்ருதிபேதமென்று விவக்ஷித்து "நினைதொறும்" என்கிறதொன்று பாவாந்தரம் (எத்தனைகாலமித்யாதி.) இப்படி முடியச்செல்லுகைக்கு ஹேதுவேதென்ன; இருவர்படியாலுமென்கிறார் (ஒன்றேடொன்றித்யாதி.) அப்படி யநுபவிப்பரோவென்ன (அப்பொழுதைக்கித்யாதி.)

தெருவெல்லாமென்று தொடங்கி, நினைதொறும் - நெஞ்சம் - உருகுமால் * உயிரின் பரமன்றி - வேட்கை - பெருகுமால் - தொண்டனேன் - என்செய்கேனித்யந்வயః ........................................................................

---

# இரண்டாம்பாட்டு.

நினைதொறுஞ்சொல்லுந்தொறுநெஞ்சிடிந்துகும்
வினைகொள்சீர்பாடிலும்வேமெனதாருயிர்
சுனைகொள்பூஞ்சோலைத்தென்காட்கரையென்னப்பா
நினைகிலேனுனக்காட்செய்யுநீர்மையே.

## ஆறாயிரப்படி.

(நினைதொறும்) எல்லாருடைய துஃகங்களையும் போக்கக்கடவதான வுன்னுடைய விக்ருணங்களை நினைத்தல் சொல்லுதல் பாடுதல் செய்யில், என்னெஞ்சும் இவ்வாத்மாவும் மாயாநின்றன; "நீரிங்ஙனேயீடுபடுகைக்கு உம்முடையதிறத்தில் நான்செய்ததென்" என்னில்; நான், "உன்னையடிமைகொள்ளுகிறோம்" என்று கொண்டு வந்து நீ யென்றிறத்துச்செய்தருளின செயல்களை, நினைக்கலாமோவென்கிறார். ............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிருபாதிகபந்துவான வுன்னுடைய சம்ஶ்லேஷப்ரகாரத்தை யநுசந்திக்க க்ஷமனாகிறிலேனென்று அவன்றன்னை நோக்கி யருளிச்செய்கிறார்.

சுனைகொள் - தடாகங்களையுடைத்தான. பூஞ்சோலை - பூஞ்சோலைகளையுடைய. தென் - தர்ஶநீயமான. காட்கரை - திருக்காட்கரையிலே. என் அப்பா - எனக்கு நிருபாதிகபந்துவாய்க்கொண்டு நிற்கிறவனே. வினைகொள் - உன்னுடைய சம்ஶ்லேஷாதிசய வ்யாபாரப்ரகாசகமான. சீர் - சீலசௌலப்யாதிகுணங்களை. நினைதொ

றும் - ப்ரதிக்ஷணமநுசந்திக்குந்தோறும். நெஞ்சு - அநுசந்தாநோபகரணமான நெஞ்சானது. இடிந்து - சிதிலமாய். அவ்வநுசந்தாநம் அபிநிவேசவாஸநையாலே வாக்வ்யவஹாரவிஷயமாய்க்கொண்டு, சொல்லுந்தோறும் - சொல்லத்தொடங்கின க்ஷணந்தோறும். உகும் - நெஞ்சுதான் நீராயுருகாநின்றது. அவ்வபிநிவேசமொட்டில்நில்லாமையாலே, பாடிலும் - "பாடியிளைப்பிலம்" என்கிறபடியே அக்குணங்களைப்பாடி தரிக்கத்தேடிலும். எனதாருயிர் - கரணியான வென்னுத்மாவானது. வேம்-ரசாதிசயமாற்றமாட்டாமையாலே பரிதப்தமாகாநின்றது. ஆதலால், நான் - ஏவம்விதனான நான். உனக்கு - உனக்கு. ஆட்செய்யும் - சேஷவ்ருத்திபண்ணுகைக்குறுப்பான, நீர்மை - ப்ரகாரத்தை. நினைகிலேன் - நினைக்கவும் க்ஷமனாகிறிலேன். ...*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

திருக்காட்கரையி லெம்பெருமானைக் குறித்து, உன்னோடு நான் பரிமாறின பரிமாற்றத்தை நினைக்க க்ஷமனாகிறிலேனென்கிறார்.

(நினைதொறும்) நினைக்கவென்றுபக்ரமிப்பர்; அந்நினைவுமாறாதே செல்லவொண்ணாதபடி பலஹாநிமிகும், ஆனாலும் மறக்கமாட்டார்; திரியநினைக்கவென் றுபக்ரமிப்பர், தலைக்கட்டமாட்டார்; எத்தனைகாலம் நினைக்கப்புக்கார், எத்தனைகாலம் மீண்டார். (சொல்லுந்தொறும்) நினைக்கவே யரிதானவிஷயத்தை, சொல்லவொண்ணாதென்னுமிடந் சொல்லவேண்டாவிறே. "ஈநஃவெ-ஸுவெ-நிவாமஸுதூஃ" [மநஃபூர்வோவாக்குத்தரஃ] என்கிற கணக்கன்றிக்கே, "குறளாகியவஞ்சனேயென்னு மெப்போதுமென்வாசகம்" என்கிறபடியே, இவருடையவாக்குத்தானெப்போதும் பேசாநிற்குமே; அந்த வாஸநையாலே அஹ்ருதயமாகச்சொல்லாநிற்பர்; அதுதான் செவிவழியாலே உள்ளேபுக்கு ஊற்றிருந்து, குணாதிகவிஷயமாகையாலே நெஞ்சையழிக்கும். (நெஞ்சிடிந்துகும்) நெஞ்சு கட்டழிந்து நீராகாநின்றது. பெருக்காற்றின் கரையிடிந்து பின் நீராய்க்கரைந்துபோமாபோலே, ஓரவயவியாக்கிக் காணவொண்ணாதபடி உக்குப்போகாநின்றது. (வினைகொள்சீர்) பாபஹரமான கல்யாணகுணம். சர்வர்க்கும் துஃகநிவர்த்தகமானகுணங்கள், என்னை யொருவனையு மழியாநின்றன; அன்றியே, சீரொன்று - சீலமாய், வினையென்று - சேஷ்டிதம், அதாவது - சீலகார்யமாய்த் தாழநின்று பரிமாறும் பரிமாற்றம், "ஸூ்ீவஂநாயமிஜுதி" (ஸுக்ரீவம்நாதமிச்சதி) என்னக்கடவதிறே, என்றுமாம். (பாடிலும்) அடைவுபடப் பேசுமதொழிய, ஆர்வத்தாலேபாடுவதொன்றுண்டு; அத்தைச் செய்யிலும். (வேமெனதாருயிர்) மநஸ்ஸையன்றிக்கே, * அதாஹ்யமான வாத்மவஸ்துவையும் தஹியாநின்றது. எல்லாத்துக்கும் குளிர்த்தியைப் பண்ணக்கடவதான பனி தாமரையொன்றையும் சருகப்பண்ணுமாபோலே, சகலதுஃகநிவர்த்தகமான குணங்கள் எனக்கு பாதகமாகாநின்றன. (வேமெனதாருயிர்) "அதாஹ்ய" (அதாஹ்யம்) என்கிறது, அக்நிக்கு, பகவத்குணங்கள்புக் கழிக்கமாட்டாததில்லை.

(சுனையித்யாதி) தம்மைக் குமிழ்நீருட்டின ப்ரதேசங்கள். சுனைகளையும் தர்ஶநீயமானசோலைகளையு முடைத்தாயிருக்கிற திருக்காட்கரையிலே நிருபாதிகபந்துவாய் சந்நிஹிதனானவனே. (நினைகிலேன் நானுனக்காட்செய்யும்நீர்மையே) நானுனக்கடிமைசெய்யும் ப்ரகாரம் நினைக்கமாட்டுகிறிலேன். "வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்" என்றிருந்த நான், வகுத்த சேஷியான வுனக்கு. அவன் தாழநின்று பரிமாறினபடியை, விநயத்தாலே (ஆட்செய்யும்நீர்மை) என்கிறார். அவன் தமக்காட்செய்த நீர்மையை, தாம் (ஆட்செய்யும்நீர்மை - நினைகிலேன்) என்கிறார், இச்சொலவையு மிழக்கவொண்ணாதென்று. "(நானுனக்காட்செய்யும்நீர்மை) என்பானென், 'நீயெனக்காட்செய்யும்நீர்மை' என்னாமல்" என்ன; "இச்சொலவையுமிழப்பரோபாவியார்" என்றெம்பார்.......*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (நினைதொறுமித்யாதி.) "தென்காட்கரை யென்னப்பா - நானுனக்காட்செய்யும் நீர்மை - நினைகிலேன்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (திருக்காட்கரையிலித்யாதி.)

"நினைதொறும்" என்று நினைவில் வைவித்யமேதென்ன (நினைக்கவென்றித்யாதி, மீண்டாரொன்னுமளவும்.) (நினைக்கவேயரிதான) இத்யாதி வாக்யாநந்தரம் "பின்னை சொல்லும்படி யென்னென்னில்" என்று சங்கையைப் பூரிப்பது. பரிஹாரம் (மந:பூர்வஇத்யாதி.) நினைதொறும் நெஞ்சிடிந்துகக்கக்கூடும், சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்படி யென்னென்ன (அதுதானித்யாதி.) ஸத்ருஷ்டாந்தவிவரணம் (பெருக்காற்றிலித்யாதி.)

கொள்கை - ஜயிக்கை. பாபத்தை ஜயிக்கையாவதேதென்ன (பாபஹரமானவித்யாதி.) "எனது" என்றத்தைக் கடாக்ஷித்து கீழ்வாக்யத்துக்குபலிதம் (சர்வர்க்குமித்யாதி.) ஸ்வகார்யமான சேஷ்டிதத்தையுடைய சீலமென்றிரண்டாமர்த்தம். வினை - சேஷ்டிதம். கொள்கை - உடைத்தாகை. தாழநின்று பரிமாறினதுக்கு ப்ரமாணம் (ஸுக்ரீவம்நாதமித்யாதி) "ஏஷ தத்த்வா ச வித்தாநி ப்ராப்ய சாநுத்தமம் யஶ꞉। லோகநாத꞉ புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி" (ஏஷதத்வாசவித்தாநிப்ராப்யசாநுத்தமம்யஶ:। லோகநாத:புராபூத்வாஸுக்ரீவம்நாதமிச்சதி) இதி மாருதிம் ப்ரதிலக்ஷ்மண:. என்றுமாமென்றது - "வினைகொள்சீர்" என்றதுக்கு அர்த்தாந்தரங்காட்டினபடி. "சொல்லுந்தொறும்" என்றதுக்கும், "பாடிலும்" என்றதுக்கும் பேதமேதென்ன (அடைவுபடவித்யாதி.) ஆர்வத்தாலே-ப்ரீதியாலே. "ஆருயிர்" என்றதுக்கு பாவம் (மநஸ்ஸையித்யாதி.) "எனது" என்றது - எனக்கொருவனுக்குமென்றபடியாய், சர்வர்க்கும் து:கநிவர்த்தகமானகுணங்களுமக்கு பாதகமாவானென்னென்ன; ஸத்ருஷ்டாந்தமாகக் காட்டுகிறானென்னுதல், "சர்வர்க்கும் து:கநிவர்த்தகமான" இத்யாதிவாக்யத்தை த்ருஷ்டாந்தபூர்வகமாகவிவரிக்கிறாராதல் (எல்லாத்துக்குமித்யாதி.) அதாஹ்யமானது வேவக்கூடுமோவென்ன (அதாஹ்யமென்கிறதித்யாதி.)

சுனைகளையும் சோலைகளையும் ஊரையுஞ் சொன்னதுக்கு பாவம் (தம்மையித்யாதி.) குமிழ்நீருட்டின - தலஸ்பர்ஶியாக வமிழப்பண்ணின. சப்தார்த்தம் (சுனைகளையுமித்யாதி.)

"நான், உனக்கு" என்ற பதத்வயத்துக்கும் பாவம் (வழுவிலாவித்யாதி.) அவன் தாழநின்று பரிமாறுகிற ப்ரகரணத்திலே, நீயெனக்காட்செய்யும் நீர்மையென்னும்த, "நானுனக்காட்செய்யும்நீர்மை" என்பானென்னென்ன (அவன்தாழநின்றித்யாதி.) விநயத்தாலே - நைச்யத்தாலே. அவன் தாழநின்று பரிமாறினானாகில் விநயத்தாலே சொன்னதுக்கு ப்ரயோஜநமேதென்ன (அவன்தமக்கித்யாதி.) இதுக்கு சம்வாதம் (நானுனக்கித்யாதி.)

சுனைகொளென்றுதொடங்கி, என்னப்பா - வினைசொள்சினை - நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும் - பாடிலும் - எனதாருயிர் - வேம்; ஆகையாலே, நானுனக்காட்செய்யும் நீர்மை - நினைக்கிலேன் இத்யந்வய:. ....................*

## மூன்றாம்பாட்டு.

நீர்மையானெஞ்சம்வஞ்சித்துப்புகுந்தென்னை
யீர்மைசெய்தென்னுயிராயென்னுயிருண்டான்
சீர்மல்குசோலைத்தென்காட்கரையென்னப்பன்
கார்முகில்வண்ணன்றன்கள்வமறிகிலேன்.

### ஆறாயிரப்படி.

(நீர்மையால்) உம்மையடிமைகொள்ளுகைக்கு மேற்படச்செய்ததுண்டோவென்னில்; அடிமைகொள்ளுவாரைப்போலே யென்னெஞ்சைவஞ்சித்துப்புகுந்து, தன்குணங்களாலும் செயல்களாலு மென்னை மாய்த்து, என்னுயிராய், என்னுயிரைபுஜித்தருளினான்; முந்தற மெய்யரைப்போலே வந்துபுகுந்தபடியும், பின்னைச்செய்தபடியும், ஒருவன்வஞ்சித்தபடியொன்று மறிகிறிலேனென்கிறார் ... .............................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், உதாரமான காளமேகஸ்வபாவனானவன் முறையிலே வருவாரைப்போலேகிட்டி தான் தாழநின்று பரிமாறின முறைகேடான க்ருத்ரிமத்தையே யறுதியிட்டு, அறியமாட்டுகிறிலேனென்கிறார்.

நீர்மையால்-ஸ்வஸ்வாமிசம்பந்தமாகிற நீர்மையை ப்ரகாசிப்பிக்கையாலே. நெஞ்சம்-என்னெஞ்சை. வஞ்சித்து-தன்வசமாக்கி. புகுந்து-புகுந்து. தன்சீல சௌலப்யாதிகளுக்கு ப்ரகாசகமான சேஷ்டிதங்களாலே என்னை ஈர்மைசெய்து என்னை ஈருந்தன்மையைப்பண்ணி, என்னுயிராய்-இவ்விரண்டாகாரத்தாலு மெனக்குதாரகனாய், என்னுயிருண்டான் - என்னைபுஜிக்குமவனாய்க்கொண்டு. சீர்மல்கு-மதுபுஷ்ப சம்பத்சம்ருத்தியையுடைத்தான. சோலை-சோலையையுடைய. தென்-அழகிய. காட்கரை-திருக்காட்கரையில் சந்நிதியாலே. என்னப்பன்-எனக்குபகாரகனாய். கார்முகில்வண்ணன்றன் - கார்காலத்துமேகம்போலே அதிசயிதௌதார்ய ஸ்வபாவனானவனுடைய. கள்வம் - முகப்பொன்றும் முடிவொன்றுமான க்ருத்ரிமசேஷ்டிதத்தை. அறிகிலேன்-இன்னபடியிருக்கிறதென் றறியமாட்டுகிறிலேன்.

நீர்மையென்று - சீலாதிகளாய், ஈர்மையோடே சேர்க்கவுமாம் ...........*

## ஈடு - மூன்றும்பாட்டு.

அடிமைகொள்ளவென்றுபுகுந்து, தன்படிகளைக்காட்டி சர்வஸ்வ ஹரணம்பண்ணினபடிகளை அநுசந்திக்க க்ஷமனாகிறிலேனென்கிறார்.

(நீர்மையால்நெஞ்சம்வஞ்சித்துப்புகுந்தென்னை யீர்மைசெய்து) (நெஞ்சம்வஞ்சித்துப்புகுந்து என்னை-நீர்மையால்-ஈர்மைசெய்து) தான் சேஷியும் நான் சேஷபூதனுமான முறையிலே பரிமாறவேணுமென்று நெஞ்சையிசையப்பண்ணி, க்ருத்ரிமித்துப்புகுந்தான்; முறைகெடப்புகுரவென்னில் இசையாரிறே. க்ருத்ரிமிக்கையாவது-ஒன்றைச்சொல்லி மற்றொன்றைச்செய்கையிறே. அதேதென்னில் (நீர்மையால்-என்னை ஈர்மைசெய்து) நீர்மையாவது-தாழநின்று பரிமாறுகையும், அதுக்கடியானசீலமும். (என்னை) "முறையிலே பரிமாறவாரும்" என்றத்தை மெய்யென்றிருந்தவென்னை. (ஈர்மைசெய்து) ஈரும்தன்மைகளைச்செய்து. தன்தாழ்ந்தசெயல்களாலே யீடுபடுத்தியென்னுதல்; ஈரப்பாட்டைவிளைத்தென்னுதல், என்னை நீராம்படிபண்ணியென்கை. (என்னுயிரா யென்னுயிருண்டான்) எனக்குதாரகனைப்போலேபுகுந்து என்னையழித்தான்; பாதகனாய்ப்புகுரி லிவரிசையாரோ!; இருவருங்கூட புஜிக்கப்புகுந்து போக்தாதானேயானான்; அன்றிக்கே, (என்னுயிராயென்னுயிருண்டான்) எனக்குத் தன்னாலல்லது செல்லாதபடிபண்ணி யென்னைபுஜிப்பதுஞ்செய்தானென்றுமாம்.

(சீர்மல்குசோலை) அழகுமிக்கசோலை. என்னோட்டைக் கலவியாலவனுக்குண்டான பௌஷ்கல்யம் அவ்வூரிற்சோலையே கோட்சொல்லித்தாராநின்றது. (தென்காட்கரையென்னப்பன்) சுலபனுமாய் நிருபாதிகபந்துவுமானவன். என்கார்யத்துக்குத்தானேகடவனாயிருக்கிற பந்தந்தோற்ற ஸம்நிஹிதனாயிருக்கிறவன். (கார்முகில்வண்ணன்) என்னோட்டைக் கலவியாலே, கடலைமுழுக்கப்பருகின காளமேகம்போலேயாய்த்து அவன்வடிவிற் செவ்வியிருப்பது. "தூநீர்முகில்போல்தோன்றாயே" என்றிவராசைப்பட்டபடியேதோற்றி யநுபவிப்பித்துப் போராநின்றபின்பு, அத்தலையிற்செவ்வியிருந்தபடி. (தன்கள்வமறிகிலேன்) முகப்பிலொன்றாய் முடிவிலொன்றான செயல்கள்தெரிகிறதில்லை. அடிமைகொள்ளவென்று புகுந்து அச்செயலைத்தான்செய்து நின்றநிலை யெனக்கொன்றுந்தெரிந்திருக்கிறதில்லை. (அறிகிலேன்) சர்வாதிகனிப்படி தாழநின்று பரிமாறுகைகூடாது, நான்ப்ரமித்தேனோ!; சம்ப்ரேலேஷத்தில் "மருள்தானீதோ" என்றத்தைச்சொல்லுகிறார் ...............................................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (நீர்மையாலித்யாதி) "நீர்மையால் நெஞ்சம்வஞ்சித்துப்புகுந்து-கள்வமறிகிலேன்', என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (அடிமையித்யாதி.)

ஈர்மை - ஈடுபாடாதல், ஆர்த்ரதையாதல். வஞ்சித்துப்புகுந்த ப்ரகாரந்தனை தர்ஸிப்பிக்கிறார் (தான்சேஷியுமித்யாதி) க்ருத்ரிமிக்கவேணுமோ, செவ்வேசொன்னாலோவென்ன (முறைகெடவித்யாதி) க்ருத்ரிமிக்கைதானேதென்ன (க்ருத்ரிமிக்கையாவதித்யாதி) அதேதென்னிலென்றது - மற்றொன்றைச்செய்கையேதென்னிலென்றபடி. விவரணம் (தான்தாழ்ந்தவித்யாதி) ஈருந்தன்மை-சேதிக்கும் ஸ்வபாவம். அதாவது - ஈடுபடுத்துகையென்றபடி. அர்த்தாந்தரம் (ஈரப்பாட்டையித்யாதி) ஈரப்பாட்டைவிளைக்கையாவதேதென்ன (என்னைநீராம்படியித்யாதி) ஈரப்பாடென்று-ஆர்த்ரதையாய், ஆசையைவிளைத்தென்றபடி.

"ஈர்மைசெய்து" என்றதின் முந்தினவர்த்தாநுகுணமாகபாவம் (எனக்குதாரகனாயித்யாதி) போலேயென்றது - "ஆய்" என்றதுக்கர்த்தம். தாரகனைப்போலே புகுருவானென்னென்ன (பாதகனாயித்யாதி "உண்டான்" என்றதுக்குபாவம் (இருவருங்கூடவித்யாதி) "ஈர்மைசெய்து" என்றதின் த்விதீயார்த்தாநுகுணமாகபாவம் (எனக்குத்தன்னுலித்யாதி)

"சீர்" என்று - ஸ்ரீயாய், அழகென்றபடி. சோலையைவர்ணித்ததுக்குபாவமாதல், "உண்டான்" என்றவநந்தரம் "சீர்மல்கு" என்றுவிசேஷித்ததுக்கு பாவமாதல் (என்னோட்டையித்யாதி) "தென்காட்கரை" என்கையாலே-ஸௌலப்யம், "அப்பன்" என்கையாலே - பாந்தவம். கீழ்வாக்யத்தை வ்யுத்க்ரமமாக விவரிக்கிறார் (என்கார்யத்துக்கித்யாதி.)

"என்னுயிருண்டான்" என்றதுக்கநுகுணமாக "கார்முகில்வண்ணன்" என்றதுக்குபாவம் (என்னோட்டையித்யாதி) * மாயக்கூத்தனிலாசைப்பட்டபடியே * இருத்தும்வியந்தினி லநுபவித்தத்தை நினைக்கிறாராகில், அது ஸ்ம்ருதியாயிராதே அநுபவமாய்த்தோற்றுவானென்னென்னில்; ததாநீம்தநபுத்திபிறக்கையாலேயென்கிறார் (தூநீரித்யாதி) கள்வமேதென்ன (முகப்பிலித்யாதி) அதேதென்ன (அடிமைகொள்ளவித்யாதி) "கள்வம்" என்றுவைத்து, "அறிகிலேன்" என்கிறதென்னென்னில் (சர்வாதிகனித்யாதி) * இருத்தும்வியந்திலநுபவம் ஸ்ம்ருதிவிஷயமானதுக்கு சூசகசப்தங்காட்டுகிறார் (சம்ஸ்லேஷத்திலித்யாதி.)

க்ரமேணார்வய: ........ ........................................................ .........*

---

## நான்காம்பாட்டு.

அறிகிலேன்றன்னுளனைத்துலகுநிற்க<br>
நெறிமையாற்றானுமவற்றுணிற்கும்பிரான்<br>
வெறிகமழ்சோலைத்தென்காட்கரையென்னப்பன்<br>
சிறியவென்னாருயிருண்டதிருவருளே.

### ஆறாயிரப்படி.

(அறிகிலேன்) உம்முடையதிறத்தில் அவனங்ஙனே அபிநிவிஷ்டனானால் சிகனுண்டோவென்னில்; அபிநிவிஷ்டனானான், மற்றாஸ்ரிதரோடு நெறிகெடாமைகலந்து பரிமாறுமாபோலே பரிமாறவமையாதோ, தானென்னைபுஜித்தருளி நெறிகெடும்படி பரிமாறவேணுமோ, இவ்வபிநிவேசத்துக்கொரு முடிவுகாண்கிறிலேனென்கிறார் ...... .........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், முறைதப்பாதபடி சர்வாதாரபூதனுய் சர்வாந்தராத்மாவானவன், அதிக்ஷூத்ரனுன வென்னோடுகலந்நுபவித்த சௌசில்யாதிசயத்தாலேவந்த மஹோபகாரத்தை யளவிட்டறியமாட்டுகிறிலேனென்கிருர்.

தன்னுள் - தன்சங்கல்பைகதேசத்திலே. அனைத்துலகும்- சமஸ்தலோகபதார்த்தங்களும். நிற்க - த்ருதமாகநிற்க. தானும்-தானும். நெறிமையால் - சரீராத்மஸம்பந்த ப்ரயுக்தமான சேஷசேஷித்வமாகிற முறையாலே. அவற்றுள் - அவற்றுக்குள்ளே. நிற்கும் - நிற்கும். பிரான் - உபகாரகனுப். வெறிகமழ்-விலக்ஷணமான பரிமளத்தைப்ரவஹிக்கிற. சோலை - சோலையையுடைய. தென்காட்கரை - திருக்காட்கரையிலேநிற்கிற. என்னப்பன் - என்ஸ்வாமியானவன். சிறியவென் - அதிக்ஷூத்ரனுனவென். ஆருயிர் - ஆத்மவஸ்துவை; உண்ட - மேல்விழுந்தநுபவித்த. திருவருள்- சௌசில்யோபகாரத்தை. அறிகிலேன் - இன்னபடியிருக்கிறதென் றறியமாட்டுகிறிலேன் ........................................................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

தான் சேஷியான முறைதப்பாமே யெல்லாரோடும்கலக்கிறவன், அதிக்ஷூத்ரனுன வென்பக்கல்பண்ணின வ்யாமோஹ மெனக்கறிய நிலமன்றென்கிருர்.

(அறிகிலேன்) உகப்பாலேசெய்தானே, இவ்வஸ்துவை யழிக்கைக்குச்செய்தானே, அறிகிறிலேன். (தன்னுள்ளனைத்துலகும்நிற்க) என்னையொழிந்தவிஷயத்தில் அவன் உபகாரமேகிடீர் பண்ணிப்போருவது!. சகலலோகங்களும் தன்சங்கல்பத்தைப் பற்றிக்கிடக்க, தானவற்றினுள்ளே தன்சேஷித்வமுறையாலே நிற்குமவன், இவரொருவர்விஷயத்திலுமிறே இப்படி முறைகெடப்பரிமாறிற்று!. "மூவுலகுந்தன்னெறியாவயிற்றிற்கொண்டு - சிறியேனுடைச்சிந்தையுள் - நின்றொழிந்தார்" என்றத்தைச்சொல்லுகிருர். ப்ரளயாபத்திலே ஜகத்தையடையரக்ஷித்தவன், என்னையொருவனையுமழித்தான். ப்ரதிகூலரை யம்பாலேயழிக்கும், அநுகூலரை குணத்தாலேயழிக்கும், மத்யஸ்த்தரைப்போலேயாகாதே யவன்ரக்ஷிப்பது. அம்புபட்டபுண் மருந்திட்டாற்றலாம், குணத்தால்வந்தபுண்ணுக்குப் பரிஹாரமில்லையிறே.(வெறியித்யாதி)அவ்வூரையுடையவனுக்கு ஒருவஸ்து வுத்தேஸ்யமாவதே!. பரிமளமலை யெறியாநிற்பதானசோலை. (என்னப்பன்) உத்பாதகன்கிடீரழித்தான்! ( சிறியவென்னாருயிருண்ட ) சிறியேனுடைய நற்சீவனை - அதிக்ஷூத்ரனுனவென்னாத்மாவை. அவனுடையமேன்மைக் கெல்லைகாணவொண்ணுதவோபாதி, தம்முடைய சிறுமைக்கு மெல்லையில்லையாக நினைத்திருக்கிருர். (என்னாருயிருண்ட) இவர் தம்மைச்சிறுகநினைத்திராநின்றுர், அவன் இவரை நித்யசித்தர்க்கு மவ்வருகாக நினைத்திராநின்றுன். "இவர்தம்மைச்சிறுகநினைத்தால் ப்ரயோஜந

மென், இவர் தம்மைத்தாமறிந்தாரோ'' என்று மேல்விழாநின்றான். (திருவருள்—அறிகிலேன்) இது முன்னம் ஸ்வரூபஜ்ஞாநத்தாலே செய்ததொன்றன்றே; ஸ்வரூபஜ்ஞாநத்தாலேவிரும்பிலிறே ஸ்வரூபத்தளவிலே நிற்பது, வ்யாமோஹம் முறையழிக்குமிறே ...................... .........*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (அறிகிலேனித்யாதி) ''நெறிமையால்தானுமவற்றுள்நிற்கும்பிரான் - சிறியவென்னுருயிருண்ட திருவருள் - அறிகிலேன்'' என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (தான் சேஷியானவித்யாதி)

அந்வயமுகேநபாவம் (உகப்பாலேயித்யாதி)

''பிரான்'' என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் (என்னையொழிந்தவித்யாதி) விவரணம் (சகலேத்யாதி) *இருத்தும்வியந்திலநுபவம் ஸ்ம்ருதிவிஷயமானதுக்கு சூசகசப்தங்காட்டுகிறார் (மூவுலகுமித்யாதி) ''தன்னுள்'' என்றதுக்கு - தன்சங்கல்பத்தைப்பற்றி என்றருளிச்செய்து, தன்வயிற்றிலே என்றர்த்தாந்தரமாதல், ''பிரான்'' என்றதுக்கர்த்தமாதல் (ப்ரளயாபத்திலேயித்யாதி) ''என்னுருயிருண்ட'' என்றத்தைப்பற்ற (என்னையொருவனையுமழித்தானென்றது) ப்ரதிகூலனாயொழிய, அநுகூலனையழிக்குமோவென்ன (ப்ரதிகூலனையித்யாதி) குணத்தால்வந்த அழிவு அழிவோவென்ன (அம்புபட்டவித்யாதி)

ஊனைவர்ணிக்கிறதுக்குபாவம் (அவ்வூனையித்யாதி) ஒருவஸ்துவென்றது-''சிறியவென்னுருயிர்'' என்றத்தைப்பற்ற. ''என்னப்பன்'' என்றத்தை ''ஆருயிருண்ட'' என்றத்தோடேகூட்டிபாவம் (உத்பாதகனித்யாதி)

விவரணம் (அதிக்ஷுத்ரனனவித்யாதி) சிறுமையின் சரமாவதியை யருளிச்செய்கிறார் (அவனுடையவித்யாதி) ''தன்னுளனைத்துலகும்நிற்க'' என்றத்தைப்பற்ற (மேன்மைக்கெல்லைகாணவொண்ணாதவென்றது) ஆர்தல்-மிகுதியாய், ஶ்லாக்யமானவுயிரென்றபடி. ''சிறிய'' என்றுவைத்து, ''ஆருயிர்'' என்னக்கூடுமோவென்ன (இவர்தம்மையித்யாதி) ''திருவருள்'' என்று - முறைகெட்டபரிமாற்றம் என்றுவிவக்ஷித்து, சேஷிசேஷபூதனிடத்திலே முறைகெடப்பரிமாறுவானென்னென்ன (இதுமுன்னமித்யாதி) வ்யாமோஹத்தாலே செய்தானென்றபடி. ஸ்வரூபஜ்ஞாநத்தாலே செய்ததல்லாமைக்குஹேதுவையருளிச்செய்கிறார்(ஸ்வரூபஜ்ஞாநத்தாலேயித்யாதி)

தன்னுளனைத்துலகும் நிற்கவென்றுதொடங்கி, திருவருள் - அறிகிலேனித்யந்வயஃ.......................................................................................*

---

## ஐந்தாம்பாட்டு.

---

திருவருள்செய்பவன்போலவென்னுள்புகுந்
துருவமுமாருயிருமுடனேயுண்டான்
றிருவருள்சோலைத்தென்காட்கரையென்னப்பன்
கருவளர்மேனிநங்கண்ணன்கள்வங்களே.

## ஆறாயிரப்படி.

(திருவருள்) திருவருள்செய்பவன்போலே யென்னுள்ளேபுகுந்து, என்னைபுஜித்தருளுகை யன்றியே என்னுருவமுங்கூட புஜித்தருளினான், ஒருவனபிநிவேசமிருக்கும்படியேயிது!, முந்துறவந்து புகுந்தருளினபடியது! பின்னைநின்று செய்தருளினபடியிது! ஒருவன்கள்வங்களே! என்கிறார் ............................................ ..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதபவ்யனாயிருக்கிற க்ருஷ்ணனானவன், எனக்குபகரிப்பாரைப்போலேபுகுந்து என்னுடைய சரீராத்மவிபாகமறத் தான் தனக்குபோக்யமாம்படியபஹரித்துக்கொண்டானென்கிறார்.

திருவருள் - "அடிமைசெய்யவேண்டுநாம்" என்று நானாசைப்பட்டபடியிலே அடிமைகொள்ளுகையாகிற நிரவதிகமஹோபகாரத்தை. செய்பவன்போல-பண்ணுவாரைப்போலே. என்னுள்-என்னெஞ்சிலே. புகுந்து-புகுந்து. உருவமும்-எனக்கும் ஹேயமானசரீரத்தையும். ஆருயிரும்-அத்தோடு வ்யாப்தமானவாத்மாவையும். உடனேயுண்டான்! - ஹேயோபாதேய விபாகமில்லாதபடி, நிரதிசயபோக்யமாம்படிவிரும்பினான்!. திருவளர் - அழகுமிஞ்சின. சோலை - சோலையையுடைத்தான. தென்காட்கரை - திருக்காட்கரையிலே. என்னப்பன் - என் நாதனாய். கருவளர்மேனி-என்பக்கல் ஸம்ஸ்லேஷத்தாலே ஸ்யாமளதைவிஞ்சிவருகிறதிருமேனியையுடையனாய்க்கொண்டு. என்கண்ணன்-எனக்கத்யந்தபவ்யனான க்ருஷ்ணனானவனுடைய. கள்வங்களே! - கள்வங்களிருக்கிறபடியே!.

உபகரிப்பாரைப்போலே போக்யபூதனாய்வருகையும், தான் போக்தாவாய்க் கொண்டுபக்ருதனாகையும்; தேஹாத்மவிபாகத்தை யெனக்குப் பிறப்பிப்பாரைப்போலேவருகையும், தானே தேஹாத்ம விபாகம்பண்ணாமல் புஜிக்கவும் அத்தாலே ரூபௌஜ்ஜ்வல்யம்பிறக்கையும்; இவை சில ப்ரவ்ருத்திகளாயிருக்கிறனவே! .........*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

என்னை யடிமைகொள்வாரைப்போலேபுகுந்து, என் சரீரத்தையு மாத்மாவையுங்கூட புஜித்தான், ஒருவன் வ்யாமோஹமிருந்தபடியென்! என்று விஸ்மிதராகிறார்.

(திருவருள்செய்பவன்போல) சர்வஸ்வதாநம்பண்ணி அடிமைகொள்வாரைப்போலே யாய்த்துப்புகுந்தது. * துயரறுசுடரடிதொழுதெழுகைக்கு * மயர்வறமதிநலமருளுவாரைப்போலேபுகுந்தான். (போல) என்கிறது - (என்றிறத்தில்) செய்ததங்ஙனல்ல, திருவருள் தான்பெற்றானாயிராநின்றான். (என்னுள்புகுந்து) * வழுவிலாவடிமைசெய்யப்பாரித்தவென்பக்கலிலேபுகுந்து. (உருவமும்) முதலிலே "அழுக்குடம்பு" என்றத்தை விரும்பாநின்றான், அவனங்கீகாரத்துக்குமுன்பு இவர்தேஹத்தை

யேவிரும்பிப்போந்தார்; அவன் இவரை யங்கீகரித்தபின்பு இவர்தேஹத்தைவிரும்பப்புக்கான். இவருக்கு அவனோட்டை சஹவாஸம் ஸ்வரூபஜ்ஞாநத்துக்குடலாய்த்து; அவனுக்கு இவரோட்டை சஹவாஸம் தேஹாத்மாபிமாநத்துக்குடலாய்த்து. (உருவமும்) "இவர்தாம்வேணுமோ, இவர் 'என்னது' என்றபிமாநித்ததொன்றமையாதோ" என்கிறாநின்றான். (ஆருயிரும்) அபர்யவஸாநவ்ருத்த்யா ஆத்மாவளவுஞ்செல்லுதல், இதுதான் தத்பர்யந்தமாயல்லதிராமையாலே அவ்வளவுஞ்செல்லுதல். (உடனேயுண்டான்) அதுதன்னிலும் வாசிவைத்துபுஜித்திலன். (உண்டான்) எனக்கவகாசம்வையாதே தானேபோக்தாவானான். (திருவளர்சோலைத்தென்காட்கரையென்னப்பன்) தானேபோக்தாவாய்புஜித்தமை, அவ்வூரிற்சோலையும் வடிவும் கோட்சொல்லித்தரும். அழகுவளராநின்றுள்ள சோலை. (கருவளர்மேனி) கறுப்புவளராநின்றுள்ளவடிவு. "ஸமெஜெக ரூஹவழ" (ஸதைகரூபம்) என்கிறது இவ்வளவிற்கண்டிலோம். (நங்கண்ணன்) ஆஸ்ரிதபவ்யனனக்ருஷ்ணன். (கள்வங்கள்) முகப்பிலொன்றாய், முடிவிலொன்றாயிருக்கும் வ்ருத்திகள் - அடிமைகொள்வாரைப்போலேபுகுந்து தான் நியாம்யனாய்த்தாழநின்றும், விரோதியான சரீரத்தைக்கழித்துத்தரவென்றுபுகுந்து தேஹாத்மவிபாகம்பண்ண மாட்டாதொழிகையும், போக்யமாய்ப்புகுந்து தான்போக்தாவாகையும், என்பேறாகப்புகுருகிறானாகப்புகுந்து தன்பேறாகத்தலைக்கட்டுகையும், இதடங்க வடிவில் வேறுபாட்டாலே தோற்றியிருக்கையும்: இத்தலையி லாத்மாபஹாரத்தைத்தவிர்த்தது தன்னாத்மாபஹாரத்தாலே யாய்த்து ..... ...........*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (திருவருளித்யாதி) "திருவருள்செய்பவன்போல வென்னுள்புகுந்து உருவமுமாருயிருமுடனேயுண்டான் - நங்கண்ணன்கள்வங்கள்" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (என்னையடிமையித்யாதி) விஸ்மிதராகிறாரென்றது - "கள்வங்களே!" என்றஸ்வரத்தைப்பற்ற.

அருள்தல் - கொடுத்தலாய், (சர்வஸ்வதாநம்பண்ணி) என்றபடி. எத்தை சர்வஸ்வதாநம்பண்ணுவாரைப்போலே புகுந்தானென்ன (துயரறுவிதயாதி.)

உயிருக்குமுன்னே "உருவம்" என்று ப்ரதமோபாத்தமானதுக்குபாவம் (முதலிலேயித்யாதி) முதலிலேயென்றது - சாடு. திருவிருத்தத்திலேயென்னுதல், ஆத்மாவுக்கு முன்னேயென்னுதல். "யாதானுமோராக்கையிற்புக்கு" என்று இவரன்றே அழுக்குடம்பைவிரும்பினாரென்ன (அவனங்கீகாரத்துக்கித்யாதி) உக்தவாக்யத்வயத்தால்பலித்த வர்த்தவிசேஷத்தை ரஸோக்தியாக வருளிச்செய்கிறார் (இவருக்கித்யாதி வாக்யத்வயத்தாலே) இவருக்கவனோட்டை சஹவாஸமென்றது - * மயர்வறமதிநலமருளினது. அவனுக்கிவரோட்டை சஹவாஸம் - இவருடையஹ்ருதயத்திலேவந்துபுகுருகை. "உருவமும்" என்ற ப்ராதாந்யஸமுச்சயத்துக்குபாவம் (இவர்தாமித்யாதி) "ஆருயிரும்" என்றசஸப்தம் அந்வாசயமாகவருளிச்செய்கிறார்- (அப

ர்யவஸாநேத்யாதி) அதாவது - திருமேனியில் ப்ராவண்யம் திருமேனியளவில் பர்யவஸியாதே ஆத்மாவளவுஞ்செல்லுவதென்றபடி. (இதுசாலித்யாதி) அதாவது- இந்ததேஹந்தா னுத்மாவைவிட்டுத் தனித்திராமையாலே ஆத்மாவையுங்கூடவிரும்பினனென்றபடி. "உண்டான்" என்றதுக்குபாவம் (எனக்கவகாசமித்யாதி) "உடனே" என்றதுக்குபாவம் (அதுதன்னிலுமித்யாதி) அதுதன்னிலும் - போக்ராவாமிடத்திலுமென்றபடி. உடனே - சமமாக. "வாசிவைத்திலன்" என்று ஆத்மாவுக்கு ப்ராதாந்யஞ்சொல்லலாமோ விக்ரஹப்ராதாந்யஞ்சொல்லுகிற ப்ரகரணத்திலேயென்ன; "ஈஶ்வராபிப்ராயத்தாலே விக்ரஹப்ராதாந்யமும், ஆழ்வாரபிப்ராயத்தாலே ஆத்மப்ராதாந்யமுமாகையாலே விரோதமில்லை" என்றருளிச்செய்வர்.

"திருவளர்சோலை - கருவளர்மேனி" என்றதுக்குபாவம் (தானேயித்யாதி.)

"வளர்" என்றவர்த்தமாநார்த்தம் (சதைகரூபேத்யாதி) இவ்வளவில் - இவரோடே பரிமாறுமிடத்தில். "கள்வங்களே" என்றபஹுவசநார்த்தம் (அடிமைகொள்வானாயித்யாதி) தேஹாத்மவிபாகம்பண்ணமாட்டா தொழிகையுமென்றது- "உருவமுமாருயிருமுடனே" என்றத்தைப்பற்ற. "உண்டான்" என்றதிலே - போக்த்ருத்வமும், (தன்பேறாக) என்றதுவும் சித்தம். "திருவளர்சோலை" இத்யாதியைப் பற்ற (என்பேறாகப்புகுகிறானாகவித்யாதி) (இதடங்க) இத்யாதிக்கு - "கருவளர்மேனி" என்றதிலேநோக்கு. "நங்கண்ணன்" என்று ஆஶ்ரித பவ்யதைசொன்னதுக்குபாவம் (இத்தலையிலித்யாதி) அதாவது - தன் ஸ்வாதந்த்ர்யத்தை யழியமாறியித்தலையில் ஸ்வாதந்த்ர்யத்தைப் போக்கினனென்றபடி ................................*



# ஆறும்பாட்டு.

என்கண்ணன்கள்வமெனக்குச்செம்மாய்நிற்கு
மங்கண்ணனுண்டவென்னாருயிர்க்கோதிது
புன்கண்மையெய்திப்புலம்பியிராப்பக
லென்கண்ணனென்றவன்காட்கரையேத்துமே.

## ஆறாயிரப்படி.

(என்கண்ணன்) "ஒருநாளிங்ஙனே யவன்வஞ்சனையிலே யகப்பட்டால், பின்னை யதில் அகப்படாதே பரிஹரிக்கவொண்ணாதோ" என்னில்;

நாடோறு மிவன் மெய்யே யென்னை யடிமைகொண்டருள வருகிறானென் றெனக்குத் தோற்றும்படிவந்து, அதிசபலமாய் என்னாத்மாவை அறிவழியும்படி புஜித்துப்போம், போனவாறே பின்னையு மிவ்வாத்மாவானது, நெடும்போதோடுகூட ப்ரபுத்தமாய், அவனையாசைப்பட்டு, "என்கண்ணா, என்கண்ணா" என்றலற்றி, அவனெழுந்தருளியிருந்த திருக்காட்கரையை யேத்தாநிற்குமென்கிறார்..................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அதிவ்யாமுக்தனான க்ருஷ்ணனுடைய வ்யாபாரங்களெனக்கு ருஜுவாயிருக்குமென்கிறார்.

என்கண்ணன் - என்பக்கலத்யந்தம் வ்யாமுக்தனான க்ருஷ்ணனுடைய. கள்வம் - முகப்பிலொன்றும் முடிவிலொன்றுமாம்படியான க்ருத்ரிமவ்யாபாரங்களானவை. எனக்கு - எனக்கு. செம்மாய்நிற்கும்-ருஜுவாயேயிராநின்றன. எங்ஙனேயென்னில்; அங்கண்ணன் - அவன் வ்யாமோஹத்தாலே சபலனாய்க்கொண்டு. உண்ட - புஜிக்கையாலே. கோது - நிஸ்ஸாரமான. என்னுருயிரிது - இந்தவென்னாத்மாவானது. அவன் தன்னை சாராபஹாரம்பண்ணினத்தை உபசரித்தானாக நினைத்து அவனை விடமாட்டாதே, புன்கண்மையெய்தி - தைந்யத்தைப்ராபித்து. என்கண்ணனென்று - எனக்கு பவ்யனானவனென்று. இராப்பகல் - இராப்பகல். புலம்பி-ப்ரலாபித்து. அவன்காட்கரை - அவன் ஸந்நிஹிதனாய்நிற்கிற திருக்காட்கரையை. ஏத்தும் - சொல்லாநின்றது.

அங்கண்ணன் - அதிசபலன். புன்கண்மை - பேகணிப்பாய், தைந்யமென்றபடி; புல்லிதானகண்மையையெய்தியென்று - அல்பமறிவுபெற்றதென்றுஞ்சொல்லுவர்கள்.................................................................................................................*

## ஈடு - ஆறும்பாட்டு.

"அவன் க்ருத்ரிமனென்றறிந்தால் அதிலே கிடந்து நெஞ்சாறல்படாதே யகன்றாலோநீர்" என்ன; அவனைக் கண்டவாறே, அவ்வஞ்சனைகளை மெய்யென்றிருப்பனென்கிறார்.

(என்கண்ணன்கள்வமெனக்குச் செம்மாய்நிற்கும்) எனக்குபவ்யனைப்போலேயிருக்கிற க்ருஷ்ணனுடைய வஞ்சநங்கள் எனக்குச் செவ்விதாய்த்தோற்றும். ஒருநாள் அவன் களவிலே யகப்பட்டால் பின்னை மீளமாட்டேன். அவன்முகத்திலே விழித்தவாறே அவன்செய்யுமவை யடைய மெய்யாயிருக்குமெனக்கு. (எனக்குச்செம்மாய்நிற்கும்) என்றத்தை, "எனக்குச்சேமமாயிருக்கும்" என்றொரு தமிழன்நிர்வஹித்தான். "நங்கண்ணன்கள்வங்கள்" என்று கீழ் முடிய, (என்கண்ணன்) என்றுதொடங்குவானென்னென்னில்; நாமென்றும் யாமென்றும் பர்யாயமாகையாலே, பொருளிசையந்தாதியா யிருக்கிறது. "என்கண்ணன் கள்வங்கள்" என்று பாடமாகில் நேரே கிடக்கும். (அங்கண்ணனுண்ட) அதிசபலனானவனநுபவித்த. அதிப்ரவணனை "அங்கண்ணா" என்னக்கடவதிறே. (என்னுருயிர்க்கோதிது) கோதான வென்னாத்மாவானவிது. ஆத்மா கோதாம்படிகாணும் பரிமாறிற்று. (புன்கண்மை) பேகணிப்பு. பொல்லா நோக்கையுடைத்தாயென்கை. "மீளவுயிர்ப்பெய்து" என்றாய்த்து நிர்வஹிப்பது. "'இதுதான் சப்தத்தோடே சேர்ந்திருக்கிறதில்லை, இந்த ஶ்ருதமான வர்த்தத்தோடே சப்தத்தையுஞ்சேர வசிப்பிக்கும்படி

யெங்ஙனே' என்று விசாரியாநிற்கச்செய்தே, 'கோதானவிதுதிரியவும் புன்கண்மையெய்தும்போது மீளவு முயிர்ப்பெய்ததாகவேணுமிறே, அர்த்தஸ்வபாவத்தாலே தன்னடையேவரும்' என்று நான் சொன்னேன், ஜீயர் போர ப்ரீதராயருளினார்" என்றருளிச்செய்வர். (என்கண்ணனென்று-இராப்பகல்-புலம்பி) முன்பெனக்கு பவ்யனான க்ருஷ்ணனென்று அஹோராத்ரவிபாகமின்றிக்கே கூப்பிட்டு, அவன்வர்த்திக்கிற திருக்காட்கரையை யேத்தாநின்றது; "ராகவஸ்யநிவேஸநே" (ராகவஸ்யநிவேஸநே) என்னுமாபோலே.........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. (என்கண்ணனித்யாதி.) "என்கண்ணன் கள்வமெனக்குச் செம்மாய்நிற்கும்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (அவனித்யாதி.) நெஞ்சாறல் - மநஃபீடை.

பவ்யனைப்போலே யென்றது - மேலே "கள்வம்" என்றிருக்கையாலே. "கள்வம்" என்றறிந்தால் மீளுகிறதுக்கென்னென்ன (ஒருநாளித்யாதி.) மாட்டாமைக்கடியேதென்ன (அவன்முகத்திலேயித்யாதி.) தமிழன் நிர்வாஹத்துக்கு, சப்தபேதமொழிய அர்த்தபேதமில்லை; மெய்யாயிருக்குமென்றே கருத்து. சேமம்-ரக்ஷை. அந்தாதிக்குச் சேராதென்கிற சங்கையை பரிஹரிக்கிறார் (நாமென்றுமித்யாதி.) பொருளிசையந்தாதி - அர்த்தமிசைந்தவந்தாதி. இயலிசையந்தாதி தானுமிங்கே சொல்லிக்கொள்ளலாமென்கிறார் (நங்கண்ணன்கள்வமித்யாதி.)

"அங்கண்ணன்" என்றது சபலவாசகமாமோவென்ன (அதிப்ரவணனாயித்யாதி.)

பேகணிப்பு - துக்கம். "புன்கண்மையெய்தி" என்றதுக்கு சப்தநிர்வாஹம் (பொல்லாநோக்கையித்யாதி.) நோக்கை யுடைத்தாய் - சைதந்யத்தையுடைத்தாயென்றபடி. புன் - புல்லிதான, கண்மை - நோக்கையுடைத்தாகையை, எய்து-ப்ராபித்து. அதாவது - தைந்யத்தை ப்ராபித்தென்றபடி. இதுக்கு பட்டர் "மீளவுந்தரித்து" என்றருளிச்செய்வரென்கிறார் (மீளவுமுயிர்ப்பெய்தித்யாதி.) நிர்வஹிப்பதென்றது - பட்டர் சம்ப்ரதாயமாக நிர்வஹிப்பதென்றபடி. விசாரப்ரகாரம் (இதுதானித்யாதி.) அதாவது - மீளவு முயிர்ப்பெய்தென்றவிது சப்தத்துக்கு வாசகமாகிறதில்லையென்கை. (இதுதான் சப்தத்தோடே சேர்ந்திருக்கிறதில்லை) என்று நஞ்சீயர்விசாரித்தருள, நம்பிள்ளை பரிஹாரமருளிச்செய்தாரென்றபடி. ஸ்ருதமானவென்றது - (நிர்வஹிப்பது) என்றத்தைப்பற்ற. (அருளிச்செய்வர்) நம்பிள்ளை என்று கூட்டுவது.

அவனைவிட்டு "காட்கரையேத்தும்" என்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் (ராகவஸ்யேத்யாதி.)

என்கண்ணனென்றுதொடங்கி, அங்கண்ணனுண்ட - கோதான - என்னுருயிரான - இது, புன்கண்மையெய்து - என்கண்ணனென்று - இராப்பகல் - புலம்பி - அவன் காட்கரையேத்துமித்யந்வயஃ. ........................................*

# ஏ ழா ம் பா ட் டு.

காட்கரையேத்துமதனுட்கண்ணுவென்னும்
வேட்கைநோய்கூரநினைந்துகரைந்துகு
மாட்கொள்வானொத்தென்னுயிருண்டமாயனாற்
கோட்குறைபட்டதென்றருயிர்கோளுண்டே.

## ஆறாயிரப்படி.

( காட்கரையேத்தும் ) இப்படி அவனைக் காணவேணுமென்னும் ஆசையாலே அவனைநினைத் தலற்றி அவஸந்நமானவாறே, பின்னையும் பண்டுபோலே யென்னையடிமைகொள்வாரைப்போலே வந்துபுகுந்து என்னுயிரை மாள புஜித்து, பின்னையும் புஜியாதானா யிருக்குமென்கிறார் ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடைய அதிவ்யாமோஹத்தினுடைய அபர்யவசாநத்தாலே என்னாத்மாவானது புக்தமாயிருக்கச்செய்தேயும், அவசிஷ்டமுண்டென்னலாம்படியிராநின்றதென்கிறார்.

ஆட்கொள்வானொத்து - அடிமைகொள்வாரைப்போலே. புகுந்து, என்னுயிர் - என்னாத்மாவை. உண்ட - தன்பக்கலிலே க்ரஸித்துக்கொண்ட. மாயனால் - ஆஶ்சர்யபூதனாலே. கோளுண்டே - புஜித்துக்கொள்ளப்படச் செய்தேயும். கோள்-போகம். குறைபட்டது - அவசேஷிக்கப்பட்டதென்னலாம்படியிருக்கிற. என் ஆருயிர் - என்னாத்மாவானது. காட்கரை - அவனிருக்கிற திருக்காட்கரையை. ஏத்தும்-ஏத்தாநிற்கும். அதனுள் - அதுக்குள்ளேநிற்கிற. கண்ணு என்னும் - கண்ணு என்று பவ்யனானவன்றன்னை யழையாநிற்கும். அவ்வளவிலேநில்லாதே, வேட்கைநோய் - அபிநிவேசமாகிற ஈடுபாடு. கூர - மேற்கொள்ள. நினைந்து - அவன்பரிமாற்றத்தைநினைத்து. கரைந்து - சிதிலமாய். உகும் - த்ரவித்து மங்காநிற்கும்............*

## ஈடு - ஏழாம்பாட்டு.

அடிமைகொள்வாரைப்போலே புகுந்து, என்னுயிரை நேராக புஜித்து, பின்னையும் புஜியாதாரைப்போலே யிருக்குமென்கிறார்.

( காட்கரையேத்தும் ) அவனிலு மவனிருந்தவூரை யேத்தும். ( அதனுட்கண்ணுவென்னும் ) பரத்வத்திற்காட்டி லவ்வூரிற் புகுந்தபின் புண்டானவேற்றம். "என்கண்ணன்" என்று, காட்கரையேத்தும்; அவ்வூரையேத்தா, அவனையேத்தும்; இரண்டுக்கும் புறம்பு, போகிறதில்லை. ( வேட்கைநோய்கூரநினைந்து ) அபிநிவேசம் மிகும்படி யநுசந்தித்து. ( கரைந்துகும் ) சிதிலமாய் ஓரவயவியென்று ப்ரதிபத்திபண்ணுதபடி யுகும்.

( ஆட்கொள்வானொத்தென்னுயிருண்டமாயனால் ) அடிமைகொள்வாரைப்போலே புகுந்து, என்னை வெறுந்தரையாக்கின ஆஶ்சர்யபூதனாலே. கீழ் "திருவருள்" என்று மறைத்துச் சொன்னத்தை வெளியிடுகிறார். கிட்டினபோது தாழநின்று மின்மினி பறக்கப்பரிமாறின ஆஶ்சர்யம். ( என்னுருயிர் கோளுண்டே - கோட்குறைபட்டது ) என்னுத்மாவை நிஶ்ஶேஷமாக புஜிக்கச்செய்தேயும், (இத்தலையிலேசிறிதுசேஷித்தது;) அவன் சாபேக்ஷனாய்ப் போகையாலே, இத்தலையிலே யின்னம் சிறிது சேஷித்ததென்றிருக்கிறார்; இப்போதிருந்து க்லேசப்படக் காண்கையாலே சிறிதுதொங்கிற்றுண்டென்றிருக்கிறார். ஒருசர்வஜ்ஞன், இல்லாததொன்றிலே யித்தனை வ்யாமோஹம் பண்ணக்கூடாதென்றிருக்கிறார்...*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. ( காட்கரையித்யாதி. ) "ஆட்கொள்வானொத்து, என்னுயிர்-கோளுண்டே-கோட்குறைபட்டது" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (அடிமையித்யாதி.)

இப்பாட்டிலே அவனை முந்தறச்சொல்லாதே, அவ்வூரை முந்தறச்சொன்னதுக்கு தாத்பர்யம் (அவனிலுமித்யாதி. )

"கண்ணு" என்னுதே, "அதனுள்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (பரத்வத்திலித்யாதி.) கண்ணு - நிர்வாஹகனே. கீழே ஒருக்காலவனை யேத்தியிருக்க, மீளவு மவனையேத்துகிறதுக்கு பாவம் (என்கண்ணனென்னுவித்யாதி; ) கீழிற்பாட்டில் கண்ணனை ப்ரதாநமாகவும், இப்பாட்டில் அவ்வூரை ப்ரதாநமாகவுங் கண்டு கொள்வது. இரண்டிடத்திலும் அவனையு மவ்வூரையும் வ்யுத்க்ரமமாகச் சொன்னதுக்குபாவமாதல் (என்கண்ணனித்யாதி. )

"திருவருள்செய்பவன்போல" என்று மறைத்துச்சொன்னத்தை "ஆட்கொள்வானொத்து" என்று வெளியிடுகிறுரென்றபடி. மாயமேதென்ன (கிட்டினபோதித்யாதி. ) கோளுண்டே - அவனாலே அபஹரிக்கப்பட்டுக்கொண்டே. கோட்குறைபட்டது - கொள்ளுகையில் குறைபட்டது; கொள்ளுகையில் சேஷித்ததென்றபடி. அவனாலே கொள்ளப்பட்டால் கொள்ளுகையில் குறைபட்டதென்றறிந்தபடி யென்னென்ன ( என்னுத்மாவையித்யாதி. ) ஹேத்வந்தரம் ( இப்போதித்யாதி. ) "அவன் சாபேக்ஷனாய்" என்றத்தை விவரிக்கிறுர் ( ஒருசர்வஜ்ஞனித்யாதி. )

ஆட்கொள்வானொத்தென் னுயிருண்டமாயனால் - கோளுண்டே - கோட்குறைபட்டதானவென்னுருயிர் - காட்கரையேத்துமென்று தொடங்கி, கரைந்துகும் இத்யந்வயஃ.........................................................................................*

---

## எட்டாம்பாட்டு.

கோளுண்டானன்றிவந்தென்னுயிர்தானுண்டா
னுளுநாள்வந்தென்னை முற்றவுந்தானுண்டான்
காளநீர்மேகத்தென்காட்கரையென்னப்பற்
காளன்றேபட்டதென்னுருயிர்பட்டதே.

## ஆறாயிரப்படி.

(கோளுண்டான்) இப்படி யென்னுயிரையாளபுஜித்தே, பின்னையும் புஜியாதானாய்வந்து புஜிக்கும்; இப்படியே நாளும்நாளும்வந்து என்னை புஜித்தருளினான்; நான் தனக்கடிமையான வித்தனையன்றோ; என்னை யிங்ஙனேபடுத்தவேணுமோ என்கிறார் ..................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அபேக்ஷாநிரபேக்ஷமாக நித்யாதரத்தைப்பண்ணுகிறவிவர்க்கு என்னாத்மாபட்டபாடே! என்று ஹர்ஷத்தாலே யீடுபடுகிறார்.

கோளுண்டானன்றிவந்து - என்னாலேஸ்வீகரிக்கப்பட்டன்றியே நிர்ஹேதுகமாகவந்து. என்னுயிர் - என்னாத்மாவை. தான், உண்டான் - அபிநிவிஷ்டனாய் புஜித்தான். அவ்வளவேயன்றியே, நாளுநாள்வந்து - நாள்தோறும் அபூர்வமாகவந்து. என்னை - ஸ்வரூபத்தோடு குணங்களோடு (சரீரத்தோடு) வாசியற என்னை யத்யாதரம்பண்ணி. முற்றவுந்தானுண்டான் - ஒன்றும் சேஷியாதபடி புஜித்தான். காள- கறுத்தநிறத்தையுடைத்தாய். நீர்-நீர்கொண்டெழுந்த. மேகம்-காளமேகம்போலே. தென்காட்கரை-திருக்காட்கரையிலேவர்த்திக்கிற. என்னப்பற்கு-என்ஸ்வாமியானவனுக்கு. ஆட்பட்டதன்றே-அடிமைப்பட்டதித்தனையன்றோ. என்னாருயிர்பட்டதே!- என்னாத்மாபட்டதுதான்! ..................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

நாள்தோறு மென்னையநுபவியாநின்றாலும் பெறாப்பேறுபெற்றாப்போலே புஜிக்கிற விவனுடையகுணவத்தை பொறுக்கவொண்கிறதில்லையென்கிறார்.

(கோளுண்டானன்றிவந்தென்னுயிர்தானுண்டான்) இதுக்குப்பலபடியுமருளிச்செய்வர் - என்பக்கலொரு உபகாரங்கொண்டன்றிக்கே நிர்ஹேதுகமாக வென்னாத்மவஸ்துவை யநுபவித்தான்; அதவா, இதுக்குமுன்பிப்படியிருப்பதொரு சரக்குப்பெற்றறியாதானாய் யென்பக்கலிலே யபிநிவிஷ்டனானானென்றுமாம்; என்னால் தான்கொள்ளப்படாதிருக்க, தானென்னைக் கைக்கொண்டானென்னுதல். (நாளுநாள்வந்து) ஒருநாள்புஜித்து "இனி இதுநாம்புஜித்ததன்றோ" என்று கைவாங்கியிருந்தானோ. நாள்தோறும் நாள்தோறும்வந்து. அவனுடைய * அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமிருக்கிறபடி. ( என்னைமுற்றவுந்தானுண்டான் ) அணுபரிமாணமான விவ்வஸ்துவை விபுவானதான் விளாக்குலைகொண்டு அநுபவித்தானென்கிறவிது தனக்கேற்றமாம்படி கௌரவியாநின்றான். "சிறியவென்னாருயிர்" என்றவது - தம்மைப்பார்த்து; அவனுடைய வநுபவத்தைக்கொண்டுசொல்லுகிறாரிது.

(காளநீர்மேகத்தென்காட்கரையென்னப்பற்கு) கறுத்தநீர்கொண்டெழுந்த காளமேகம்போலேயிருக்கிற வடிவையுடையனாய், அம்மேகந்தான் வர்ஷிக்கும் ஸ்த்தலத்திலே படிந்தாப்போலே திருக்காட்கரையிலே

வந்து சங்நிதிபண்ணின நிருபாதிகபந்துவுக்கு. வடிவழகது, ஊரது, தன க்கென்ன குறையுண்டா யிப்படிபடுகிறான்!. (ஆளன்றேபட்டது!) அடி மையன்றோபுக்கது!. ராவணாதிகளைப்போலே எதிரம்புகோத்தேனோ?. (என்னாருயிர்பட்டதே) ஓராத்மவஸ்து படும்பாடேயிது!. எதிர்த்தார், உடம்பிழத்தல் புண்பட்டதுக்கு மருந்துவைத்தாற்றுதல் செய்யுமத்தனை யிறே; இங்காருயிரிறே நோவுபட்டது; குணத்தால்வரும்நோவு ஸ்வரூபகதமாய் பரிஹாரமில்லையிறே ..... ........................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (கோளுண்டானித்யாதி) " கோளுண்டான் " என்றுதொடங்கி "என்னைமுற்றவுந்தானுண்டான் - ஆருயிர்பட்டது" என்றவற்றைக்கடாக்ஷித்த வதாரிகை (நாள்தோறுமித்யாதி) பெருப்பேறுபெற்றாப்போலேயென்றது-"முற்றவும்" என்றத்தைப்பற்றவாதல், "கோளுண்டான்" என்றத்தைப்பற்றவாதல்.

என்பக்கல் நின்று மொரு உபகாரத்தைக்கொள்ளப்பட்டன்றிக்கே; குதாவது-நான் சாதநபக்திபண்ணாதிருக்கவென்று மூந்தினவர்த்தம்; "வெறிதேயருள்செய்வர்," "என்னன்றிசெய்தேனா" என்னக்கடவதிறே. இதுக்குமுன்பொருவஸ்துவை இப்படிபோக்யத்வேந கொண்டவனன்றிக்கே என்று த்விதியார்த்தம்; "குனந்தன் பாலும்" இத்யாதி, "பக்கநோக்கறியான்" என்னக்கடவதிறே. என்னாலேதா னுபாயத்வேந கொள்ளப்பட்டவனன்றிக்கே - ப்ரபத்திபண்ணாதிருக்கவென்று மூன்றாமர்த்தம்; "யானொட்டியென்னுளிருத்துவமென்றிலன்" என்னக்கடவதிறே.

இத்தால்பாவம் (அவனுடையவித்யாதி) ஈஶ்வரனுக்கு நித்யாபூர்வவிஷய மிவ்வாத்மவஸ்து என்றுகருத்து. "முற்றவும்" என்றதுக்குபாவம் (அணுபரிமாணமித்யாதி) கௌரவியாநின்றான் - ஆதரியாநின்றான். "சிறியவென்னாருயிர்" என்றுவைத்து "முற்றவும்" என்று கனக்கச்சொல்லக்கூடுமோவென்ன (சிறியவென்னாருயிரித்யாதி) இதுவென்றது - "முற்றவும்" என்றத்தைப்பற்ற.

இப்பதப்ரயோகங்களுக்குபாவம் (வடிவழகித்யாதி) அன்றே-அன்றோவென்றபடி. "ஆளன்றே!" என்றஸ்வரத்துக்குபாவம் (அடிமையன்றோவித்யாதி) "ஆருயிர்பட்டது!" என்றஸ்வரத்துக்குபாவம் (ஓராத்மவஸ்துவித்யாதி) " என்னாருயிர்பட்டதே! " என்று, சத்ருக்கள்கையிலே அகப்பட்டாப்போலே சொல்லுவானேன்னென்ன; அத்தைப்பற்றவும் க்ரூரமென்கிறார் (எதிர்த்தாரித்யாதிவாக்யத்ரயம்) ததஃகிம்?-(குணத்தாலித்யாதி) "உடம்பிழத்தல்" என்றதுக்கு ப்ரதிகோடி (ஸ்வரூபகதமாயென்றது) "மருந்துவைத்தாற்றுதல்" என்றதுக்கு ப்ரதிகோடி (பரிஹாரமில்லையென்றது) என்னாருயிர்பட்டதே! - என்னாருயிர்படும்பாடே! என்று சப்தார்த்தம் ... ...*

---

## ஒன்பதாய்பாட்டு.

ஆருயிர்பட்டதெனதுயிர்பட்டது
பேரிதழ்த்தாமரைக்கட்கனிவாயதோர்
காரொழின்மேகத்தென்காட்கரைக்கோயில்கொள்
சீரொழினூற்றடங்தோட்டெய்வவாரிக்கே.

## ஆருயிரப்படி.

( ஆருயிர் ) " அவனும்முடையதிறத்தில் விசேஷமாகச்செய்ததுண்டோ, தன்னோடு பரிமாறுவாரையெல்லாரையு மப்படியேயன்றோ படுத்துவது" என்னில்;

அவனால் நான்பட்டபாடு திருநாட்டிலுள்ளார் தான்பட்டாரோ?, தனக்கென்னகுறையுண்டா யிப்படிசெய்தருளினான்? என்கிறார்.........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநவதிக சௌந்தர்யயுக்தனான சர்வேஶ்வரனுக் கென்னுயிர்பட்டபாடு ஆருயிர்பட்டது? என்கிறார்.

பேரிதழ் - பெரியவிதழையுடைத்தான. தாமரை - தாமரைபோலேயிருக்கிற-கண்-கண்ணையும். கனி-கனிபோலேசிவந்த. வாயது-வாயையுமுடைத்தாயிருப்பது. ஓர்-ஒரு. காரெழில்-கறுத்தவெழிலையுடைத்தான. மேகம் - மேகம்போலே. தென்-அழகிய. காட்கரை - திருக்காட்கரையை. கோயில்கொள் - வாஸஸ்தானமாகக்கொண்டு. சீரெழில்-வீரஶ்ரீயையும் எழிலையுமுடைத்தாய். நால் - நாலுவகைப்பட்ட. தடம்-பெரிய. தோள்-திருத்தோளையுமுடையனாய். தெய்வம்-தைவங்களுக்கு. வாரிக்கு-உத்பத்திஸ்தானமான கடலாயிருக்கிறவனுக்கு. எனதுயிர் - என்னாத்மா. பட்டது-போக்யமாய்க்கொண்டுபட்டது. ஆருயிர்பட்டது - நித்யாநுபவம்பண்ணுகிற சூரிகள் ஸ்வரூபந்தான்பட்டதோ?.

ப்ரௌடவிஷயபோகத்திற்காட்டில் அபிநவவிஷயம் ஈடுபாடு கனத்திருக்கும் என்றுகருத்து ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

"நீரேயோவிப்படிபட்டீர், குணாநுபவமே யாத்ரையான நித்யசூரிகளும் படும்பாடிதுவன்றோ" என்ன; அவர்கள்தாம் நான்பட்டது பட்டார்களோவென்கிறார்.

( ஆருயிர்பட்டதெனதுயிர்பட்டது? ) நான்பட்டபாட்டை நித்யசூரிகளிலே தான்பட்டாருண்டோ?. பகவத்குணங்களுக்கபூமியாயிருக்கிற சம்சாரத்திலே நான்பட்டபாட்டை, நித்யவிபூதியிலேயுள்ளவர்கள்தாம் பட்டார்களோவென்கிறார். "இங்கு எனதுயிர்பட்டது அங்கு ஆருயிர்பட்டது?" என்றெம்பெருமானார். "எல்லாரும் குணாநுபவமாகிற் பண்ணுகிறது இவர்க்கிவ்வாசிகூடினபடியென்" என்று நான்கேட்க, "நவோடையான ஸ்த்ரீக்கு பர்த்தாவினுடைய கரஸ்பர்ஶம்பட்டவாறே வேர்ப்பது விடுவதாமாபோலே, இவரநுபவத்திற் புதியராகையாலே வருகிறது காணும்" என்று ஜீயரருளிச்செய்தார். உயிரையழித்த ஹேதுக்களைச் சொல்லுகிறது மேல்.—(பேரிதழ்த்தாமரைக்கட்கனிவாயதோர்) பெரிய விதழையுடைய தாமரைபோலேயிருந்துள்ள கண்ணையும், சிவந்தவாயையுமுடையனாய். ( காரெழில்மேகத்தென்காட்கரைக்கோயில்கொள் ) கறுத்தவெழிலையுடைத்தான மேகம்போலே வடிவையுடையனாய், திருக்

காட்கரையைக் கோயிலாகவுடையனுய். (சிமெழில்நாற்றடந்தோள்) விர ஸ்ரீயையு மெழிலையுமுடைத்தாய்,கல்பகதருப்பணைத்தாப்போலே நாலாய்ச்சுற்றுடைத்தான தோள்களையுடைய. (தெய்வவாரிக்கு) தெய்வங்கள் படுங்கடலுக்கு. வாரி-கடல். தைவங்களுக்குத்பாதகனுக்கு. அபிமாநிகளுக் குத்பாதகனுனவன்கிடீர் அபிமாநசூந்யனுன வென்னையழித்தான்!. வடிவழகையும் அவ்வூரிலிருப்பையுங்காட்டி யாய்த்து இவளையழித்தது.

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (ஆருயிரித்யாதி) "எனதுயிர்பட்டது - ஆருயிர்பட்டது" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (நீரேயோவித்யாதி)

விவரணம் (பகவத்குணங்களுக்கித்யாதி) கீழ்வாக்யத்துக்கு சம்வாதம் (இங்கெனதுயிரித்யாதி) "இங்கெனதுயிர்" என்று விசேஷியாதே, சாமாந்யேநசங்கிக்கிருர் (எல்லாருமித்யாதி) இவ்வாசி-"ஆருயிர்பட்டதெனதுயிர்பட்டது" என்றவாசி.

மேலுக்கவதாரிகை (உயிரையித்யாதி) விவரணம் (தைவங்களுக்கித்யாதி) பதப்ரயோகத்துக்குபாவம் அபிமாநிகளுக்கித்யாதி) "காரொழில்மேகத்தென்காட்கரை" என்றத்தைக்கடாக்ஷித்து அழித்தப்ராகாரத்தைக்காட்டுகிருர் (வடிவழகையுமித்யாதி)

பேரிழமென்றுதொடங்கி, தெய்வவாரிக்கு - இங்கெனதுயிர்பட்டது-அங்காருயிர்பட்டது? என்றந்வயம்... ... ... ... ... ... ... ... ... ... ...*



# பத்தாம்பாட்டு.

வாரிக்கொண்டுன்னைவிழுங்குவன்காணிலென்
றார்வுற்றவென்னையொழியவென்னின்முன்னம்
பாரித்துத்தானென்னைமுற்றப்பருகினுன்
காரொக்குங்காட்கரையப்பன்கடியனே.

## ஆறுயிரப்படி.

(வாரிக்கொண்டு) "நீர்தாமவனை புஜிபாதே உம்மை புஜிக்கக் கொடுத்துக்கொண்டிருப்பானேன்" என்னில்;

உன்னைக்காணில் வாரிக்கொண்டுவிழுங்குவன் என்று நான்மநோரதித்துக்கொண்டிருக்க, எனக்குத் தன்னை புஜிக்கவொண்ணுதபடி யென்னில் முன்னம் பாரித்துத்தானென்னை மாள புஜித்தருளினுன்; தன்னுலே விளையக்கடவ வ்யஸநத்தினளவுபாராதே, சலிலகர்ப்பமான மேகம் தன்னளவிலே வர்ஷித்தாப்போலே, என்னுடைய சிறுமைபாராதே யென்னளவி லிங்ஙனே அதிமாத்ரமாகச் செய்தருளவேணுமோ என்கிருர்....*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அபிநிவேசத்திலும் வந்தால் என்னிலும் முற்பாடனுய்க்கொண்டு சீக்ரகாரியா யிராநின்ருனென்கிருர்.

உன்னைக்காணில் - உன்னைக்காணப்பெறில். வாரிக்கொண்டு - ஸ்வரூபரூபகுணவிபூதியிலே யொன்றும் சேஷியாதபடி. விழுங்குவனென்று - கபளீகரித்துபுஜிப்பனென்று. ஆர்வுற்ற - ஆதரித்த. என்னையொழிய - என்னளவன்றியே. என்னில் முன்னம் - எனக்குமுன்னே நானுள்ளவன்றேதொடங்கி. பாரித்து-பாரித்து. தான்-அபரிச்சிந்நஸ்வபாவனான தான். என்னை - அத்யல்பனானவென்னை. பசித்தவன் சோறுகண்டாப்போலே யிருக்கிற வென்னளவன்றியே, தாஹித்தவன் தண்ணீர் குடித்தாப்போலே பெருவிடாய்ப்பட்டு, தான், முற்ற - பூர்ணமாம்படி. பருகினான் - பருகினான். காரொக்கும் - கடலைப்பருகும் காளமேகம்போலே. காட்கரையப்பன்-திருக்காட்கரையிலே நிற்கிற வுபகாரகன். கடியன் - அநுபவத்திலொருவர்க்கும் முற்பாடுகொடாதபடி சீக்ரகாரியாயிருந்தான். ........................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

தம்மோடு கலந்த வெம்பெருமானுக்குத் தம்மிலு மபிநிவேசம் மிக்கிருந்தபடியைச் சொல்லுகிறார்.

( வாரிக்கொண்டு ) "இவ்வஸ்துவில் பிறர்க்கொன்றும் சேஷியாதபடியாக புஜிக்கக்கடவோம்" என்றிருந்தாராய்த்து. ஆதாவது - "வழுவிலாவடிமைசெய்யவேண்டும்" என்று பாரித்தது. "அநந்தவைநதேயாதிகளுக்கும் அடிமைசெய்யவிடங்கொடேன்" என்றிருந்தாராய்த்து; "ஷஹஂஸவ௯ஂகரிஷ்ஶ்ாமி" ( அஹம்ஸர்வம்கரிஷ்யாமி ) என்கிறபடியே. ( உன்னை ) சர்வசேஷியான வுன்னை. ( விழுங்குவன் ) சேஷபூதனுக்குக் கைங்கர்யமேயிறே தாரகம். ( காணில் ) உன்னைக் காணப்பெறில். (என்றார்வுற்ற) இப்படி யபிநிவேசித்த - ஆர்வத்தையுற்ற. (என்னையொழிய) என்னளவுபாராதே. ( என்னில் முன்னம் பாரித்து ) நான் பாரித்தவளவுமன்றிக்கே நான் பாரித்தகாலத்துக்குமுன்பே பாரித்து. ஆசார்யவிஷயீகாரத்துக்குப்பின்பிறே யிவருடைய பாரிப்பு; சம்பந்தத்துக்குத்திரஸ்காரஹேதுவில்லாமையாலே,அவனுடையபாரிப்பு சத்தாப்ரயுக்தமிறே. (தானென்னை) விபுவாய் ஸ்வதந்த்ரனான தான், அணுபரிமாணனாய் பரதந்த்ரனான வென்னை. (முற்றப்பருகினான்) தன் குணசேஷ்டிதங்களைக்காட்டியென்னை நோக்கி நிப்ஶேஷமாகப் பருகினான் ; "வவஸாஸாநுயிதெவைநஂ ஹொவநாஹ்ராஂவிவஹிவ" ( வசஸாஸாந்த்வயித்வைநம் லோசநாப்யாம்பிபந்நிவ ) என்கிறபடியே, இத்தலையையழித்துப் பரியாறினானென்றபடி. உண்டபடி சொன்னார் கீழ்; உண்டவனுக்குத் தண்ணீரு மபேக்ஷிதமிறே; ஆகையாலே, தண்ணீர் குடித்தபடி சொல்லுகிறார். அவனுடைய * உண்ணுஞ்சோறு பருகுநீரிருக்கிறபடியிறே யிது. ( காரொக்குங்காட்கரையப்பன் ) பரமோதாரனாய் ஸந்நிஹிதனானவன். ( கடியனே ) போகதசையில் விரைந்திருக்கும். இரண்டு தலையாய்ப் பரிமாறப்புக்கால் எதிர்த்தலைக் கிடம்வையான். ........................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (வாரிக்கொண்டித்யாதி.) "என்னில், முன்னம், பாரித்து" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( தம்மோடித்யாதி. )

"உன்னை - காணில் - வாரிக்கொண்டு - விழுங்குவன்" என்று பாரித்த என்றந்வயித்தர்த்தம் (இவ்வஸ்துவிலித்யாதி.) "பிறர்க்கொன்றும் சேஷியாதபடி" என்றதின் விவரணமாதல், பலிதமாதல் (அநந்தவைநதேயேத்யாதி.) வழுவிலா வடிமைசெய்யப் பாரித்ததுக்கு ப்ரமாணம் (அஹமித்யாதி.) "விழுங்குவன்" என்கைக்கு அடிமை தாரகமோவென்ன (சேஷபூதர்க்கித்யாதி.) என்னளவென்றது - என்னநுபவாபிநிவேசத்தை யென்றபடி.

"என்னில் - பாரித்து, முன்னம் பாரித்து" என்று பிரித்தர்த்தம் (நான் பாரித்தவித்யாதி.) இவருக்கு முன்பு பாரிப்பில்லையோ வென்ன (ஆசார்யேத்யாதி.) இவர்க்கு முன்னே அவன் பாரிக்கைக்கடி யேதென்ன (சம்பந்தத்துக்கித்யாதி) என்னுதல்; சேஷத்வம் நித்யமாயிருக்கிறவர்க்குப்பாரிப்புப் பின்பாவானேன் அவனுக்கு முன்பாவானேன் என்ன (சம்பந்தத்துக்கித்யாதி) என்னுதல். சம்பந்தத்துக்கு - சம்பந்தஜ்ஞாநத்துக் கென்றபடி. "பருகினன்" என்றதுக்குபாவம் (தன்குணேத்யாதி.) கீழ்வாக்யபலிதம் (வசஸேத்யாதி) "𑌤𑌸𑍍𑌯 𑌤𑌦𑍍𑌵𑌚𑌨𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌵𑌾 𑌰𑌾𑌮𑍋 𑌵𑌚𑌨𑌮𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 । 𑌵𑌚𑌸𑌾 𑌸𑌾𑌨𑍍𑌤𑍍𑌵𑌯𑌿𑌤𑍍𑌵𑍈𑌨𑌂 𑌲𑍋𑌚𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌪𑌿𑌬𑌨𑍍𑌨𑌿𑌵" (தஸ்யதத்வசநம்ச்ருத்வாராமோவசநமப்ரவீத் । வசஸாஸாந்த்வயித்வைநம்லோசநாப்யாம்பிபந்நிவ) இதியுத்தகாண்டே விபீஷணம்ப்ரதிராமஃ "பருகினன்" என்றதிலே ஒரு ரஸோக்தி. (உண்டபடியித்யாதி.) கீழென்றது-எட்டாம்பாட்டில் "என்னை முற்றவுந் தானுண்டான்" என்றதனைப்பற்ற. இந்தரஸோக்தியால் பலித்தவர்த்தம் (அவனுடையவித்யாதி.)

விவரணம் (இரண்டுதலையாயித்யாதி.) கடியன் - த்வரையையுடையவன்.

காணில் - உன்னை - வாரிக்கொண்டு - விழுங்குவன் என்றுதொடங்கி, க்ரமேணாந்வயஃ.......................................................................*

---

# பதினொன்றாம்பாட்டு.

கடியனைக்கஞ்சனைக்கொன்றபிரான்றன்னைக்
கொடிமதிட்டென்குருகூர்ச்சடகோபன்சொல்
வடிவமையாயிரத்திப்பத்தினாற்சன்ம
முடிவெய்திநாசங்கண்டீர்களெங்கானலே.

## ஆறாயிரப்படி,

(கடியனைப்) ஆஶ்ரிதர்க்காக ஏதேனும்செயல் செய்திலும் இங்ஙனே யதிமாத்ரமாகச்செய்தருளும் ஸ்வபாவனாயிருந்தவனைச்சொன்ன விப்பத்து, பகவதநுபவவிரோதியான நம்முடைய சம்சாரத்தை சகாரணமாகப்போக்குமென்கிறார் ..................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக, ஜந்மவிநாசத்தை யருளிச்செய்கிறார்.

கடியனாய் - அவன் நினைவுக்கும் தான் முற்பாடனாய்க்கொண்டு. கஞ்சனைக் கொன்ற-கம்ஸனைக்கொன்ற. பிரான்றன்னை - மஹோபகாரகனானக்ருஷ்ணனை. கொடிமதிள்-கொடியையுடைத்தான மதிளையுடைய. தென்குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். சொல்-அருளிச்செய்த. வடிவமை-பகவத்குணங்களை வடிவுபட ப்ரதிபாதிக்கையில் சம்ருத்தமான. ஆயிரத்து-ஆயிரத்திலும். இப்பத்தினால்-இப்பத்தினாலே. எம்-எம்முடைய. சன்மம்-ஜந்மபரம்பரையும். முடிவெய்தி-அவசாநத்தைப்பெற்று. கானல் - சம்சாரமாகிற ம்ருகத்ருஷ்ணிகையும். நாசங்கண்டீர் - நசிக்குங்கிடிகோள்.

இது கலிவிருத்தம் ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழி யப்யஸிப்பார்க்கு, ஜந்மம்முடிந்து அதுக்கடியான சம்சாரமும் நசிக்குமென்கிறார்.

(கடியனாய்க்கஞ்சனைக்கொன்றபிரான்றன்னை) கம்ஸன்றான்நினைத் தநினைவை யவன்றன்னோடேபோம்படி பண்ணினான். (கடியனாய்) தன்பக்கலின்றிக்கேவந்தேறியென்கை. "கொண்டசீற்றம்" என்னக்கடவதிறே. (பிரான்றன்னை) முன்புபகாரகனானவன்கிடீர் நம்மையழித்தான்!. உகந்தாரையழிக்கையிறே பாதகமாவது; விரோதிகளையழிக்குமது உபகாரமிறே. (கொடிமதிட்டென்குருகூர்) கம்ஸவிஜயத்துக்குக் கொடிகட்டிற்றுத்திருநகரியாய்த்து; ஸ்வாமிவிஜயத்துக்கு, உரியவடியாரிருந்தவிடத்தேயிறே கொடிகட்டுவது. (வடிவமையாயிரம்) சமுதாயசோபையையுடைத்தாயிருக்கை. கட்டடங்க அழகிதாயிருக்கை. விஜயமுண்டாகையாலே ப்ரசஸ்திமாலைகளுஞ் செல்லாநிற்குமிறே. (சன்மம்முடிவெய்தி) ஜந்மபரம்பரைக்கவஸாநத்தைலபித்து. (நாசங்கண்டீர்களெங்கானலே) ஜந்மத்துக்கடியான சம்ஸாரமும் நசிக்கும். கானல்-ம்ருகத்ருஷ்ணிகை. இன்னமிங்கே பிறக்கவிராதே, பகவத்குணாநுசந்தாநம் சாத்மிக்கும்தேசத்திலேபுகுவர்கள் ............................ ......................... ...... ........*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (கடியனாயித்யாதி) "பத்தினால்சந்மம் முடிவெய்தி நாசங்கண்டீர்களெங்கானல்" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி.)

"கடியன்" என்றது - இங்கு, கோபவானென்றபடி. "கடியனாய்க்கஞ்சனைக்கொன்ற" என்றதுக்கு ஹார்த்தபாவம் (கம்ஸனித்யாதி) "ஆய்" என்றதுக்குபாவம் (தன்பக்கலித்யாதி) அப்படிவந்தேறியோவென்ன (கொண்டசீற்றமித்யாதி) "கடிகொள்பூம்பொழில்" என்கிறபாட்டிலே; திருமொழி அஞ்சாம்பத்து எட்டாந்திருமொழி மூன்றாம்பாட்டு. கொண்டசீற்றம் - ஏறட்டுக்கொண்ட சீற்றமென்றபடி. நீராம்படியழிக்கிறவனை "பிரான்" என்பானென்னென்ன (முன்பித்யாதி) "கொன்றபிரான்" என்று ஹிம்ஸை உபகாரமோவென்ன (உகந்தாரையித்யாதி)

பதச்சேர்த்திக்குபாவம் (கம்ஸவிஜயத்துக்கித்யாதி) திருநகரியிலே கொடிகட்டுவானென்னென்ன (ஸ்வாமியித்யாதி)

விவரணம் (கட்டடங்கவித்யாதி) "கஞ்சனைக்கொன்றபிரான்றன்னை-வடிவமையாயிரம்" என்றுகூட்டிபாவம் (விஜயமித்யாதி) ப்ரசஸ்திமாலைகள் - வெற்றி ஸ்தோத்ரமாலைகள்.

"சன்மம்" என்றது - ஜாத்யேகவசநம். நாசங்கண்டீர்கள்-நாசமாங்கிடிகோள். எங்கானல்-நம்முடைய ஸம்ஸாரம். "எம்" என்று - ஸ்வஸம்பந்திகளைச்சொல்லுகிறது. பலிதம் (இன்னமிங்கேயித்யாதி) "கானல்" என்று-ம்ருகத்ருஷ்ணிகையாய், சம்சாரமென்றபடி.

கடியனுயென்றுதொடங்கி, இப்பத்தினுல் ஜன்மம்முடிவெய்தி-எங்கானல்-நாசங்கண்டீர்கள் என்றந்வயம்... ... ... ... ... ... ... ... ... ... *

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

(உருகுமால்நெஞ்சம்.)

ஆஶ்சர்யேஹாந்விதத்வா, தகிலபதிதயா சா, ந்தராத்மத்வபூம்நா,
அஶக்யே ஶக்தத்வபூம்நா, ஜலததநுதயா, பவ்யதா, கர்ஷகத்வா, தௌ
தார்யா, தபி விஶிஷ்டாதபி ச, பவப்ருதாம் ரக்ஷணே தீவ்ரஸங்கா, த்விஷ்
ணும் நைவ ஸ்மார்யாஹமிதி ஸஞ்ஜிஜ்ஞம் ஸஜ்ஜதார்தாஹ॥ (கஅ)

(ஆஶ்சர்யேஹாந்விதத்வாத்) மருவியமாயன்றன் - ஆஶ்சர்யசேஷ்டிதங்களையுடையனுகையாலும்; (அகிலபதிதயாச) தென்காட்கரையென்னப்பா - சர்வஸ்வாமியாகையாலும்; (அந்தராத்மத்வபூம்நா) என்னுயிரா யென்னுயிருண்டான்-அந்தராத்மாவாயிருக்கையாலும்; (அஶக்யேஶக்தத்வபூம்நா) தன்னுளனைத்துலகும்நிற்க நெறிமையாற்றுனுமவற்றுள்நிற்கும்பிரான் - சகலவஸ்துக்களுக்கும் தானுதாரமாய், அவற்றை யாதாரமுமாகவுடையனுய், இவ்வகடிதகடநாசக்தியுக்தனுகையாலும்; (ஜலததநுதயா) கருவளர்மேனி - கறுப்புவளராநிற்கையாலே நீலமேகம்போலேயிருக்கிற திருமேனியையுடையனுகையாலும்; (பவ்யதாகர்ஷகத்வாத்) என்கண்ணன்கள்வம், காட்கரையேத்து மதனுட்கண்ணுவென்னும் - ஆஶ்ரிதர்க்குபவ்யனுமாய், இவர்களுடைய ஹ்ருதயத்தை ஆகர்ஷிக்குமவனுகையாலும்; (ஔதார்யாதேர்விஶிஷ்டாதபிச) காளநீர்மேகத்தென்காட்கரையென்னப்பற்கு - காளமேகம்வர்ஷிக்குமாபோலே, எல்லார்க்கு மபிமதங்களை வர்ஷிக்கு மௌதார்யாதிசயத்தை யுடையனுகையாலும்; ஆதிசப்தத்தாலே - "பேரிதழ்த்தாமரைக்கண்" இத்யாத்யநந்தர காதோக்தமான வவயவ சோபாவத்த்வம் சங்க்ரஹிக்கப்படுகிறது. (பவப்ருதாம்ரக்ஷணேதீவ்ரஸங்காத்) என்னில் முன்னம்பாரித்து - சம்சாரிசேதநரக்ஷணத்திலே இவர்களைக்காட்டிலும் தானே முன்னே பதறுமவனுகையாலும்; எம்பெருமான் விஸ்மரணத்துக் கசக்யனென்று "உருகுமால்நெஞ்சம்" என்கிற தசகத்திலே ஆழ்வாருபபாதித்தருளினு ரென்கிருர்.............................................(கஅ)

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

---

உருகுமாலென்னெஞ்சமுன்செயல்களெண்ணிப்
பெருகுமால்வேட்கையெனப்பேசி – மருவுகின்ற
வின்னாப்புடனவன்சீரோய்ந்துரைத்தமாறன்சொ
லென்னாச்சொல்லாதிருப்பதெங்கு. (அகூ)

(உருகுமால்நெஞ்சம்) இதில், ஆழ்வாருடைய அப்ரீதிகர்ப்பகுணாநுசந்தாநவித்தராம் சூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; ஸ்மாரகபதார்த்தங்களைக் கண்டு நோவுபட்டுச் செல்லாநிற்கச்செய்தே * இருத்தும்வியந்தில் தலைதடுமாறாகக் கலந்த கலவி ஸ்ம்ருதிவிஷயமாய் தரிக்க, அத்தாலே பூர்வசம்ஶ்லேஷ ப்ரகாரத்தை யநுசந்தித்து ப்ரீதராய்ச் செல்லுகிற * உருகுமாலிலர்த்தத்தை யருளிச்செய்கிறார் "உருகுமாலென்னெஞ்சம்" இத்யாதியாலே யென்கை.

(உருகுமாலென்னெஞ்சமுன்செயல்களெண்ணி) "ஹ்ருதயாந்யமமர்த்தேவ ஜநஸ்ய குணவத்தயா" (ஹ்ருதயாந்யாமமந்த்தேவ ஜநஸ்யகுணவத்தயா) என்னும்படி, உன்னுடைய தாழ்ந்தசெயல்களை யநுசந்தித்து என்னுடைய மநஸ்ஸானது த்ரவத்ரவ்யம்போலே உருகாநின்றது, அதுக்குமேலே அபிநிவேசமும் மிக்கு வாராநின்றது என்றருளிச்செய்து. (மருவுகின்றவின்னாப்புடன்) கீழ் ஸ்மாரகபதார்த்தத்தாலே நோவுபட்டு அந்த அநுவ்ருத்தமான வெறுப்போடே. (அவன்சீரோய்ந்துரைத்தமாறன்சொல்) அவனுடைய, * இருத்தும்வியந்தில் "அறியேன்மற்றருள்"இத்யாதியாலே அருளிச்செய்த ப்ரணயித்வகுணங்களை, திருவுள்ளத்திலே பொருந்தவருளிச்செய்த. அதாவது - * உருகுமால்நெஞ்சமுயிர்ப்பாட்டாய் அத்தைப்பின்சென்று நினைதொறும் என்றுதொடங்கி, "நினைகிலேன் நானுனக்காட்செய்யும் நீர்மையே," "நீர்மையால் - கார்முகில்வண்ணன்றன் கள்வமறிகிலேன்," "அறிகிலேன்-சிறியவென்னாருயிருண்டதிருவருளே," "திருவருள்செய்பவன்போல-கருவளர்மேனிநங்கண்ணன்கள்வங்களே," "என்கண்ணன்கள்வமெனக்குச் செம்மாய்நிற்கும்-என்கண்ணனென்றவன்காட்கரையேத்துமே," "என்னாருயிர், கோளுண்டே - காட்கரையேத்துமதனுட்கண்ணாவென்னும்," "கோளுண்டானன்றி - ஆளன்றேபட்டதென்னாருயிர்பட்டதே," "தெய்வவாரிக்கு - இங்கெனதுயிர்பட்டது - அங்காருயிர்பட்டது," "வாரிக்கொண்டு-பருகினான், காரொக்குங்காட்கரையப்பன்கடியனே," என்றிப்படி, அவன் தாழநின்று பரிமாறின சீலாதிகுணங்களிலே சிதிலாந்தஃகரணராயருளிச்செய்த, சூக்தியென்கை. இப்படி யீடுபாட்டை யுடையரா யருளிச்செய்த இச்சொல்லை. (என்னாச்சொல்லாதிருப்பதெங்கு) என்னுடைய நாவானது எவ்விடத்துச் சொல்லாதிருப்பது ;- எல்லாவிடத்திலும், * நாவினால் நவிற்று - குருகூர் நம்பி பாவினின்னிசைபாடித்திரிவனேன் என்னுதல் ; அன்றியே, (என்னாற்சொல்லாதிருப்பது) என்று பாடமாய், இதில் ரஸஜ்ஞனான வென்னாலே சொல்லப்படாதிருப்பதெத்தசையிலே, எங்ஙனே, என்றாகவுமாம் ; எல்லாதசையிலு மநுசந்தியாதிருக்கவொண்ணாதென்றபடி.............................................(அகூ)

ஒன்பதாம்பத்தில் - ஆறாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி-அகூ.— பாட்டு - கூசஅ.

---

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஒன்பதாம்பத்து.

## ஏழாந்திருவாய்மொழி.

### எங்கானல் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

( எங்கானல் ) இந்த வப்ராப்தி கர்ப்பமான குணாநுசந்தாந ஜநித ப்ரீதியானதுமாறி அப்ராப்த்யம்ஶமே தலையெடுத்து அந்யாபதேசத்தாலே தூதப்ரேஷணம்பண்ணுகிறார்................................ .....*

### பன்னீராயிரப்படி.

ஏழாந்திருவாய்மொழியில், கீழ் குணஸ்மரணத்தாலே சிதிலரானவர், அந்த சைதில்யம் பாஹ்யாநுபவபர்யந்தமான அபிநிவேசத்தைப் பிறப்பிக்க, அநுபவயோக்யமாம்படி திருமூழிக்களத்திலே யெழுந்தருளியிருக்கிற சர்வேஶ்வரனுடைய அதிசயித போக்யதாகாரத்தையும், அசாதாரணஜ்ஞாநுபாவ்யத்வத்தையும், சேஷித்வப்ரகாசரூபவைலக்ஷண்யத்தையும், நித்யாநுபாவ்ய சேஷித்வத்தையும், நிரதிசயவிபூதிமத்வத்தையும், நித்யாநபாயிநீசம்பந்தத்தையும், அத்யுஜ்ஜ்வலாவயவத்வத்தையும், ஆபிரூப்யாதிசயத்தையும், அசாதாரணசேஷித்வசிஹ்நத்தையும், அநுபஹித க்ருபாயோகத்தையும், அநுசந்தித்து, ஏவம்விசிஷ்டனான சர்வேஶ்வரனைக்கிட்டி யநுபவிக்கப்பெறாத வார்த்தியாலே கடகமுகத்தாலே லபிக்கப் பாரித்தப்ரகாரத்தை, நாயகனான சர்வேஶ்வரனைப்பிரிந்தநாயகியானவள், வ்யதிரேகத்தில் தரிக்கவரிதான வவனுடைய வழகை யநுபவிக்கைக்காகச்சிலபக்ஷிகளை யிரந்து தூதுபோகவிடுகிற பாசுரத்தாலே யருளிச்செய்கிறார். * அஞ்சிறையமடநாரையிலே-அபராதஸஹத்வம் பற்றாசாகவும், * வைகல்பூங்கழிவாயிலே- சேஷித்வசம்பந்தம் பற்றாசாகவும், * பொன்னுலகாளீரிலே - ஏகரஸத்வம் பற்றாசாகவும், இத்திருவாய்மொழியிலே-ஸௌந்தர்யம் பற்றாசாகவும் தூதுவிடுகிறாள். " 𑌅𑌪𑌰𑌾𑌧𑌸𑌹𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌵𑌿𑌭𑍋𑌸𑍍𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌵𑍈𑌭𑌵𑌾𑌤𑍍 । 𑌐𑌕𑌰𑌸𑍍𑌯𑌾𑌚𑍍𑌚 𑌸𑍌𑌨𑍍𑌦𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 𑌘𑌟𑌕𑌾𑌰𑍍𑌯𑌾 𑌸𑌤𑍇 𑌮𑍁𑌨𑌿𑌃. " ( அபராதஸஹத்வாச்சவிபோஸ்ஸம்பந்தவைபவாத்|ஐகரஸ்யாச்சஸௌந்தர்யாத்கடகார்யாசதேமுநிঃ)................................................ ..................*

### ஈடு.

கீழ் அப்ரீதிகர்ப்ப குணாநுசந்தாநத்தாலே மிகவும் ப்ரீதரானவர், பாக்யஹாநியாலே அப்ரீத்யம்சமே தலையெடுத்து, அவனைப்பெற்றுப் பி

ழைத்தல் பெறுவிடில் முடிதலாம்படியான தம்முடையதசையை அந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிறார். இயற்கையிலே புணர்ந்து பிரிந்தாளொருபிராட்டி, அவன் வடிவழகிலே யீடுபட்டு அவசந்நையாய், தன்னுற்றுமை கைகொடுக்க தன்னுத்யாநத்திலேசென்று, அங்கிருக்கிறபக்ஷிகளைக்குறித்து, "பின்னானார்வணங்குஞ்சோதி திருமூழிக்களம்" என்கிறபடியே தூதுபோவார்க் கருமைப்பட் டறிவிக்கவேண்டாதபடி திருமூழிக்களத்திலேவந்து நின்றருளினான், தனக்கு நல்லாரை விடமாட்டாதவனுகையாலே நம்தசை யறியாதிருந்தா னத்தனை, க்ருபாவானுகையாலே நம்தசையறிவிக்கவரும், "உம்மைப்பிரிந்தார்தரிப்பரோ" என்றறிவிக்கவேணுமென்று அவற்றை ஸவிநயமாக விரக்கிறு ளொருபிராட்டி பேச்சாலே தம்தசையை யருளிச்செய்கிறார். * அஞ்சிறையமடநாரையிலே, "நம்பக்கலபராதத்தாலே வாராதொழிந்தானத்தனை, அவனுடைய அபராதஸஹத்வத்தையறிவிக்கவரும்" என்று அபராதஸஹத்வம் பற்றுசாகத் தூதுவிட்டாள்; * வைகல்பூங்கழிவாயில், "நல்லதுகண்டால் கால்தாழுமவனுகையாலே திருவண்வண்டூரில் சம்ருத்தியைக்கண்டு கால்தாழ்ந்தானத்தனை, நம்மார்த்தியையறிவித்தால் தன்னினிமையில் நெஞ்சுவைப்பானொருவனல்லன்" என்று அது பற்றுசாகத் தூதுவிட்டாள்; *பொன்னுலகாளியில், "திருக்கோளூரேறப்போக" என்று தன்னுடைய நகரோபவநத்தளவுஞ்சென்று பலஹாநியாலே போகமாட்டாதே யிருக்கிற பிராட்டி, பின்னையும், அவன்வரக்காணுமையாலே, "வாராதொழிகைக்கு நிபந்தநம் - தன்னைஸ்வர்யப் பரப்பாலே; தான் ஆஸ்ரிதரோ டேகரசனுகையாலேவரும்" என்று ஐகரஸ்யம் பற்றுசாகத் தூதுவிட்டாள்; இதில், "தனக்கு நல்லராயிருப்பாரை விடமாட்டாமையாலே வாராதிருந்தானுமித்தனை, தன்வடிவழகது, குணங்களவை, ஆனபின்பு பிரிந்தார்க்கு ஜீவித்திருக்கப்போமோ" என்று அவன் வடிவழகும் குணங்களும் பற்றுசாகத் தூதுவிடுகிறாள். ..................................................*

## ஜீயர் அரும்பதம்.

எங்கானல் ப்ரவேஸே, சங்க்ரஹசங்கதி (கீழ் அப்ரீதிகர்ப்பேத்யாதி.) பெறுவிடில் முடிதலாம்படியானவென்றது - "* என்னகமேனியொடும்" என்றத்தைப்பற்ற.

"அந்யாபதேசத்தாலே" என்றத்தை உபபாதிக்கிறார்.— இயற்கையிலே-யாத்ருச்சிகமாகவென்றபடி.. அவசந்நையாகில் உத்யாநகமநங்கூடுமோவென்ன (தன்னுற்றுமையித்யாதி.) ஆனால் வாராதிருப்பானென்னென்ன (தனக்குநல்லாரையித்யாதி.) "தமரோடங்குறைவார்க்கு" என்றத்தைக் கடாக்ஷித்து (நல்லாரைவிடமாட்டாதவனுகையாலேயென்றது.) "தாந்தம்மைக்கொண் டகல்தல் தகவன்று" என்றத்தைப்பற்ற (க்ருபாவானுகையாலேயென்றது.) "நுங்கால்களென்றலைமேற்கெழுமீரோ" என்றத்தைப்பற்ற (ஸவிநயமாகவிரக்கிறுளென்றது.)

கீழே அூதப்ரேஷணம்பண்ணின மூன்றுதிருவாய்மொழிக்கு மித்திருவாய்மொழிக்கும் வாசியேதென்ன (அஞ்சிறையவித்யாதி.) அபராதத்தாலேயென்றது-

"என்பிழையேநினைந்தருளி" என்றத்தைப்பற்ற. அபராதஸஹத்வமென்றது-"என் பிழைத்தாள்திருவடியின்தகவினுக்கு" என்றத்தைப்பற்ற. சம்ருத்தியை யென்றது. "சிறந்தசெல்வம்" என்றத்தைப்பற்ற. அதுபற்ருசாக - ஆர்த்தரக்ஷணதீக்ஷை பற்ருசாக; இது "என்னையுமுளனென்மின்கள்" என்றத்தைப்பற்ற. ஐஶ்வர்யப்பரப் பாலேயென்றது - "யாவையும்யாவருமாய்" என்றத்தைப்பற்றவாதல், "முன்னுலகங்களெல்லாம்படைத்த" என்றத்தைப்பற்றவாதல். ஐகரஸ்யம் பற்ருசாகவென்றது - "தண்டுழாய்நமக்கன்றி நல்கான்" என்றத்தைப்பற்ற. வடிவழகென்றது- "அக்கமலத்திலைபோலுந்திருமேனி" என்றத்தைப்பற்ற. "தமரோடங்குறைவார்க்கு" என்றத்தைப்பற்ற (குணங்களவையென்றது.) .............................*



## ஏழாந்திருவாய்மொழி.

# முதற்பாட்டு.

எங்கானலகங்கழிவாயிரைதேர்ந்திங்கினிதமருஞ்
செங்காலமடநாராய்திருமூழிக்களத்துறையுங்
கொங்கார்பூந்துழாய்முடியெங்குடக்கூத்தர்க்கென்றூதாய்
நுங்கால்களென்றலைமேற்கெழுமீரோநுமரோடே.

## ஆருயிரப்படி,

தன்னைப்பிரியில் நான் தரிக்கமாட்டாததொருபடி, தன்னழகாலும் தன்செயலாலும் என்னைத் தோற்பித்தடிமையாக்கி, என்னோடே கலந்தருளிப்போய், திருமூழிக்களத்திலே யிருந்தருளின வெம்பெருமானுக்கென்றிறஞ்சொல்லவேணும், உங்களுக்கடிமையே நானிருக்கிறேன், என்று நாரைகளை யிரக்கிருள். ................................ ...................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், அதிசயிதமான போக்யதா ப்ரகாரத்தை யுடையனாயுள்ள க்ருஷ்ணனுக்கென் அூதாகப்போன வுபகாரத்துக்காக வென்றலையிலே யுங்கள் கால்களைவைக்கவேணுமென்று சிலநாரைகளை யாதரித் தபேக்ஷிக்கிருள்.

எங்கானலகங்கழிவாய் - உங்களுக்கு விநியோகார்ஹமாம்படி யெங்கள் மமதையிலே வர்த்திக்கிற கடற்கரையிற் சோலையிலகவாயில் கழியிடத்திலே. இரைதேர்ந்து - உங்கள் பந்தாதிசயந்தோற்றும்படி இங்குத்தை வஸ்துவை போக்யமாக விரும்பி. இங்கு - சந்நிதியிலே. இனிது - ப்ரணயப்ரீதியோடே. அமரும் - வர்த்திக்கக்கடவையாய். செம் - என்தலைக்கலங்காரமென்னலாம்படி சிவந்திருக்கிற. கால - காலையுடைத்தாய். மடம் - நியமித்துக் கார்யங்கொள்ளலாம்படி பவ்யதையையுடைய. நாராய் - நாராய். திருமூழிக்களத்து - திருமூழிக்களத்திலே. உறையும் - ஆஶ்ரிதஸுலபனாய்க்கொண்டு நித்யவாசம்பண்ணுமவராய். கொங்கார் - தேன்விஞ்சி. பூம் - தர்ஶநீயமான. துழாய்முடி - திருத்துழாயாலே அலங்க்ருதமான திருமுடியையுடையராய், எங்குடக்கூத்தர்க்கு - குடக்கூத்தாடுகிற மநோஹாரிசேஷ்டிதத்தாலே யெங்

களுக்கு நிரதிசயபோக்யபூதரானவர்க்கு. என் தூதாய் - என்னுடைய தூதக்ருத்யத்திலேசென்று. அந்தவுபகாராதிசயத்தாலே, நுமரோடே-“𑌗𑍁𑌰𑍁𑌵𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌵𑌰𑍍𑌗𑌸𑍍𑌚 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌃” (குருவத்குருவர்க்கஸ்ச்த்ரஷ்டவ்ய:) என்கிறபடியே, உன் பந்துக்களான தாரபுத்ராதிகளோடேகூட. நுங்கால்கள் - எனக்காக வழிநடந்த வுங்கள் கால்களை. என்தலைமேல் - அதுக்குப்பாத்ரபூதமாகையாலே உத்தமாங்கமான வென்தலையிலே. கெழுமீரோ - சேர்க்கவேணும்.

உபகாரகனுசார்யனேயாகிலும் உபகாரஸ்ம்ருதி தத்ஸம்பந்தி பரம்பரையளவுஞ் செல்லுமிறே. “நாராய்” என்கிற ஒருமை - ஜாத்யேகவசநம். ...............*

## ஈடு - முதற்பாட்டு.

சிலநாரைகளைக் குறித்து, அவன் தன்னழகாலும் குணங்களாலும் தன்னைத் தோற்பித்தபடியைச்சொல்லி, என்தசையை அவனுக்கறிவித்துவந் துங்கள்திருவடிகளை யென்றலைமேலேவைக்கவேணுமென்கிறாள்.

(எங்கானல்) பகவத்விஷயத்தி லுபகாரகரோ டைகரஸ்யம் ப்ராப்தமாயிருக்க, (எம்) என்றது - ஒன்றைத் தம்மதாக்கிக் கொடுத்தல்லது தரிக்கமாட்டாத உபகாரஸ்ம்ருதியாலே சொல்லுகிறது. பிறர்க்குபகரிக்கைக்காகவரும் மமகார முத்தேஶ்யமாயிருக்குமிறே. தன்னை பகவத்விஷயத்துக் காக்கினவன்றே தன்னதடங்கலுமங்குத்தைக்கு சேஷமாயிருக்க, உபகாரஸ்ம்ருதியிறே யிப்படி சொல்லுவித்தது. ஆத்மசமர்ப்பணத்துக்கு மடியிதுவிறே. கானலென்கிறது - கடற்கரைச்சோலையாதல், நெய்தல்நிலமாதல். (அகங்கழிவாய்) உள்ளானகழியிடத்து. அந்தர்க் க்ருஹப்ரவேசத்துக் கநுமதிவேண்டாதபடியிறே இவைஅந்தரங்கமாயிருக்கிறபடி. “𑌕𑌥𑌿𑌤𑌾𑌨𑌿 𑌰𑌹𑌸𑍍𑌯𑌾𑌨𑌿” (கதிதாநிரஹஸ்யாநி) என்கிறபடியே வர்த்தியாநின்றன. (இரைதேர்ந்து) இரைதேடி; “𑌗𑍃𑌹𑍇 𑌭𑍁𑌕𑍍𑌤𑌮𑌶𑌙𑍍𑌕𑌿𑌤𑌮𑍍” (க்ருஹேபுக்தமஶங்கிதம்) என்கிறபடியே. பண்டு தனக்குபகரித்தபடியைச் சொல்லுகிறு ளிப்போ துபகரிக்கைக்காக. (இங்கு) இத்தலையையழித்துத் தூதுவிடவேண்டும்படி அகலவிருந்த வவனைப்போ லன்றியே, சந்நிஹிதராகப் பெற்றேனென்கிறுள். (இனிதமரும்) இனிதாக நம்மோடே ஸஹவாசம்பண்ணப்பெறுகை; விலக்ஷணபோகங்களை புஜித்து வர்த்திக்குமென்றுமாம். (செங்கால) சிவந்தகாலையுடைய. என்மடியிலேயிருக்கும் கால்போலேயிருந்ததி நான் தலையிலே வைத்துக்கொள்ளப்புகுகிற காலும். (மடநாராய்) பவ்யமான நாராய். (திருமூழிக்களத்துறையும்) தூதுபோவார்க் கடுத்தணித்தாகத் திருமூழிக்களத்திலே நிற்கையாலே, பரமபதத்திற்காட்டி லேற்றமிருக்கிறபடி. (கொங்கார்பூந்துழாய்முடியெங்குடக்கூத்தர்க்கு) ஒப்பனையையும் மநோஹாரி சேஷ்டிதத்தையும் இரண்டையு மெனக்காக்கிவைத்தவர்க்கு. (எம்) என்கிறது - ஒப்பனையிலும் சேஷ்டிதத்திலு மிரண்டிலுமாகிறது. எம் என்று - ஆத்மநிபஹுவசநம். (என்தூதாய்) அவ்வொப்பனையிலும் சேஷ்டிதத்திலுந்தோற்று

அவனைப்பெற்று ஜீவித்தல் இல்லையாகில் முடிதலாயிருக்கிற வென் தூத க்ருத்யத்திலே யதிகரித்து. (நுங்கால்களென்றலைமேல்) உபகாரகரான வுங்களுடையகாலை, நீங்களுபகரிக்க ஜீவிக்கவிருக்கிற வென்றலைமேலே; மயிர்கழுவிப் பூச்சூட விருப்பாரைப்போலே. அவற்றின் காலாகி லிவள் தலையிலே யிருக்கக்கண்டன; இவள் தலையாகி லவற்றின் கால்வைக்கக் கண்டிருந்தது; இரண்டும் பரார்த்தமாயிருந்தபடி. (கெழுமீரோ) ஒரு விதிகொண்டு ப்ரவர்த்திக்க வேண்டாவாய்த்திங்கு; அவனுக்காக்கினவாறே உங்களதாயிருக்குமிறே. கொடுவந்துசேரிகோளோ. (நுமரோடே) "ஸவுத்ரவௌத்ரஸஹணஃ" (ஸபுத்ரபௌத்ரஸ்ஸகணः) என்னுமா போலே, (ஸபரிகரமாக;) "ஆசார்யவதாசார்யவுத்ரெவுத்திஃ" (ஆசார்யவதாசார்யபுத்ரோவ்ருத்திः) என்னக்கடவதிறே.......................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (எங்கானலித்யாதி.) "செங்காலமடநாராய்" என்று தொடங்கி "கெழுமீரோ" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (சிலநாரைகளையித்யாதி.) குணங்களாலுமென்றது - "திருமூழிக்களத்துறையும்" என்றத்தைப்பற்ற.

(ஜகரஸ்யம் ப்ராப்தமாயிருக்க) என்றவநந்தரம், "எம் என்றுமமகரிப்பானென்னென்ன" என்று கூட்டுவது. பரிஹாரம் (எம் என்றதித்யாதி.) உபகாரமாவது - இத்தசையிலேவந்து முகங்காட்டினது. எல்லாமென்றாலும் மமகாரம் த்யாஜ்யமன்றோவென்ன (பிறர்க்கித்யாதி.) "பகவத்விஷயத்தில்" இத்யாதி வாக்ய விவரணம் (தன்னை பகவத்விஷயத்துக்கித்யாதி.) அங்குத்தைக்கென்றது - கடகர்க்கென்றபடி. இப்படி சொல்லுவித்ததென்றது - "எங்கானல்" என்னும்படிசொல்லுவித்ததென்றபடி. அப்படி உபகாரஸ்ம்ருதியாலே மமகாரம்பண்ணின விடமுண்டோவென்ன (ஆத்மசமர்ப்பணத்துக்குமித்யாதி.) இதுக்கு "எனதாவிதந்தொழிந்தேன்" என்றதிலே நோக்கு. நெய்தல் நிலமாவது-கடற்கரைமாத்ரம். எங்களுடையகானலில் உள்ளானகழியிடத்து என்று சப்தார்த்தம். "அகங்கழிவாய்" என்ற பதங்களுக்கு பாவம் (அந்தர்க்க்ருஹேத்யாதி.) அந்தரங்கத்வகார்யத்தைக் காட்டுகிறார் (கதிதாநீத்யாதி.) "கயிதாநிரஹஸ்யாநிக்ருஹெஸுக்தஸஂஜிதஂ தஶிதாநிகளத்ராணிஸௌஹாதஂகிஂதஃவரஂ" (கதிதாநிரஹஸ்யாநிக்ருஹேபுக்தமஸங்கிதம்। தர்ஶிதாநிகளத்ராணிஸௌஹார்த்தம்கிமதஃபரம்) இதி மஹாபாரதே கர்ணவசநம். இவற்றைத் தூதுவிட நினைகிறவள் இரைதேடினத்தைச்சொல்லுவானென்னென்ன (பண்டுதனக்கித்யாதி.) பண்டு உபகரிக்கையாவது - தூது போவதற்குமுன்னே தன் கழிவாயிலே யிரைதேடுகை. "இனிதமரும்" என்றதுக் கர்த்தத்வயம் - அமருகை - பொருகை - பொருந்துகையாய், இனிதாக நம்மோடே சஹவாசம்பண்ணப் பெறுகையாதல், சேவலும் பேடையும் விலக்ஷண போகங்களை புஜித்து வர்த்திக்கையாதல்; இந்தவர்த்த த்வயத்தையு மருளிச்செய்கிறார் (இனிதாகவித்யாதிவாக்யத்வயத்தாலே.) இத்தால் - "தஶிதாநிகளத்ராணி" (தர்ஶிதாநிகளத்ராணி) என்றத்தைச் சொல்லுகிறதென்றுங் கண்டுகொள்வது.

காலில் சிவப்பைச் சொல்லுகிறதுக்கு ஹார்த்தபாவம் (என்மடியிலேயித்யாதி.) மடியிலிருக்குங்கால் - நாயகன் கால்.

அடுத்தணித்தாக - மிகவும் ஸந்நிஹிதமாக. கொங்கு - பரிமளம், ஆர்-பூர்ணமான, பூந்துழாய்முடி - புஷ்பங்களையுடைய திருத்துழாயை முடியிலே யுடையவென்று சப்தார்த்தம். "இரண்டையு மெனக்காக்கிவைத்த" என்றதுக்கு சப்தமேதென்ன (எம்மென்கிறதித்யாதி.)

"தலைமேல்" என்னவமைந்திருக்க, "என்றலைமேல்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (மயிர்கழுவியித்யாதி.) அதாவது - தன்தலை யவற்றின்காலுக்கர்ஹமென்னுமிடந் தோற்றுகைக்காக விசேஷிக்கிற தென்றபடி. "நுங்கால்கள், என்தலை" என்ற பதச்சேர்த்திக்கு பாவம் (அவற்றினித்யாதி வாக்யத்வயம்.) இத்தால் பலிதம் (இரண்டுமித்யாதி.) "கெழுமீரோ!" என்ற ஸ்வரத்துக்கு பாவம் (ஒருவிதியித்யாதி.) அதுக்கடியேதென்ன (அவனதாக்கினவித்யாதி.) கெழுமீரோ-சேருங்கோள். "𑌏𑌤𑌦𑌾𑌖𑍍𑌯𑌾𑌨𑌮𑌾𑌯𑍁𑌷𑍍𑌯𑌂 𑌪𑌠𑌨𑍍𑌰𑌾𑌮𑌾𑌯𑌣𑌂 𑌨𑌰𑌃। 𑌸𑌪𑍁𑌤𑍍𑌰𑌪𑍌𑌤𑍍𑌰𑌃 𑌸𑌗𑌣𑌃 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍇 𑌮𑌹𑍀𑌯𑌤𑍇" (ஏததாக்யாந மாயுஷ்யம் படந்ராமாயணம்நர:। ஸபுத்ரபௌத்ரஸ்ஸகண: ப்ரேத்யஸ்வர்க்கேமஹீயதே) இதி ஸங்க்ஷேபே. அப்படி புத்ரர்களு முத்தேஶ்யரோவென்ன (ஆசார்யவதித்யாதி) "𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌦𑌾𑌰𑍇 𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃, 𑌤𑌥𑌾 𑌸𑌮𑌾𑌦𑌿𑌷𑍍𑌟𑍇𑌽𑌧𑍍𑌯𑌾𑌪𑌯𑌤𑌿 𑌵𑍃𑌤𑍍𑌤𑌤𑌰𑍇 𑌚 𑌸𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑌿𑌣𑌿, 𑌉𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑌾𑌶𑌨𑌵𑌰𑍍𑌜𑌮𑍍; 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑍁𑌤𑍍𑌰𑍇 𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃" (ஆசார்யவதாசார்யதாரேவ்ருத்தி:, ததாஸமாதிஷ்டேத்யாபயதிவ்ருத்ததரேசஸப்ரஹ்மசாரிணி, உச்சிஷ்டாஶநவர்ஜம்; ஆசார்யவதாசார்யபுத்ரேவ்ருத்தி:) இத்யாபஸ்தம்பதர்மே.

எங்கானலகமென்று தொடங்கி, என்னுதாய் - நுமரோடே - நுங்கால்களென்றலைமேல் கெழுமீரோ இத்யந்வய:.......................................................*

—————:0:—————

## இரண்டாம்பாட்டு.

நுமரோடும்பிரியாதேநீருநுஞ்சேவலுமா
யமர்காதற்குருகினங்காளணிமூழிக்களத்துறையு
மெமராலும்பழிப்புண்டிங்கென்றம்மாலிழிப்புண்டு
தமரோடங்குறைவார்க்குத்தக்கிலமேகேளீரே.

### ஆறாயிரப்படி.

(நுமரோடும்) "அவருக்குச்சொல்லும் வார்த்தையைக்கேளுங்கோள்" என்று குருகுகளையழைத்துவைத்து, நடுவே, தன்நோவாலே, "தம்மாலுமுபேக்ஷிதையாய் என்பந்துக்களாலும் கர்ஹிதையாயிங்கேயிருக்கு மிவ்விருப்பென்செய்ய!, இவ்விருப்பில் முடிகையேநன்று'!" என்று தன்னிலேசொல்லி யின்னுதாய், பின்னையும், அவனை விடமாட்டாமையாலே, "தாமும் தம் பரிஜநங்களுமாயிருந்த விருப்புக்காண்கைக்கு நானநர்ஹையாயிழந்துபோமித்தனையோ?" என்று கேளீரொன்றுகொண்டு, தான்சொல்லப்புக்கவார்த்தையை அவற்றுக்குச்சொல்லிமுடிக்கிறாள்.

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், "அசாதாரணபரிஜநங்களோடே யநுபாவ்யராயிருக்கிற தமக்கு நாங்களநுபூபரல்லோமோ" என்று கேளுங்கோளென்று சில குருகுகளைப் பார்த்துச்சொல்லுகிறாள்.

நுமரோடும்-சந்தாநுவர்த்திகளான பந்துஜநங்களோடும். பிரியாதே - பிரியாதே. நீரும்-சேவலையநுவிதாநம்பண்ணும் நீங்களும். நுஞ்சேவலுமாய் - உங்களையநுவிதாநம்பண்ணுஞ்சேவலுமாய். அமர்காதல் - சம்ஶ்லேஷித்து வர்த்திக்கும்படியான ப்ரணயத்தையுடைய. குருகினங்காள்-குருகினங்காள். அணி-தர்ஶநீயமான. மூழிக்களத்து-திருமூழிக்களத்திலே. உறையும்-நித்யவாசம்பண்ணுகிற. தம்மால் - தம்மாலே. இழிப்புண்டு - காதாசித்க சம்ஶ்லேஷாநந்தர முபேக்ஷிக்கப்பட்டு. அதடியாக, எமராலும்-என்னோடு அநுபந்தமுடையவராலும். பழிப்புண்டு - பழிக்கப்பட்டு. இங்கென்! - இங்குத்தையிருப்புக்கு என்னப்ரயோஜநமுண்டு!. தமரோடு - அஸாதாரணபரிஜநத்தோடே. அங்கு-அங்கே. உறைவார்க்கு - நித்யவாஸம்பண்ணுகிறதமக்கு. தக்கிலமே-நாங்களாகோமே. கேளீரோ - கேளுங்கோள்..............................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

சில குருகினங்களைக் குறித்து, "தாமும் தமக்கு நல்லாருமாயிருந்த விருப்பை நானிழந்தே போமித்தனையோ" என்றறிவியுங்கோளென்கிறாள்.

(நுமரோடும்பிரியாதே) "தமரோடங்குறைவார்" என்றுய்த்து ப்ராப்யவஸ்துவைச்சொல்ல நினைகிறது; அப்படியே இவையும் குறைவற்றிருக்கிறபடி. குறைவாளர்கார்யம் குறைவற்றார்க்குத் தீர்க்கவேண்டாவோ!. உண்டார்க்கு, பட்டினிகிடந்தார்பசிபரிஹரிக்கப்ராப்தமிறே. (நீரும் நுஞ்சேவலுமாய்) சேவல்நினைவறிந்து பரிமாறும் நீரும், உம்முடைய கருத்தறிந்து பரிமாறும்சேவலுமாய். சம்ஶ்லேஷரஸமறியும் நீங்கள், பிரிந்தாருடைய செல்லாமையுமறியவேண்டாவோ!. (அமர்காதல் குருகினங்காள்) பரஸ்பரம் பொருந்தினகாதல். ஆசையிலே, விஶ்லேஷத்தை பலிப்பியாதவாசையுண்டாகாதே!. ஆசையிலுங்குறைவற்று, விஶ்லேஷமுமின்றியிலே, கருத்தறிந்து பரிமாறவுங்கடவதாயிருப்பதே நீங்கள்முன்னம்!. (குருகினங்காள்) என்று சம்போதித்துவைத்து, தொடங்கினவார்த்தை முடியச்சொல்லமாட்டாத பலஹாநியாலே அர்த்தோக்தியிலேயத்தைமுடித்து, தானிருக்கிறவிருப்பிலே விஷண்ணையாகிறாள். (எமராலும்பழிப்புண்டு-அணிமூழிக்களத்துறையும்- தம்மாலுமிழிப்புண்டு) காதாசித்க சம்ஶ்லேஷமே ஹேதுவாக பந்துக்கள் கைவிட்டார்கள், காதாசித்க சம்ஶ்லேஷத்தளவிலே தாமுமுபேக்ஷித்தார்; பந்துக்கள் கைவிட்டதே ஹேதுவாகக் கைக்கொள்ளவேணும்; பிற்பாடர்க்குக் காட்சிகொடுக்கவந்துநிற்கிற நிலையாகையாலும் கைக்கொள்ளவேணும், இரண்டுமென்னளவி லுபேக்ஷாஹேதுவாவதே!. (இங்கென்!) இவ்விருப்புக்கென்ன ப்ரயோஜநமுண்டு!, தம்மைப்பெற்றிருக்கிறேனே, பந்துக்களைப்

பெற்றிருக்கிறேனே; இங்குள்ளார்கைவிட்டால் பின்பு தம்மெல்லைக்குள்ளே யாக்கிக்கொள்ளவேண்டாவோ!; பகவத்விஷயத்திலே யுட்புக வுட்புக, அன்றுதொடங்கிக் கைவிடுவர்களிறே சம்சாரத்திலுள்ளார்!. ("சரீரஸமநந்தரத்திலே ஒருதேசவிசேஷத்திலே பெறவேண்டித்தான் ஆறியிருக்கிறேனே;" என்று தன்னிலே விஷண்ணையாய், அத்தை) அவ்வளவிலேவிச்சேதித்து, பின்னையும், தன்செல்லாமையாலே அவற்றைக்குறித்து வார்த்தைசொல்லுகிறாள் (தமரோடங்குறைவார்க்கு;) தம்பரிஜநங்களோடே அங்கே நித்யவாசம்பண்ணுகிறதமக்கு, நாங்களாகோமோ என்று கேளுங்கோள். தாமும் தமக்கு நல்லாருமாயிருக்கிற விருப்புக்கு, "அடியார்கள்குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ" என்றிருப்பாராகாரோ என்றுகேளுங்கோள் ... ... ... ... ... ... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (நமரோடுமித்யாதி.) "தமரோடங்குறைவார்க்குத்தக்கிலமேகேளீர்" என்றத்தைக் கடாக்ஷித் தவதாரிகை (சிலகுருகினங்களையித்யாதி.)

"நமரோடும்" என்றிவற்றைச்சொன்னதுக்குபாவம் (தமரோடித்யாதி) இவைகுறைவற்றால் தனக்கு ப்ரயோஜநமேதென்ன (குறைவாளரித்யாதி) "தீர்க்கவேணும்" என்கிறநிர்ப்பந்தமேதென்ன; லௌகிக த்ருஷ்டாந்தத்தாலே யத்தை த்ருடீகரிக்கிறார் (உண்டார்க்கித்யாதி) இத்தால்பாவம் (சம்ஶ்லேஷேத்யாதி) "அமர்காதல்" என்றதுக்கு - பரஸ்பரசத்ருஶமான காதலென்று கீழருளிச்செய்து, அமருதல் - காலத்தோடேபொருந்துதலாய், நித்யமான காதலென் றாத்தாந்தரமாதல், கீழ்வாக்யத்துக்கு பலிதமாதல் (ஆசையிலேயித்யாதி) "அமர்காதல், நமரோடும் பிரியாதே, நீரு நுஞ்சேவலுமாய்" என்கிற பதத்ரயங்களாலும் பலிதம ஆசையிலுமித்யாதி) "இங்கென்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (குருகினங்காளென்றித்யாதி) "தக்கிலமேகேளீர்" என்று முடியச்சொல்லமாட்டாத பலஹாநியாலேயென்றபடி.

பதத்வயத்துக்கும்பாவம் (காதாசித்கேத்யாதி வாக்யத்வயம்) கீழ்வாக்யத்வயபலிதம் (பந்துக்களித்யாதிவாக்யத்ரயம் ஏன், ப்ரயோஜநமில்லையோவென்ன (தம்மைப்பெற்றித்யாதி) ஆனால் செய்யவடுப்பதென்னென்ன (இங்குள்ளாரித்யாதி) காதாசித்க சம்ஶ்லேஷமாத்ரத்திலே பந்துக்கள் விடுவர்களோவென்ன (பகவத்விஷயத்திலேயித்யாதி.)

மேலுக்கவதாரிகை (அவ்வளவிலேயித்யாதி) அவ்வளவிலே - விஷண்ணையானவளவிலே. விச்சேதித்து-விஷாதத்தைவிட்டு.

தக்கிலமே - தகோமோ. கீழ்வாக்யத்துக்குபாவம் (தாமும் தமக்கித்யாதி;) அதவா, "தமரோடு" என்று விசேஷித்ததுக்கு பாவாந்தரமாதல் (தாமும்தமக்கித்யாதி) அதாவது - தாம் மாத்ரமன்றிக்கே ததீயபர்யந்தமாக வபேக்ஷித்த நாங்கள் அங்குத்தைக்காகோமோவென்று வ்யங்க்யம்.

நமரோடு மென்றுதொடங்கி, குருகினங்காள் - எமராலும்பழிப்புண்டு - அணிமூழிக்களத்துறையும் - தம்மாலுமிழிப்புண்டு - இங்கென் ! - தமரோடங்குறைவார்க்குத் தக்கிலமேகேளீர் இத்யந்வயः. பழிப்புண்கை-பழிக்கப்படுகை. இழிப்புண்கை-உபேக்ஷிக்கப்படுகை ..........................................................*

# மூன்றாம்பாட்டு.

தக்கிலமேகேளீர்கடடம்புனல்வாயிரைதேருங்
கொக்கினங்காள்குருகினங்காள்குளிர்மூழிக்களத்துறையுஞ்
செக்கமலத்தலர்போலுங்கண்கைகால்செங்கனிவா
யக்கமலத்திலைபோலுந்திருமேனியடிகளுக்கே.

## ஆறாயிரப்படி.

(தக்கிலமே) தன்னைக்காண்கைக்கு நானர்ஹையன்றியே அவ்வழகையுங் காணப்பெறாதே யிழந்துபோமித்தனையோவென்று கேளீரென்கிறாள் ... ... ... ... ... ... ... .. ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவயவங்களோடு சமுதாயத்தோடு வாசியற அதிசயித போக்யமான வடிவையுடையவர்க்கு நாங்களயோக்யரோ கேளுங்கோளென்று சில சில கொக்கினங்களையும் குருகினங்களையுங் கூட வபேக்ஷிக்கிறாள்.

தடம் - பெரிய. புனல்வாய் - தடாகத்திலே. இரைதேரும் - ஆமிஷார்த்திகளாய்க்கொண்டு. என்னபிரிவேசாநுகுணமாகத் தனித்தனியே திரள்திரளாயிருக்கிற, கொக்கினங்காள் குருகினங்காள் - கொக்கினங்காள் குருகினங்காள். குளிர்-ஸ்ரமஹரமான. மூழிக்களத்து - திருமூழிக்களத்திலே. உறையும் - நித்யவாஸம்பண்ணுமவராய். செம் - சிவந்த. கமலத்து - கமலத்தின். அலர்போலும்-அலர்போலேயிருக்கிற. கண் - "ஜிதந்தே" என்னப்பண்ணும் கண்ணையும். கை - "குவெஷவ்ரஷெஉஉஹஸ்தவஜ்ஜுரிஷ்யதி" (அப்யேஷப்ருஷ்ட்டேமமஹஸ்தபத்மம்கரிஷ்யதி) என்று ப்ரார்த்திக்கும்படியே யணைக்கும் கையையும். கால் - "வரண நூவ்ரஜாமி" (சரணத்வம்வ்ரஜாமி) என்றாஸ்ரயிக்கும்திருவடிகளையும். செங்கனிவாய் - "ஊஸூஹவஃ" (மாஸுசஃ) என்று ஸாந்த்வவாதம்பண்ணும் சிவந்த கனிநிறத் திருப்பவளத்தையும். அக்கமலத்து - அந்தக்கமலத்துக்குப்பரபாகமான. இலைபோலும் - இலைச்செறிவுபோலே யிருக்கிற ஸ்யாமளமான. திருமேனி - திருமேனியையுடையராய். அடிகளுக்கு - அவ்வடிவழகைக்காட்டி யெனக்கு ஸ்வாமியானவர்க்கு. தக்கிலமே-இவ்வழகை யநுபவிக்கைக்கு நாங்கள்யோக்யரல்லோமோ என்று. கேளீர்கள் - கேளுங்கோள். ........................................................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

சிலகொக்கினங்களையும் குருகினங்களையும்நோக்கி, தன்னழகுகாண்கைக்கு நாங்கள் யோக்யரல்லோமோவென்று கேளீர் என்கிறாள்.

(தக்கிலமேகேளீர்கள்) நாமொன்றிலே துணியும்படி அறுதியாகக் கேட்டுப்போருங்கோள். அவன் இன்னம் "இதுவேணும்" என்றிருந்தானாகில் ப்ராணன்களைவருந்தி நோக்கிக்கொண்டுகிடக்கவும், "வேண்டா" என்றிருந்தானாகில் நாமுமொன்றிலே துணியும்படி யறுதியாகக்கேட்டுவிடுங்கோள். (தடம்புனல்வாயிரைதேரும்) மிக்கஜலசம்ருத்தியையுடை

யபொய்கையில் நீரிலே இரைதேடுகிறவளவாயிருந்த துங்களுக்கு. ("உபவாஸக்ருஶாம்" (உபவாஸக்ருஶாம்) என்கிறபடியே) உபவாஸக்ருஸை யான வென்னைப்போலன்றியே, இரைமிடற்றுக்குக் கீழிழியும்படியிறே யுங்கள் பௌஷ்கல்யம்!. (கொக்கினங்காள் குருகினங்காள்) குருகு-கொய்யடிநாரை. "யாம்கபீநாம்ஸஹஸ்ராணி" (யாம்கபீநாம்ஸஹஸ்ராணி) என்கிறபடியே, கண்ணால்கண்டவற்றையடைய ஏவுகிறாள். "சிலவற்றைப்போகவிட்டோம், அவைநங்காரியம் தலைக்கட்டும்" என்று ஆறியிருக்கும் விஷயமன்றே!. (குளிர்மூழிக்களத்துறையும்) விரஹதப்தையாயிருக்கிறவெனக்கு, அந்த ப்ரமஹரமானதேசத்தில் ப்ராப்தியரிதாவதே!. (செக்கமலமித்யாதி) அக்குளிர்த்திக்கடியான உள்ளில் * வாசத்தடமிருக்கிறபடி; சிவந்தலர்ந்ததாமரைபோலேயிருக்கிற கண்முதலான திவ்யாவயவங்களையுடையவன்; முதலுறவுபண்ணுங்கண், அந்நோக்குக்குத்தோற்றாரையணைக்கும்கை, ஸ்பர்ஶத்துக்குத்தோற்றார் விழுந்திருவடிகள், திருவடிகளிலே விழுந்தாரை சாந்த்வநம்பண்ணி தரிப்பிக்கும் முறுவல். (அக்கமலத்திலைபோலுந்திருமேனி) அவர்களுக்கு உஜ்ஜீவநமானவடிவு. அவயவங்களுக்குப் பரபாகமான செந்தாமரையிலைபோலே யாய்த்துத்திருமேனி. வெண்டாமரையென்னில் விஜாதீயமென்று, (அக்கமலம்) என்கிறது. (அடிகளுக்கு) அந்தவவயவசோபையையும் வடிவழகையுங்காட்டி யெழுதிக்கொண்டவர்க்கு. இவ்வடிவழகுக்குத்தோற்று வைவர்ண்யத்தை தரித்திருப்பார் அங்குத்தைக்கு அயோக்யரோ என்று கேட்டுப்போருங்கோள். அவன் * புருஷோத்தமனானால், இவள் * நாரீணாமுத்தமையாம்போது இப்படியேயிருக்கவேணுமிறே..............................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. (தக்கிலமேயித்யாதி.) "கொக்கினங்காள்குருகினங்காள்-(திருமேனியடிகளுக்கு-) தக்கிலமேகேளீர்கள்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை (சிலகொக்கினங்களையும்[illegible]யாதி.)

மீளவும் "தக்கில[illegible]களீர்" என்றதுக்கு பாவம் (நாமொன்றிலே யித்யாதி.) விவரணம் (அவனின்னமித்யாதி.)

"தடம்புனல்" என்றதிலே - ஜலசம்ருத்தியு மர்த்தாத்ஸித்தம். விவரணம் (உபவாஸேத்யாதி.) சொய்யடி - மெத்தென்றவடி. "இனங்காள்" என்ற பஹுவசநார்த்தம் (யாம் கபீநாமித்யாதி) "யாம்கபீநாம்ஸஹஸ்ராணி ஸுபஹூந்யயுதாநி ச। திக்ஷு ஸர்வாஸு மார்க்கந்தே ஸேயமாஸாதிதாமயா" (யாம்கபீநாம்ஸஹஸ்ராணி ஸுபஹூந்யயுதாநிச। திக்ஷுஸர்வாஸுமார்க்கந்தே ஸேயமாஸாதிதாமயா) இதி சுந்தரகாண்டே ஸீதாம்த்ருஷ்ட்வா ஹநுமாந். முந்தறப்போகவிட் டவைவருமளவு மாறியிராமல், கண்டபக்ஷிகளை யெல்லாம் தூதுவிடுவானென்னென்ன (சிலவற்றையித்யாதி.)

திருமூழிக்களத்திலுண்டான சைத்யத்தை வர்ணிக்கிறதுக்கு பாவம் (விரஹதப்தையாயித்யாதி.) வாசத்தடமென்றது-அவயவங்கள் தாமரையானால், அதுக

ளிருக்குமிடம் தடாகமென்னுமத்தாலே. "கண், கை, கால்" என்கிற க்ரமத்துக்கு பாவம் (முதலுறவித்யாதி.) அவர்களுக்கு - அநுபவிப்பார்க்கு. சப்தார்த்தம் (அவயவங்களுக்கித்யாதி) "கமலத்திலே" என்றுதே, "அக்கமலம்" என்று விசேஷித்ததுக்குபாவம் (வெண்டாமரையித்யாதி.) அதாவது - சாமாந்யேந "கமலம்" என்றால், வெண்டாமரையையுஞ் சொல்லுமாகையாலே, வைஜாத்ய பரிஹாரார்த்தமாக "அக்கமலம்" என்று செந்தாமரையை விசேஷிக்கிறதென்றபடி. "கண்கைகால் செங்கனிவாய் - திருமேனி" என்றவநந்தரம் "அடிகட்கே" என்றதுக்கு பாவம் (அந்தவவயவேத்யாதி.)

கீழ்வாக்யத்துக்குபாவம் (இவ்வடிவழகுக்கித்யாதி.) வாசகசப்த மில்லாதிருக்க, "வைவர்ண்யத்தைதரித்திருப்பார்" என்கிறதென்னென்ன (அவன் * புருஷோத்தமனித்யாதி.)

தடம்புனல் வாயென்றுதொடங்கி, அடிகட்கு - தக்கிலமே கேளீர்க ளித்யந்வயஃ........................................................................................*

# நான்காம்பாட்டு.

திருமேனியடிகளுக்குத்தீவினையேன்விடுதூதாய்த்
திருமூழிக்களமென்னுஞ்செழுநகர்வாயணிமுகில்கா
டிருமேனியவட்கருளீரொன்றக்காலும்மைத்தன்
றிருமேனியொளியகற்றித்தெளிவிசும்புகடியுமே.

## ஆறாயிரப்படி.

(திருமேனி) திருமூழிக்களமென்னுஞ் செழுநகர்வாய் அணிமுகில்காள், திருமேனி யவட்கருளீர் என்றித்தனையுஞ்சொன்னாலும், உங்களுக்குப்பரமதநமான திருமேனியொளியை யுங்களையிழப்பித்து, அவ்வூரில் நின்றும் போகவடுக்குமோ, இத்தனையுஞ்சொன்ன லென்செய்யுமென்கிறாள்... ... ... ... ... ... ... ... ... ... .. ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அழகாலே யடிமைகொள்ளுமவர்க்கு என்தூதாய்ச்சென்று, உம்முடைய திருமேனியை யவளுக்குபகரியீரொன்று ஒருவார்த்தைசொன்னால் உங்கள் சாரூப்யத்தையும் தேசவாசத்தையுந்தவிர்க்குமோவென்று சிலமேகங்களைக்குறித்து வார்த்தைசொல்லுகிறாள்.

அணி - தர்ஸநீயமான வடிவையுடைய. முகில்காள்-முகில்காள். திருமூழிக்களமென்னும் - "பின்னானார்வணங்குஞ்சோதி திருமூழிக்களம்" என்னும்படி ப்ரசித்தமான. செழுநகர்வாய்-விலக்ஷணநகரத்திலே வர்த்திக்கிறவராய். திருமேனியடிகளுக்கு - "ரூபமேவாஸ்யைதந் மஹிமாநம் வ்யாசஷ்டே" (ரூபமேவாஸ்யைதந் மஹிமாநம் வ்யாசஷ்டே) என்றுவடிவுதானே சர்வாதிகத்வ ப்ரகாசகமான சேஷித்வத்தையுடையவர்க்கு. தீவினையேன்-அவரோடுறவுண்டாயிருக்க வநுபவிக்கப்பெறுத க்ரூரமான பாபத்தையுடையநான். விடு - விடுகிற. தூதாய் - தூதராய்ச்சென்று.

அவட்கு-அவளுக்கு. திருமேனி - உம்முடைய நிரதிசயபோக்யமானவடிவை. அருளீர் - உபகரித்தருளீர். என்றக்கால்-என்றொருஉக்திநேர்ந்தக்கால். உம்மை - பரார்த்தமாகவார்த்தைசொன்னவுங்களை. தன்திருமேனியொளி-தானடியிலே யுங்களுக்குத் தந்த தன்திருமேனியிலொளியை. அகற்றி-தவிர்த்து. தெளிவிசும்புகடியுமே-விலக்ஷணமான ஆகாசத்தில் வர்த்தியாதபடிபண்ணுமோ?

ஸ்வார்த்தமாக வபேக்ஷித்தார்க்குங் கொடுக்குமவன், எனக்காகவபேக்ஷித்ததுக்காக சாரூப்யத்தையும் விஷ்ணுபதாஶ்ரயத்வத்தையும் தவிர்க்கை அஸம்பாவிதமென்கிறாள்.................. ........................................... ...........*

## ஈடு - நான்காம்பாட்டு.

சிலமேகங்களைநோக்கி, என்வார்த்தையை யவனுக்குச்சொன்னால் உங்களைதண்டிக்குமோவென்கிறாள்.

(திருமேனியடிகளுக்கு) ஸ்வரூபகுணவிபூதிகளையொழிய வடிவழகாலே சர்வஸ்வாமியென்று தோற்றும்படி யிருக்கிறவர்க்கு; வடிவழகாலே ஜகத்தையடையத் தோற்பித் தடிமைகொண்டிருக்கிறவர்க்கு என்றுமாம். "ஃவஶாஃ ப்ரதிவெஃரெ" (அவஶாஃப்ரதிபேதிரே) என்கிறபடியே ப்ரதிகூலர்க்கு மாகர்ஷகமாயிறே வடிவிருப்பது. (தீவினையேன்விடுதூதாய்) சர்வசாதாரணமான உடம்பையிழந்து உங்கள் காலிலேவிழவேண்டும்படியான பாபத்தைப்பண்ணின வென்னுடைய தூதக்ருத்யத்திலே யதிகரித்து. (திருமூழிக்களமென்னும்) ஆர்த்தரக்ஷணத்துக்காக வந்து நிற்கிறவிடமென்று ப்ரசித்தமானதேசம். (செழுநகர்) பரமபதத்திற்காட்டிலுண்டானவேற்றம். செழுநகர்வாய்வர்த்திக்கிற அழகியமுகில்காளென்னுதல்; செழுநகர்வாயடிகளுக்குச் செப்புமின்களென்னுதல். (திருமேனியவட்கருளீர்) பதார்த்தமான உடம்பை, ஆசைப்பட்டார்க்குக்கொடுத்தாலாகாதோ?. "ஹக்தாநாஂ" (பக்தாநாம்) என்கிறபடியே, இவ்வுடம்பு ஆசைப்பட்டாரதன்றோ? என்றுசொல்லுங்கோள். காமினிகளுக்கு ஸ்வரூபாதிகளிற்காட்டில் வடிவிலேயிறேயபேக்ஷை. (அருளீர்) ப்ரணயித்வமன்றோகுடிபோய்த்து, க்ருபையும்மறுத்ததோ?. (என்றக்கால்) "வாவாயஂ ஃவோப்நுஹி" (வாசாதர்மமவாப்நுஹி) என்று உங்களுக்கொருவார்த்தையன்றோ நேரவேண்டுவது!. (உம்மை) இப்படி உபகாரகரான உங்களை. (தன்திருமேனியொளியகற்றித் தெளிவிசும்புகடியுமே?) உங்கள் வடிவிற்புகரையும்போக்கி நிர்மலமான வாகாசத்தினின்று முங்களையோட்டுமோ?. உங்களுக்கு இதுக்குமுன்பில்லாதவற்றையும் உண்டாக்குமதொழிய, பண்டுள்ளவற்றைத்தவிர்த்துங்களைதண்டிக்குமோ?. அல்பசாத்ருஶ்யத்தைத்தவிர்த்து, "வரமஂஸாஂமுவெதி" (பரமம்ஸாம்யமுபைதி) என்கிறபடியே சர்வதாஸாத்ருஶ்யத்தையும்தந்து, ஆகாசமாத்ரஸ்த்திதிகளன்றிக்கே பரமாகாசத்தையுந்தாரானோ?. உங்களுடைய உக்திமாத்ரத்தாலே யெனக்கு முங்களுக்கும் ப்ரயோஜநமொத்திருக்க, அறியிருக்கக்கட்விகோளோ ...... ..................... ...........................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (திருமேனியித்யாதி) "அணிமுகில்காள்-என்றக்காலும்மைத் தன்றிருமேனியொளியகற்றித் தெளிவிசும்புகடியுமே?" என்றவற்றைக்கடாக்ஷித்த வதாரிகை (சிலமேகங்களையித்யாதி.)

"கண்டவாற்ருல்" இத்யாதிப்படியே திருமேனியில் வைலக்ஷண்யத்தாலே சர்வஸ்வாமி என்று தோற்றுகிறவர்க்கென்று முந்தினவர்த்தம்; இவ்விடத்திலே, "ரூபஶ்ரியாபரமயா" (ருபஶ்ரியாபரமயா) இத்யாதிஶ்லோகமநுசந்தேயம். வடிவழகாலே ஜகத்தை சேஷமாக்கின ஸ்வாமிக்கென்று இரண்டாமர்த்தம். அநுகூலரையொழிய ஜகத்தையடைய வடிவழகாலே தோற்பிக்கக்கூடுமோவென்ன (அவசா இத்யாதி) "த்ருஷ்ட்வாக்ருஷ்ணம்ததாயாந்தம் ப்ரதபந்தமிவௌஜஸா। யதார்க்கம் கேஶவே வ்ருத்திமவஶாः ப்ரதிபேதிரே" (த்ருஷ்ட்வாக்ருஷ்ணம்ததாயாந்தம் ப்ரதபந்தமிவௌஜஸா। யதார்க்கம்கேஶவேவ்ருத்திமவஶாःப்ரதிபேதிரே) இதிசபாபர்வணி. "தீவினையேன்" என்றதுக்குபாவம் (சர்வசாதாரணமித்யாதி.)

"என்னும்" என்று ப்ரசித்தியேதென்ன (ஆர்த்தரக்ஷணத்துக்கித்யாதி) "செழு" என்று - அழகைச்சொன்னதுக்குபாவம் (பரமபதத்திலித்யாதி) செழுநகர்வாய் - அழகியநகரத்திலே வர்த்திக்கிறவென்று சப்தார்த்தம். செப்புமின்களென்று-அத்யாஹார்யம்.

"பக்தாநாம்" (பக்தாநாம்) என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிருர் (பரார்த்தமான வித்யாதி) அருளீர் - அருளினுலாகாதோ. திருமேனி பரார்த்தமோவென்ன (பக்தாநாமித்யாதி) ஸ்வரூபகுணுதிகளிருக்க, திருமேனியைச்சொல்லுவானென்னென்ன (காமிநிகளுக்கித்யாதி.)

தன்திருமேனியோடொத்த வொளியையகற்றியென்று சப்தார்த்தம். "கடியுமே" என்றபிரிநிலை யேகாரத்துக்குபாவம் (உங்களுக்கிதுக்கித்யாதி.) விவரணம் (அல்பேத்யாதி) "என்றக்கால்" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் (உங்களுடையவித்யாதி) எனக்கு ப்ரயோஜநமென்றது-சத்தையை; உங்களுக்கு ப்ரயோஜநமென்றது-பரமசாம்யாபத்தியை.

திருமூழிக்களமென்னுமென்றுதொடங்கி, முகில்காள்-திருமேனியடிகட்குத் தீவினையேன்விடுதூதாய் - திருமேனியவட்கருளீரென்றக்காலென்றுதொடங்கி, கடியுமே என்றந்வயமாதல்; அணிமுகில்காள்-தீவினையேன் விடுதூதாய் - திருமூழிக்களமென்னுஞ் செழுநகர்வாய்வர்த்திக்கிற - திருமேனியடிகட்கு - திருமேனியவட்கருளீர் என்று செப்புமின்கள் என்றக்கால், உம்மையென்றுதொடங்கி, கடியுமே என்றந்வயமாதல். இதுக்கு ஸ்வாபதேசமாக, " பூண்டநாள் " இத்யாதி சூர்ணையநுசந்தேயம் ................... ......... ............................................................*

## ஐந்தாம்பாட்டு.

தெளிவிசும்புகடிதோடித்தீவளைத்துமின்னிலகு
மொளிமுகில்காடிருமூழிக்களத்துறையுமொண்சுடர்க்குத்
தெளிவிசும்புதிருநாடாத்தீவினையேன்மனத்துறையுந்
துளிவார்கட்குழலார்க்கென்றூதுரைத்தல்செப்புமினே,

## ஆறாயிரப்படி.

(தெளிவிசும்பு) அவளுக்கருளீரென்னவமையுமோ, இன்னாருக்கருளீரென்னவேண்டாவோவென்னில்; யாவளொருத்தியுடைய நெஞ்சையுமக்குத் திருநாடாகக்கொண்டு நீருறைகிறீர், அவளுக்கருளீர் என்று சொல்லிகோளென்கிறாள் ...................... ..... .......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பரமவ்யோமசப்த வாச்யமான நிரதிசயவிபூதியில் இருக்குமாபோலே என்னெஞ்சிலே யிருக்கிறவனுக்கு என் தூதாய்ச்சென்று வார்த்தைசொல்லக்குறையில்லை என்று, அம்மேகந்தன்னையே பார்த்துச் சொல்லுகிறாள்.

தெளிவிசும்பு - நிர்மலமான வாகாசத்திலே. கடிதோடி - நிலத்திலே நடப்பாரைப்போலே என்கார்யத்துக்கு த்வரிக்கிறிகோளென்னலாம்படி கடிதாகவோடி. தீவளைத்து - அலாதசக்ரம்போலே. மின் இலகும் - அழகிய மின் விளங்காநிற்க. ஒளிமுகில்காள் - அத்தாலே வடிவிலழகு வளர்ந்து தோற்றும்படியான முகில்காள். திருமூழிக்களத்து - திருமூழிக்களத்தில். உறையும் - நித்யவாஸத்தாலே. ஒண்சுடர்க்கு - சௌசீல்ய சௌலப்யாதி விலக்ஷண குணௌஜ்ஜ்வல்யத்தையுடையராய். தெளிவிசும்பு - விமலமான திவ்யாகாசத்தை. திருநாடா - நிரதிசயவிபூதியாகவுடையராய்வைத்து. தீவினையேன்மனத்து – சம்ஶ்லேஷமுகத்தாலே பரிதாபஹேதுவான பாபத்தையுடைய வென்னெஞ்சிலே. உறையும் - முகந்தோன்றுமலிராநின்றுகொண்டு. துளி - துளித்து. வார் - ஒழுகுகிற. கள் - மதுவையுடைத்தான. குழலார்க்கு - மயிர்முடியழகை ப்ரகாசிப்பித்துக்கொண்டிருக்கிற வவருக்கு. என்தூதுதைத்தல் - * கேசவனனவித க்லேஶாசநுகைக்கன்றே என்கிறதூதவாக்யத்தை. செப்புமின் - சொல்லுங்கோள்.

திருக்குழல்மதுவாருகிறது - அகவிதாகவைத்த பூவிற் செவ்வியாலே. ......*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

“எங்கள் வார்த்தையை அவனங்கீகரிக்குமோ” என்றிருந்தனவாக; பரமபதத்திற்பண்ணின வாதரத்தை யென்பக்கலிலே பண்ணினவன் அங்கீகரியாதொழியான், ஆனபின்பு எனக்காக வொருவார்த்தைவிண்ணப்பஞ்செய்யவேணு மென்கிறாள்.

( தெளிவிசும்புகடிதோடி ) நிர்மலமாய் நிராலம்பநமானவாகாசத்திலே, பூமியிலே சஞ்சரித்தாப்போலே கடுநடையிலே சஞ்சரித்து. இவற்றின் த்வரையெல்லாம் தன்கார்யத்துக் குடலென்றிருக்கிறாள். ( தீவளைத்துமின்னிலகும் ) கொள்ளிவட்டம்போலே மின்விளங்கா நிற்கிற. தன்வடிவி லிருட்சிக்குக் கைவிளக்குக்கொண்டு திரிவாரைப்போலேயாய்த்து மின்னிக்கொண்டு சஞ்சரிக்கிறபடி. (ஒளிமுகில்காள்) பரபாகத்தாலே அழகிதான வடிவையுடைய முகில்காள். (திருமூழிக்களத்துறையுமொண்சுடர்க்கு) திருமூழிக்களத்திலே நித்யவாசம்பண்ணுகையாலே புகர்மிக்கிருக்கிறவர்க்கு. அவன் வடிவுக்குப் போலியாயிறே உங்கள்வடிவி

ருப்பது. (தெளிவிசும்பித்யாதி) பரமபதத்திற்பண்ணும் வ்யாமோஹத்தை யென்னெஞ்சிலேபண்ணி வர்த்தியாநின்றான். (தீவினையேன்) நெஞ்சிலே ப்ரகாசியாநிற்க, காணவொண்ணாதபடி பாபத்தைப் பண்ணினேன். இதுக்கு, சிற்றாள் கொண்டான், "கொம்பது பருத்தியாக அங்காடி பாரித்து, தனக்கு பரமபதங்கலவிருக்கையாயிருக்க அத்தைக் காற்கடைக்கொண்டு சந்நிஹிதனைப்போலேயிருக்க என்னெஞ்சிலே ப்ரகாசியாநின்றான்" என்று. இதுதான் இத்திருவாய்மொழிக்குச் சொன்ன வாக்யார்த்தத்தோடு சேராது; ஓரோரவசரங்களிலே சொல்லிப்போம் வார்த்தையிறே. (துளிவார்கள்குழலார்க்கு) துளியொழுகும் மதுவையுடைத்தான திருக்குழலையுடையவர்க்கு. வல்லார் பூமுடித்தால் பூத்தோற்றக்கடவதன்றிக்கே மதுவொழுகக்காணு மத்தனையிறே. (என்தூதுரைத்தல் செப்புமினே) தலையிற் பூச்சருகாயிருக்கிற வென் தூதவாக்யத்தை யவர்க்குச் சொல்லுங்கோள். அபிநிவிஷ்டராய்த் தாமே வருவாராகச்சொல்லிவைத்து, இப்போது தூதுவிட விருக்கிறபடியை யறிவியுங்கோள்....*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. (தெளிவிசும்பித்யாதி.) இதிலும் கீழிற்பாட்டிற் சொன்ன மேகங்களையே தூதுவிடுகையாலே, அதுக்கிடாக "தெளிவிசும்புதிருநாடாத்தீவினையேன்மனத்துறையும்" இத்யாதியையும், "என்தூதுரைத்தல்செப்புமினே" என்றத்தையும் கடாக்ஷித்தவதாரிகை (எங்கள்வார்த்தையித்யாதி.) "திருமேனியொளியகற்றி" இத்யாதியாலே இவள் பயசங்கையைப் பிறப்பிக்கையாலே, அத்தைக் கேட்ட மேகங்கள், எங்கள் வார்த்தையை அங்கீகரிக்குமோ என்றிருந்தன வென்றபடி.

"விசும்பு" என்றதுக்கர்த்தம் (நிராலம்பநமானவென்றது.) "கடிதோடி" என்று விசேஷித்ததுக்கு பாவம் (இவற்றினித்யாதி.) தீவளைத்து - தீவளைத்தாப்போலே; கொள்ளிவட்டம்போலே. கொள்ளிவட்டம் - அலாதசக்ரம். "மின்னிலகும்" என்றதுக்குபாவம் (தன்வடிவிலித்யாதி.) மின்னோடே கூடுகையால் வந்த பரபாகத்தாலே யென்றபடி. ஒளி - அழகு.

"ஒளிமுகில் - ஒண்சுடர்" என்ற பதச்சேர்த்திக்கு பாவம் (அவன்வடிவுக்கித்யாதி.) "தீவினையேன்மனத்தை - தெளிவிசும்பு திருநாடாகக்கொண்டு - உறையும்" என்று முந்தின நிர்வாஹம். மனத்தே யுறையாநிற்க, "தீவினை" என்கிறதென்னென்ன (நெஞ்சிலேயித்யாதி.) வெறுப்பாக தாத்பர்யாந்தரம் (இதுக்கித்யாதி.) "தெளிவிசும்பு திருநாடாயிருக்க, தீவினையேன் மனத்துறையும்" என்று சிற்றாள்கொண்டான் நிர்வாஹம். கொம்பது பருத்தியாக - பருத்தி, கொம்பிலேயிருக்கச்செய்தே. அங்காடி பாரித்து - அது புடவையானதாய் அத்தைவிற்கக் கடைபரப்பி அளப்பது விலைபேசுவதாமாபோலே யென்றபடி. அங்காடி பாரித்து - பாரித்தாப்போலே யென்றுகூட்டுவது. தூதப்ரகரணத்திலே வெறுப்பாகச் சொல்லுகிறது உசிதமோ என்கிற சங்கையிலே யருளிச்செய்கிறார் (இதுதானித்யாதி.) இதுதானென்றது - "மனத்துறைவானைப்போலே" என்று வெறுப்பாகச் சொல்லுவது தானென்றபடி. வாக்யார்த்தத்தோடென்றது - இதின் ப்ரவேசத்திலே "வடிவழ

கும் குணங்களும் பற்றுசாகத் தூதுவிடுகிறாள்" என்ற வாக்யார்த்தத்தோடு சேரா தென்றபடி. ஆனால் இதெங்ஙனே சேரும்படியென்ன (ஓரோரவசரங்களிலேயித்யாதி.) குழலிலே பூவொழிய மதுவுண்டோவென்ன (வல்லாரித்யாதி.)

கீழ்ப்பதத்தோடே "என்" என்றதைக்கூட்டி பாவம் (தலையிலித்யாதி.) அவனை "துளிவார்கட்குழல்" என்கையாலே, ப்ரதிகோடியாக (தலையிற்பூச்சருகாய்) என்கிறார். "தூதுரைத்தல்" என்றதுக்குபாவம் (அபிநிவிஷ்டராயித்யாதி.)

க்ரமேணாந்வயः. ..........................................................................*

# ஆறும்பாட்டு.

தூதுரைத்தல்செப்புமின்கடுமொழிவாய்வண்டினங்காள்
போதிரைத்துமதுநுகரும்பொழின்மூழிக்களத்துறையு
மாதரைத்தம்மார்பகத்தேவைத்தார்க்கென்வாய்மாற்றந்
தூதுரைத்தல்செப்புதிரேற்சுடர்வளையுங்கலையுமே.

## ஆறாயிரப்படி.

(தூதுரைத்தல்) தூமொழிவாய்வண்டினங்காள், என்னுடைய சுடர்வளையும் கலையுமிழந்தேனென்று சொல்லவேணும்; சொல்லுமிடத்தில், அவனுங்கள்வார்த்தையை அநாதரியாமே, பிராட்டி சந்நிதியிலே வைத்துச் சொல்லவேணும் என்கிறாள் ......... .........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நித்யாநபாயிநியான பிராட்டியைத் திருமார்விலே யுடையவர்க்கு, உங்கள் வார்த்தை யீடேறும்படி யச்சேர்த்தியிலே சொல்லுங்கோள் என்று, சிலவண்டுகளைக்குறித்துச்சொல்லுகிறாள்.

தூமொழிவாய் - கந்தலற்றபேச்சில் வாய்ப்பையுடைய. வண்டினங்காள்-வண்டினங்காள். போதிரைத்து-புஷ்பவிகாசதசையில் ஹர்ஷத்தாலே கோலாஹலம்பண்ணிக்கொண்டு. மதுநுகரும் - உங்களுக்கு மதுபாநம்பண்ணலாம்படியான. பொழில்-பொழிலையுடைத்தான. மூழிக்களத்து-திருமூழிக்களத்திலே. உறையும்-வர்த்திப்பாராய். மாதரை - * நாரீணாமுத்தமையானலக்ஷ்மியை. தம்மார்பகத்தேவைத்தார்க்கு-அவளும் "அகலகில்லேன்" என்னும்படி போக்யமான தன்திருமார்விலே நித்யவாசம்பண்ணும்படி வைத்தவர்க்கு. என்வாய்மாற்றம்-என்வாக்கின்பாசுரமான. தூதுரைத்தல்-தூதவாக்யத்தை. செப்புதிரேல்-சொல்லப்பார்த்திகோளாகில். சுடர்-உஜ்ஜ்வலமான. வளையும்-வளையையும். கலையும்-வஸ்த்ரத்தையும். தூதுரைத்தல் - தூதுக்குப்பாசுரமாக. செப்புமின்கள்-சொல்லுங்கோள் ......................... ............*

## ஈடு - ஆறும்பாட்டு.

சிலவண்டுகளைக்குறித்து, உங்கள்வார்த்தை விலைச்செல்லும்படி பிராட்டிசந்நிதியிலே சொல்லுங்கோளென் தூதவாக்யத்தையென்கிறாள்.

(தூதுரைத்தல் செப்புமின்கள்) என்தூதவாக்யத்தை யறிவிக்க வமையும், கொண்டுவரவேண்டா. (தூமொழிவாய் வண்டினங்காள்) இனியபேச்சையுடையவண்டுகாள். அவனநாதரிக்கிலு மும்கள் பேச்சினிமையாலே வரவேண்டும்படியிறேபேச்சிருப்பது. பெருமாளு மிளையபெருமாளும் கையும் வில்லுமாய் வருகிறபடியைக்கண்டு, "இவர்கள்வாலிவரவிடவருகிறுர்களோ" என்றஞ்சி மஹாராஜர் நாலுமூன்றுயோஜந மவ்வருகேயோட, மீண்டுவந்து "[illegible]" (ஏகம்துःகம் ஸுகஞ்சநௌ) என்று விஜாதீயமான விரண்டுதலையும் பொருந்தும்படியாக "[illegible]" (அதஸம்ஸ்காரஸம்பந்ந:) என்கிறபடியே வார்த்தைசொன்னுனிறே. (போதிரைத்துமதுநுகரும்பொழில்) பூக்களிலே இரைத்துக்கொண்டு மதுபாநம்பண்ணும்பொழிலென்னுதல்; போதிலே-காலத்திலேயென்னுதல். உங்களுக்கு மீட்சியிலேயாகவும்வேண்டா, * ததிமுகாதிகள் காப்பாருமில்லை, முன்பு மதுபாநம்பண்ணுகிறவர்களோடே மதுபாநம்பண்ணவமையும். (மாதரைத்தம்மார்பகத்தேவைத்தார்க்கு) நீங்கள் சொல்லுமத்தனையேவேண்டுவது. உங்கள்வார்த்தைகேட்டிருக்கவும், கேட்டுக்கொண்டாடுகைக்கும் புருஷகாரமுண்டென்கை. (என்வாய்மாற்றமித்யாதி) என்பாசுரமான தூதவாக்யத்தைச்சொல்லப்பார்த்திகோளாகில், என்னுடைய வழுகியவளையும் கலையும் சிதிலமானபடியைச்சொல்லுங்கோள். செப்புதிகோளாகில், அதுதானே யெனக்குச்சுடர்வளையும் கலையுமென்னுதல். அறிவிக்குமதேகுறை, அவர்வரவுதப்பாது ...*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (தூதுரைத்தலித்யாதி) " வண்டினங்காள்-மாதரைத்தம்மார்பகத்தேவைத்தார்க்கு" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (சிலவண்டுகளையித்யாதி)

"செப்புமின்கள்" என்றதுக்குபாவம் (என்தூதவாக்யத்தையித்யாதி "தூய்தானமொழியை வாயிலேயுடைய வண்டினங்காள்" என்று விசேஷித்ததுக்கு பாவம் (அவனநாதரிக்கிலுமித்யாதி) இப்படி பேச்சிலினிமையாலே பொருந்திறுருண்டோவென்ன (பெருமாளுமித்யாதி) " [illegible] ।  [illegible]" (த்வம்வயஸ்யோஸிஸத்யோமேஹ்யேகம்துःகம்ஸுகஞ்சநௌ। ஸுக்ரீவம்ராகவோவாக்ய மித்யுவாசப்ரஹ்ருஷ்டவத்) இதி கிஷ்கிந்தாகாண்டே. " [illegible] । [illegible]" (அதஸம்ஸ்காரஸம்பந்நோஹநூமாந்ஸசிவோத்தம:। உவாச வசநம்ஸ்லக்ஷ்ணமர்த்தவந்மதுரம்லகு) இதி யுத்தகாண்டே அபயப்ரதாநப்ரகரணே. கிஷ்கிந்தாகாண்டத்திலே திருவடி இருதலையும் பொருந்தச்சொன்ன ஸ்லோகம்- "[illegible] । [illegible]" (ஸம்ஸ்காரக்ரமஸம்பந்நாமத்ருதாமவிளம்பிதாம்। உச்சாரயதிகல்யாணீம்வாசம்ஹ்ருதயஹர்ஷணீம்) என்கிற ஸ்லோகமாயிருக்க, யுத்த

காண்டத்தில் "ஸுமஹஸம்ஸாரஸம்வளுக:" ( அதஸம்ஸ்காரஸம்பந்த: ) இத்யாதிச்லோகத்தையெடுத்தது, ஸ்பஷ்டமாயிருக்கையாலே. ( வார்த்தைசொன்னானிறே ) திருவடியென்றபடி.

போது-பூவும், காலமும். காலத்திலே-அலருகிறகாலத்திலே. இத்தால்பாவம் (உங்களுக்கித்யாதி) முன்புமதுபானம்பண்ணுமவர்கள்-நித்யஸூரிகள். "மாதனா" இத்யாதிக்குபாவம் (நீங்களித்யாதி.)

வாய்மாற்றம்-பாசுரம். "தூதுரைத்தல்செப்புதிரேல் சுடர்வளையும்கலையும்-செப்புமின்கள்" என்று முந்தினயோஜனை; "செப்புதிரேல்-அதுவேயெனக்குச்சுடர்வளையும்கலையும் " என்றிரண்டாம்யோஜனை. முதல்யோஜனையில், " செப்புமின்கள் " என்று - அநுஷங்கம்; இரண்டாம்யோஜனையில், "அதுவே" என்றத்யாஹார்யம். செப்புகை சுடர்வளையும் கலையுமாமோவென்ன ( அறிவிக்குமதேயித்யாதி.)

தூமொழிவாயென்றுதொடங்கி, மார்வகத்தேவைத்தார்க்கு - என்வாய்மாற்றமான தூதுரைத்தல்செப்புமின்கள், - தூதுரைத்தல் செப்புதிரேல் சுடர்வளையும் கலையும்போனபடியை - செப்புமின்கள் என்றந்வயமாதல்; தூதுரைத்தல் செப்புதிரேல்-அதுதானே எனக்குச்சுடர்வளையும் கலையுமென்னுதல் ...... ...................*

# ஏழாம்பாட்டு.

சுடர்வளையுங்கலையுங்கொண்டருவினையேன்றோடுறந்த
படர்புகழான்றிருமூழிக்களத்துறையும்பங்கயக்கட்
சுடர்பவளவாயனைக்கண்டொருநாளோர்தூய்மாற்றம்
படர்பொழில்வாய்க்குருகினங்காளெனக்கொன்றுபணியீரே.

## ஆறாயிரப்படி.

( சுடர்வளையும் ) படர்பொழில்வாய்க் குருகினங்காள், உன்னழகாலே யவளை வசீகரித்து அவளோடேகலந்து பின்னை யவளைத்துறந்ததுவே புகழாகக்கொண்டிருக்கிற விருப்பு உனக்குப் போருமோ வென்று சொல்லிகோளென்கிறாள்...... .........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அத்யுஜ்ஜ்வலமான அவயவசோபையை யுடையவனைக்கண்டு எனக்கொருவார்த்தை சொல்லுங்கோளென்று, சிலகுருகுகளை யபேக்ஷிக்கிறாள்.

படர் - பரந்த. பொழில்வாய் - பொழிலிடத்தே வர்த்திக்கிற. குருகினங்காள் - குருகினங்காள். சுடர் - ஒளியையுடைத்தான. வளையும் - வளையையும். கலையும் - கலையையும். கொண்டு - கைக்கொண்டு. அருவினையேன் - கடக்கவரியபாபத்தையுடையேனான வென்னுடைய. தோள்துறந்த - தோளிலே யதிவ்யாமுக்தனாய்ச்சேர்ந்தவன் அத்தை யநாதரித்து. அதுதானே, படர் - லோகவ்யாப்தமான. புகழான் - புகழாகவிருக்குமவனாய். திருமூழிக்களத்துறையும் - அத்யாஸக்தியாலே ஆர்த்தியை யதிசயிப்பிக்கும்படி திருமூழிக்களத்திலே நித்யவாசம் பண்ணுமவனாய்.

பங்கயக்கண் - கலந்தபோதோடு பிரிந்தபோதோடு வாசியற செவ்வியழியாதபடி பங்கயம்போன்ற திருக்கண்களையும். சுடர் - ஒளியையுடைய. பவளம் - பவளம்போன்ற. வாயனை - திருவதரத்தையு முடையவனை. கண்டு - கண்டு. எனக்கு - ஆர்த்திவடிவிலே தோன்றும்படியான வெனக்காக. ஒருநாள்-நித்யாக்நிஹோத்ரம்போலே பலநாள் வேண்டாதபடி ஒருநாள். ஓர் - ஆர்த்தரக்ஷணர்த்த மாகையாலே அத்விதீயமாய். தூய்மாற்றம் - தெளிவாலே ஶ்லாக்யமானவார்த்தையை. ஒன்று - பரப்பற்று ஒன்றுயிருக்கும்படி. பணியீரோ - பணிக்கவேணும்; பணியுங்கோளென்று கௌரவ்யதைதோன்றச் சொல்லுகிருள்.............................................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

சிலகுருகினங்களைக்குறித்து, சிலரோடே கலந்து அவர்களைத் துறந்து அதுவே புகழாகவிருக்கைபோருமோ என்று அவர்க்கறிவியுங்கோளென்கிருள்.

( சுடர்வளையுங்கலையுமித்யாதி ) இத்தலையில் தனக்கு ப்ரயோஜநமான வம்சத்தைக்கொண்டு என்னைப் பொகட்டுப்போனுன்; தனக்கு தாரகமானவற்றைக்கொண்டு அல்லாதவற்றைப் பொகட்டுப்போனுன்; கைக்கடங்கினத்தையுங்கொண்டு மடிச்சரக்கையுங் கொண்டு போனுன். ( அருவினையேன் ) ஆதரித்துவந்து கலந்தவன், பொகட்டுப்போம்படியான பாபத்தைப்பண்ணினேன். (தோள்துறந்த) அந்த வ்யாமோஹமெல்லாங்கொண்டு தோளுக் கவ்வருகுபோகமாட்டிற்றிலன்போலேகாணு மவன்முன். (படர்புகழான்) "தன்னுலல்லது செல்லாதாரை இங்ஙன் விடவல்லாரில்லை" என்று இதுவே புகழாகக் கொடியும் காளமுமெடுத்துப் புகழ்வித்துக் கொண்டிருக்கிறுனுய்த்து. (திருமூழிக்களத்துறையும்) தூரஸ்த்தனென்றுறியிருக்கவொண்ணுதபடி திருமூழிக்களத்திலே நித்யவாசம் பண்ணுகிறவனை. ( பங்கயக்கட்சுடர்பவளவாயனை ) பொகட்டுப் போனுனென்று பொகட்டிருக்கவொண்ணுத அவயவசோபையையுடையவனை; என்னை யிப்பாடுபடுத்துகையாலே புதுக்கணித்த அவயவசோபையை யுடையவனை யென்றுமாம். (கண்டு) அந்நோக்கையும் முறுவலையும் காணுகையாலே, உங்களுக்கென்னிற்காட்டில் பேறு முற்பட்டிறேயிருக்கிறது. ( ஒருநாள் ) ஒருநாளேயமையும், பிற்றைநாள் சொல்லவேண்டுவதில்லை. இரண்டாநாள் சொல்லுமது பழியென்றிருக்குமவளிறே. ( ஓர்தூய்மாற்றம் ) அத்விதீயமான நல்லவார்த்தை. முடிகிறுளோரபலை யுஜ்ஜீவிக்கச் சொல்லுகிற வார்த்தையிறே. (படர்பொழில்வாய்க் குருகினங்காள்) பரந்தபொழிலிடத்தே வர்த்திக்கிற குருகினங்காள். நான் * உபவாஸ க்ருசையாயிருக்க, நீங்கள் ஜீவித்துக் களித்திருக்கை போருமோ; நான்முடிந்தா லுங்களுக் கிந்தச்சோலைப் பரப்பெல்லாம் நோக்கித்தருவாரார். (எனக்கு) என்வடிவிருக்கிறபடி கண்டிகோளிறே. ( ஒன்றுபணியீரோ ) இரண்டாம்வார்த்தைசொல்லவேண்டா. ( பணியீரோ ) தான் ஜநககுலத்தி

லேபிறக்கவுமாம், எதிர்த்தலை திர்யக்குக்களாகவுமாம், பகவத்விஷயத்தில் கடகரைச்சொல்லும்படியிறே யிது. ......................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (சுடரித்யாதி.) "குருகினங்காள் - அருவினையேன் தோள் துறந்த படர்புகழான் - எனக்கொன்றுபணியீர்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (சிலகுருகினங்களையித்யாதி.)

"தோள்துறந்த" என்னுமளவுக்கும் பாவம் (இத்தலையிலித்யாதி.) விவரணம் (தனக்கித்யாதி.) "சங்கஞ்சரிந்தன" இத்யாதிப்படியே எல்லாம் சிதிலமாயிருக்க, விசேஷிக்கிறதென்னென்ன (கைக்கித்யாதி) ப்ரதாநத்தைச் சொல்லிற்றென்றபடி. சாடுவுக்கு, கைக்கடங்கினது - வளை; மடிச்சரக்கு-புடவை. "தோள்" என்று ஏகாவயவத்தைச் சொன்னதுக்கு பாவம் (அந்தவ்யாமோஹமித்யாதி.) இவனுக்குப் புகழேதென்ன (தன்னாலல்லதித்யாதி.)

ஆனால் விட்டிருக்கவொண்ணாதோவென்ன (அரஸ்த்தனித்யாதி.) இப்போது அவயவங்களை வர்ணித்ததுக்கு பாவத்வயம் (பொகட்டுப்போனா னித்யாதிவாக்யத்வயம்.) முந்தினது - ஸ்வாபாவிகமான வழகைப்பற்ற; இரண்டாவது-வெறுப்பிலே. "கண்டு" என்றதுக்கு பாவம் (அங்ரோக்கையுமித்யாதி.)

வேண்டாமைக் கடியேதென்ன (இரண்டாநாளித்யாதி.) இவ்விடத்திலே, * ஸக்ருத்க்ருதஶாஸ்த்ரார்த்தঃ என்றது விவக்ஷிதம். மேலே "எனக்கொன்று" என்றிருக்கையாலே, "ஓர்" என்றதுக்கு (அத்விதீயமான) என்கிறார். வார்த்தைக் கத்விதீயத்வமேதென்ன (முடிகிறுளித்யாதி) என்னுதல்; தூய்மைக்குபாவமாதல்.

"பொழில்வாய்" என்றதுக்காதல் பாவம் (நானுபவாஸேத்யாதி.) "படர்" என்று விசேஷித்ததுக்கு பாவமாதல், பாவாந்தரமாதல் (நான்முடிந்தாலித்யாதி.)

"எனக்கு" என்றதுக்கு பாவம் (என்வடிவித்யாதி.) "ஒன்று" என்றதுக்கு பாவம் (இரண்டாமித்யாதி.) சொல்லீரொன்றாதே, "பணியீர்" என்றதுக்குபாவம் (தானித்யாதி.)

படர்பொழில்வாய்க் குருகினங்காள் - சுடர்வளையுமென்றுதொடங்கி, ஓர்தூய்மாற்றம் - எனக்கொன்று பணியீர் இத்யந்வயঃ. ......................................*

## எட்டாம்பாட்டு.

எனக்கொன்றுபணியீர்களிரும்பொழில்வாயிரைதேர்ந்து
மனக்கின்பம்படமேவும்வண்டினங்காடும்பிகாள்
கனக்கொடிண்மதிள்புடைசூழ்திருமூழிக்களத்துறையும்
புனக்கொள்காயாமேனிப்பூந்துழாய்முடியார்க்கே.

### ஆறாயிரப்படி.

(எனக்கொன்று) வண்டினங்காள் தும்பிகாள், உன்னழகைக்காணப்பெறாதே யவளிழந்துபோ மித்தனையோ என்று சொல்லிகோளென்கிறாள். ......................................*...

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், வடிவழகையு மொப்பனையையு முடையரா யிருக்கிறவர்க்கு எனக்கொருவார்த்தை சொல்லவேணும் என்று சிலவண்டுகளையும் தும்பிகளையும் பார்த்துச்சொல்லுகிறாள்.

இரு - பெரிய. பொழில்வாய் - பொழிலிடத்தே. இரைதேர்ந்து - போக்யமான மதுவைத் தேடாநின்றுகொண்டு. மனக்கு - மாஸ்ஸுக்கு. இன்பம்பட - இனிமையுண்டாம்படி. மேவும் - சம்ஶ்லேஷித்து வர்த்திக்கிற. வண்டினங்காள் தும்பிகாள் - வண்டினங்காள் தும்பிகாள். கனக்கொள் - கனத்தையுடைத்தாய். திண் - திக்கென. மதிள் - மதிளாலே. புடை - சுற்றும். சூழ் - சூழப்பட்ட. திருமூழிக்களத்து - திருமூழிக்களத்திலே. உறையும் - நித்யவாசம்பண்ணுமவராய். புனக்கொள் - தன்னிலத்தில் நிலையையுடைத்தான. காயாமேனி - காயாம்பூவின் நிறத்தையுடையராய், பூந்துழாய்முடியார்க்கு - தர்ஶநீயமான திருத்துழாயாலே அலங்க்ருதமான திருமுடியையுடையவர்க்கு. எனக்கு - எனக்காக. ஒன்று - ஒருவார்த்தை. பணியீர் - சொல்லவேணும். .......................................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

சிலவண்டுகளையும் தும்பிகளையும் குறித்து, அங்குத்தைக்குபயப்படவேண்டாதபடி சுரக்ஷிதமான தேசத்திலே யிருக்கப்பெற்றீரும், இனியென்னார்த்தியை யறிவியுங்கோளென்கிறாள்.

(எனக்கொன்றுபணியீர்கள்) நீங்க ளொருவார்த்தை சொல்லாவிடில் முடியும் தசையாயன்றோ என்தசையிருக்கிறது. (இரும்பொழில்வாயிரைதேர்ந்து) பரந்தசோலை யிடமெங்கும்புக் கிரைதேடி. (மனக்கின்பம்படமேவும்) மநஸ்ஸிலே இனிமை பிறக்கும்படி யன்றோ நீங்கள் கலக்கிறபடி.. விரஹத்தால் வரும் க்லேசம் பலியாதபடியாகக் கலவாநின்றதாய்த்து - பிரிவிலும் வற்றாத ஆநந்தமுண்டாம்படி கலவாநின்றதாய்த்து. (கனக்கொளித்யாதி) கனத்துத் திண்ணிதான மதிள் சுற்றும் சூழ்ந்திருந்துள்ள திருமூழிக்களத்திலே நித்யவாஸம்பண்ணுகிறவர்க்கு. அத்தலையில் ஸௌந்தர்யத்தை யநுசந்தித்தால், ரக்ஷை தேட்டமாயிறே யிருப்பது. அவனோடே கிட்டிக் கலக்கப் பெறாமையாலே வருவதும் ஓராற்றாமையுண்டு, அவனுக்கெங்கே யென்னதீங்கு வருகிறதென்று மோராற்றாமையுண்டு; அதிலேயொன்று தீரப்பெற்றது முந்தறமுன்னம். (புனக்கொள்காயாமேனிப் பூந்துழாய்முடியார்க்கே) தன்னிலத்திற் காயாவின் நிறம்போலேயாய்த்து நிறமிருப்பது; அவ்வடிவழகுக்குமேலே ஒப்பனையழகையுமுடையவர்க்கு. வடிவழகது, ஒப்பனையழகது. அவ்வடிவழகையு மொப்பனையழகையு மநுபவித்துப் பிரிந்தவெனக்கு ஒருவார்த்தை சொல்லுங்கோள். .............................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (எனக்கித்யாதி.) "வண்டினங்காள் தும்பிகாள், கனக்கொள் திண்மதிள்புடைசூழ் திருமூழிக்களத்துறையும்-எனக்கொன்று பணியீர்கள்", என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (சிலவண்டுகளையுமித்யாதி.)

தும்பி - வண்டுகளிலவாந்தரபேதம். "எனக்கு" என்றதுக்குபாவம் (நீங்களித்யாதி.) "இன்பம்பட்மேவும்" என்ஞதே, "மனக்கின்பம்பட" என்றதுக்கு பாவம் (விரஹத்தாலித்யாதி.) விவரணமாதல், வர்த்தமானார்த்தமாதல் (பிரிவிலுமித்யாதி.) (பிரிந்து துஃகிக்கிற.)

"கனக்கொள்திண்மதிள்" என்று ரக்ஷையைச் சொல்லுவானென்னென்ன (அத்தலையிலித்யாதி.) சௌந்தர்யத்தையென்றது - "புனக்கொள்காயாமேனி" என்றத்தைப்பற்ற. இத்தால்பாவம் (அவனுடையித்யாதி.) தீரப்பெற்றதென்றது- "கனக்கொள்திண்மதிள்புடைசூழ்" என்கையாலே.

"புனக்கொள்காயா" என்றதுக்கர்த்தம் (தன்னிலத்திலித்யாதி.) "பூந்துழாய் முடியார்க்கு" என்றதுக்கர்த்தம் (அவ்வடிவழகுக்கித்யாதி.) இரண்டையுஞ் சொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் (அவ்வடிவழகை யித்யாதி.) எனக்கொன்றுபணியீர் - எனக்காக வொருவார்த்தை சொல்லுங்கோள்.

இரும்பொழில்வாயென்று தொடங்கி, முடியார்க்கு - எனக்கொன்றுபணியீர்கள் இத்யர்வயஃ.........................................................*

---

# ஒன்பதாம்பாட்டு.

பூந்துழாய்முடியார்க்குப்பொன்னாழிக்கையாருக்
கேந்துநீரிளங்குருகேதிருமூழிக்களத்தாருக்
கேந்துபூண்முலைபயந்தென்னிணைமலர்க்கண்ணீர்ததும்பத்
தாந்தம்மைக்கொண்டகறுதகவன்றென்றுரையீரே.

## ஆறாயிரப்படி.

(பூந்துழாய்) ஏந்துநீரிளங்குருகே, ஏந்துபூண்முலைபயந்தென்னிணைமலர்க்கண் நீர்ததும்பத் தாம் தம்மைக்கொண்டகலுகை தம்முடைய க்ருபைக்குப் போராதென்று சொல்லிகோளென்கிறாள் .................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அசாதாரண சேஷித்வ சிஹ்நத்தையுடையரானவர்க்கு, தம்மைக்கொண்டு தாம்போதல் தகுதியல்லவென்று சொல்லவேணுமென்று, ஒருகுருகைப் பார்த்துச்சொல்லுகிறாள்.

ஏந்துநீர் - நீருக்கஞ்சவேண்டாதபடி யதுதானேதரிக்கும்படியாய். இளம்-கமநசாமர்த்யத்துக்குறுப்பான விளமையையுடைய. குருகே-குருகே. பூந்துழாய்முடியார்க்கு-சர்வசேஷித்வ சூசகமாம்படி தர்ஸநீயமான திருத்துழாயை முடியிலேயுடையராய். பொன் - ஸ்ப்ருஹணீயமான. ஆழி-திருவாழியை. கையார்க்கு - கையிலேயுடையராய். திருமூழிக்களத்தார்க்கு-திருமூழிக்களத்திலே ஆஸந்நமாகநிற்கிறவர்க்கு. பூண்-ஆபரணத்தை. ஏந்து-ஏந்தின. முலை-முலையானது. பயந்து - பயற்பையுடைத்தாய். என் இணைமலர்க்கண்-இணைமலர்போலே தன்னைக்கண்டபோதே விகஸிதமாம்படியானவென்கண்கள். நீர்ததும்ப - விரஹத்தாலே சோகாஸ்ருநிரம்பும்படி

யாசா. தாம்-சேஷித்வத்தையும் போக்யத்வத்தையும் சீலத்தையுமுடையதாம். தம்மைக்கொண்டு - தம்மையறிந்துவைத்துக்கொண்டு. அகல்தல் - அகலப்போகை. தகவன்றென்று-தம்முடையதயைக்குப்போராதென்று. உரையீரோ-சொல்லீரென்று உபசரித்துச் சொல்லுகிருள் .......................................................*

ஈடு - ஒன்பதாம்பாட்டு.

ஒருகுருகைக்குறித்து, நிரதிசயபோக்யரான தாம் போம்போது தம்மைக்கொண்டுபோகை தம்முடைய தகவுக்குப்போருமோவென்று விண்ணப்பஞ்செய்யென்கிருள்.

(பூந்துழாய்முடியார்க்கு) திருமுடிக்கு ஒப்பனையானவளையமிருக்கிறபடி. (பொன்னாழிக்கையார்க்கு) திருக்கைக்கு வளையமிருக்கிறபடி. (ஏந்துநீரிளங்குருகே) மிக்கபுனலிலே, தறையிலே நடப்பாரைப்போலே நடக்கவல்ல விளங்குருகே. உன்கமநசாமர்த்யத்தாலுண்டானபலம் நான் பெறவிறே புகுகிறது. நடுவே நீரிடைச்சுவராலும் தேங்கவேண்டாவிறே யுனக்கு. (திருமூழிக்களத்தார்க்கு) வளையம்போலேயு மாபரணம்போலேயும் அவ்வூரில் நிலையுமழகுக்குடலாயிருக்கிறபடி. அவை விக்ரஹத்துக்காபரணமானாப்போலே, சீலம் ஸ்வரூபத்துக்காபரணமிறே. அழகும் குணங்களு மொருதலைத்தவிஷயமிறே. (ஏந்துபூண்முலைபயந்து) ஆபரணங்களை தரிக்கக்கடவமுலை வைவர்ண்யத்தைதரித்து. ஆபரணங்கள் சம்ஶ்லேஷார்த்தமாகக் கழற்றுமவை, இது சம்ஶ்லேஷத்தாலல்லது கழலாதிறே. வ்யதிரேகத்திலிப்படியிருக்கையிறே ஸ்த்ரீத்வமாவது; இங்ஙனிராதவன்று பும்ஸ்த்வாத்வ்யாவ்ருத்திகூடாதிறே. (என்னிணைமலர்க்கண்ணீர்ததும்ப) இணைமலர்போலேயிருக்கிறவென்கண். தம்மழகையே யிலக்காகவுடையகண், சோகாஶ்ருவுக்கிலக்காம்படி. அவன்சொல்லும்படியறிந்திருக்கையாலே சொல்லுகிருளித்தனைபோக்கி அல்லது தன்கண்ணை யிப்படிசொல்லக்கூடாதிறே. (ததும்ப) ஆநந்தாஶ்ருவுக் கர்ஹமானகண் சோகாஶ்ருவாலே நிறையும்படி.. (தாம்) பூந்துழாய்முடியார், பொன்னாழிக்கையார், திருமூழிக்களத்தார் என்றுவைத்து, (தாம்) என்கிருளிறே. (பூந்துழாய்முடியார்க்குப்பொன்னாழிக்கையார்க்கு) என்கையாலே - வடிவழகைச்சொல்லிற்று; (திருமூழிக்களத்தார்க்கு) என்கையாலே - குணஞ்சொல்லிற்று; இப்படிப்பட்டவடிவழகையும் குணங்களையுமுடையதாம். (தம்மைக்கொண்டகல்தல்) தமக்ககலவேண்டினல் "இவ்வடிவைப்பிரிந்தார்பிழைப்பார்" என்றத்தைவைத்தன்றேபோவது. தம்மைக்கண்ணாடிப் புறத்திலேகண்டறிவரோ. தம்மைப்பிரிந்ததசைக் குதவுகைக்கன்றே தம்மைக்கண்டது; "ஊ௱ெவஷூா௱ாவஞொ௱ெ நஹவஶா௹ாஃவஃ" (இமாமவஸ்த்தாமாபந்நோநேஹபஶ்யாமிராகவம்) என்கிறபடியே. ஆற்றாமை எல்லாம் சொல்லுவிக்குமிறே. எனக்கோராற்றாமைகளுண்டான வளவில் கிட்டிநின்று முகங்காட்டி ஈரக்கையாலேதடவி நோக்குகைக்க

ன்றே தம்மைப்பெற்றது. தம்மைப்பிரிந்து நோவுபடுகிற விற்றைக்கு மேற்பட ஆற்றாமையில்லையிறேயெனக்கு. இவ்வளவில் நான்பெருமாளை க்காண்கிறிலேன் என்றாளிறே. அதவா, (தாந்தம்மைக்கொண்டகல்தல்) தாமென்னைக்கொண்டகலுமதொழிய தம்மைக்கொண்டகலக்கடவரோ; தம்மைக்கொண்டகலவேண்டினால் தமக்கு சேஷமானத்தைப்பொகட்டு ப்பிறர்க்கு சேஷமானத்தையோ கொடுபோவது. "ஹ்ருதாநாம்" (பக்தாநாம்) என்றிறே அவனுடம்பிருப்பது. * தனக்கேயாக வெனைக்கொள்ள வேணும் என்றிறே இத்தலையிருப்பது. (தகவன்றென்றுரையீரோ) ப்ரணயித்வமும் மென்மையுமெல்லாங்கிடக்கச்செய்தே, இது நிர்த்தயர்செய்யும்செயலென்றுசொல்லுங்கோள். ஸ்த்ரீவதத்துக்கஞ்சாதார் செய்பவற்றைச்செய்தீரென்று சொல்லுங்கோள்...................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (பூந்துழாயித்யாதி) "குருகே - தாந்தம்மைக்கொண்டகல்தல் தகவன்றென்றுரையீர்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (ஒருகுருகையித்யாதி.)

ஏந்துதல் - உலாவுதலாய், மிருதியைச்சொல்லுகிறது. "நடக்கவல்ல" என்றத்தால்பலிதம் (உன்கமரேத்யாதி) விவரணம் (நடுவேயித்யாதி) தேங்கவேண்டா-தடுமாறவேண்டா.

"பூந்துழாய்முடியார்க்குப் பொன்னாழிக்கையார்க்கு - திருமூழிக்களத்தார்க்கு" என்றபதச்சேர்த்திக்குபாவம் (வளையம்போலேயித்யாதி.) அப்படி யழகுக்குடலாமோவென்ன (அவையித்யாதி) பலிதம் (அழகுமித்யாதி.)

"பூண் - ஏந்து - முலைபயந்து" என்றந்வயிப்பது ஆபரணங்களை தரிக்கக்கடவமுலை வைவர்ண்யத்தைதரித்து என்றர்த்தமருளிச்செய்கிறார் (ஆபரணங்களையித்யாதி) "ஏந்துபூணும்படி முலைபயந்து" என்றர்த்தாந்தரம்விவக்ஷித்து, பயற்பு ஆபரணமாமோவென்ன (ஆபரணங்களித்யாதி) இது ஶ்லாக்யமான வாபரணமென்றபடி. பிரிவில் விவர்ணையாகவேணுமோவென்ன (வ்யதிரேகத்திலித்யாதி) இப்படி ஸ்த்ரீத்வத்துக்கு வைவர்ண்ய மாபரணமென்று கொள்ளாதபோது அநிஷ்ட ப்ரசஞ்சநம் பண்ணுகிறார் (இங்ஙனிராதவித்யாதி.)

"இணைமலர்க்கண்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (தம்மழகையேயித்யாதி) "என்னிணைமலர்க்கண்" என்று ஆத்மஶ்லாகைபண்ணலாமோவென்ன (அவன்சொல்லும்படி யித்யாதி) "தம்மழகையேயிலக்காகவுடையகண்" என்றத்தால் பலிதத்தை யருளிச்செய்யாநின்றுகொண்டு, "ததும்ப" என்றதுக்கர்த்தம் (ஆநந்தாஶ்ருவுக்கித்யாதி.)

"தாம்" என்றத்தை பராமர்ஶிக்கிறதென்ன (பூந்துழாயித்யாதி) வடிவழகையும் குணங்களையுமுடையதாமென்றபடி. இதுசொல்லும்படி யென்னென்ன (பூந்துழாயித்யாதி வாக்யத்ரயம்) தம்மைக்கொண்டுபிரிகிறவிது தம்முடைய தயைக்குப்போராதென்கையாலே தம்மைவைத்துப்போகிறது நல்லதென்று தோற்றிற்றிறே; அத்தையருளிச்செய்கிறார் (தமக்ககலவித்யாதி) "இவ்வடிவைப்பிரிந்தார்பிழையார்" என்கைக்கு, "பூந்துழாய்முடியார்" என்றஸ்வலக்ஷண்யம் தமக்குத்தெரி

யுமோவென்ன (தம்மைக்கண்ணடியித்யாதி) தன்வைலக்ஷண்யம் தனக்குத்தெரியாதோ, கண்ணடிப்புறத்திலே காணவேணுமோவென்னில்; "பூந்துழாய்முடியார்" என்கையாலே காணவேணுமென்னு கருத்து. "தம்மை" என்றதுக்குபாவம் (தம்மைப்பிரிந்தவித்யாதி) அர்த்தத்வயத்துக்கும் பேதமென்னென்னில்; விக்ரஹவிசிஷ்டரான தம்மைவைத்துப்போக ப்ராப்தமாயிருக்க விக்ரஹத்தைக்கொண்டுபோகிறது தகவன்றென்றுமூந்தினது; வ்யதிரேகத்தால் வந்தவாற்றாமைக்கு நிவர்த்தகராகதம்மை நானறுதியிட்டிருக்கையாலே பிரிந்ததசைக்குத் தாமுதவ ப்ராப்தமாயிருக்க தம்மைக்கொண்டுபிரிகிறது தகவன்றென் றிரண்டாமர்த்தமென்று பேதம் கண்டுகொள்வது. தம்மைக்கண்டது-தம்மை நிஸ்சயித்திருந்ததென்றபடி. இப்படி கலங்கிச்சொன்னபேருண்டோவென்ன (இமாமவஸ்தாமித்யாதி) "அதோநுகிம்துஃகதரம் ஸோஹமிக்ஷ்வாகுநந்தநம் । இமாமவஸ்தாம் ஆபந்நோ நேஹபஸ்யாமி ராகவம்" (அதோநுகிம்துஃகதரம்ஸோஹமிக்ஷ்வாகுநந்தநம் । இமாமவஸ்த்தாமாபந்நோநேஹபஸ்யாமிராகவம்) இதிதஸரதப்ரலாபே. தம்மைப்பிரிந்ததசைக்குத்தாமுதவக்கூடுமோ, இங்ஙன்சொல்லுவானென்னென்ன (ஆற்றாமையித்யாதி) எடுத்தஸ்லோகத்துக்கர்த்தம் (எனக்கித்யாதி)

"தாந்தம்மைக்கொண்டகலுதல்" என்றதுக்கு - தாம்போகவேண்டினால் தம்மைவைத்தன்றேபோவது தம்மைக்கொண்டகலலாமோ என்றருளிச்செய்து, தாம்போகவேண்டினால் என்னையும் கூட்டிக்கொண்டுபோகாதே தம்மைமாத்ரத்தைக்கொண்டகலலாமோ என்றர்த்தாந்தரம் (தாமென்னைக்கொண்டித்யாதி) உம்மைக்கொண்டகலத்தேவையேதென்ன (தம்மைக்கொண்டித்யாதி) தமக்கு சேஷமானத்தை - இத்தலையை. பிறர்க்கு சேஷமானத்தை-வடிவையென்றபடி. உடம்புபிறர்க்கு சேஷமோவென்ன (பக்தாநாமித்யாதி) இவரத்தலைக்கு சேஷமோவென்ன (தனக்கேயித்யாதி) ப்ரணயித்வமும் மென்மையு மெல்லாங்கிடக்கச்செய்தேயென்றது-ப்ரணயித்வத்துக்கும் மார்த்தவத்துக்கும் சேராதமாத்ரமேயன்றிக்கேயென்றபடி. "நிர்த்தயர்செய்யும்செயல்" என்றத்தை விவரிக்கிறார் (ஸ்த்ரீவதத்துக்கித்யாதி) தகவன்று - தயைக்குப்போராது. தகவு-க்ருபை.

எந்துநீரிளங்குருகே - ஏந்துபூண்முலையென்றுதொடங்கி, அகல்தல் - பூந்துழாய் முடியார்க்கென்றுதொடங்கி, திருமூழிக்களத்தார்க்கு - தகவன்றென்றுரையீரோ இத்யந்வயஃ ..........................................................................*

:o:

# பத்தாம்பாட்டு.

தகவன்றென்றுரையீர்கடம்புனல்வாயிரைதேர்ந்து
மிகவின்பம்படமேவுமென்னடையவன்னங்காள்
மிகமேனிமெலிவெய்திமேகலையுமீடழிந்தென்
னகமேனியொழியாமேதிருமூழிக்களத்தார்க்கே.

## ஆறாயிரப்படி.

(தகவன்றென்று) மென்னடைய வன்னங்காள், தாந் தம்மைக்கொண்டகல்தல் தகவன்றென்று நீங்கள் சொல்லவேணும்; சொல்லுமி

டத்தில், என்னுடைய மேனியும் மிக மெலிவெய்தி மேகலையு மீடழிந்து என்னுத்மாவும் முடிவதற்குமுன்னே சென்று சொல்லவேணும் என்கிருள். ........................................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், திருமூழிக்களத்தி லாசக்தியாலே நிரவதிகதயாவா னென்னும்படியிருக்கிறவர்க்கு, என்சத்தை யழிவதற்குமுன்னே "இது தம்முடையதயாநுரூபமல்ல" என்று சொல்லுங்கோளென்று, சிலவன்னங்களைப்பார்த்துச்சொல்லுகிருள்.

தடம் - பெரிய. பொழில்வாய் - பொழிலிடத்தில். இரை - இரையை. தேர்ந்து - சம்பாதித்து. மிக - மிகவும். இன்பம் - ஆநந்தம். பட - உண்டாம்படி. மேவும் - சேர்ந்துவர்த்திக்கிற. மெல்நடைய - மெல்லிய நடையையுடைய. அன்னங்காள் - அன்னங்காள். மேனி-சரீரம். மிக-மிகவும். மெலிவெய்தி-மெலிவையெய்தி. அத்தாலே, மேகலையும் - பரியட்டமும். ஈடழிந்து - கட்டுக்குலைந்து. அதுக்குமேலே, என் அகமேனி - அகவாயில் ஸ்வரூபமும். ஒழியாமே - குலையாதபடி. திருமூழிக்களத்தார்க்கு - ஆஸ்ரிதாநுக்ரஹார்த்தமாகத் திருமூழிக்களத்திலேநிற்கிறவர்க்கு. தகவன்றென்று - இந்நிலையின் ப்ரயோஜநம் பெருமையாலே இதுதயையின்கார்யமல்லவென்று. உரையீர்கள் - சொல்லுங்கோளென்கிருள். ..........................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

சில வன்னங்களைக் குறித்து, நான் முடிவதற்கு முன்னே அவனுக்கென்தசையை யறிவியுங்கோளென்கிருள்.

(தகவன்றென்றுரையீர்கள்) அவனுடைய சத்தை யழிக்கைக்குத் தகவில்லை யென்னுங்கோள். அதாவது - நிர்த்தயனென்கை. அவனுக்கு நிரூபகம் தயை யாகையாலே, அவனுடைய மர்ம மறியுமவளாகையாலே, அத்தை யில்லையென்கிருள். (தடம்புனல்வாயிரைதேர்ந்து) மிக்க நீர்வெள்ளத்தையுடைத்தான பொய்கைகளிலே யிரைதேடி. கலவிக்குறுப்பான வ்யாபாரமேயாயிருக்கிறபடி. (மிகவின்பம்படமேவும்) சுகம் கரைபுரளும்படியன்றோ நீங்கள் சம்ஶ்லேஷிக்கிறபடி. பிரிவுதேட்டமாய் உன்மஸ்தகரசமாய்ச்செல்லுகிறபடி. விஶ்லேஷியாவிடி லிரண்டாஶ்ரயமுமழியும்படியாய்த் திரைபரிமாறுகிறபடி. (மென்னடையவன்னங்காள்) கலவியின்மிகுதி நடையிலே தொடைகொள்ளலாம்படி சஞ்சரியாநின்றனவாய்த்து. (மிகமேனிமெலிவெய்தி) சரசஞ்சாரமெல்லாம் குலைந்ததிறேயுங்களுக்கு; கண்டிகோளிறே நானிருக்கிறபடி; என்தசையைக் கண்டால் தரித்திருக்கலாயிருந்ததோ. உங்கள் கலவியின்மிகுதியோபாதிபோரும் என்னுடம்பின் மெலிவும். (மேகலையுமீடழிந்து) பரியட்டமும்கட்டுக்குலைந்து; மேகலை தொங்கும்போது ஆஶ்ரயம்வேணுமே. (என்னகமேனியொழியாமே) புறம்புள்ளதடையக் கழன்றது, இனி அகவாயில் ஸ்வரூபம் கழல்வதற்குமுன்னே; நான் முடிவதற்குமுன்னே யென்கை. (திருமூழிக்களத்தார்க்கு) தம்மையொழியச் செல்லாதார் சத்தை நோக்

குகைக்காகவந்து கிடக்கிறவர்க்கு. (திருமூழிக்களத்தார்க்கு-தகவன்றெ ன்றுரையீர்கள்) பொரிபுறந்தடவி அத்தலையைப்பேணியுண்டதமையும், இனி அவர்படியை நேராகச் சொல்லிப் போருங்கோள். அப்படி முன்பு பேணினரோ இவரென்னில்; "எனதவளவண்ணர்தகவுகள்" என்று திருத்தாயார்சொல்லிற்றுப் பொறுமல், "தகவுடையவனே" என்று, கெடுவாய் ஆகரத்தில் தகவுமறுக்குமோ என்றுளிறே; அத்தைச் சொல் லுகிறாள். ...... ...............................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (தகவித்யாதி.) "அன்னங்காள் - அகமேனியொழியாமே திருமூழிக்களத்தார்க்கு - தகவன்றென்றுரையீர்கள்" என்றத்தைக் கடாக்ஷித்தவ தாரிகை (சிலவன்னங்களையித்யாதி.)

தடம் - மிகுதி. மீளவும் "தகவன்றென்றுரையீர்கள்" என்கிறதென்னென் ன (அவனுடையவித்யாதி.) குணந்தரங்களிருக்க, "தயையில்லை" என்கிறதுக்கு க்கருத்தென்னென்ன (அவனுக்கித்யாதி.)

இத்தால்பாவம் (கலவிக்கித்யாதி.) மேலே "மிகவின்பம் - மேவும்" என் றிருக்கையாலே (கலவிக்குறுப்பான வ்யாபாரமென்றது.) "மிகவின்பம்" என்ற துக்கு தாத்பர்யம் (சுகமித்யாதி.) இத்தால் பாவம் (பிரிவித்யாதி.) விவரணம் விஶ்லேஷியாவிடிலித்யாதி.) "மென்னடை" என்றதுக்குபாவம் (கலவியினித் யாதி.) தொடைகொள்ளுகை - காண்கை.

பதப்ரயோகப்ரயோஜநம் (சரசேத்யாதி.) அதுக்கடியேதென்ன (கண்டி கோளிறேயித்யாதி.) உனக்கு வ்யஸநமுண்டானல் சரசஞ்சாரம் குலையவேணு மோவென்ன (என்தசையையித்யாதி.) "மிகவின்பம் - மிகமேனி" என்றபதச் சேர்த்திக்குபாவம் (உங்கள்கலவியினித்யாதி.) மெலிவும் - ஆர்த்தியும். மேகலை- வஸ்த்ரம். கட்டுக் குலைகைக்கு ஹேதுவேதென்ன (மேகலைதொங்குமித்யாதி) மே னிமெலிவெய்துகையாலே ஆஶ்ரயமில்லையென்றபடி.

தம்மையொழியச் செல்லாதாரென்றது - திருமூழிக்களத்தி லுள்ளாரை. கு ணுதிகனென்று சொல்லுகிற நீயிப்படி சொல்லலாமோவென்ன (பொரிபுறமித்யா தி.) அதாவது - உள்ளே ரஸமில்லாத பொரிக்கு சர்க்கராதிகளை மேலேதடவுமா போலே, ப்ரணயித்வமில்லாதவனுக்கு ப்ரணயித்வத்தையாரோபித்து, "தகவில்லை" என்றவர்கள்முன்னே "தகவுடையவன்" என்றுசொன்னதமையுமென்றபடி.

தடம்புனல்வாயென்று தொடங்கி, திருமூழிக்களத்தார்க்கு - தகவன்றென் றுரையீர்க ளித்யந்வயః ..................................................................*

---

# பதினொன்றாம்பாட்டு.

ஒழிவின்றித்திருமூழிக்களத்துறையுமொண்சுடரை
யொழிவில்லாவணிமழலைக்கிளிமொழியாளலற்றியசொல்
வழுவில்லாவண்குருகூர்ச்சடகோபன்வாய்ந்துரைத்த
வழிவில்லாவாயிரத்திப்பத்துநோயறுக்குமே.

## ஆறாயிரப்படி.

(ஒழிவின்றி) எம்பெருமானைப் பிரியில் தரிக்கமாட்டாதஸ்வபாவையா யிருப்பாளொருபிராட்டி அவனைப்பிரிந்தலற்றினபாசுரத்தாலே, தத்ஸத்ருஸ ஸ்வபாவரான வண்குருகூர்ச்சடகோபன் எம்பெருமானைப்பிரிந்தலற்றின விப்பத்து, தத்விப்ரலேஷரூப வ்யாதியைப் போக்குமென்கிறார்.......................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக, பகவத்விப்லேஷ ரூபமான வ்யாதியினுடைய சாந்தியை யருளிச்செய்கிறார்.

ஒழிவின்றி - ஒருக்காலும் விஸ்லேஷமில்லாதபடி. திருமூழிக்களத்து - திருமூழிக்களத்திலே. உறையும் - நித்யவாஸம்பண்ணுகையாலே. ஒண்சுடரை - விலக்ஷணமான தேஜஸ்ஸையுடையவனை. ஒழிவில்லா - பிரியில் தரியாதபடியாய். அணி- அழகிய. மழலை - முக்தோக்தியையுடைத்தான. கிளிமொழியாள் - கிளியோடொத்த பேச்சையுடையவள். அலற்றிய - தன்னார்த்தியாலே அக்ரமமாகச் சொன்ன. சொல் - பாசுரத்தை. வழுவில்லா - அந்த ப்ரேமத்தில் குறையில்லாதபடியாய். வண்குருகூர் - விலக்ஷணமான திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வார். வாய்ந்துரைத்த - அவனுடைய ஸ்வபாவங்களைக்கிட்டி யநுபவித்துரைத்ததாய். அழிவில்லா - போக்தாக்கள் நெஞ்சில்நின்றும் போகாத. ஆயிரத்திப்பத்தும் - ஆயிரத்திப்பத்தும். நோய் - பகவத்விஸ்லேஷஹேதுவான சம்சாரவ்யாதியை. அறுக்கும்-தீர்த்துக்கொடுக்கும்.

இது நாலடித்தாழிசை. கலிவிருத்தமென்பாருமுளர்.......................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழியை யப்யசித்தார்க்கு, பிரிவுக்கடியான சம்சாரதுரிதத்தை இதுதானே யறுத்துக்கொடுக்குமென்கிறார்.

(ஒழிவின்றித் திருமூழிக்களத்துறையும்) ஒருநாளும் விடகில்லாதே அவ்வூரில் நித்யவாசம்பண்ணுமவனை. (ஒண்சுடர்) "பின்னுர்வணங்குஞ்சோதி" என்கிறபடியே, அவ்வூரில் நிலையால்வந்தபுகரிருக்கிறபடி;—அவ்வூரில் போக்யதையால் வந்த புகர், பிற்பாடர்க்கு முகங்கொடுக்கும் நீர்மையால் வந்த புகர். (ஒழிவில்லா) அவனவ்வூரையொழியில் தரிக்கமாட்டாதாப்போலே, அவனையொழியில் தரிக்கமாட்டாதவளென்கை; "நஜீவேயம் க்ஷணமபி" (நசஜீதாத்வயாஹீநா) என்னுமவளிறே. (அணிமழலைக்கிளிமொழியாள்) அழகிய முக்தமான, கிளியின் பேச்சுப்போலே யிருக்கிற பேச்சையுடையவள். (அலற்றியசொல்) தன்னாற்றாமையாலே யக்ரமமாகச் சொன்ன பாசுரத்தை. (வழுவில்லாவண்குருகூர்ச்சடகோபன்) பிராட்டிபடியி லொன்றும் குறைவற்றிருக்கிறவாழ்வார். (வாய்ந்துரைத்த) கிட்டியுரைத்த; பாவபந்தத்தாலே சொன்

ணவென்றபடி. (அழிவில்லாவாயிரத்திப்பத்து) கேட்டவர்கள்நெஞ்சை யொருநாளும் விடாதே வர்த்திக்கிற விப்பத்து. இப்பாசுரத்தைக் கேட்டார்க்கு, சமகாலத்திற்போலே சர்வகாலமும் ரசம்பிறக்கும்படி யாய்த்திருப்பது. (நோயறுக்குமே) பகவத்விப்ரலேஷமாகிறநோயையறுக்கும்;— கலந்து பிரிந்து திர்யக்குக்களின் காலிலேவிழுந்து க்லேசிக்கவேண்டா, விப்ரலேஷமில்லாத தேசத்திலே புகப்பெறுவர்.........................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமர் (ஒழிவின்றியித்யாதி.) "இப்பத்துநோயறுக்கும்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி.) நோய் - விப்லேஷஹேதுவான சம்சாரதுரிதம்.

கீழே சௌலப்யத்தால்வந்த புகராக வருளிச்செய்து, பாவாந்தரம் (அவ்வூரில் போக்யதையாலித்யாதி.) "பின்னுனர்" இத்யாதி வாக்யவிவரணம் (பிற்பாடற்கித்யாதி.)

"ஒழிவின்றித்திருமூழிக்களத்துறையும் - ஒழிவில்லா" என்கிற பதச்சேர்த்திக்குபாவம் (அவனவ்வூரையித்யாதி.) தரிக்கமாட்டாளென்னுமதுக்கு ப்ரமாணம் (நசஸீதேத்யாதி.) ஒழிவில்லா - பிரிவில் தரிக்கமாட்டாத. "அணிமழலை" என்றது - * மொழிக்குவிசேஷணம்.

வழுவுதல் - நழுவுதல். கிட்டுகையாவ தேதென்ன (பாவபந்தத்தாலேயித்யாதி.) ஆயிரத்துக் கழிவில்லாமையேதென்ன (கேட்டவர்களித்யாதி) போக்யதையாலேயென்றபடி. விவரணம் (இப்பாசுரத்தையித்யாதி.) "நோயறுக்கும்" என்றது - இஷ்டப்ராப்திக்கு முபலக்ஷணமென்கிறார் (கலந்தித்யாதி.) ...........*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

(எங்கானலகம்.)

ரம்யத்வாச்ச்ரீதுளஸ்யா, ச்ரிதஜநஸஹிதத்வேந, பத்மாக்ஷதாயா, ஸ்வாதிம்நா, ஸ்வஸ்வநாதேர்ஜ்யோதிரிதிநிசயநத, ஸ்ரீயாமத்வா, - திநீந்த்ரா, ।பா- ஷுஸ்ராக்ஷஸங்கா, ரமயதாரணக்ஷவந்யாயபாபஶக்யாநுந்தயநொ, ஸ்வ ளெஸ்ரீகாருஸாஸிதுகக்ஷவஸவிஸ்ருஹீணியகவாஹ ॥ (௯௧)

(ரம்யத்வாச்ச்ரீதுளஸ்யா) சொங்கார்பூந்துழாய்முடி - மிக்கபரிமளத்தையுடைத்தான திருத்துழாய்மாலையாலே யலங்க்ருதமான திருமுடியையுடையனாகையாலும்; (ச்ரிதஜநஸஹிதத்வேந) தமரோடங்குறைவார்க்கு - பரிஜநங்களோடேகூடியிருக்கையாலும்; பத்மாக்ஷதாயா:) செக்கமலத்தலர்போலுங்கண் - சிவந்ததாம

ைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்மலரையுடையனாகையாலும்; (ஸ்வாமித்வாத்) திருமேனியடிகளுக்கு - வடிவழகாலேதானே சர்வஸ்வாமித்வந் தோற்றவிருக்கை யாலும்; (ஸத்பராஞ்ஜ்யோதிரிதிகதநாக) திருமூழிக்களத்துறையுமொண் சுடர்க்கு-திருமூழிக்களத்திலே வர்த்திக்கையாலே பரமபதத்திற்காட்டிலும் மிக்கதேஜஸ்ஸையுடையனானனென்று சொல்லப்படுகையாலும்; (ஸ்ரீதரத்வ) மாதரைத்தம்மார்பகத் தேவைத்தார்க்கு - பெரியபிராட்டியாரைத் திருமார்பிலேவைத்துக்கொண்டிருக்கை யாலும்; (அதிகீர்த்யா) படர்புகழான் - நிரவதிககீர்த்தியையுடைத்தாகையாலும்; (புஷ்பஸ்யாமத்வபூம்நா) புனக்கொள்காயாமேனி - செவ்விபெற்றிருக்கிற காசாம் பூப்போலேயிருக்கிற திருநிறத்தையுடையனாகையாலும்; (ரதசரணமுகஸ்வாயுதத் வாத்யுதந்தைஃ) பொன்னாழிக்கையார்க்கு - இதுபலக்ஷணம்; திருக்கைகளுக்கலங்கா ரமாயிருக்கிற திருவாழி திருச்சங்குகளை திவ்யாயுதங்களாகவுடையனாகையாலும்; ஆதிசப்தத்தாலே - திருமூழிக்களத்தார்க்கு என்று அநந்தரகாதையிலேசொல்லுகிற ஆஸந்நத்வம் சங்க்ருஹீதம். இப்படிகளாலே, திருமூழிக்களத்தெம்பெருமானை, கடகரானவாசார்யமுகத்தாலே விஸ்வஸநீயனாக "எங்கானல்" என்கிறதசகத்திலே ஆழ்வாருளிச்செய்தாரென்கிறார் ........................................................ (கூகூ)

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

எங்காதலுக்கடிமாலேய்ந்தவடிவழகென்
றங்காதுபற்றாசாவாங்கவன்பா - லெங்குமுள்ள
புள்ளினத்தைத்தூதாகப்போகவிடுமாறன்று
ளுள்ளினர்க்குத்தீங்கையறுக்கும். (அஎ)

(எங்காதலுக்கடி) இதில், வடிவழகுபற்றாசாகத் தூதுவிட்டருளினவாழ்வார் திவ்யசூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; அப்ரீதிகர்ப்ப குணாநுசந்தாநமாத்ரமாய்ச்சென்றவிடத்தில், பாக்யவைகல்யத்தாலே குணாநுபவத் தால்வந்த ப்ரீதிகீழ்ப்பட்டு, அப்ரீத்யம்ஸமே தலையெடுத்து, அவனுடைய சௌந்தர் யத்தாலே அபஹ்ருதசித்தராய், "அவ்வழகைக்கண்ணாலேகண்டநுபவிக்கவேணும்" என்று கண்ணாற்கண்டபக்ஷிகளைத் தூதுவிடுகிற * எங்கானலிலர்த்தத்தை யருளிச் செய்கிறார் "எங்காதலுக்கடி" இத்யாதியாலேயென்கை.

(எங்காதலுக்கடி) என்னுடைய ப்ரேமத்துக்குஹேது. (மாலேய்ந்தவடிவழ கென்று) சர்வேஸ்வரனுடைய ஸ்வரூபாநுபந்தியா யநுரூபமான விக்ரஹ சௌந்த ர்யமென்று. (அங்காதுபற்றாசா ஆங்கவன்பால்) அத்தசையில் அவன்சௌந்தர்ய மே, பற்றாசாக ஆலம்பநமாக, அவ்விடத்தில் அவன்விஷயமாக-திருமூழிக்களத்து றையு மவன்விஷயமாக. (எங்குமுள்ளபுள்ளினத்தைத் தூதாகப்போகவிடும்மாற ன்) "யாஂகவீ நாஂஸஹஸ்ராணி" (யாம்கபீநாம்ஸஹஸ்ராணி) என்னும்படி சர்

வதிக்குக்களிலுமுண்டான பக்ஷிஸமூஹத்தை, தம்முடைய ப்ராணரக்ஷணார்த்தமாக தூதப்ரேஷணம்பண்ணுமாழ்வார். அதாவது - "செங்காலமடநாராய்" என்றுதொடங்கி "எங்குடக்கூத்தர்க்கென்தூதாய்" என்றும், "அமர்காதற்குருகினங்காள்" என்றுதொடங்கி "தமரோடங்குறைவார்க்குத்தக்கிலமேகேளீரோ" என்றும், "தக்கிலமேகேளீர்கள்" என்றுதொடங்கி "கொக்கினங்காள் குருகினங்காள்-செக்கமலத்தலர்போலும் கண்கைகால் செங்கனிவாய் அக்கமலத்திலைபோலுந் திருமேனியடிகளுக்கு" என்றும், "திருமேனியடிகளுக்கு" என்றுதொடங்கி, "மாதரைத்தம்மார்பகத்தேவைத்தார்க்கு" என்றும், "திருமூழிக்களத்துறையும் பங்கயக்கட்சுடர் பவளவாயனைக்கண்டு" என்றும், "புனக்கொள்காயாமேனிப்பூந்துழாய்முடியார்க்கு" என்றும், "பூந்துழாய்முடியார்க்கு" என்றுதொடங்கி "தாந்தம்மைக்கொண்டகல்தல் தகவன்றென்றுரையீர்" என்றும், "என்னகமேனியொழியாமேதிருமூழிக்களத்தார்க்கு" என்றும், இப்படி "பூந்துழாய்முடியார்க்கு" என்னுமளவும் வடிவழகுபற்றாசாகப் பலபக்ஷிகளைத்தூதுவிட்டாரென்கை. "நம்பிழையும் சிறந்தசெல்வமும் படைத்தபரப்பும் தமரோட்டைவாஸமும் மறப்பித்த க்ஷமாதீக்ஷாசாரஸ்ய சௌந்தர்யங்களை யுணர்த்தும் வ்யூஹ விபவ பரத்வ த்வயார்ச்சைகள் தூதுநாலுக்கும் விஷயம்" என்றிறே ஆசார்யஹ்ருதயத்திலே நாயனாருமருளிச்செய்தது. "அபராயஸஹத்வாச்ச விபோஸ்ஸம்பந்த வைபவாத் । ஐகரஸ்யாச்ச ஸௌந்தர்யாத் கடகாந்யாசதேமுநிః" (அபராதஸஹத்வாச்சவிபோஸ்ஸம்பந்தவைபவாத் । ஐகரஸ்யாச்சஸௌந்தர்யாத்கடகாந்யாசதேமுநிঃ) [சகஉ௪-பக்கத்துப்பன்னீராயிரப்படி] என்றிறே வாதிகேசரி அழகியமணவாளஜீயரு மருளிச்செய்தது. (மாறன்றாளுள்ளினர்க்குத்தீங்கையறுக்கும்) ஆழ்வார்திருவடிகளானது, தன்னை மநஸ்ஸாலே யநுசந்தித்தவர்களுக்கு ப்ரதிபந்தகங்களை தானேசேதித்துப்பொகடும்; * துயராறுசுடரடிபோலே........................................................................(அள)

ஒன்பதாம்பத்தில் - ஏழாந்திருவாய்மொழி முற்றிற்று.



ஆக, திருவாய்மொழி-அள.—பாட்டு - கூறுக.





ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஒன்பதாம்பத்து.

## எட்டாந்திருவாய்மொழி.

### அறுக்கும்வினை - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(அறுக்கும்வினை) இப்படி தூதப்ரேஷணம்பண்ண, பின்னையுமெம்பெருமானை வரக்காணாமையாலே அவஸந்நராய் ......................*

### பன்னீராயிரப்படி.

எட்டாந்திருவாய்மொழியில், இப்படி கடகமுகத்தாலே ப்ராபிக்க வபிநிவேசித்தவர், ப்ராப்யத்வராதிசயத்தாலே, அவன்பரிபூர்ணனாய்க்கொண்டு திருநாவாயிலே யெழுந்தருளியிருக்கிறபடியை ப்ரகாசிப்பிக்கக்கண்டு; அவனுடைய அநுபவவிரோதி நிராஸக தேசவர்த்தித்வத்தையும், அநுபாவ்யத்வ வைபவத்தையும், அசாதாரண சம்பந்தத்தையும், நித்யகைங்கர்யவிஷயத்வத்தையும், பத்நீபரிஜநஸ்த்தாநாதிபூர்த்தியையும், ஆஶ்ரிதபவ்யதையையும், சேஷித்வரக்ஷகத்வ ..ர்யாகாரபூர்ணதையையும், அநுபவஜ்ஞாந ப்ரதத்வத்தையும், தூரவகம சர்வேஶ்வரத்வத்தையும், அதிரமணீயவிக்ரஹயோகத்தையு மநுசந்தித்து, ஏவம்ப்ரகாரனான சர்வேஶ்வரனெழுந்தருளியிருக்கிற தேசத்தைக்கிட்டி யநுபவிப்பதொருநாளே என்று பஹுமுகமாக மநோரதிக்கிறார்..................................................*

### ஈடு.

திருவடிசென்று பிராட்டியைத் திருவடிதொழுது மீண்டவநந்தரம் பெருமாளைக்கிட்டுவதற்குமுன்பு பிராட்டிக்குப்பிறந்த மநோரதம்போலே, கீழ்விட்டதூதர் அத்தலைப்பட்டு அவனைக்கொண்டு வருவதற்குமுன்னே நடுவிவர்க்குப்பிறந்த மநோரதத்தைச்சொல்லுகிறது. இப்படி தம்முடைய வார்த்தியறிவிக்கச்செய்தேயும் அப்போதே வரக்காணாமையாலே யவஸந்நரானவர், தூதப்ரேஷணத்தாலும் அவன்குணாநுசந்தாநத்தாலும் மநஃப்ரசாதத்தாலும் "அவன்வந்து நம்மைவிஷயீகரித்து அமர்ந்தநிலமான திருநாவாயிலே கொடுபோனைநிப்ஶிதம்" என்று அத்யவஸித்து, க்ரமத்தால் போகப்பற்றாமையாலே பதறி, "அங்கேபுகவல்லேனே, புகும்நாளென்றோ, அங்கேபுக்கென் கண்ணாரக்கண்டடிமைசெய்யவல்லேனே" என்று இப்படியநேகமநோரதங்களைப்பண்ணுகிறார். "உபாயோபேயங்களிரண்டு மீஶ்வரனே" என்றத்யவஸித்தார்க்கு, ப்ராப்யரு

சி கண்ணழிவற்றால் விளம்ப ஹேதுவில்லாமையாலே, ப்ராப்யசித்தியளவும் மநோரதம் செல்லாநிற்குமிறே. இம்மநோரதந்தான் இவனுக்குத் தவிராததுமாய், அதுதானினியதுமாய், 'இவனுடைய ஸ்வரூபத்தோடு சேர்ந்திருப்பது மொன்றிறே. பெரியமுதலியார், ப்ராப்யசித்தியில் த்வரையாலே எப்போது மித்திருவாய்மொழியை யநுசந்தியாநிற்பர்; ஆகையாலே, இத்தை "பெரியமுதலியார் திருவாய்மொழி" என்றுய்த்துச்சொல்லுவது. அதவா, "விட்ட தூதர்கள் தாழ்த்தார்களென்று தாமே அவன்வர்த்திக்கிற தேசத்தேறப்போக வொருப்படுகிறார்" என்பாருமுண்டு *

## ஜீயர் அரும்பதம்.

அறுக்கும்வினை ப்ரவேஸே, சத்ருஷ்டாந்தமாக சங்க்ரஹசங்கதி (திருவடி சென்றித்யாதி) பிராட்டிக்குப்பிறந்த மநோரதம்போலேயென்றது - " ஜ்வம்ஸமேஷ்யஸிராமேணஸஶாங்கேநேவரோஹிணீ । க்ஷிப்ரஞ்சதேவிஸோகஸ்யபாரம்யாஸ்யஸிமைதிலி " ( த்வம்ஸமேஷ்யஸிராமேணஸஶாங்கேநேவரோஹிணீ(க்ஷிப்ரஞ்சதேவிஸோகஸ்யபாரம்யாஸ்யஸிமைதிலி)என்று திருவடிசொல்லிப் போனவற்றையே யெப்போதும் மநோரதித்துக்கொண்டிருக்கையைப்பற்ற. (மநோரதத்தைச்சொல்லுகிறது) என்றவநந்தரம், "இத்திருவாய்மொழி" என்று கூட்டுவது. அத்தலைப்பட்டு—அங்கேபோய். பிராட்டிக்குப்பெருமாள் வருவரென்று திருவடியறிவித்தபின்பாகையாலே, "எப்போதவரைக்காணப்புகுகிறோம்" என்று பதறக்கூடும்; இவர்க்கங்ஙனொன்றின்றிக்கேயிருக்க மநோரதம் கூடினபடி யெங்ஙனேயென்கிற சங்கையிலே, விஸ்தரசங்கதி (இப்படியித்யாதி) " குறுக்கும்வகையுண்டுகொலோ" "நாளறியேனே," "அணுகப்பெறுநாள்யெவகொலோ," "கண்ணாரக்களிக்கின்றதிங்கென்றுகொல்" இத்யாதியைப்பற்ற (அங்கேபுகவல்லேனே இத்யாதித்ரயமும்) உபாயமவனேயென்றத்யவஸித்தால் "தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" (தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) என்றிராதே மநோரதிப்பானென்னென்ன (உபாயோபேயங்களித்யாதி) ப்ராப்யருசி கண்ணழிவற்றால்-ப்ராப்யத்திலாதரம் குறைவற வுண்டானாலென்றபடி. ப்ராப்யத்வரையுண்டென்றால் ஸ்வரூபவிருத்தத்தைச் செய்யலாமோவென்ன (இம்மநோரதமித்யாதி) "ப்ராப்யத்வரையாலே மநோரதிக்கிறார்" என்றதுக்கு சம்வாதம் (பெரியமுதலியாரித்யாதி) பெரியமுதலியார் - ஆளவந்தார்.

சங்கத்யந்தரம் (அதவேத்யாதி) .........................................*



## எட்டாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.



அறுக்கும்வினையாயினவாகத்தவனை
நிறுத்துமனத்தொன்றியசிந்தையினார்க்கு
வெறித்தண்மலர்ச்சோலைகள்சூழ்திருநாவாய்
குறுக்கும்வகையுண்டுகொலோகொடியேற்கே.

## ஆறுயிரப்படி.

பகவத்தர்ஶநாபேக்ஷராயிருப்பாருடைய துஃகங்களைப்போக்கும் திருநாவாயை நமக்கு மொருக்கால் குறுகுகைக் குபாயமுண்டேயோவெ ன்கிருர் ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், ஆஶ்ரிதாநுபவவிரோதிநிரஸகமாய் நிரதிசயபோக்யமான திருநாவாய் எனக்குக்கிட்டும்வகையுண்டோவென்கிருர்.

ஆகத்து-தங்களகவாயிலே. அவனை - சமஸ்தவிரோதிநிவர்த்தகனுய் நிரதிசய போக்யனுன சர்வேஶ்வரனுனவனை. நிறுத்தும் - நிறுத்தவேணுமென்கிற. மனத்து- நெஞ்சிலே. ஒன்றிய-ஒருமைப்பட்ட. சிந்தையினூர்க்கு- மநோரதத்தையுடையவர்க ளுக்கு. வினையாயின-அவித்யாகர்ம வாஸநாருசிகளான அநுபவவிரோதிகளையடை ய. அறுக்கும்-போக்குவதாய். வெறி-பரிமளப்ரசுரமான. தண்-ஶ்ரமஹரமாய். மல ர்-புஷ்போத்தரமான. சோலைகள்சூழ்-சோலைகளையுடைய. திருநாவாய் - திருநாவா யானது. கொடியேற்கு - அநுபவாபிநிவேசாநுரூபமாகக் கிட்டப்பெருதகொடுமை யையுடையவெனக்கு. குறுக்கும்வகையுண்டுகொலோ-கிட்டும்விரகுண்டாமோ ... *

## ஈடு - முதற்பாட்டு.

எனக்குத் திருநாவாய் குறுகுகைக்குபாயமுண்டோ வென்கிருர்.

(அறுக்கும்வினையாயின) வினையென்று பேர்பெற்றவை யடங்க லும்போக்கும்;—ருசிவிரோதி, உபாயவிரோதி, ப்ராப்யத்தை ப்ராபிக்கு மிடத்தில் வரும்விரோதிகள், வர்த்தமாநதேஹத்தளவிலே பர்யவஸிக் கையன்றிக்கே ப்ராரப்தசேஷமாய்நின்று அவ்வருகேயும்போம்படி விள ம்பிக்கக்கடவவை. நின்றநின்றநிலைகள்தோறு முண்டாயிருக்குமிறே வி ரோதிகள். புதுப்புடவை யழுக்குக்கழற்றுமாபோலே க்ரமத்தாலேபோ க்கவேண்டுவது தான்போக்குமன்றிறே; பகவத்ப்ரஸாதத்தாலேபோமன் று ஒருக்காலேபோமிறே; “ மேருமந்த்ரமாத்ரோபி,” (மேருமந்தரமா த்ரோபி) “ ஸர்வேபாப்மாநஃப்ரதூயந்தே,” ( ஸர்வேபாப்மாநஃப்ர தூயந்தே ) “ ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி ” ( ஸர்வபாபேப் யோ மோக்ஷயிஷ்யாமி ) என்கிறபடியேயாகக்கடவதிறே. ப்ரஹ்மஹத் யைக்கு ப்ராயஶ்சித்தம்பண்ணினுல், கோஹத்யைக்குத்தனித்து ப்ராயஶ் சித்தம்பண்ணவேண்டிவருமிறே; அங்ஙன்வேண்டாவிறே பகவதநுக்ரஹ ங்கொண்டு கார்யங்கொள்ளுமிடத்தில். ஆர்க்குத்தானிப்படிசெய்வதென் னில் (ஆகத்தித்யாதி) ஹ்ருதயத்திலே யவனைநிறுத்தவேணுமென்னு மத் யவசாயத்திலே யொருமைப்பட்ட மநோரதத்தையுடையார்க்கு. (வெறி யித்யாதி) வினையைப்போக்காதே வர்த்திப்பிக்கிலும் விடவொண்ணுதப டியாய்த்து தேசமிருப்பது. பரிமளத்தையுடைத்தாய் ஶ்ரமஹரமாய் நித் யவசந்தமான சோலைகளாலே சூழப்பட்ட திருநாவாய். (குறுக்கும்வ கையுண்டுகொலோ) குறுகப்பண்ணும்வகை யேதோவென்னுதல்; குறு

கும் விரகேதோவென்னுதல்; குறுக்குமென்று - அத்தேசபாஷை. எம்பெருமானார் திருவடிதொழ வெழுந்தருளாநிற்க, "திருநாவாயெத்தனையிடம்போரும்" என்று எதிரேவருகிறார் சிலரைக்கேட்டருள, "குறுக்கும்" என்றார்களாய், அத்தைக்கேட்டு "இப்பாஷையாலே யருளிச்செய்வதே ஆழ்வார்!" என்று போரவித்தராயருளினார். (கொடியேற்கு) கொடியேனுக்கு. ஆசாலேசமுடையார்க்கு ப்ராபிக்கலாம் தேசமாயிருக்க ஆசையும் கண்ணழிவற்றிருக்க புகப்பெறாதே நோவுபடுகைக்கடியான பாபத்தைப்பண்ணினவெனக்கு.

ஆகத்தவனைநிறுத்தும் மனத்தொன்றியசிந்தையினர்க்கு-வினையாயின-அறுக்கும்-வெறித்தண்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்-கொடியேற்கு-குறுக்கும்வகையுண்டுகொலோ ......... ..............................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (அறுக்கும் வினையித்யாதி) "கொடியேற்கு - திருநாவாய் குறுக்கும்வகையுண்டுகொலோ" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (எனக்கித்யாதி)

வினைகளநேகமுண்டோவென்ன (ருசியித்யாதி) ருசிவிரோதியாவது - ப்ரயோஜநாந்தரஸ்ரத்தை, தேவதாந்தரபஜநாதிகள். உபாயவிரோதியாவது - "𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂𑌸𑌕𑍃𑌦𑍇𑌵" (கர்த்தவ்யம்ஸக்ருதேவ) இத்யாத்யுக்தசங்காத்ரயம், சாதநாந்தரஸ்ப்ருஹை, முதலானவை. ப்ராப்யத்தை ப்ராபிக்குமிடத்தில் வரும் விரோதிகளாவன - "அவனேஉபாயம்" என்றத்யவசாயம்பிறந்தாலும், அவன்திருவடிகளை ப்ராபிக்குமிடத்தில் "அவித்யாகர்மவாசநாருசிகள், பாகவதாபசாரம்," என்றாப்போலே வருகிறவிரோதிகள். (வர்த்தமாநதேஹத்தளவிலே பர்யவஸிக்கையன்றிக்கே) என்கிறவிடத்திலே, "𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑍇𑌤𑌰𑌪𑍂𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑌮𑌖𑌿𑌲𑌮𑍍" (ப்ராரப்தேதரபூர்வபாபமகிலம்) இத்யாத்யநுசந்தேயம். கண்டதுக்கெல்லாம் விரோதிகளுண்டோவென்ன (நின்றநின்றவித்யாதி) வினைகளொருக்காலே யறக்கூடுமோவென்ன (புதுப்புடவையித்யாதி) ஒருக்காலேபோமென்னுமதுக்கு ப்ரமாணங்கள் (மேருமந்தரோத்யாதி) "𑌮𑍇𑌰𑍁𑌮𑌨𑍍𑌦𑌰𑌮𑌾𑌤𑍍𑌰𑍋𑌽𑌪𑌿 𑌰𑌾𑌶𑌿𑌃 𑌪𑌾𑌪𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 । 𑌕𑍇𑌶𑌵𑌂 𑌵𑍈𑌦𑍍𑌯𑌮𑌾𑌸𑌾𑌦𑍍𑌯 𑌦𑍁𑌰𑍍𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌰𑌿𑌵𑌨𑌶𑍍𑌯𑌤𑌿" (மேருமந்தரமாத்ரோபி ராஸி꞉ பாபஸ்யகர்மண꞉ । கேஸவம்வைத்யமாஸாத்ய துர்வ்யாதிரிவநஸ்யதி) இதிஸ்ரீவிஷ்ணுதர்மே. "𑌏𑌵𑌂𑌹𑌾𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑌾𑌪𑍍𑌮𑌾𑌨𑌃 𑌪𑍍𑌰𑌦𑍂𑌯𑌨𑍍𑌤𑍇" (ஏவம்ஹாஸ்யஸர்வேபாப்மாந꞉ப்ரதூயந்தே) இதி சாந்தோக்யே. "புதுப்புடவை" இத்யாதி வாக்யத்வயவிவரணம் (ப்ரஹ்மஹத்யைக்கித்யாதி வாக்யத்வயம்) ஒருமைப்பட்ட-உத்யோகித்த.

ஊரில் போக்யதையை வர்ணித்ததுக்கு பாவம் (வினையைப்போக்காதேயித்யாதி.) சப்தார்த்தம் (பரிமளத்தையித்யாதி.) "மலர்ச்சோலை" என்று நிரூபகமாகச் சொல்லுகையாலே (நித்யவசந்தமான) என்றது. இரண்டாமர்த்தம் - குறுகும் என்கிற மெல்லொற்றை "குறுக்கும்" என்று வல்லொற்றுக்கிக் கிடக்கிறதாய், (குறுகும்விரகேதோவென்று.) ஆனால், குறுகும்வகையென்னாதே "குறுக்கும் வகை" என்கிறதென்னென்ன (குறுக்குமித்யாதி) என்னுதல்; மூன்றாமர்த்தமா

தல். "தேசபாஷை" என்றதுக்கு சம்வாதம் (எம்பெருமானுரித்யாதி.) பாபமே தென்ன (ஆசாலேசமித்யாதி.)

அந்வயம் (ஆகத்தவனையித்யாதி.) "வினையாயின - அறுக்கும்" என்றது-* திருநாவாய்க்கு விசேஷணம்........ ........................ ............*

# இரண்டாம்பாட்டு.

கொடியேரிடைக்கோகனகத்தவள்கேள்வன்
வடிவேற்றடங்கண்மடப்பின்னைமணாளன்
நெடியானுறைசோலைகள்சூழ்திருநாவா
யடியேனணுகப்பெறுநாளெவைகொலோ.

## ஆருயிரப்படி.

(கொடியேரிடை) பெரியபிராட்டியாரோடும் நப்பின்னைப்பிராட்டியாரோடும் கூட அவன் எழுந்தருளியிருக்கிற திருநாவாயிலே போய்ப் புகுவதென்றோவென்கிறார்.... ... ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், மஹிஷ்யாதி போக்யதாவைபவத்தை யுடையவன் வர்த்திக்கிற திருநாவாயை நான்கிட்டும் நாள்களெவையென்கிறார்.

கொடியேரிடை - கொடிபோலழகிய இடையையுடையளாய். கோகனகத்தவள் - தாமரைப்பூவிற் பிறப்பாலே நிரதிசயபோக்யையானலக்ஷ்மிக்கு. கேள்வன் - சத்ருசனாய். வடிவேல் - வடித்த வேல்போலே யொளியையும் கூர்மையையுமுடைத்தான. தடங்கண் - பெரியகண்களையும். மடம் - மடப்பத்தையுமுடைய. பின்னை - நப்பின்னைப்பிராட்டிக்கு. மணாளன் - போக்தாவாய். இவ்வளவன்றியே, நெடியான் - அபர்யந்த போக்யதாதிசயத்தையுடையவன். உறை - வர்த்திக்கிற தேசமாய். சோலைகள் - நாநாவிதமான சோலைகளாலே. சூழ் - சூழப்பட்ட. திருநாவாய் - திருநாவாயை. அடியேன் - அநந்யபோகனான நான். அணுகப்பெறுநாள் - அணுகப்பெறுநாள்கள். எவைகொலோ - எவையோ.

வடியென்று - மாவடுவாய், மாவடுப்பிளவுபோலவும் வேல்போலவு மென்னுமாம். ..........................................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

திருநாவாயிலே புகும்நாளென்றோ வென்கிறார்.

(கொடியேரித்யாதி.) கொடிபோலே யழகிதான இடையையுடையளாய் புஷ்பத்திற் பரிமள முபாதாநமாகப் பிறந்த பிராட்டிக்கு வல்லபனானவன். "நகஸ்ஸ்ரீநாவராயு)தி" (நகஶ்ரீஸிந்நாபராத்யதி) என்பாருமருகேயிருக்க இழக்கவோவென்கிறார். (வடிவேற்றடங்கண்மடப்பின்னைமணாளன்) கூரிய வேல்போலே ஓராளு மொருநோக்கும் நேராய் போக்தாவினளவல்லாத போக்யதையை யுடைத்தான கண்ணையுடைய

ளாய், ஆத்மகுணோபேதையான நப்பின்னைப்பிராட்டியுடைய செவ்வி புஜிக்கைக்கு இட்டுப்பிறந்தவனுய்த்து. (நெடியான்) இப்படிப்பட்ட மஹிஷீபரிஜநாதிகளா லெல்லைகாணவொண்ணுதவன். (உறையித்யாதி) அவனுக்கும் அவன்விபூதிக்கும் குறைவற வர்த்திக்கலாம்படி இடமுடைத்தான சோலைகளாலே சூழப்பட்ட திருநாவாயை. (அடியேன்) வநவாசத்துக்குப் பெருமாளும் பிராட்டியுமாய்க் கலக்குமிடத்தில் * பவாம்ஸ்துவிற்படியே எல்லாவடிமைகளும் செய்கைக்கு இளையபெருமாள் நேர்பட்டாப்போலேயாய்த்து, இங்குத்தைக் கடிமைசெய்கைக்கு இவர் நேர்பட்டபடியும். இளையபெருமாளைப்போலே அடிமைசெய்வித்துக் கொள்ளுகிற விஷயத்திற் குறையில்லையாய்த்திவர்க்கு. ஸ்ரீஜநகராஜன்றிருமகளொருத்தியுமிறேயங்கு. (அணுகப்பெறுநாளெவைகொலோ) அத்தேசத்தை நான்கிட்டப் பெறும் நாளேதோ. ...................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (கொடியேரித்யாதி.) "திருநாவாய் - அணுகப்பெறுநாள் யவைகொலோ" என்றத்தைக் கடாக்ஷித் தவதாரிகை. (திருநாவாயிலே யித்யாதி.)

ஏர் - அழகு. இத்தால் பாவம் (நகஸ்சிதித்யாதி.) வடி - கூர்மை. ஓராளுமொருநோக்கு மென்றது - ஓராளுக்கோரம்புபோலே ஒருநோக்காலே யகப்படுத்திக்கொள்ளுகையென்றபடி. பிராட்டிமாரைச் சொன்ன வநந்தரம், "நெடியான்" என்கையாலே அர்த்தம் (இப்படிப்பட்டவித்யாதி.) "சோலைகள்" என்கிற பஹுவசநத்துக்குபாவம் (அவனுக்குமித்யாதி.)

பிராட்டிமாரோட்டைச் சேர்த்தியைச்சொல்லி, அநந்தரம் "அடியேன்" என்றதுக்குபாவம் (வநவாஸத்துக்கித்யாதி) புறப்பட்டு என்றுகூட்டுவது. * பவாம்ஸ்துவிற்படியே - அந்தஸ்லோகத்திற்படியே யென்றபடி. இவர்நேர்பட்டால் விஷயம் குறைபட்டிருக்குமோவென்ன (இளையபெருமாளையித்யாதி.) ஏற்றமுண்டென்கிறுர் (ஸ்ரீஜநகராஜனித்யாதி.)..........................................*

# மூன்றாம்பாட்டு.

எவைகொலணுகப்பெறுநாளென்றெப்போதுங்
கவையின்மனமின்றிக்கண்ணீர்கள்கலுழ்வ
னவையிறிருநாரணன்சேர்திருநாவா
யவையுட்புகலாவதோர்நாளறியேனே.

## ஆறுயிரப்படி.

(யவைகொல்) என்றே திருநாவாயை யணுகப் பெறுவதென்றெப்போதும் ததேகசித்தனுய் கண்ணீர்சோர விருக்கிற நான், ஹேயப்ரத்யநீகனுன திருநாரணன்சேர் திருநாவாயிலே அவனுடைய திவ்யபரிஷத்திலேபோய்ப் புகுநா ளென்றென்றறிகிறிலேன் என்கிறுர். .. .........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அசாதாரணசம்பந்த விசிஷ்டனுன நாராயணன் வர்த்திக்கிற திருநாவாயோலக்கத்திலே புகுவதொருநா ளறிகிறிலே னென்கிறார்.

அணுகப்பெறுநாள் - கிட்டப்பெறுநாள். எவைகொலென்று - எவை யென்று. எப்போதும் - சர்வகாலத்திலும். கவையில்மனமின்றி - வேறென்றிற் புகுரும் நெஞ்சின்றியே ஏகாக்ரசித்தனுய்க்கொண்டு. கண்ணீர்கள் - கண்ணீர்கள். கலுழ்வன் - மல்காநிற்பன். நவையில் - துர்லபத்வ சோபாதிசத்வாதிகளாகிற குற்றமின்றியே. திருநாரணன் - சுலபனுய் நிருபாதிகபந்துவாய் ஸ்ரிய:பதியான நாராயணன். சேர் - வர்த்திக்கிற. திருநாவாய் - திருநாவாயில். அவையுள் - அவனுடைய வோலக்கத்திலே. புகலாவது - ப்ரவேசிக்கலாவது. ஓர்நாள் - ஒருநாள். அறியேனே-இன்னதென்றறிகிறிலேன்.

நவை - குற்றம். அவை - ஓலக்கம்.......................................................*

## ஈடு - மூன்ரும்பாட்டு.

திருநாவாயிற் றிருவோலக்கத்திலே புகும்நா ளென்றென்றறிகிறிலேனென்கிறார்.

(யவைகொலித்யாதி) நான்வந்து கிட்டப் பெறும்நாள் யவையென்று. (எப்போதும்) ஒருக்காலித்தைச் சொல்லி, அல்லாதபோது அந்யபரதைபண்ணுகிறேனே. (கவையில்மனமின்றி) அதுதன்னிலு மிதுவும் முகாந்தரமுமாய்ச் செல்லுகிறதோ. இருதலைத்தநெஞ்சின்றிக்கே, (கண்ணீர்கள்கலுழ்வன்) கண்ணீர்கள் வெள்ளமிடவிருப்பன். (நவையிறிருநாரணன்) துர்லபத்வாதி தோஷமின்றிக்கே யிருக்கிற ஸ்ரீமானுன நாராயணன். சௌலப்யத்துக்கூற்றான பிராட்டியோடேகூடத் திருநாவாயிலே வந்து சுலபனுனவன். திருநாவாயிலே பேரோலக்கமாக விருக்க, "அடியார்கள்குழாங்களை — உடன்கூடுவதென்றுகொலோ" என்றுசைப்பட்ட நான் அத்திரளிலேசென்று கூடப் பெறும்நா ளென்றென்றறிகிறிலேன். அவை - சபை. நவை - குற்றம்.... ...........................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்ரும்பாட்டு. (யவைகொலித்யாதி.) "திருநாவாயவையுட்புகலாவதோர்நாளறியேன்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (திருநாவாயித்யாதி.)

இப்பதப்ரயோகத்துக்குபாவம் (அதுதன்னிலு மித்யாதி.) இதுக்கர்த்தம் (இருதலைத்தநெஞ்சின்றிக்கேயென்று.) இருதலைத்தநெஞ்சு - இருதலையான நெஞ்சென்றபடி. முகாந்தரமுமாய் - விஷயாந்தரமுமாயென்றபடி. கவையில் மனமின்றி-கவையிலேயான மனமின்றிக்கே-வேறென்றிற்பெருகின நெஞ்சின்றிக்கே; ஏகாக்ரசித்தனுய்க்கொண்டென்றபடி. கவை - கார்யம்; விஷயாந்தரமென்றபடி. கண்ணீர்களாலே கலங்குவனென்று சப்தார்த்தம். அதாவது-கண்ணீர் வெள்ளமிடாநிற்பனென்றபடி. "கலுழ்வன்" என்கிறதுக்கு நிகண்டு- "கலுழி - கலங்குதல், அழுதல்." "கலுழுவன்" என்றிவ்வர்த்தங்களையெல்லாஞ் சொல்லும்.

" திருநாரணன் " என்று தொடங்கி மேலுக்கு சப்தார்த்தம் (சௌலப்யத் துக்கித்யாதி.)..........*

## நான்காம்பாட்டு.

நாளேலறியேனெனக்குள்ளனநானு
மீளாவடிமைப்பணிசெய்யப்புகுந்தே
னீளார்மலர்ச்சோலைகள்சூழ்திருநாவாய்
வாளேய்தடங்கண்மடப்பின்னைமணாளா.

### ஆறுயிரப்படி.

(நாளேலறியேன்) நிரவதிக சௌந்தர்யகுண விசிஷ்டையான நப்பின்னைப்பிராட்டிக்கு போக்யனான வுனக்கு மீளாவடிமைப்பணிசெய்யப்புகுந்தேன், அடிமைசெய்யும்நா ளென்றென்றறிகிறிலேனென்கிறார்.*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், நித்யகைங்கர்யத்திலே அந்விதனாய்ப்புகுந்தான், அந்தக்கைங்கர்யோபயுக்தமான நாள்க ளுளவானபடி யறிகிறிலேனென்கிறார்.

நீள் - ஓங்கி. ஆர் - நிறைந்த. மலர் - பூவையுடைத்தான. சோலைகள்-சோலைகள். சூழ் - சூழ்ந்த. திருநாவாய் - திருநாவாயிலே. வாளேய் - வாள்போலே (நீண்ட) ஒளியையுடைத்தான. தடங்கண் - பெரியகண்ணை யுடையளாய். மடப்பின்னை-ஆத்மகுணபூர்ணையான நப்பின்னைப்பிராட்டிக்கு. மணாளா - நிரதிசயபோக்தாவானவனே. சூரிகளைப்போலே, நானும் - நானும். மீளாவடிமைப் பணிசெய்ய - விச்சேதரஹித நிரந்தரகைங்கர்யம் பண்ணுகைக்கு. புகுந்தேன்-அந்வயித்தேன். அதுக்கு, எனக்கு - எனக்கு. உள்ளன - உளவாகக் கற்பித்துவைத்த. நாளேல் - நாளாகில். அறியேன் - அவைகானறிகிறிலேன். ..........*

### ஈடு - நான்காம்பாட்டு.

ஆத்மாந்ததாஸ்யம்பண்ணும்படி விஷயீக்ருதனான நான், நப்பின்னைப்பிராட்டியோடேகூட விருக்கிற விருப்பிலே யடிமைசெய்யப்பெறும் நா ளென்றென்றறிகிறிலே னென்கிறார்.

(நாளேலறியேனெனக்குள்ளன) பெறக்கடவநா ளென்றென்றறிகிறிலேனென்னுதல், நான் பிரிந்திருக்கக்கடவ நாளெத்தனையுண்டென்றறிகிறிலேனென்னுதல். பேறு சித்தமானபின்பு பதறுகிற தென்னென்னில் (நானும்மீளாவடிமைப் பணிசெய்யப்புகுந்தேன்) நித்யசூரிகள் பண்ணு மாத்மாந்ததாஸ்யத்திலேயன்றோ நானுமதிகரித்தது. ஒரு ப்ரயோஜநத்தைக்கொள்ளக் கிட்டினவனு யாறியிருக்கிறேனோ, தாஸ்யபரிமளத்திற் சுவடறியாதவனு யாறியிருக்கிறேனோ.

(நீளார்மலர்ச்சோலைகள்) ஓங்கிப் பரப்புமாறப்பூத்த சோலைகளை யுடைத்தானதேசம். அடிமைசெய்கைக்குப்புஷ்பாத்யுபகரணங்களால்குறைவற்றதேசமென்னுதல், நப்பின்னைப்பிராட்டியும் தானுமாகப்புஷ்பாபசயம்பண்ணலாம் தேசமென்னுதல். (வாளேய்தடங்கண்) ஒளியையுடைத்தான பரந்தகண்ணென்னுதல், வாள்போலே கண்டாரை யழிக்கவல்ல பரந்தகண்ணென்னுதல்; அவனை யகங்யார்ஹமாக்கவல்ல கண்ணழகையுடையவளென்கை. (மடப்பின்னைமணாளா) அழகே யன்றிக்கே ஆத்மகுணங்களாலும் துவக்கவல்லவளுக்கு வல்லபனானவனே. தேசாந்தரம் போனப்ரஜை ஊரணித்தானவாறே தாய்மாரைப் பலகால் நினைக்குமாபோலே, ப்ராப்யதேசமணித்தானவாறே திரளவும் தனித்தனியும் பிராட்டிமாரை அநுசந்திக்கிறார். ........................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு. (நாளேலித்யாதி.) "மீளாவடிமைப்பணிசெய்யப்புகுந்தேன் - மடப்பின்னைமணாளா - நாளேலறியேன்" இத்யாதிகளைக் கடாக்ஷித் தவதாரிகை (ஆத்மாந்ததாஸ்யமித்யாதி.)

"எனக்குள்ளன - நாளேலறியேன்" என்றந்வயிப்பது. எனக்குளவாகக்கற்பித்துவைத்த நாளானுலறியேனென்று சப்தார்த்தம். இன்னநாளென்று விசேஷியாமையாலே இத்தை த்வேதா காட்டுகிறார் (பெறக்கடவநா ளித்யாதி வாக்யத்வயத்தாலே.)

மீளா - அவிச்சின்னமான. அடிமைப்பணி - தாஸ்யக்ருத்யம். "அடிமைப்பணி" என்றதுக்கு பாவம் (ஒரு ப்ரயோஜநத்தையித்யாதி.) "மீளாவடிமைப்பணி" என்றதுக்கு பாவம் (தாஸ்யபரிமளத்திலித்யாதி.)

"அடிமைப்பணிசெய்ய" என்றத்தையும் "மடப்பின்னைமணாளா" என்றத்தையும் கூட்டி பாவத்வயம் (அடிமைசெய்கைக் கித்யாதிவாக்யத்வயம்.)

வாள், ஒளியும், வேலும். ஏய்கை - உடைத்தாகையும், ஒப்பும். கீழ்வாக்யவிவரணம் (அவனையித்யாதி) துவக்கவல்ல - வசீகரிக்கவல்ல. பாட்டுத்தோறும் பிராட்டிமாரை யருளிச்செய்ததுக்குபாவம் (தேசாந்தரமித்யாதி.)

நீளாமலரென்றுதொடங்கி, அடிமைப்பணிசெய்யப் புகுந்தேன் - எனக்குள்ளன - நாளேலறியேனித்யந்வயஃ. ........................................*



## ஐந்தாம்பாட்டு.

மணாளன்மலர்மங்கைக்குமண்மடந்தைக்குங்
கணாளனுலகத்துயிர்தேவர்கட்கெல்லாம்
விணாளன்விரும்பியுறையுந்திருநாவாய்
கணாரக்களிக்கின்றதிங்கென்றுகொல்கண்டே.

## ஆறாயிரப்படி.

(மணாளன்) லக்ஷ்மீபூமிநீளாநாயகனாய், தேவாதி ஸ்த்தாவராந்த நிகிலஜநநிர்வாஹகனாய், ஸ்ரீவைகுண்டநிலயனான வெம்பெருமான் விரும்பியுறையும் திருநாவாயை, இப்ப்ரக்ருதியோடே கண்ணாரக்கண்டு களிப்பதென்றோவென்கிறார் ........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பத்நீபரிஜநஸ்த்தாநாதி பரிபூர்ணனானவன் வர்த்திக்கிற திருநாவாயை, என்கண்ணானது நிறையும்படி கண்டநுபவிப்பதென்றோவென்கிறார்.

மலர்மங்கைக்கும்-பத்மவாஸிநியானலக்ஷ்மிக்கும். மண்மடந்தைக்கும்-ஸ்ரீபூமிப்பிராட்டிக்கும். மணாளன்-போக்தாவாய். உலகத்து-லோகத்தில். உயிர்தேவர்கட்கெல்லாம்-ப்ராணிகள் தேவதைகள் எல்லார்க்கும். கண்ணாளன் - நிர்வாஹகனாய். விண்ணாளன் - பரமவ்யோம சப்தவாச்யமான பரமபதத்திலுள்ளாரையும் அடிமை கொள்ளுமவன். விரும்பி-இந்தவிபூதித்வயத்திலும்விரும்பி. உறையும் - வர்த்திக்கிற. திருநாவாய்-திருநாவாயை. கண் - கண்கள். ஆர-பரிபூர்ணமாம்படி. கண்டு - கண்டு. இங்கு-இங்கே. களிக்கின்றது-நிரதிசயாநந்தியாவது. என்றுகொல் - என்றோ......*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

திருநாவாயைக் கண்ணின்விடாய்தீரக் கண்டநுபவிப்பதென்றென்கிறார்.

(மணாளனித்யாதி) பெரியபிராட்டியார்க்கும் ஸ்ரீபூமிப்பிராட்டியார்க்கும் வல்லபனானவன். புருஷகாரமாவாரும் பொறைக்கு உவாத்தாவாருமுண்டாயிருக்க விழக்கவேணுமோ. (கண்ணாளனித்யாதி) லோகத்தில் மநுஷ்யர்களென்ன, தேவர்களென்ன, எல்லார்க்கும் நிர்வாஹகனானவன். அவர்கள் படுக்கைப்பற்றுநோக்குகிறபடி. (விண்ணாளன்) படுக்கைதானிருக்கிறபடி; - பிராட்டிமாரும்தானும் தனக்குத்தகுதியான பரமபதத்தில் திவ்யபர்யங்கத்திலேயிருந்து நித்யசூரிகளை நிர்வஹிக்கிறவன். (விரும்பியுறையும்திருநாவாய்) உபயவிபூதிநாதன், பெறாப்பேறாக வாதரித்து வர்த்திக்கிறதேசம். அவன்விரும்புகிறதேசமல்லது ப்ராப்யமில்லையிறே. (கண்ணார) காண்கையிலே விடாய்ப்பட்டகண், ஆர-வயிறுநிறைய. (களிக்கின்றதிங்கென்றுகொல்) "ஹாவுஹாவுஹாவு" (அஹமந்நமஹமந்நம்) என்றொரு தேசவிசேஷத்தே களிக்கையொழிய, இங்கேகளிக்கப் பெறுவதென்றோ. (கண்டே) "காண்கைநிப்ரசிதம்" என்னும் விப்ரவாஸத்தால் களிக்கையன்றிக்கே, கண்டேகளிப்பதென்றோ....................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (மணாளனித்யாதி) "திருநாவாய் கண்ணாரக்களிக்கின்றதிங்கென்றுகொல்கண்டே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (திருநாவாயையித்யாதி.)

இத்தால்பாவம் (புருஷகாரமித்யாதி) உவாத்து - உபாத்யாயன்.

உயிர் - மநுஷ்யர். "பிராட்டிமார்க்கு - மணாளன்" என்றவநந்தரம் "தேவர்கட்கெல்லாம் - கண்ணாளன்" என்றதுக்குபாவம் (அவர்களித்யாதி) படுக்கைப்பற்று - ஸ்த்ரீகளுக்குவிட்டதேசம்.

"படுக்கைதானிருக்கிறபடி" என்றத்தைவிவரிக்கிறார் (பிராட்டிமாருமித்யாதி.) "கண்ணாளன் - விண்ணாளன் விரும்பியுறையும்" என்றுகூட்டிபாவம் (உபயவிபூதியித்யாதி) பரமபதத்தைவிட்டுத் திருநாவாயை "கண்ணா-கண்டு" என்கிறதென்னென்ன (அவன்விரும்புகிறவித்யாதி.)

"விடாய்ப்பட்ட" என்கையாலே (வயிறுநிறையவென்றது) "இங்கு" என்றதுக்குபாவம் (அஹமந்நமித்யாதி) "கண்டே!" என்கிற ஏவகாரார்த்தம் (காண்கையித்யாதி.)

மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்கும் - மணாளன் - உலகத்துயிர்தேவர்கட்கெல்லாம் - கண்ணாளன் - விண்ணாளன் விரும்பியுறையும் திருநாவாய் - இங்கு- கண்ணா - கண்டே - களிக்கின்றது - என்றுகொல் இத்யந்வயஃ ........................*



## ஆறாம்பாட்டு.

கண்டேகளிக்கின்றதிங்கென்றுகொல்கண்க
டொண்டேயுனக்காயொழிந்தேன்றுரிசின்றி
வண்டார்மலர்ச்சோலைகள்சூழ்திருநாவாய்
கொண்டேயுறைகின்றவெங்கோவலர்கோவே.

### ஆறாயிரப்படி.

(கண்டே.) எனக்காகத் திருநாவாயைக் கோயிலாகக்கொண்டுறைகிற கோவலர்கோவே, உன்பக்கலிலே அநந்யப்ரயோஜநமான ஸ்நேஹத்தையுடையேனான வென்னுடையகண்கள் திருநாவாயிலே உன்னைக்கண்டு களிப்பதென்றோவென்கிறார் ..................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், திருநாவாயிலேவர்த்திக்கிற வாஸ்ரிதசுலபனானவுன்னைக்கண்டு என்கண்கள் களிப்பதென்றென்கிறார்.

வண்டார்-வண்டுகள்நிறைந்த. மலர்ச்சோலைகள் - மலரையுடையசோலைகள். சூழ்-சூழ்ந்த. திருநாவாய்-திருநாவாயை. கொண்டு-வாஸஸ்த்தாநமாகத்திருவுள்ளத்திலேகொண்டு. உறைகின்ற - நித்யவாஸம்பண்ணுமவனாய். எங்கோவலர்கோவே-எனக்கும் கோபாலர்க்கும் சௌலப்யத்தைக்காட்டி ஸ்வாமியானக்ருஷ்ணனே. துரிசின்றி-க்ருத்ரிமமின்றியே. உனக்கே-உனக்கே. தொண்டாயொழிந்தேன்-சபலனாய்விட்டேன். கண்கள்-என்கண்கள். இங்கு-இங்கே. கண்டேகளிக்கின்றது-நிரந்தரமாகக் கண்டேகளியாநிற்பது, என்றுகொல் - என்றோயிருக்கிறது ........................*

## ஈடு - ஆறாம்பாட்டு.

ஊனாயன்றிக்கே ஊரில் நின்றருளின வுன்னைக்கண்டு களிப்பதெ ன்றோவென்கிறார்.

( கண்டேகளிக்கின்றதிங்கென்றுகொல்கண்கள் ) நான்செய்தபடி செய்ய; கண்களின் விடாய் கெடுவதென்றோ. ஒருநாளிலேகாண்கை நிப்ப சிதம், ஆனபின்பு, இந்நிர்ப்பந்தத்துக்குப் பலமென்னென்னில் (தொண் டேயுனக்காயொழிந்தேனித்யாதி) அந்யபரதையின்றிக்கே உன்றிருவடிக ளிலே அதிசபலனானேன். அரைக்ஷணமிழக்கமாட்டாதபடியன்றோ என் சாபலமிருப்பது. துரிசாகிறது - மநஸ்ஸுக்குஹேயவிஷயஸ்பர்ஸம். (வ ண்டித்யாதி) பரிமளத்தோபாதி வண்டுகளும் படிந்துகிடக்கும்படி புஷ் பிதமான சோலைகளையுடைத்தானதேசம். “ நசபுநராவர்த்ததே ” (நச புநராவர்த்ததே) என்கிறபடியே புக்காரை மீளவொட்டாதபடி நிரதிசய போக்யமான தேசம். (கொண்டேயுறைகின்ற) “ நமக்கும் நம்மையுகந் தார்க்கும் நினைத்தபடி பரிமாறியநுபவிக்கலாம் தேசம்” என்று திருவுள் ளத்தாலே யாதரித்துக்கொண்டு வர்த்திக்கிற தேசமாய்த்து. (எங்கோவ லர்கோவே) க்ருஷ்ணனாய்வந்தவதரித்து இடையர்க்கு சுலபனானாப்போ லே, திருநாவாயிலேவந்தெனக்கு சுலபனானவனே......................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறாம்பாட்டு (கண்டேயித்யாதி) “திருநாவாய்கொண்டே யுறைகின்றவெ ங்கோவலர்கோவே-இங்கு-கண்டே-கண்கள்-களிக்கின்றது-என்றுகொல்” என்றவ ற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (ஊனையன்றிக்கேயித்யாதி) “கோவலர்கோவே” என் று அவனை சம்போதிக்கையாலே (ஊரில்நின்றருளினவுன்னை) என்கிறது.

கீழ் தாமாநந்திப்பதென்றோவென்று ப்ரார்த்தித்தவர், இப்போது கண்களி னுடைய ஆநந்தத்தை ப்ரார்த்திப்பானென்னென்ன (நானித்யாதி) அதாவது-தனக் காநந்தமில்லாவிட்டாலும் தன்னுடையப்ரஜைக் காநந்தத்தை ப்ரார்த்திக்குமாபோ லே யென்றபடி.

இத்தால்பாவம் (அரைக்ஷணமித்யாதி) இது கீழிற்பண்ணின சங்கைக்குத்த ரமாயுமிருக்கிறது. “அந்யபரதையின்றிக்கே” என்றத்தால் பலிதம் (துரிசாகிறதித் யாதி) துரிசு-குற்றம்.

ஆர்தல் - பொருந்துதலாய், படிதலைச்சொல்லுகிறது. சோலைகளைவர்ணிக்கிற துக்குபாவம் (நசேத்யாதி) “கொண்டே” என்றதுக்குபாவம் (நமக்குமித்யாதி) “எ ங்கோவலர்கோவே” என்றதுக்குபாவம் (க்ருஷ்ணனாயித்யாதி.)

வண்டாரென்றுதொடங்கி, கோவே-துரிசின்றி-உனக்கு-தொண்டாயொழிந் தேன்; இங்கு-கண்டே-கண்கள்-களிக்கின்றது-என்றுகொல் இத்யந்வயः ... ... ...*

# ஏழாம்பாட்டு.

கோவாகியமாவலியைநிலங்கொண்டாய்
தேவாசுரஞ்செற்றவனேதிருமாலே
நாவாயுறைகின்றவென்னாரணநம்பீ
யாவாவடியானிவனென்றருளாயே.

## ஆறாயிரப்படி.

( கோவாகிய ) ஆஸ்ரிதஜந ஸமீஹிதப்ரதனும், ஆஸ்ரிதஜநாநிஷ்ட நிவாரணஸ்வபாவனுமாய், ஆஸ்ரிதவத்ஸலனுமாய், ஆஸ்ரிதசுலபத்வார்த்தமாகத் திருநாவாயிலே யவதீர்ணனுமாயிருந்த நாராயணநம்பீ, ஆவாவடியானிவனென்றருளாயென்கிறார்.... ....................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சேஷித்வ ரக்ஷகத்வ ப்ராப்யத்வ ரூபமான வாகாரபூர்த்தியையுடைய நீ, உறவைப்பார்த்து க்ருபைபண்ணவேணுமென்கிறார்.

கோவாகிய - த்ரைலோக்யத்துக்கும் சேஷியாகத் தன்னையபிமாநித்திருந்த, மாவலியை - மஹாபலியை. நிலங்கொண்டாய் - பூமியை அபேக்ஷித்துவாங்கி அதினுடைய வந்யசேஷத்வம்போய் அநந்யார்ஹமாம்படி. சேஷியானவனும். சேஷமானஜகத்துக்கு, தேவாசுரம் - தேவாசுரவிபாகத்தால் வருகிற விரோதத்தை. செற்றவனே - சமிப்பித்து த்வதேகசரணனுக்குமவனும். நாவாயுறைகின்ற - திருநாவாயிலே நிரந்தரவாசம்பண்ணுகிற. என், நாரணநம்பீ - சமஸ்தகுணவிபூதி விசிஷ்டத்வத்தால்வந்த நாராயணத்வ பூர்த்தியையுடையையாய். திருமாலே - இந்த சேஷித்வ ரக்ஷகத்வப்ராப்யத்வபூர்த்திக்கு அசாதாரணமான ஸ்ரியஃபதித்வத்தையுடையவனே. * காருண்யரூபையானவ ளோட்டைச்சேர்த்தியாலே, ஆ ஆ-ஐயோ. இவன்-இவன். அடியானென்று - நமக்கு சேஷபூதனென்று. அருளாயே - * ஆகாரத்ரயவிசிஷ்ட சம்பந்தத்தைப்பார்த்து இரங்கியருளவேணும்...........•......•....................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

ஆஸ்ரிதார்த்தமாகத் திருநாவாயிலே நித்யவாசம்பண்ணுகிற தேவர், அநந்யகதியென்று என்பக்கலிலே க்ருபைபண்ணி யருளவேணுமென்கிறார்.

(கோவாகியமாவலியைநிலங்கொண்டாய்) சர்வேஸ்வரன் இந்த்ரனை த்ரைலோக்யாதிபதியாக்கிவைத்தான், அவனைத்தள்ளிஅந்தப்பதத்தைத் தானெறட்டுக்கொண்டு "நானே அரசு" என்றிருந்தானாய்த்து. நீகொடுக்கக்கொள்கை யன்றிக்கே, அதுக்கெல்லாம்தானே நியாமகன் என்றபிமாநித்திருந்தானாய்த்து. "வெறும்புறத்திலே, தன்னதல்லாதத்தை 'தன்னது' என்றெறட்டுக்கொண்டிருக்கக்கடவ வவன்கையிலே யிவ்விஷயமுங்கிடக்குமாகில் நாடுகுடிக்கிடவாது" என்றுபார்த்தருளி, இந்த்ரனதான விபூதியை அவன்பக்கலில் நின்றும்வாங்கினான். ( தேவாசுரஞ்செற்றவ

னே ) தேவாசுரஸங்க்ராமத்திலே அவர்கள் படுவது இவர்கள் படுவதாய் இங்ஙனே யுருவச்செல்லப்புக்கவாறே, ஒருதலையையழித்து தேவஜாதிக்குக் குடியிருப்புப்பண்ணிக்கொடுத்தானுய்த்து.

(திருமாலே) ஆஶ்ரிதரக்ஷணத்துக்கும் தத்ப்ரதிகூல நிரஸநத்துக்குமடி ஶ்ரியঃபதியாகை. ( நாவாயுறைகின்ற ) இப்படி ரக்ஷிக்குமிடத்தில் அடுத்தணித்தாக முகந்தோற்றத் திருநாவாயிலே நித்யவாசம்பண்ணுகிற ( என்னாரணநம்பீ ) ஆஶ்ரிதவர்க்கத்தினுடைய ரக்ஷணத்திலே நோக்காக சர்வாந்தர்யாமியானவன். (நாரணநம்பீ) அதுக்குறுப்பாக ஆஶ்ரிதவத்ஸலனுய், அவர்களுக் குறுப்பாகப்பெற்றோமென்றத்தாலே பரிபூர்ணனானவனே. (ஆவாவித்யாதி) "க்ருபாமாத்ர மநோவ்ருத்தி:" ( க்ருபாமாத்ரமநோவருத்தி: ) என்கிறபடியே, ஐயோ, இவனநந்யகதி, இவனுக்கு வேறொருபுகலில்லை என்று, என்பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணும். (அடியான்) அவன் அருளுகைக்கும் இவன் அருள்கொள்ளுகைக்கும் சம்பந்தஞ் சொல்லுகிறது. ...........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (கோவாகியவித்யாதி) "நாவாயுறைகின்ற வென்னாரணநம்பீ ஆவாவடியானிவனென்றருளாயே" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (ஆஶ்ரிதார்த்தமாகவித்யாதி.)

"ஆகிய" என்றதுக்குபாவம் (சர்வேஶ்வரனித்யாதி) அதாவது-தனக்கில்லாதத்தை யெறட்டுக்கொண்டானென்கிறது ஆகியவென்கையாலே என்றபடி. விவரணம் ( நீகொடுக்கவித்யாதி ) "மாவலியைநிலங்கொண்டாய்" என்றதுக்குபாவம் (வெறும்புறத்திலேயித்யாதி) வெறும்புறத்திலே-நிர்நிபந்தநமாக. மாவலியை–மாவலிபக்கல்நின்றும்.

தேவாசுரயுத்தத்திலே அசுரரைச்செற்றவனே.

கீழிரண்டையும்பற்ற ( ஆஶ்ரிதேத்யாதி. )

அடுத்தணித்தாக - ப்ரத்யாசந்நமாக. "நம்பி" என்றதுக்குபாவம் ( அதுக்குறுப்பாகவித்யாதி. ) அதவா, கீழ்வாக்யத்திலே, அந்தர்யாமித்வபலித சௌலப்யத்தைச்சொல்லி, இவ்வாக்யத்தில் - வாத்ஸல்யஞ் சொல்லுகிறதாதல். அதுக்குறுப்பாக - ரக்ஷணத்துக்குறுப்பாக. அந்தர்யாமித்வமும் வாத்ஸல்யமும், பஹுவ்ரீஹியாலே.

(க்ருபாமாத்ரேத்யாதி ) "ஸோஹந்தே தேவதேவேஶ நார்ச்சநாதௌ ஸ்துதௌநச । ஸாமர்த்த்யவாந் க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: ப்ரஸீதமே " (ஸோஹந்தேதேவதேவேஶநார்ச்சநாதௌஸ்துதௌநச । ஸாமர்த்த்யவாந்க்ருபாமாத்ரமநோவ்ருத்தி:ப்ரஸீதமே) இதிபஞ்சமேம்ஶே. "அடியான்" என்றதுக்குசாப்தமானவர்த்தம் - அநந்யார்ஹ சேஷத்வம் ; ஆர்த்தமானவர்த்தம் - அநந்யகதித்வம். ஒருவர்க்காயிருப்பாரை வேறு சிலர் ரக்ஷிக்க ப்ராப்தியில்லையிறே என்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (இவனநந்யகதியித்யாதி.) "அடியான்" என்றதுக்கு பாவாந்தரம் (அவனருளுகைக்கித்யாதி.) முந்தினது அநந்யகதித்வம்...........................*

---

## எட்டாம்பாட்டு.

---

அருளாதொழிவாயருள்செய்தடியேனைப்
பொருளாக்கியுன்பொன்னடிக்கீழ்ப்புகவைப்பாய்
மருளேயின்றியுன்னையென்னெஞ்சத்திருத்துந்
தெருளேதருதென்றிருநாவாயென்றேவே.

### ஆறாயிரப்படி.

(அருளாதொழிவாய்) அஜ்ஞாநகந்த மில்லாத தொருபடி உன்னுடைய ஸ்வரூபரூப குணவிபூதிவிஷய திவ்ய ஜ்ஞாநத்தை யுன்க்ருபையாலே யெனக்குத் தந்தருளினநீ, இன்னமு முன்க்ருபையாலே "நம்மடியானிவன்" என்று விஷயீகரித்தருளி, அடியேனை யுன்பொன்னடிக்கீழ்ப் புகவைத்தருளுவாய், வைத்தருளாதொழிவாய், திருவுள்ளமானபடி செய்தருள் என்றுகொண்டு எம்பெருமானை யின்னாதாகிறார். ............*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், நீயருளாதிருக்கவுமாம், அருளவுமாம், ஒரு கலக்க மில்லாதபடி யுன்னை யென்னெஞ்சிலேவைத் தநுபவிக்கும்படியான ஜ்ஞாநத்தைத் தந்தருளவேணும் என்கிறார்.

அருளாதொழிவாய் - இவன் செய்தபடி செய்கிறான் என்று க்ருபைபண்ணாதிருக்கிலுமிருக்கிறாய். அடியேனை - அநந்யகதியாம்படி யுனக்கேயாயிருக்கிற வென்னை. அருள்செய்து - நிரவதிக க்ருபைபண்ணி. பொருளாக்கி - லப்த சத்தாகனாக்கி. உன் பொன்னடிக்கீழ் - உன்னுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளின்கீழே. புக- ப்ரவேசிக்கும்படி. வைப்பாய் - வைக்கிலும் வைக்கிறாய். தென் - கட்டளைப்பட்ட. திருநாவாய் - திருநாவாயிலே. என்தேவே-எனக்குப் பரமப்ராப்யபூதனா யிருக்கிறவனே. மருளேயின்றி - ஒருக்காலும் அஜ்ஞாநகந்தமில்லாதபடி. உன்னை - சர்வப்ரகாரபரிபூர்ணனாய் போக்யனான வுன்னை. என்னெஞ்சத்து - அத்யந்தாபி நிவிஷ்டனான வென்னெஞ்சிலே. இருத்தும் - இருத்தியநுபவிக்கும்படியான. தெருளே - தெளிந்த அறிவே. தரு - எனக்குத் தந்தருளவேணும்.

தருவென்று - தருதியாகவேணுமென்றபடி. ..................................*

### ஈடு - எட்டாம்பாட்டு.

அப்போதே யபேக்ஷிதம் பெறாமையாலே, "அருளவுமாம், தவிரவுமாம், அஜ்ஞாநகந்தமில்லாதபடி உன்னை யென்னெஞ்சிலே யிருத்தும்படி தெளிவைத்தரவேணும்" என்கிறார்.

(அருளாதொழிவாய்) என்பக்கல் க்ருபைபண்ணாதே இவன் பட்டது படுகிறானென்றிருக்கிலுமிரு. (அருள்செய்து) அன்றிக்கே, என் துர்க்கதியைக்கண்டு க்ருபைபண்ணி. (அடியேனையித்யாதி) அஸத்கல்பனாயிருக்கிற வென்னை, "ஸந்தமேநம்" என்கிறபடியே ஒருவஸ்துவாம்

படி பண்ணி, நிரதிசயபோக்யமான உன் திருவடிகளின்கீழே வைத்துக் கொள்ளினும் கொள். பொருளானை வைத்துக்கொள்ளும் ஸ்த்தாநம் பொன்னடிக்கிழ்போலேகாணும். (மருளேயின்றியித்யாதி) அடியில் *மயர்வறமதிநலமருளினபடியே, அஜ்ஞாநகந்தமில்லாதபடி உன்னை யென்மநஸ்ஸிலே யெப்போதும் வைத்துக்கொள்ளும்படி, "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்கிற தெளிவைத் தரவேணும். (தென்திருநாவாயென்தேவே-தெருளேதரு) என்று க்ரியை; அன்றிக்கே, "மருளேயின்றியுன்னையென்னெஞ்சத்திருத்தும் தெருளேதருதென்திருநாவாயென்தேவே - அருளாதொழிவாய், அருள்செய்தடியேனைப் பொருளாக்கியுன்பொன்னடிக்கிழ்ப்புகவைப்பாய், திருவுள்ளமானபடிசெய்" என்றும் பிள்ளான்பணிப்பது.........................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (அருளாதொழிவாயித்யாதி.) பாட்டையெல்லாம் சட்டாக்ஷித்தவதாரிகை (அப்போதேயித்யாதி.) அருளாயென்றார் (அப்போதே) என்று கூட்டுவது.

"ஆக்கி" என்றதுக்குபாவம் (அஸத்கல்பனையித்யாதி.) "பொன்" என்கையாலே - (நிரதிசயபோக்யம்) என்றபடி. இத்தால் ரஸோக்தியாகபாவம் (பொருளானையித்யாதி.) பொருள் - வஸ்துவும், தநமும்.

தரு - தரவேணும்.

தென் - அழகியதான. பிள்ளான் நிர்வாஹத்துக்கு, "தெருளேதரு" என்றது - *தேவுக்கு விசேஷணம்..........................................................*

---

## ஒன்பதாம்பாட்டு.

தேவர்முனிவர்க்கென்றுங்காண்டற்கரியன்
மூவர்முதல்வனொருமூவுலகாளி
தேவன்விரும்பியுறையுந்திருநாவாய்
யாவரணுகப்பெறுவாரினியந்தோ.

## ஆறாயிரப்படி.

(தேவர்) ப்ரஹ்மாதிகளுடைய சக்ஷுராதி சர்வகரணங்களுக்கு மகோசரனாய், ப்ரஹ்மாதி ஸ்த்தாவராந்த சமஸ்தஜந்து நிர்மாணத்ராண சம்ஹரணலீலனான வெம்பெருமான் விரும்பிக்கொண்டு சர்வசுலபனாயுறைகிற திருநாவாயை யணுகப்பெறுமவர்கள் என்னபாக்யம் பண்ணினார்களோ, நான் பாக்யஹீநனா யிழந்தேனென்று நோகிறார்......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அறிவுடையார்க்கும் அறியவரிய சர்வாதிகன் வர்த்திக்கிற திருநாவாயை, அத்யந்தாபிநிவிஷ்டனான நான் பெற்றிலேன், இனி யார்பெறப்புகுகிறார் என்கிறார்.

தேவர்முனிவர்க்கு - சமஸ்ததேவர்களுக்கும், சநகாதிமுனிவர்களுக்கும் ஸ்வயத்நத்தால். என்றும் - சர்வகாலமும். காண்டற்கு - காண. அரியன் - அரியனாய். மூவர் - ப்ரஹ்மருத்ராதிகளுக்கு. முதல்வன் - சத்தாதிஹேதுபூதனாய். ஒரு - அத்விதீயமான. மூவுலகு - ஜகத்த்ரயத்தையும். ஆளி - தன் சங்கல்பத்தாலே நிர்வஹிக்குமவனாய். தேவன் - சமஸ்தகல்யாணகுணாத்மகனான வீஸ்வரன். விரும்பி- அத்யாதரம்பண்ணி. உறையும் - வர்த்திக்கிற. திருநாவாய்-திருநாவாயை. அந்தோ-ஐயோ. இனி-இனி. அணுகப்பெறுவார்யாவர் - அணுகப்பெறுவாரார்.

இவ்வபிநிவேசாதிசயத்திலும் கிட்டாத தினிக் கிட்டுகிறதோ வென்று கருத்து.....................................................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

இப்படி சொன்னவிடத்திலு மொருவிசேஷகடாக்ஷம்பண்ணாமையாலே, “நானிவ்வாசையோடே முடியாநின்றேன், என்னபிமதம்பெறப்புகுகிற பாக்யாதிகராரோ” என்கிறார்.

( தேவர்முனிவர்க்கென்றும்காண்டற்கரியன் ) ப்ரஹ்மாதிகளுக்கும் சநகாதிகளுக்கும் ஸ்வயத்நத்தாலே யென்றுமொக்கக் காணவரியனாயுள்ளவன். ( மூவர்முதல்வன் ) ப்ரஹ்மருத்ரர்கள் நடுவேவவதரித்து அவர்களுக்கு நிர்வாஹகனென்னுதல் ; ப்ரஹ்ம ருத்ரேந்த்ரர்களுக்கு நிர்வாஹகனென்னுதல். (ஒருமூவுலகாளி) இந்த்ரமுகத்தாலேநின்று த்ரைலோக்யத்தையும் ரக்ஷிக்கும்படியைச் சொல்லுதல் ; அன்றிக்கே, கீழும் மேலும் நடுவுமான சர்வலோகத்துக்கும் அத்விதீயநாயக னென்னுதல். ( தேவன் ) சர்வவிஸஜாதீயன். ( விரும்பியுறையும்திருநாவாய் ) இப்படி சர்வநிர்வாஹகனானவன், தனக்கென்ன வொருகுடி யிருப்பில்லாதானொருவன் குடியிருப்புப் பெற்றாற்போலே, “ஆஸ்ரிதரக்ஷணத்துக்குப்பாங்கானதேசம்” என்று அத்யாதரம்பண்ணி வர்த்திக்கும்தேசத்தை. ( யாவரணுகப்பெறுவாரினி ) நான் முடியப்புகாநின்றேன், இனிப் பெறவிருக்கிறாரோ!. “ந தே ம நுஷ்யா:” (நதேமநுஷ்யா:) என்கிறபடியே, அவர்கள் மநுஷ்யர்களுக்குக் கூட்டல்லர். ( இனி ) என்கிறபதத்தாலே-நான்முடிந்தேன் என்கிறது சூசிக்கிறது. (அந்தோ) என்கிறபதத்தாலே-எனக்குள்ள தவனுக் குண்டாகப் பெறுதொழிவதே. [ ந தே ம நுஷ்யா:] [நதேமநுஷ்யா:] அவர்கள் செத்துப் பிறக்கிறவர்களுக்குக் கூட்டல்லர்கள். [தேவா:] [தேவா:] அவர்கள் நித்யாநுபவம்பண்ணுகிறவர்களுக்குக் கூட்டாமித்தனை. [ யஇத்யாதி ] [ யஇத்யாதி ] பதினாலாண்டு மொருபடி தப்பிக்கிடந்து அவர் மீண்டுவந்தால் அவ்வொப்பித்த முகத்தைக்காணப்

பெறும் பாக்யாதிகராரோ!. இங்கே, காதாசித்காநுபவம் பண்ணுமவர்கள், நித்யாநுபவம்பண்ணுமவர்களிலும் சீரியரோ; "விண்ணுளாரிலும்சீரியரே." [𑌵𑌰𑍍𑌷𑍇𑌪𑌞𑍍𑌚𑌦𑌶𑍇𑌪𑍁𑌨𑌃] [வர்ஷேபஞ்சதஶேபுந:] பதினாலாண்டும் கழித்துப் பதினைந்தாமாண்டைக் கிருப்பாரிறே காணப்பெறுவார். காலம் முடிந்ததென்றிருக்கிறானய்த்து சக்ரவர்த்தி. ... ... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (தேவரித்யாதி.) "யாவணுகப்பெறுவாரினியந்தோ" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (இப்படியித்யாதி.)

காண்டற்கரியன் - காண்கைக்கரியன். முந்தின வர்த்தத்துக்கு, மூவரிலும் வைத்துக்கொண்டு அவதீர்ணனான தான், ப்ரதாநனாயிருக்குமென்று சப்தார்த்தம். இரண்டாமர்த்தத்துக்கு, ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களுக்குக் காரணபூதனென்று சப்தார்த்தம். "மூவர்முதல்வன்" என்றதி னர்த்தத்வயாநுகுணமாக வர்த்தத்வயம் (இந்த்ரமுகத்தாலே யித்யாதிவாக்யத்வயத்தாலே.) "தேவன் - த்யோதமாநன்" என்றத்தை நினைத்து (சர்வவிஸஜாதீயனென்றது.) "விரும்பியுறையும்" என்றதுக்கர்த்தம் (இப்படியித்யாதி.)

"இனி" என்றதுக்கர்த்தம் (நான்முடியவித்யாதி.) ஆரோவென்கையாலே-அவர்கள் பாக்யாதிகரென்று விவக்ஷித்து, ப்ரமாணம் (நதேமநுஷ்யா இத்யாதி.) "முடியப்புகாநின்றேன்" என்றதுக்கு சப்தமேதென்ன (இனியென்கிறவித்யாதி.)

"𑌨𑌤𑍇𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌃" (நதேமநுஷ்யா:) என்கிற ஶ்லோகத்துக் கர்த்தம் (அவர்களித்யாதி.) "𑌨𑌤𑍇𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌦𑍇𑌵𑌾𑌸𑍍𑌤𑍇𑌯𑍇𑌚𑌾𑌰𑍁𑌶𑍁𑌭𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌮𑍍 । 𑌮𑍁𑌖𑌂𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿𑌰𑌾𑌮𑌸𑍍𑌯𑌵𑌰𑍍𑌷𑍇𑌪𑌞𑍍𑌚𑌦𑌶𑍇𑌪𑍁𑌨𑌃" (நதேமநுஷ்யாதேவாஸ்தே யேசாருஶுபகுண்டலம் । முகம்த்ரக்ஷ்யந்திராமஸ்ய வர்ஷேபஞ்சதஶேபுந:) இத்யயோத்யாகாண்டே தஶரத:. "𑌵𑌰𑍍𑌷𑍇𑌪𑌞𑍍𑌚𑌦𑌶𑍇" (வர்ஷேபஞ்சதஶே) என்றத்தைக் கடாக்ஷித்து (பதினாலாண்டுமொருபடியித்யாதி.) ஒருக்கால் பெருமாளைக்கண்டவர்கள் நித்யாநுபவம்பண்ணு மவர்களுக்குக் கூட்டாவர்களோவென்ன (காதாசித்கேத்யாதி.) "𑌦𑍍𑌰𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿" (த்ரக்ஷ்யந்தி) என்கையாலே (காதாசித்காநுபவமென்றது.) இதுக்கு சம்வாதம் (விண்ணுளாரிலுமித்யாதி) பகவதநுபவத்துக்கு மேட்டுமடையான விங்கேயிருந்து காதாசித்காநுபவம் பண்ணுமவர்கள், நித்யாநுபவம்பண்ணுகிறவர்களிலு மதிகரென்றபடி. "𑌪𑍁𑌨𑌃" (புந:) என்றதுக்கர்த்தம் (பதினாலாண்டும் கழித்தித்யாதி.) பதினாலாண்டும் கழிந்து பதினையாமாண்டு வாராதோவென்ன (காலமித்யாதி.)..................................*

---

## பத்தாம்பாட்டு.

---

அந்தோவணுகப்பெறுநாளென்றெப்போதுஞ்
சிந்தைகலங்கித்திருமாலென்றழைப்பன்
கொந்தார்மலர்ச்சோலைகள்சூழ்திருநாவாய்
வந்தேயுறைகின்றவெம்மாமணிவண்ணா.

## ஆறாயிரப்படி.

(அந்தோ!) இப்படி யுன்னை யாசைப்பட்டுப் பெறாதேயொழிந்தாலும் நிராசனாய்விடமாட்டாதே, பின்னையும், என்னோடு சம்ஶ்லேஷிக்கைக்காகத் திருநாவாயிலேவந்திருந்தருளின விக்குணத்தையநுசந்தித்து, என்றோ வுன்னை நானணுகப்பெறுவதென்றெப்போதும் சிந்தைகலங்கித் திருமாலென் றழையாநிற்பனென்கிறார். ................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், விடவொண்ணாத ரமணீயவிக்ரஹத்தையுடைய வுன்னைக்கிட்டப்பெறுநாளுண்டாவதுகாண் என்று நெஞ்சுகலங்கிக் கூப்பிடாநின்றேனென்கிறார்.

கொந்தார் - கொத்தாகநிறைந்த. மலர்ச்சோலைகள் - பூவையுடைத்தானசோலைகள். சூழ் - சூழ்ந்த. திருநாவாய் - திருநாவாயிலே. வந்தே - பரமபதாதிகளைவிட்டேவந்துநிற்குமவனாய். உறைகின்ற - நித்யவாசம்பண்ணுகிற. எம்மாமணிவண்ணா - நிரதிசயபோக்யமான நீலரத்நம்போலேயிருக்கிற வடிவையுடையவனே. அந்தோ - ஐயோ!. அணுகப்பெறுநாள் என்று - உன்னை யணுகப்பெறுநாளாவதுகாண் என்று. எப்போதும் - சர்வகாலமும். சிந்தைகலங்கி - நெஞ்சுகலங்கி. திருமாலென்று - ஸ்ரீமானேயென்று. அழைப்பன் - கூப்பிடாநின்றேன். .............................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

உன்னைக் காணப்பெறாமை நெஞ்சழிந்து கூப்பிடாநின்றேனென்கிறார்.

(அந்தோவணுகப்பெறுநாளென்றெப்போதும்) சொல்லத்தொடங்கினது தலைக்கட்டமாட்டாத பலஹாநியாலே, அந்தோ! என்கிறார். "அணுகப்பெறுநாள்யவைகொல்" என்னவிறே நினைப்பது. (எப்போதும்) ஒருக்கால் சொல்லப்புக்கு இளைத்தால் விடுகை யன்றிக்கே, சர்வகாலமும். (சிந்தைகலங்கி) ஹ்ருதயம்கலங்கி, மாதாபிதாக்கள் பேரைச்சொல்லி ஆர்த்தனான ப்ரஜை கூப்பிடுமாபோலே திருமாலென்றழைப்பன். (கொந்தாரித்யாதி) கொத்துமிக்க மலரை யுடைத்தான சோலையாலேசூழப்பட்ட திருநாவாயிலே. நித்யவசந்தமான சோலைகளை யுடைத்தாகையாலே நிரதிசயபோக்யமான தேசமென்கை. (வந்தேயுறைகின்ற) ஒரு தேசவிசேஷத்திலே சென்று காணக்கடவதான வடிவைக்கொண்டு ஆஶ்ரிதார்த்தமாகவந்து நித்யவாசம்பண்ணுகிறவனே. அவ்வடிவெனக்குக்காட்டாதவன்று உன்வரவு அஸத்ஸமமென்கை. ........................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (அந்தோவித்யாதி.) "சிந்தைகலங்கித் திருமாலென்றழைப்பன்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (உன்னையித்யாதி.)

சொல்லத்தொடங்கினதேதென்ன (அணுகவித்யாதி.) அதாவது - "அணுகப்பெறுநாள்யவைகொலோ அந்தோ!" என்னநினைத்து, பலஹாநியாலே "யவை

கொல்" என்று முடியச் சொல்லமாட்டாதே; முன்னே "அந்தோ" என்கிறனென்றபடி. யவைகொலென்று - அத்யாஹார்யம்.

சோலைகளைச் சொன்னதுக்குபாவம் (நித்யவசந்தமானவித்யாதி.) "மாமணிவண்ணு" என்றதுக்கர்த்தம் (ஒருதேசவிசேஷத்திலேயித்யாதி.) ஹார்த்தபாவம் (அவ்வடிவித்யாதி.)

உத்தரார்த்தத்தை யநுசந்தித்து பூர்வார்த்தத்தையநுசந்திப்பது - அந்வயம்.*

# பதினொன்றாம்பாட்டு.

வண்ணம்மணிமாடநன்னுவாயுள்ளானைத்
திண்ணம்மதிட்டென்குருகூர்ச்சடகோபன்
பண்ணார்தமிழாயிரத்திப்பத்தும்வல்லார்
மண்ணாண்டுமணங்கமழ்வர்மல்லிகையே.

## ஆறாயிரப்படி.

(வண்ணம்) இத்திருவாய்மொழிவல்லார், ஐஹிகாமுஷ்மிக சகலபோகங்களையும் புஜிக்கப்பெறுவரொன்கிறார் ........... ...........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக, உபயவிபூதியிலுண்டான வாதரணியத்தை யருளிச்செய்கிறார்.

வண்ணம்-நாநாவர்ணங்களையுடைத்தான. மணி - மாணிக்கங்களாலேசமைந்த. மாடம்-மாடங்களையுடைத்தாய். நல் - நிரதிசயபோக்யமான. நாவாயுள்ளானை-திருநாவாயிலேவர்த்திக்கிறவனைப் பற்றவுண்டாய். திண்-திண்ணியதாய். அம் - அழகிய. மதிள்-மதிளையுடைய. தென்குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வாருடையதாய். பண்ஆர்-பண்நிறைந்த. தமிழாயிரத்து-தமிழானவாயிரத்து. இப்பத்தும்-இப்பத்தையும். வல்லார்-அப்யஸிக்கவல்லவர்கள். மண் - பூம்யுபலக்ஷிதமான லீலாவிபூதியை. ஆண்டு-தங்கள்நினைவின்படியே பகவத்பரமாக நிர்வஹித்து. நித்யவிபூதியிலும் பகவதநுபவஜ்ஞாநத்தாலே, மல்லிகை-மல்லிகைபோலேபரிசுத்தமான. மணம்கமழ்வர்-யஶஸ்ஸௌரப்யவிகாசத்தையுடையராவர்.

இது-கலிவிருத்தம் ........ ............................................................ ...*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார், ஐஹிகாமுஷ்மிகசகலபோகங்களையும் புஜிக்கப்பெறுவரொன்கிறார்.

(வண்ணம்மணிமாடநன்னுவாயுள்ளானை) நாநாவர்ணங்களான ரத்நங்களாலே செய்யப்பட்ட மாடங்களையுடைத்தாய், நிரதிசயபோக்ய

மான திருநாவாயிலே நின்றருளினவனை. (திண்ணமித்யாதி) திண்ணிதானமதிளையுடைத்தான திருநகரியையுடைய வாழ்வாரருளிச்செய்த. திருநாவாய்க்குரக்ஷை திருநகரியில் மதிள்போலேகாணும். ஆழ்வார்பரியவே அப்பரிவுதானே அவ்வூருக்கு ரக்ஷையென்னுதல்; ஈப்ஸவரனுக்குதம் ஆழ்வாராகையாலே தம்கிடந்தவிடத்தேயிறே மதிளிடுவதென்னுதல். (பண்ணார்தமிழ்) பண்மிகுந்ததமிழ். (மண்ணாண்டு) இஹலோகத்திலே வைஷ்ணவஸ்ரீயால் சம்பந்நராய். (மணங்கமழ்வர்மல்லிகையே) மல்லிகை மணங்கமழ்வர். இது உபலக்ஷணமாய், "ஸர்வகந்த:" (ஸர்வகந்த:) என்கிறவிஷயத்தோடு சாம்யாபத்தியைப்பெறுவர். இவருடையமநோரதம் அவர்கள்பெற்றுக்குடலாம்.................................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (வண்ணமித்யாதி) "இப்பத்தும்வல்லார் மண்ணாண்டுமணங்கமழ்வர் மல்லிகையே" என்றத்தைக்கடாக்ஷித் தவதாரிகை ( இத்திருவாய்மொழிகற்றுரித்யாதி. )

"நன்னுவாயுள்ளானைத்திண்ணம் மதிட்டென்குருகூர்ச்சடகோபன்" என்ற பதச்சேர்த்திக்குபாவம் (திருநாவாய்க்கித்யாதி) திருநகரியில்மதிள், திருநாவாய்க்கு ரக்ஷையாமோவென்ன; இரண்டுவகையாகபரிஹாரம் (ஆழ்வாரித்யாதிவாக்யத்வயம்) அதாவது - திருநகரியில் மதிள் ஆழ்வார்க்குரக்ஷையாய், ஆழ்வார் சுரக்ஷிதமாயிருக்கையாலே, ஆழ்வார்பரிவு திருநாவாய்க்கு ரக்ஷகமாகையாலே, திருநகரியில் மதிள் பரம்பரயாரக்ஷையென்றபடி. த்விதியபரிஹாரத்துக்கு, "திண்ணம் மதிள்" என்றது - ஆழ்வார்க்கு விசேஷணம். ஆர்தல்-மிகுதி.

இவர் மநோரதிக்க அவர்கள் பெறும்படியென்னென்ன (இவருடையவித்யாதி) "மல்லிகை - மணங்கமழ்வர்" என்றந்வயிப்பது. மல்லிகைபோன்ற சௌரப்யவிகாசத்தை யுடையவராவரென்று சப்தார்த்தம்...................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(அறுக்கும்வினையாயின.)

வல்லீமத்யத்வயோகாத், தவளவிஹித ஸ்ரீவஸோபாவாப்ரஹ்வாத்,
ஸ்ரூக்ஷ்ணத்வாத்ஸ்வாதுபாவாத், தவதாமஸாஹஸ்ராத், ஸ்வாஹாத்ம்ய
ஸம்பாதநாத், ஸ்வஸ்வோஷ்ண்யாத், கமிதஹரத்வாத், ஸ்வைவஸம்பாவாத்,
ஸூக்ஷ்மத்வாத், ஸ்ரீஸம்ஸாரிபிர்ப்ரயதிவஸஜாநிஹாவேநாயத்॥ (௧௦௦)

(வல்லீமத்யத்வயோகாதித்யாதி) வெறித்தண்மலரித்யாதி, கொடியேரிடைக்கோகனகத்தவள்கேள்வன், நவையில் திருநாரணன்சேர், வாளேய்தடங்கண்மடப்பின்னைமணாளா, மணாளன்மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்கும், தேவாசுரம்செற்ற

வனே திருமாலே, சிந்தைகலங்கித் திருமாலென்றழைப்பன் - இத்திருவாய்மொழியிலே ஆறுபாட்டுக்களிலே பிராட்டிசம்பந்தம்சொல்லுகையாலே, குறைநாலுபாட்டிலும் இதுவே விவக்ஷிதமென்று திருவுள்ளம். கொடிபோலே நுண்ணிதானவிடையையுடையளாகையாலும்; இத்தால் - அவயவசோபாதிசயம் சொல்லப்பட்டது; மேல் குணவிபவ பௌஷ்கல்யம்சொல்லுகிறது - “ ஸ்ரீயதே, ஶ்ரயதே, ஶ்ருணோதி, ஶ்ராவயதி, ஶ்ருணாதி, ஶ்ரீணாதி” என்கிறநிருக்திகளையுடைத்தாய், ஶ்ருதி ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களிலே ப்ரஸித்தமான ஸ்ரீசப்தத்தாலே வாச்யையாகையாலும்; பூமீநீளைமுதலானாரை விபூதியாகவுடையளாகையாலும்; அவதாரதசையிலே “𑌦𑍇𑌵𑌤𑍍𑌵𑍇 𑌦𑍇𑌵𑌦𑍇𑌹𑍇𑌯𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌤𑍍𑌵𑍇 𑌚 𑌮𑌾𑌨𑍁𑌷𑍀 । 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌦𑍇𑌹𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑌾𑌂 𑌵𑍈 𑌕𑌰𑍋𑌤𑍍𑌯𑍇𑌷𑌾𑌤𑍍𑌮𑌨𑌸𑍍𑌤𑌨𑍂𑌮𑍍” ( தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ । விஷ்ணோர்தேஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ்தநும் ) என்கிறபடியே அந்தந்ததசைக்கநுகுணமாக வெம்பெருமானோடே யவதரிக்குமவளாகையாலும்; எம்பெருமான் ஆஶ்ரிதருடைய தோஷங்களைப்பாராதே யங்கீகரிக்கைக்குப் புருஷகாரபூதையாயிருந்து கடிப்பிக்குமவளாகையாலும்; சேதநருக்கு ஜ்ஞாநாதிகுண பரிபாகத்தை யுண்டாக்குமவளாகையாலும்; அவர்களுக்கு விரோதிகளைப்போக்குமவளாகையாலும்; எப்போதும் சந்நிஹிதையா யிருக்கையாலும்; “𑌮𑌾𑌤𑌰𑍍𑌮𑍈𑌥𑌿𑌲𑌿,” (மாதர்மைதிலி) “𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌮𑌕𑍍𑌷𑌰𑌗𑌤𑌿𑌂” (ஐஶ்வர்யமக்ஷரகதிம்) இத்யாதிகளிற்படியே நிரவதிகதயாக்ஷமௌதார்யாதிகளையுடையளாகையாலும்; ஏவம்ரூபையானபிராட்டிக்கு வல்லபனானவெம்பெருமானை சோபநையான ஜாயையை யுடையவனாக “அறுக்கும் வினையாயின” என்கிறதசகத்திலே ஆழ்வாரருளிச்செய்தாரென்கிறார்............................................(௪00)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

அறுக்குமிடரென்றவன்பாலாங்குவிட்டதூதர்
மறித்துவரப்பற்றாமனத்தா - லறப்பதறி
செய்யதிருநாவாயிற்செல்லநினைந்தான்மாறன்
மையலினாற்செய்வறியாமல். (அஅ)

( அறுக்குமிடர் ) தூதர்வருமளவும் பற்றாமல் “ திருநாவாயிலேபோய்ப்புகவேணும் ” என்று மநோரதிக்கிறவாழ்வார்பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; இப்படிவிட்டதூதர் அத்தலைப்பட்டு அவனுக்கு ஸ்வதசையை யறிவித்து மீண்டுவருவதற்குமுன்னே, ப்ராப்யத்வாதிசயத்தாலே, “அவனெழுந்தருளியிருக்கிற திருநாவாயிலேபோய்ப்புக்கு; அவ்வோலக்கத்திலே அங்குள்ளவர்களோடேகூட ஸபத்நீகனானவனைக்கண்டநுபவித்து அடிமைசெய்யப்பெறுவதெப்போதோ” என்று மநோரதிக்கிற * அறுக்கும்வினையிலர்த்தத்தை “அறுக்குமிடர்” என்றுதொடங்கி யருளிச்செய்கிறாரென்கை.

(அறுக்குமிடரென்றவன்பாலாங்குவிட்டதூதர்மறித்து வரப்பற்றுமனத்தாலறப்பதறி) (அறுக்குமிடரொன்று) நம்முடையதுக்கத்தைப்போக்கி யருளுமென்று. (அவன்பாலாங்குவிட்டதூதர்) திருமூழிக்களத்துறைவார் விஷயமாக அவ்விடத்திலேவிட்டதூதர். (மறித்து வரப்பற்றுமனத்தால்) மீண்டுவந்து மறுமாற்றம்சொல்லப்பற்றாத திருவுள்ளத்தாலே. (அறப்பதறி) மிகவும் த்வரித்து. “𑌇𑌦𑌂 𑌬𑍍𑌰𑍂𑌯𑌾𑌶𑍍𑌚 𑌮𑍇 𑌨𑌾𑌥𑌂 𑌶𑍂𑌰𑌂 𑌰𑌾𑌮𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍁𑌨𑌃” (இதம்ப்ருயாச்சமேநாதம் ஸூரம்ராமம்புந:புந:) என்று திருவடியைத்தூதுபோகவிட்டவநந்தரம் பிராட்டி பதறினாப்போலே. (செய்யதிருநாவாயிற்செல்லநினைந்தான்மாறன்) அழகிய திருநாவாயிலே யெழுந்தருளும்படி யெண்ணினாராழ்வார். அதாவது - “வெறித்தண்மலர்ச்சோலைகள் சூழ்திருநாவாய் குறுக்கும்வகையுண்டுகொலோகொடியேற்கே” என்றும், “திருநாவாயடியேனணுகப்பெறுநாள்யவைகொலோ” என்றும், “திருநாரணன்சேர் திருநாவாயவையுட்புகலாவதோர்நாளறியேனே” என்றும், “திருநாவாய்வாளேய் தடங்கண் மடப்பின்னைமணாளா-நாளேலறியேன்” என்றும், “விண்ணுவன்விரும்பியுறையும் திருநாவாய் கண்ணாரக்களிக்கின்றதிங்கென்றுகொல்கண்டே” என்றும், “திருநாவாய்கொண்டே யுறைகின்ற வெங்கோவலர்கோவே - கண்டேகளிக்கின்றதிங்கென்றுகொல்கண்கள்” என்றும், “நாவாயுறைகின்றவென் நாரணநம்பீ ஆவாவடியானிவனென்றருளாயே” என்றும், “தென்றிருநாவாயென்தேவே-அருளாதொழிவாய்” என்றும், “திருநாவாய்யாவரணுகப்பெறுவாரினியந்தோ” என்றும், “திருநாவாய்வந்தேயுறைகின்ற வெம்மாமணிவண்ணா - அந்தோவணுகப்பெறுநாள்” என்றும், இப்படி த்வராதிசயத்தை ப்ரகாசிப்பித்தாரென்கை. அதெத்தாலேயென்னில் (மையலினால்செய்வறியாமல்) சௌந்தர்யத்தாலே அறிவுகலங்கி, அத்தாலே ப்ராப்தாப்ராப்த விவேகமின்றிக்கே, விட்டதூதர்வருவதற்குமுன்னே த்வரித்தார். இவர் ப்ரேம ஸ்வபாவமிருந்தபடியே! என்று வித்தராயருளிச்செய்கிறார்...........(அஅ)

ஒன்பதாம்பத்தில் - எட்டாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக, திருவாய்மொழி-அஅ.—பாட்டு - கூளo.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஒன்பதாம்பத்து.

## ஒன்பதாந்திருவாய்மொழி.

### மல்லிகை - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(மல்லிகை) இப்படி வ்யஸநமதிமாத்ரமானவாறே, அந்யாபதேச த்தாலே தம்முடைய வ்யஸநத்தைப் பேசுகிறார். வண்டுவரைப்பெருமாளோடே கலந்தாளொருபிராட்டி, அவன்பசுமேய்க்கப்போய் மீண்டுவரக்கடவிய * அந்தியம்போதானதுவந்து, அவன்றான் வாராமையா லத்யந்தமவஸந்நையாய்... ... ... ... ... ... ... ... ... ... *

### பன்னீராயிரப்படி.

ஒன்பதாந்திருவாய்மொழியில், கீழ் ப்ராப்யவிஷயமான வபிநிவேசத்தாலே யீடுபட்டவர், அநுபவயோக்யாவஸ்த்தை ஸந்நிஹிதையாயிருக்கச்செய்தேயும் அநுபாவ்யனான வீஶ்வரனஸந்நிஹிதனாகையாலே, விளம்பாக்ஷமதையடியாக; போக்யபூதனானவனுடைய ரஞ்சநீய ஸ்வபாவதையையும், ரக்ஷணப்ரகாரத்தையும், ரமணீயாவயவத்வத்தையும், அபிரூபவாஹநவத்தையையும்,ஆஶ்ரிதஸௌலப்யத்தையும், அநவதிகஸௌசீல்யத்தையும், அத்யுதாரரூபதையையும், அதிசயித சம்ஶ்லேஷத்தையும், சாபிப்ராய நிரீக்ஷணாதிகளையும், விஶ்லேஷாசக்யமான வாஶ்சர்யரூபதையையுமநுசந்தித்து, ஏவம்ப்ரகாரவிசிஷ்டனான போக்யபூதனை யதாமநோரதமநுபவிக்கப்பெறாத வார்த்தியாலும், ஸ்மாரகமாயும் ஆசக்திஸூசகமாயுமிருக்கிற பதார்த்ததர்ஶநத்தால்வந்த சைதில்யத்தாலும், அல்பகாலவிளம்பமும் பொறுக்கமாட்டாமல் கூப்பிட்ட ப்ரகாரத்தை; பசுமேய்க்கப்போந்தக்ருஷ்ணன், சந்த்யைவந்திருக்கச்செய்தேயும் வாராதவிளம்பம் பொறுக்கமாட்டாமல், கோபீஜநங்கள் தத்காலசித்த போதங்களாலே யீடுபட்டு, பொழுதுகண்டிரங்கிக்கூப்பிட்ட பாசுரத்தாலே யருளிச்செய்கிறார். ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

### ஈடு.

“படைவீட்டிலிருந்தால் மாமனார் மாமியாருக்குக்கூசிப் பெருமாளுடன் நினைத்தபடி பரிமாறப்போகாது” என்று காட்டிலே யேகாந்தமாக

வநுபவிப்பதாக மநோரதித்துப்போந்த பிராட்டியை, "காந்தாரமத்யே விஜநேவிஸ்ருஷ்டா பாலேவகந்யாவிலலாபஸீதா" (காந்தாரமத்யேவி ஜநேவிஸ்ருஷ்டா பாலேவகந்யாவிலலாபஸீதா) என்கிறபடியே கூப்பிட ப்பண்ணினாப்போலே; அத்திருநாவாயிலேபுக் கநுபவிப்பதாக மநோரதி த்தவிவர்க்கு, பாதகவர்க்கத்துக்கஞ்சிக் கூப்பிடும்படியாய் விளைந்தது.

பெற்றி, ஒருநாள் நம்பிதிருவரங்கநாராயணதாசர் என்பாரொரு வர் என்பக்கலிலே திருவாய்மொழிகேட்டு அங்கேசென்றாராய், "இன்று பிள்ளை பாடுவிநோதமென்" என்று கேட்டவாறே, " * அறுக்கும்வினை சாற்றினேம்" என்றாராய், "நாளைமல்லிகைகமழ்தென்றலும் மாலைப்பூச லும் என்னாய்" என்றுபணித்தாராம். "ப்ராப்யவஸ்துவைப் பெறும்படி யை மநோரதித்தார் கீழ்த்திருவாய்மொழியிலே; மநோரதஸமநந்தரம் பெறக்காணாமையாலே, திருவாய்ப்பாடியிலுள்ளார் க்ருஷ்ணனைப்பிரிந்து ஒருராத்ரிபட்ட வ்யஸநத்தை இவரொருத்தரும்படுகிறார்" என்றுளவந் தாரருளிச்செய்யும்படி. (என்று திருமாலையாண்டான்பணிக்க) அத்தை யெம்பெருமானார்கேட்டருளி, "முன்பே ஆற்றாமையாலே தறப்பற்றிருக் கிறவராகையாலே அத்தனையாடல்கொடுக்கைக்குவேண்டுமாஶ்ரயம்போ ராது, ஆனபின்பு அவனைப்பிரிந்தொரு சந்த்யையிற்பட்டநோவைப்படு கிறார்" என்றருளிச்செய்வர். இது தன்னிற்செய்ததாகிறதென்னென்னி ல்; ஜ்ஞாநம்பிறந்தபின்பு விரோதியான சம்சாரத்தினின்றும் கால்வாங் கவும்மாட்டாதே, ப்ராப்யபூமியில் மநோரதத்தாலும், பாதகவர்க்கத்துக் கிரலாம்படி பதஞ்செய்ததாய்த்து. * பொய்கின்றஞானத்தில், "பகவத் விஷயத்தில் ஜ்ஞாநம்பிறந்தபோதே, விரோதியான சம்சாரத்தில் சம்பந் தத்தை யறுத்துத்தந்தருளவேணும்" என்றபேக்ஷிக்கச்செய்தேயும், "இ வனைக்கொண்டு சிலப்ரபந்தங்கள் தலைக்கட்டவேணும்" என்றிருக்கையா லே, அப்போதே யப்படிசெய்திலன்; அந்தவிரோதியிலருசி இவ்வளவு ம்வர நிலைநின்றபடி சொல்லுகிறதிறே. இங்குத்தான்செய்கிறவிது வே தாந்தங்களிற்போகிற கட்டளையி லென்னவென்னில்; "தஸ்யதாவதேவ சிரம்" (தஸ்யதாவதேவசிரம்) என்கிறவர்த்தத்தைச் சொல்லுகிறதி றே - தஸ்யமேதாவதேவசிரம்; * யாவந்நவிமோக்ஷ்யே அதஸம்பத்ஸ்யே யிறே அநந்தரம். * முடியானேயில் - தம்முடைய கரணங்களுக்குண்டான சைதில்யத்தைச்சொன்னார்; இதில்-அந்தக்கரணங்களோடேகூட அவற் றுக்கு மாஶ்ரயமான அவயவிதானென்றாக வழிகிறபடியைச்சொல்லுகி றது. ஜ்ஞாநேந்த்ரியங்களோடு கர்மேந்த்ரியங்களோடு வாசியற ஒன்றாக வழிகிறபடியைச் சொல்லுகிறது. ராமாவதாரத்தில் பதினாலாண்டுபோ லேயாய்த்து, திருவாய்ப்பாடியிற் பெண்களுக்கு க்ருஷ்ணவிரஹத்தா லொருஸந்த்யை. குணாதிகவிஷயத்தைப்பிரிகையாலே அங்குப் பதினாலா ண்டாய்க்கழியவுங்கூடுமிறே; இங்கு இவன்நீர்மையிலே கையடியுண்டி

ருக்கையாலே, * ஒருபக லநேககல்பமாய்த்தோற்றுமிறே. குணங்கள்தாம் காற்கட்டுகிறது குணமாயல்லவிறே; அவ்வாஸ்ரயத்திலே கிடந்தவையாயிறே. இங்குதர்மி யதுவேயாய் அதுக்குமேலே தீம்புமானல் பாடாற்றப்போகாதிறே. நாட்டார் போக்யதாபுத்திபண்ணியிருக்கிற சப்தாதிவிஷயங்களடையத் தமக்குபாதகமாக, ப்ராப்யவஸ்துவைப்பெறுதே, நடுவே, ஆண்புலியான ஸ்ரீபீஷ்மர் அர்ஜுநன்கையி லம்புகளாலே உளையஏவுண்டுகிடந்து துடித்தாப்போலே, கிடந்துதுடிக்கிருர். திருவாய்ப்பாடியிலுள்ளார், க்ருஷ்ணன் “பசுமேய்க்க” என்று புறப்பட்டால், அவன்வருமளவு மவர்கள்படும்பாடுசொல்லுகிறது. அதாவது - ப்ராஹ்மணர்க்கு சந்த்யாவந்தநம்போலேயிறே இடையர்க்குப்பசுமேய்க்கை; - ஜாத்யுசிததர்மமாகையாலே தவிரவொண்ணுதிருக்குமிறே. இப்படியாலே அவனைப்பசுக்களின்பின்னேபுறப்படவிட்டு, அவன்வரும் சந்த்யையைப்பார்த்திருக்குமத்தனையாய்த்து. ஆக அவன் பசுமேய்க்கப்போனல் பகல்பொழுதைவருந்தி யொருபடியாற்றினல், அவன்வருங்காலமான சந்த்யையும்வந்துமுகங்காட்டி பசுக்களின் மூற்கொழுந்துவந்து தலைவைக்கச்செய்தே யவன்றன்னை வரக்காணுவிட்டா லாற்றப்போகாதிறே. அதாவது-அவன்முன் மூற்கொழுந்திலேவாராதே பிற்குழையிலேநிற்குமாய்த்து, நடுவுபடுமலமாப்புக்காண்கைக்காக. அவன்வரக்கடவகாலமான சந்த்யையும்வந்தது, கூடவரும்பசுக்களும்வந்தன, அவன்முன் வரக்காணுவிட்டவாறே, அக்காலத்தில், மல்லிகையின்பரிமளம், நல்லகுறிஞ்சியிசைதொடக்கமான அநுகூலபதார்த்தங்கள், தென்றல், நிலா, கடலோசை, அன்றில், குழலோசைமுதலானவை பாதகமாகத்தொடங்கிற்று. குழலோசையும், அவ்வழியே யவனுடையகுணங்களை ஸ்மரிப்பித்து நோவுபடுகைக்குட லாயிருக்குமிறே. அப்படியிருக்கிற பாதகபதார்த்தங்களெல்லாம், முன்பு தனித்தனியே பருஷபாஷணங்களைப்பண்ணி நலிந்த ஏகாக்ஷி ஏககர்ணியுள்ளிட்ட ராக்ஷஸிகள் பின்பு அவ்வளவில் நில்லாதே யெல்லாருமொக்க மேல்விழுந்து அதுக்குமேலே சிலநலிவுகளைப்பண்ண நினைத்தாப்போலே, பாதகவர்க்கமடைய, தனித்தனியும் திரளவும் மேல்விழுந்து நலிய, அவற்றாலே நலிவுபட்டவர்களெல்லாரும் கூப்பிட்டகூப்பீட்டை இவரொருத்தருமே கூப்பிடுகிருர் ... ... ... ... ... ... ... *

## ஜீயர் அரும்பதம்.

மல்லிகைப்ரவேஸே, சத்ருஷ்டார்ந்தமாக சங்க்ரஹசங்கதி (படைவீட்டிலித்யாதி) “ ஸாராக்ஷஸீமத்யகதாசபீருர்வாக்பிர்ப்ருஸம்ராவணதர்ஜிதாச ” ( ஸாராக்ஷஸீமத்யகதாசபீருர்வாக்பிர்ப்ருஸம்ராவணதர்ஜிதாச ) என்று பூர்வார்த்தம்; ஸுந்தரகாண்டே வேண்யுத்க்ரதநபூர்வதஸாயாம்.

“இத்திருவாய்மொழி மாலைப்பூசல்” என்கைக்கு சம்வாதம் (பெற்றியித்யாதி) அங்கே - பெற்றிபக்கலிலேயென்றபடி. (பெற்றி - சேட்டவாறே) என்றர்வயிப்

பது. எல்லாரும் ரஸிக்கும்படி ரஸோக்திகளையிட்டு வ்யாக்யாநம்பண்ணுகையாலே (விநோதம்) என்கிறார். ஆகையாலே, விநோதமென்றது - அருளிச்செய்த வ்யாக்யாநமென்றபடி. இங்கே, "வெடஶாஸ்த்ரவிநோதேநகாலோ மஹதாம்" (வேதஶாஸ்த்ரவிநோதேநகாலோகச்சதிதீமதாம்) இத்யாத்யநுசந்தேயம். நம்பி திருவரங்க நாராயணதாசர் * அறுக்கும்வினைசாற்றினை மென்றாராயென்றபடி. பெற்றிபணித்தாராமென்றபடி. பெற்றியென்கிறவர் - நஞ்சீயர் ஸ்ரீபாதத்திலவர். நம்பிதிருவரங்க நாராயணதாஸரென்கிறவர் - நம்பிள்ளை ஸ்ரீபாதத்திலவர்.

விஸ்தரசங்கதி (ப்ராப்யேத்யாதி) மாலையென்று - ராத்ரிக்கும் சந்த்யைக்கும்பேராகையாலே, எத்தைச்சொல்லுகிறதென்ன; நிர்வாஹத்வயம் (மநோரதேத்யாதி) ஆடல் கொடுக்கைக்கு-வ்யஸநத்தையநுபவிக்கைக்கு.

இத்திருவாய்மொழிக்கு ஸ்வாபதேசம் (இதுதன்னிலித்யாதி) அதாவது- "பகற்கண்டேன்" என்கிறவடிவுக்கும் * இருள்தருமாஞாலமான ராத்ரிக்கும் நடுவில் முமுக்ஷுத்வாவஸ்த்தையை மாலையென்கிறதென்றபடி. ஜ்ஞாநம்பிறந்தபின்பென்றது - "ஸம்ஸாரம்ஹேயம்" (ஸம்ஸாரம்ஹேயம்) என்கிறஜ்ஞாநம்பிறந்தபின் பென்றபடி.. ஈரலாம்படி - பாதிக்கலாம்படி. கால்வாங்கமாட்டாமற் படுகிறவருசியை * பொய்ந்நின்றஞானத்திலே ஈஶ்வரனுக்கறிவித்திருக்க, கார்யம்செய்யாதிருப்பானென்னென்ன (பொய்ந்நின்றவித்யாதி) ஆக, இத்தால்-சரீரத்தைக்கழித்துத்தரவேணுமென்றதாயிறே இத்திருவாய்மொழியிருக்கிறது; இது வேதாந்தத்திலெங்கேசொல்லிற்றென்கிற ஜிஜ்ஞாஸுப்ரஶ்நத்தை யநுவதிக்கிறார் (இங்குத்தானித்யாதி) இங்குத்தான்செய்கிறவிதென்றது - பகவத்விஷயஜ்ஞாநமும்பிறந்து இங்கேப்ரக்ருதியோடேயிருக்கிறவிருப்பு மதிதுஸ்ஸஹமாயிருக்கிற விவ்வர்த்தந்தானென்றபடி. சிரம்-க்ஷணகாலமாத்ரமும் துஸ்ஸஹமாயிருக்கையாலே, நெடுங்காலமென்றது. "மே" என்கிறசப்த மிந்தஶ்ருதியிலில்லையேயென்ன (யாவதித்யாதி) அதஸம்பத்ஸ்யேயிறே அநந்தரமென்றது - "தஸ்ய தாவதேவசிரம்" (தஸ்யதாவதேவசிரம்) என்றதுக்கநந்தரம், "விமோக்ஷ்யே, ஸம்பத்ஸ்யே" (விமோக்ஷ்யே, ஸம்பத்ஸ்யே) என்கிறக்ரியை உத்தமபுருஷனுயிறே யிருக்கிறதென்றபடி. இத்தால்-க்ரியை உத்தமபுருஷனுகையாலே, "மே" என்கிறவிது ஶ்ருதியிலில்லையேயாகிலும், "யுஷ்மத்யுபபதே ஸமாநாதிகரணே ஸ்தாநிந்யபி மத்யமஃ । அஸ்மத்யுத்தமஃ । ஶேஷே ப்ரதமஃ" (யுஷ்மத்யுபபதேஸமாநாதிகரணேஸ்தாநிந்யபிமத்யமஃ। அஸ்மத்யுத்தமஃ। ஶேஷேப்ரதமஃ) என்கிற சாப்திகப்ரக்ரியையாலே - அஸ்மச்சப்தமும் வரக்கடவதென்றபடி. "மல்லிகைகமழ்தென்றல்" இத்யாதியாலே-ஸ்பர்ஶேந்த்ரியம் முதலானவை யழிகிறபடி சொல்லுகிறதென்றுவிவக்ஷித்து, ஆனுல் கரணைதில்யம்சொன்ன * முடியானேயிற்பற்ற விதுக்குவாசியேதென்ன (முடியானேயிலித்யாதி) அவயவிதானென்றது - "புல்லியமுலைகளும்" என்றத்தைப்பற்ற. எதத்விவரணம் (ஜ்ஞாநேந்த்ரியங்களோடித்யாதி) "மல்லிகைகமழ்" என்று-க்ராணமும், "தென்றல்" என்று - ஸ்பர்ஶமும், "குறிஞ்சியிசை" என்று - ஶ்ரோத்ரமும், "நன்மேகங்கள்" என்று - சக்ஷுஸ்ஸு, க்ராஹகத்வேந தோற்றுகையாலே (ஜ்ஞாநேந்த்ரியங்களென்றது) "தோளும்கொண்டு" என்கையாலே (கர்மேந்த்ரியங்களோடென்றது) "தோள்" என்றது - கர்மேந்த்ரியாந்தரங்களுக்குமுபலக்ஷணம்.

க்ஷணகாலமாத்ரமான சந்த்யையிலே யிப்படியழியக்கூடுமோவென்ன (ராமாவதாரத்திலித்யாதி) சந்த்யை பதினாலாண்டுபோலேயாகைக்கடியேதென்ன (கு

ணுதிகேத்யாதி) நீர்மையிலே-தீம்பனான ஸ்வபாவத்திலே. இத்தால்-குணங்களைப்பற்றவும் தீம்பு ஈடுபடுத்துமென்றபடி. கையடியுண்டிருக்கை - வித்தராயிருக்கை. ஆனாலும் குணங்களொழியத் தீம்பு ஈடுபடுகைக்குடலாமோவென்ன (குணங்கள்தாமித்யாதி) அதுவேயாய்-குணாதிகமாய். பாடாற்றப்போகாது-ஸஹிக்கப்போகாது.

தென்றல்முதலான பாதகபதார்த்தங்களுக்கு ஸ்வாபதேசம் (நாட்டாரித்யாதி) உளைய - குன்றிப்போக. எவுண்டு-எய்யப்பட்டு.

"சந்த்யையிற்பட்டநோவைப்படுகிறாள்" என்று கீழுக்தத்தை விஸ்தரிக்கிறார் (திருவாய்ப்பாடியிலித்யாதி) இவன்று ணிவர்களைவிட்டுப் பசுமேய்க்கப்போவானென்னென்ன (அதாவது ப்ராஹ்மணர்க்கித்யாதி) உக்தத்தை நிகமிக்கிறார் (இப்படியாலேயித்யாதி.)

அவன்வருகிற சந்த்யாகாலத்திலே நோவுபடுவானென், பகலிற்போலேயாறியிருக்கவொண்ணாதோவென்ன; அவன்வரும்காலமான சந்த்யையிலே யவன்வாராதிருந்தா லாறியிருக்கப்போமோவென்கிறார் (ஆகவவன்பசுவித்யாதி) அவன்றான் முற்கொழுந்திலேவாராதே பிற்றுழையிலேவருவானென்னென்ன (அதாவது அவன்றானித்யாதி) உக்தத்தை யநுவதியாநின்றுகொண்டு, சந்த்யாசமயத்திலே யவனைப்பிரிகையால்வந்த நோவேயன்றிக்கே, பாதகபதார்த்தங்களும் மேலிடத்தொடங்கிற்றென்கிறார் (அவன்வரக்கடவவித்யாதி) "மாலையும்வந்தது" என்றத்தைப்பற்ற (சந்த்யையும்வந்ததென்றது) "ஆபுகுமாலையுமாகின்றால்" என்றத்தைப்பற்ற (பசுக்களும்வந்ததென்றது) "மாயன்வாரான்" என்றத்தைப்பற்ற (அவன்றானித்யாதி) (அக்காலத்தில்) என்றதுக்கு, (அநுகூலபதார்த்தங்கள்) என்றத்தோடே அந்வயம். (அநுகூலபதார்த்தங்கள்) என்றவநந்தரம், காலாந்தரங்களிலும் அநுகூலமான (தென்றல்) என்றுகூட்டுவது. குழலோசையெவ்வாகாரத்திலே பாதகமென்ன (குழலோசையுமித்யாதி) பாதகபதார்த்தங்கள் நலியும்ப்ரகாரத்தையும், அவற்றாலேயவர்கள் நோவுபடுகிற ப்ரகாரத்தையும் விசதமாக வுபபாதியாநின்றுகொண்டு, சந்த்யையிலவர்கள்பட்டநோவை யிவரொருத்தரும் படுகிறாளென்று கீழோடேநிகமிக்கிறார் (அப்படியிருக்கிறவித்யாதி) (பாதகபதார்த்தங்களெல்லாம்) என்றவநந்தரம், "நலிகையாலே" என்றுசேஷம். அதுக்குமேலே - முன்புநலிந்தது க்குமேலே. தனித்தனியுமென்றது - பாட்டுக்கள்தோறும் ஸ்புடம். திரளவுமென்றது - "வாலொளிவளர்முல்லைகருமுகைகள்மல்லிகை" "புலம்புறுமணிதென்றல்" இத்யாதியைப்பற்ற.

அன்றிலென்றது - இத்திருவாய்மொழியிலில்லை. * இன்னுயிர்ச்சேவலில் "அன்றிற்பேடைகாள்" என்றத்தையுட்கொண்டு, அவையும் பாதகங்களாகையாலே அத்திருவாய்மொழியிற்சொன்னவையு மிங்கு விவக்ஷிதங்களென்று தோற்றுகைக்காக அன்றிலென்று சூசிப்பிக்கிறாரென்றுகருத்து. உபந்யாஸக்ரமமாவது - எம்பெருமானார் நிர்வாஹாநந்தரமே, (திருவாய்ப்பாடியில்) இத்யாதியையும், (சந்த்யையைப்பார்த்திருக்குமத்தனையாய்த்து) என்றவநந்தரம், (ராமாவதாரத்தில்) இத்யாதியையும், அநந்தரம், (ஆகவவன்பசுமேய்க்க) இத்யாதியையும், அநந்தரம், (நாட்டார்) இத்யாதி ஸ்வாபதேசமும், (ஜ்ஞாநம்பிறந்த) என்றுதொடங்கி (ஜ்ஞாநேந்த்ரியங்களோடு) இத்யாதிவாக்யபர்யந்த மநுசந்தேயம். கீழே, திருவாய்ப்பாடியிலுள்ளார் பட்டதுபடுகிறாளென்றது - அந்யாபதேசத்துக்கு த்ருஷ்டாந்தம்சொல்லிற்று; ஸ்வாபதேசத்துக்கு த்ருஷ்டாந்தம் (நாட்டாரித்யாதி)... ... ... ... ... ... ... ... *

## ஒன்பதாந்திருவாய்மொழி.

# முதற்பாட்டு.

மல்லிகைகமழ்தென்றலீருமாலோவண்குறிஞ்சியிசைதவருமாலோ
செல்கதிர்மாலையுமயக்குமாலோசெக்கர்நன்மேகங்கள்சிதைக்குமாலோ
வல்லியந்தாமரைக்கண்ணனெம்மானாயர்களேறரியேறெம்மாயோன்
புல்லியமுலைகளுந்தோளுங்கொண்டுபுகலிடமறிகிலந்தமியமாலோ.

## ஆறாயிரப்படி.

மல்லிகைகமழ்தென்றல் முதலான பதார்த்தங்கள் என்னை பாதியாநின்றன, ஆஶ்சர்யமான ஸௌந்தர்யாதிகுணங்களை யுடையனாயிருந்த வெம்பெருமானைப்புல்கி அதுவே தாரகமாயிருந்த விம்முலைகளையும் தோள்களையும் கொண்டு புகலிடமறிகிலோம், முடிவுதோம் என்று கூப்பிடுகிறாள். ..................................................................................................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், சந்த்யைவேளையில் தென்றல்தொடக்கமான பதார்த்தங்கள் நலியாநின்றன, நிரதிசய போக்யபூதனான க்ருஷ்ணன் விரும்பின வவயவங்களைக் கொண்டு ஒதுங்க விடங்காண்கிறிலோமென்று கூப்பிடுகிறாள்.

மல்லிகைகமழ் - மல்லிகையிற்பரிமளத்தையுடைத்தான. தென்றல்-தென்றலானது. ஈரும் - நஞ்சூட்டின வாள்போலே ஸர்வதோமுகமாகவீராநின்றது. வண்-ஶ்ராவ்யமாய் அபுபுக்ஷிதக்ராஹ்யமான. குறிஞ்சியிசை - குறிஞ்சியாகிறபண்ணையுடைத்தான விசையானது. தவரும் - அந்தர்க்கதமாகத் துளையாநின்றது. செல் - அஸ்தமயோந்முகனான. கதிர் - ஆதித்யனையுடைத்தான. மாலையும் - சந்த்யாவேளையானது. மயக்கும் - கூப்பிட்டாற்றவுமொண்ணாதவகை அறிவழியும்படிமோஹிப்பியாநின்றது. செக்கர் - சந்த்யையில் செக்கர்நிறத்தையுடைத்தான. நல் - தர்ஶநீயமாயுள்ள. மேகங்கள் - மேகங்களானவை. சிதைக்கும் - * பொன்னொத்தவாடை யுடையவன் வடிவுக்கு ஸ்மாரகமாய்க்கொண்டு சரீரத்தைச் செதுக்காநின்றது. இப்படி நாலுபாடும் விரோதமானபின்பு, அல்லி - விகசிதமாய். அம் - தர்ஶநீயமான. தாமரைக்கண்ணன் - தாமரைப்பூப்போலே யிருக்கிற கண்ணழகை யுடையனாய். எம்மான் - அத்தாலே "ஜிதஂ" (ஜிதம்) என்னும்படி நம்மைத் தோற்பித்த ஸ்வாமியாய். ஆயர்களேறு - ஸஜாதீயரான கோபரு மீடுபடும்படியான செருக்கையுடையனாய். அரியேறு - ஸ்த்ரீ பும் விபாகமற விப்படி யழிக்கையாலே சிம்ஹஶ்ரேஷ்டம்போலே மேனாணித்திருப்பானாய். எம்மாயோன் - ஸம்ஶ்லேஷதசையில் தாழநின்று நம்மோடே பரிமாறு மாஶ்சர்ய சேஷ்டிதங்களை யுடையவன். புல்லிய - அத்யந்தாபிநிவிஷ்டனாய்க்கொண்டு ஸம்ஶ்லேஷித்த. முலைகளும்-முலைகளையும். தோளும்-தோள்களையும். கொண்டு - கொண்டு. தமியம் - அவனைப் பிரிந்து தனிமைப்பட்ட நாம். புகலிடம் - ஒதுங்கவிடம். அறிகிலம் - அறிகிறிலோம்.

ரக்ஷகனானவன் அஸந்நிஹிதனானான், நாம் அஸஹாயரானோம், சுற்றும் முற்றும் பாதகமாய்த்து, அவன் விரும்பின வஸ்துவை நோக்கிக் கொடுக்க விரகறிகிறிலோமென்று கருத்து. தவர்தல் - துளைத்தல். சிதைக்கை - செதுக்குகை. ஆலும் ஓவும்-விஷாதாதிசயசூசகமான வசைகள். அடிதோறும் கூப்பிட்டது, ஒவ்வொன்றால் வந்த ஆர்த்யதிசயத்தாலே. ..........................................................*

## ஈடு - முதற்பாட்டு.

சந்த்யாகாலத்தில் தென்றல்தொடக்கமான பதார்த்தங்கள் தனித்தனியே தனக்கு பாதகமாகிறபடியைச் சொல்லுகிறாள்.

(மல்லிகை) "மல்லிகை" என்றுதொடங்கி "செக்கர்நன்மேகங்கள்சிதைக்குமாலோ" என்னுமளவு மிவ ளார்கேட்கக் கூப்பிடுகிறாள்தான். (மல்லிகைகமழ்தென்றல்) வெறும்புறத்திலே நலியவற்றான தென்றல்; அதுக்குமேலே மல்லிகையின் பரிமளத்தை யெறட்டுக்கொண்டு வாராநின்றது. வதபரிகரமான பத்திரத்திலே நஞ்சூட்டினாப்போலே யாய்த்து, தென்றல் பரிமளத்தைக் கொண்டுவருகிறபடி. அவன் கூடவிருந்தபோ தநுகூலமான பதார்த்தங்களடைய இப்போது பாதகமா யிருக்கிறதிறே. "யாநிஸ்மரணீயாநி தயாஸஹ பவந்திமே। தாந்யேவாரமணீயாநிஜீவதோமேதயாவிநா," (யாநிஸ்மரமணீயாநி தயாஸஹபவந்திமே। தாந்யேவாரமணீயாநிஜீவதோமேதயாவிநா,) "ஏஷபுஷ்பவஹோவாயுஸ்ஸுகஸ்பர்ஶோஹிமாவஹ:। தாம்விசிந்தயத:காந்தாம் பாவகப்ரதிமோமம," (ஏஷபுஷ்பவஹோவாயுஸ் ஸுகஸ்பர்ஶோஹிமாவஹ: । தாம் விசிந்தயத:காந்தாம் பாவகப்ரதிமோமம,) "ஸதாஸுகமஹம்மந்யே யம்புராஸஹஸீதயா। மாருதஸ்ஸவிநாஸீதாம் ஶோகஸஞ்ஜநகோமம." (ஸதாஸுகமஹம்மங்யே யம்புராஸஹஸீதயா । மாருதஸ்ஸவிநாஸீதாம் ஶோகஸஞ்ஜநகோமம.) "தந்யாலக்ஷ்மணஸேவந்தே பம்போபவநமாருதம்" (தங்யாலக்ஷ்மணஸேவந்தே பம்போபவநமாருதம்) என்று கூப்பிடுவா னவனிறே. (இருவராயிருப்பார் காற்றைத்தேடிப் படுக்கைபடாநிற்க,) "இக்காலமிவ்வூர் பனிப்பியல்வெல்லாம் தவிர்ந்தெரிவீசும்" என்னுமாபோலே, இவரொருவர்க்குமேயாய்த்து பாதகமாகிறது. (மல்லிகைகமழ்தென்றல்) க்ராணேந்த்ரியத்துக்கும் பாதகமாய், ஸ்பர்ஶேந்த்ரியத்தையு மழியாநின்றது. இராப்படை யேறுவாரைப்போலே உடம்பிலேபடக் காணுமித்தனைபோக்கி, கண்ணுக்குத்தோற்றுதாய்த்து; கண்டு தப்பவொண்ணாது. இத்தென்றலுக்கு, கண்டவிடமெங்கும் வாயாயிராநின்றது. (ஈருமாலோ) பண்டே பிரிவாலேசென்றற்றிருக்கிறவுடம்பை, பலகைபலகையாக வீராநின்றது.

(வண்குறிஞ்சியிசைதவருமாலோ) அழகிய குறிஞ்சியிசையானது, துளையாநின்றது. காற்றீர்ந்து போகட்ட புண்ணின்மேலே துளைத்

துப் போகடாநின்றது. தென்றல், புறம்பேநலிகிறவித்தனை ; இசை, செவிவழியே யுள்ளேபுகுந்து நலியாநின்றது. ( வண்குறிஞ்சி ) இசைக்கெவ்வளவு செவிப்பாடுண்டு, அவ்வளவும் பாதகமாமித்தனையிறே. அவன் கூடவிருந்தபோ தெவ்வளவு போக்யமாயிருக்கும், வ்யதிரேகத்தி லவ்வளவும் நலியுமிறே. குறிஞ்சியும் தென்றலும் கூடி க்ருதசங்கேதிகளாய் வந்து, ஒன்றதிகரித்த கார்யத்தின் சேஷத்தை யொன்றுசெய்யாநின்றது.- " நற்கொலையாகக் கொல்லவொண்ணாது, உயிர்க்கொலையாகக்கொல்லவேணும், அதில் நீயிவ்வளவுசெய், நானிவ்வளவுசெய்கிறேன் " என்று க்ருதசங்கேதராய் வந்தாரைப்போலேயாய்த்திருக்கிறது.

( செல்கதிரித்யாதி ) செல்லப்பட்டிருந்துள்ள கதிரையுடைத்தான மாலையானது, மயங்கப்பண்ணாநின்றது. அஸ்தமியாநின்றுள்ள வாதித்யனையுடைய சந்த்யையானது, மோஹிப்பியாநின்றது. வாயிலே சீரையைத் துறுத்துக் கொல்லுவாரைப்போலே, ஆற்றாமைக்குப்போக்குவிட்டுக் கூப்பிட்டு தரிக்கவுமொட்டுகிறதில்லை.

( செக்கர்நன்மேகங்கள் சிதைக்குமாலோ ) சந்த்யாராகத்தையும் ச்யாமமான நிறத்தையு முடைத்தான மேகங்கள் அவனுடைய அவயவ சோபைக்கும் வடிவுக்கும் ஸ்மாரகமாய், "இவையென்னம்புசெய்தது" என்று அவற்றை கர்ஹித்துக்கொண்டு, "ஆச்ரயங்கிடக்கவோநலிவது" என்று வயிரத்தைச் செற்றாநின்றது.

( அல்லியந்தாமரைக்கண்ணனித்யாதி ) நாமிவற்றை யின்னாதாகிறதென், அவன்றான் முன்னே நம்மை முடிக்கக் காரியம்பார்த்து வைத்திலனோ?. "கலந்துபிரியவே இவள்முடியும்" என்றன்றோ அவன் பிரிந்தது?. இவையானால் போக்குவிட்டடித்தனவிறே; புகலறுத்தானவனிறே. (அல்லியித்யாதி) (அல்லியையுடைத்தா யழகிய தாமரைபோலேயிருந்த திருக்கண்களையுடையவன்.) முதலுறவுபண்ணுவது கண்ணிறே.- த்ருஷ்டிபந்தம் பிறந்திறே சம்ச்லேஷிப்பது. (எம்மான்) அக்கண்ணழகாலே யென்னை அநந்யார்ஹையாக்கினவன். ( ஆயர்களேறு ) அவ்வழகாலே இடையரைத் தோற்பித்தாப்போலே. [வஹஂஸாழ்] [பும்ஸாம்] வயிரவுருக் காய்த்தவனுடைய சௌந்தர்யம். தன்னோடொத்தாரை அப்படி நலியாநின்றால், அபலைகளை நலியச் சொல்லவேண்டாவிறே. ( அரியேறு ) கண்ணாலே குளிரநோக்கி இவளை அநந்யபரையாக்கி; இவளோடே சம்ச்லேஷித்து, அத்தாலே தான் பெறாப்பேறு பெற்றானாய் மேனாணிப்புத்தோற்ற நின்றபடி. சிம்ஹஸ்ரேஷ்டம். (எம்மாயோன்) அம்மேன்மையையுடையவன், தாழ்ந்தார்சிலருயர்ந்தவர்களோடே கலக்குமாபோலே, கையைக்காலைப்பிடித்துத் தாழநின்று பரிமாறினபடி. கலக்கிறபோது மின்மினி பறக்கும்படிகாணும் கலந்தது. ( புல்லியமுலைகளும்தோளுங்கொண்டு ) அவனும் வாராதிருக்கிறான், நானும் வருந்தி யொருபடி ஜீவித்

துக்கிடக்கிறேன், அவனுக்குப் பிறந்த ப்ரஜைகளைக்கொண்டு புகலிடமறி கிலேன். நான்செய்தபடிசெய்ய, இம்முலைகளின் வீக்கம் தீர அநுபவிக் கப்பெறுவதெப்போதோ!; க்ஷாமகாலத்தில் ப்ரஜைகள் "சோறு, சோறு" என்னுமாபோலே படுத்தாநின்றன. அவன்றானும் கலக்கிறபோது சர்வாங்க சம்ப்ஶ்லேஷ க்ஷமனன்றுபோலேகாணும். அவனிழிந்ததுறையும், இளைப்பாறினவிடமும். (புல்லியவித்யாதி) கலக்கிறபோதை யவனுடைய வலமாப்பையும், தம்முடைய கரணங்களுக்குண்டான ப்ராவண்யாதிசயத்தையும், அவன் பெறுப்பேறு பெற்றானாய் நின்று பரிமாறினபடியையும், தமக்கொரு புகலற்றிருக்கிறபடியையும் சொல்லுகிறது. (புகலிடமறிகிலம்) வ்யதிரேகத்தில் தென்றல் முதலான பதார்த்தங்களைத் தப்பிச் சென்று புகுகைக்கு இடங்காண்கிறிலோம். (தமியமாலோ) இத்தசையில் ரக்ஷகனானவனும் வாராமையாலேதனிமைப்படாநின்றோம். இப்படி தன் விபூதியாக பாதகமானால், பகதத்தன் விட்ட அஸ்த்ரத்துக்கு அர்ஜுனனைத்தள்ளித் தான் மார்வையேற்றாப்போலே, "இவைவரும்" என்றறிந்தால் தான் கூட விருக்கவேண்டாவோ. அவன்கூடவிருந்தானாகில் இவைதா மிழிதொழில்செய்யத் தொடங்குமிறே. "ராமஸ்ஸௌமித்ரிஸஹித:" (ராமஸ்ஸௌமித்ரிஸஹித꞉) என்று அவர் தாம் நோவுபட்டுக் கூப்பிடுகிறபோது ஒரு தம்பியாராகிலும் கூடவுண்டு நோவுபடுகைக்கு; அங்ஙனுமொருதுணையில்லை யெனக்கு.

[ஸ꞉] பிராட்டியைப் பிரிந்து நடுவே கபந்தன்கையிலே யகப்பட்டு நோவுபட்டு நிற்கிற நிலையைச் சொல்லுகிறது. [தாம்] இப்பிரிவும் ஆற்றாமையு மில்லாதாரையும் அழிக்கவற்றாய்த்து. [வாஷ்கரிணீ꞉] [புஷ்கரிணீம்] பரப்புமாறப்பூத்த பொய்கைகளும் சோலைகளுமாய், ஜலக்ரீடைக்கு யோக்யமான தேசமாய்த்து. பிரிந்து தனியிருப்பார்க்குக் கண்கொண்டு காணப்போகாது. [மகுா] [கத்வா] நினைவின்றிக்கே யிருக்கச்செய்தே, ம்ருத்யுவினுடைய ஆஸ்யத்திற் புகுவாரைப்போலே வந்து கிட்டிக்கொடு நின்றார். ம்ருத்யுவாகிற் புடைதானேதென்றால் [வஜோத்வலஷாகுலாம்] [பத்மோத்பலஜஷாகுலாம்] முகத்துக்கும் கண்ணுக்கும் போலியானவற்றை யுடைத்தாயிருந்தது. "உயர்தாமரைசெங்கழுநீர்மாதர்கள்வாண்முகமும் கண்ணுமேந்தும்" என்னக்கடவதிறே. [ராம꞉] பிறர் கூப்பிடுதவிர்த்துப் போந்தவராய்த்து. [ஸௌமித்ரிஸஹித꞉] "ரக்ஷஸெஷண" (ரக்ஷதர்மேண) என்று ஏதேனுமளவிலும் கூடநின்று நோக்கிக்கொண்டு போந்தவரும் முன்னாக; ஆறிழியுமவன் தெப்பம்முன்னாகவிழியுமாபோலே. [விலலாபாகுலேந்த்ரிய꞉] [விலலாபாகுலேந்த்ரிய꞉] அநேகலக்ஷணங்களோடே யாய்த்துக் கூப்பிட்டது. ப்ராப்யவஸ்துவைப் பெறவேணுமென்னும் மநோரதமாய், சிழ் இவருடைய மநோரதத்துக்கீடாக வந்து கிட்டும்படி அவனும் வாராதேநிற்க, அவனுடையவ

ரவுக்கீடான தூர்யகோஷம், ஸ்ரீபாஞ்சஜந்யத்வநி, ஜ்யாகோஷம், திருவடி திருச்சிறகோசை, மற்றுமுண்டான நன்னிமித்தங்கள், மந:ப்ரஸாதாதிகள், என்றுப்போலே சொல்லுகிறவை ஒன்றும் காணுமையாலே, அநுகூலபதார்த்தங்கள் பாதகமாகிறது. கரணங்களும் சரீரமுமாய் க்லேஶப்படுகையாகிறவிது, விரோதியான ஸம்ஸாரத்தி னின்றும் கால்வாங்கவும் மாட்டாதே, இங்குப் பொருந்துவதுஞ் செய்யாதே, கண்டதடையப் பகையாயிருக்கிறபடி. ஆக, "இங்குப் பொருந்தாதே அங்குப் புகப்பெறுதே நடுவே நின்று க்லேஶப்படுகிற அவஸ்த்தை - ஸந்த்யையாகிறது" என்றிங்ஙனே யொருதாத்பர்யஞ் சொல்லக் கடவதாயிருக்கும். ............*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (மல்லிகையித்யாதி.) பூர்வார்த்தத்தையெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை (ஸந்த்யாகாலத்திலித்யாதி.) தென்றல் முதலானவை பாதிக்கிறதென்று ஒருக்ரியையாகச்சொல்லாதே, "ஈருமாலோ, தவருமாலோ" என்று ப்ரத்யேகம் க்ரியையாயிருக்கையாலே (தனித்தனியே) என்றருளிச்செய்தது.

வ்யாக்யாதாவினீடுபாடு (மல்லிகையித்யாதி.) "மல்லிகைகமழ்தென்றல்" என்றதுக்குபாவம் (வெறும்புறத்திலேயித்யாதி.) இதுக்கு த்ருஷ்டாந்தம் (வதேத்யாதி.) பத்திரம் - ஆயுதம். அநுகூலமான தென்றல் பாதகமாவா னென்னென்ன (அவன்கூடவித்யாதி.) இப்படி பாதகமான விடமுண்டோவென்ன (யாநிஸ்மேத்யாதி.) அவை யெவையென்ன (ஏஷபுஷ்பவஹ இத்யாதி ப்ரமாணத்வயம்.) காற்று பாதகமென்னுமதுக்கு இவர் ஸ்ரீஸூக்தி (இக்காலமித்யாதி.) வ்யாக்யாதாவினீடுபாடு (தந்யா இத்யாதி.) "[illegible]," (யாநிஸ்மரமணீயாநிதயாஸஹபவந்திமே। தாந்யேவாரமணீயாநிஜீவதோமேதயாவிநா,) "[illegible]," (ஏஷபுஷ்பவஹோவாயுஸ்ஸுகஸ்பர்ஶோஹிமாவஹ:। தாம்விசிந்தயத:காந்தாம் பாவகப்ரதிமோமம,) "[illegible]," (ஸதாஸுகவஹம்மந்யே யம்புராஸஹஸீதயா। மாருதஸ்ஸவிநாஸீதாம் ஶோகஸஞ்ஜநகோமம,) "[illegible]" (பத்மஸௌகந்திகவஹம் ஶிவம்ஶோகவிநாஶநம்। தந்யாலக்ஷ்மணஸேவந்தே பம்போபவநமாருதம்" இதி கிஷ்கிந்தாகாண்டே ப்ரதமே. திருவிருத்தம் அஞ்சாம்பாட்டு, "பனிப்பியல்வாகவுடையதண்வாடையிக்காலமிவ்வூர், பனிப்பியல்வெல்லாந்தவிர்ந்தெரிவீசும் -" குளிர்த்தியை ஸ்வபாவமாகவுடைத்தான மந்தமாருதம், இக்காலத்திலே இத்தேசத்திலே குளிர்ந்தஸ்வபாவமெல்லாம் தவிர்ந்து எரிவீசாநிற்குமென்றபடி. (கூப்பிடுவானவனிறே) "ஆயிருக்க, இவள்கூப்பிடுகிறுள்" என்று கூட்டுவது. "மல்லிகைகமழ்தென்றல்" என்றத்தால் பலிதம் (க்ராணேந்த்ரியத்துக்கு மித்யாதி.) பாதகமென் றறிந்தால் தப்புகிறதுக்கென்னென்ன (இராப்படையித்யாதி.) அமூர்த்தமானவாயு ஈருகையாலே இதுக்குத் தப்பவொண்ணுதென்றபடி. "ஈரும்" என்றதுக்கு பாவம் (இத்தென்ற

னுக்கித்யாதி.) ஈருகை - அறுக்கை. கண்டவிடமெங்கும் வாயாயிராநின்றதென்றது - ஸ்பர்ஶம் சர்வாங்கீணமாகையாலே. "ஈரும்" என்றதுக்குபாவாந்தரம் (பண்டேயித்யாதி.)

கீழிற்பதத்தையுங்கூட்டி "தவரும்" என்றதுக்கு பாவம் (காற்றீர்ந்தித்யாதி.) தவருகை - துளைக்கை. இது தென்றலைப்பற்றவும் க்ரூரமென்கிறார் (தென்றல்புறம்பேயித்யாதி.) * வண்மைக்கர்த்தம் (இசைக்கித்யாதி.) விவரணம் (அவன்கூடவித்யாதி.) செவிப்பாடு - செவியிலே புகுருகை; போக்யதை யென்றபடி. "மல்லிகை" என்றுதொடங்கி யிவ்வளவும் பதச்சேர்த்திக்கு பாவமாதல்; "தென்றலீரும், குறிஞ்சிதவரும்" என்றதுக்கு பாவமாதல் (குறிஞ்சியுமித்யாதி.) ஏதத்விவரணம் (நற்கொலையித்யாதி.)

விவரணம் (அஸ்தமியாநின்றுள்ளவித்யாதி.) கதிர் - ஆதித்யன். "மயக்கும்" என்றதுக்குபாவம் (வாயிலேயித்யாதி.)

மேகம் பாதகமாகிற திவ்வாகாரத்தாலே யென்னுமத்தைக் காட்டாநின்றுகொண்டு, கீழிலவற்றைப்பற்ற விதின் பாதகத்வாதிசயத்தை யருளிச்செய்கிறார் (சந்த்யாராகத்தையுமித்யாதி.) செற்றுநின்றது - செதுக்காநின்றது. சிதைக்கும்-செதுக்காநின்றது.

"புல்லியமுலைகளுந் தோளுங்கொண்டு புகலிடமறிகிலம்" என்றத்தைக்கடாக்ஷித்து பாவம் (நாமிவற்றையித்யாதி.) காரியம் பார்க்கையாவதேதென்ன (கலந்தித்யாதி.) அவற்றிலு மிவன் செய்தது அதிகமென்கிறார் (இவையானுலித்யாதி வாக்யத்வயத்தாலே.) இதழையுடைத்தான வழகிய தாமரைபோன்ற கண்ணையுடைய வென் ஸ்வாமியென்று சப்தார்த்தம். முதல் கண்ணைச் சொன்னதுக்குபாவம் (முதலுறவித்யாதி.) அதெப்படியென்ன (த்ருஷ்டிபந்தமித்யாதி.) கீழோடே கூட்டி "எம்மான்" என்றதுக்கு பாவம் (அக்கண்ணழகாலேயித்யாதி.)

என்னையேயன்றிக்கே தன்னேடொத்த பருவத்திற் பிள்ளைகளையும் தோற்பிக்குமென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் (பும்ஸாமித்யாதி.) பும்ஸாமென்றது - "ஶ்லோக கிரந்தம் [illegible]" (பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்கிறபடி யென்றபடி. "[illegible]" (சந்த்ரகாந்தாநநம்ராமமதீவப்ரியதர்ஶநம்) என்று இந்த ஶ்லோகத்துக்கு பூர்வார்த்தம். இத்தால்பாவம் (தன்னேடொத்தாரையித்யாதி.)

"தாமரைக்கண்ணனெம்மான்" என்றத்தைக் கடாக்ஷித்துபாவம் (கண்ணாலேயித்யாதி.)

"மாயோன்" என்றதுக்கு - வ்யாமோஹமாக வர்த்த மருளிச்செய்கிறார் (அம்மேன்மையித்யாதி.) ஆஶ்சர்யமாக வர்த்தாந்தரம் (கலக்கிறவித்யாதி;) மின்மினி பறந்தாப்போலே க்ஷணந்தோறும் தோற்றும்படி.

"புல்லியமுலைகளும்" இத்யாதிக்குபாவம் (அவனுமித்யாதி.) விவரணம் (நான்செய்தவித்யாதி.) புல்லிய - புல்கிய; சம்ஶ்லேஷித்தவென்றபடி. அவனுக்குப்பிறந்த - அவனுக்காக வுண்டான. வீக்கம் - ஆசை. பலிதம் (க்ஷாமேத்யாதி.) அவயவாந்தரங்களிருக்க, முலையையும் தோளையும் சொல்லுவானென்னென்ன (அவன்றானுமித்யாதி.) அவற்றிலே கலக்கும் ப்ரகாரத்தை விசதீகரிக்கிறார் (அவனிழிந்தவித்யாதி;) "மெல்லியல்தோள் தோய்ந்தாய்" என்று இழியும் துறைதோள்; "மலராள்தனத்துள்ளான்" என்று இளைப்பாறினவிடம் முலையென்றபடி. "மா

யோன்” என்றுதொடங்கி மேலிற்பதங்களுக்கு பாவம் (கலக்கிறபோதித்யாதி.) “மாயோன்புல்லிய” என்று அவனலமாப்பும், “முலைகளுந்தோளும்” என்கிறவிடத்தில் தம்முடைய கரணப்ராவண்யமும், “அரியேறு” என்று பெருப்பேறுபெற்ருறுயிருக்கிறபடியும், “புகலிடமறிகிலம்” என்கிறவிடத்தில் புகலற்றபடியையும் சொல்லுகிறது.

தமியம் - தமியோமென்றபடி. “ஆலோ” என்றதுக்கு பாவம் (இப்படியித்யாதி.) கூடவிருந்தால் பாதகமாகாதோவென்ன (அவன்கூடவித்யாதி.) “தமியம்” என்றதுக்கு பாவம் (ராமஸ்ஸௌமித்ரீத்யாதி.)

ப்ரஸ்துத ஶ்லோகார்த்தம் (ஸஇத்யாதி;) “𑌸 𑌤𑌾𑌂 𑌪𑍁𑌷𑍍𑌕𑌰𑌿𑌣𑍀𑌂 𑌗𑌤𑍍𑌵𑌾 𑌪𑌦𑍍𑌮𑍋𑌤𑍍𑌪𑌲𑌝𑌷𑌾𑌕𑍁𑌲𑌾𑌮𑍍 । 𑌰𑌾𑌮𑌃 𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑌿𑌸𑌹𑌿𑌤𑍋 𑌵𑌿𑌲𑌲𑌾𑌪𑌾𑌕𑍁𑌲𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃” (ஸதாம்புஷ்கரிணீம்கத்வாபத்மோத்பலஜஷாகுலாம் । ராமஸ்ஸௌமித்ரிஸஹிதோவிலலாபாகுலேந்த்ரியஃ) இதி கிஷ்கிந்தாகாண்டே. சோலைகளும் என்றது - ஆர்த்தம். “புஷ்கரிணீம்” என்றத்தால் பலிதம் (பிரிந்தித்யாதி.) முகத்துக்கும் கண்ணுக்குமென்றது - பிராட்டியுடைய கண்ணுக்கும் முகத்துக்கு மென்றபடி. அவை போலியோவென்ன (உயர்தாமரையித்யாதி.) (பிறர்கூப்பீடு) இத்யாதிக்கு - “ரமயதீதிராமஃ” என்று கருத்து. (ரரக்ஷேதி) “𑌤𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌮𑌾𑌤𑌙𑍍𑌗𑌵𑌿𑌲𑌾𑌸𑌗𑌾𑌮𑍀 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌮𑌵𑍍𑌯𑌗𑍍𑌰𑌮𑌨𑌾 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾 । 𑌸 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑍋 𑌰𑌾𑌘𑌵𑌮𑌪𑍍𑌰𑌮𑌤𑍍𑌤𑍋 𑌰𑌰𑌕𑍍𑌷 𑌧𑌰𑍍𑌮𑍇𑌣 𑌬𑌲𑍇𑌨 𑌚𑍈𑌵” (தம்மத்தமாதங்கவிலாஸகாமீகச்சந்தமவ்யக்ரமநாமஹாத்மா । ஸலக்ஷ்மணோராகவமப்ரமத்தோ ரரக்ஷதர்மேணபலேநசைவ) இதி கிஷ்கிந்தாகாண்டே ப்ரதமே. அவரோடேகூடி துஃகப்பட்டாரொன்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் (ஆறிழியுமவனித்யாதி.) “𑌆𑌕𑍁𑌲𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃” (ஆகுலேந்த்ரியஃ) என்றதுக்கர்த்தம் (அநேகலக்ஷணங்களோடேயென்றது.) இத்திருவாய்மொழிக்கு- அந்யாபதேசம் (ப்ராப்யவஸ்துவையித்யாதி.) ஸ்வாபதேசம் (கரணங்களுமித்யாதி.) “செல்கதிர்மாலை” என்றதுக்கு ஸ்வாபதேசம் (ஆகவிங்கித்யாதி.) இங்ஙனே யொருதாத்பர்யம் சொல்லக்கடவதா யிருக்குமென்றது - தாத்பர்யாந்தரமன்று, ப்ரவேசத்திலே யருளிச்செய்த அந்யாபதேச ஸ்வாபதேசங்களை யருளிச்செய்தபடி யென்று கருத்து. “ஆல், ஓ” என்ற விரண்டும் - அசை; விஷாதாதிசயஸூசகம்.……………………………………………………………………*

---

# இரண்டாம்பாட்டு.

---

புகலிடமறிகிலந்தமியமாலோபுலம்புறுமணிதென்றலாம்பலாலோ
பகலடுமாலைவண்சாந்தமாலோபஞ்சமமுல்லைதண்வாடையாலோ
வகலிடம்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்தெங்குமளிக்கின்றவாயன்மாயோ
னிகலிடத்தசுரர்கள்கூற்றம்வாரானினியிருந்தென்னுயிர்காக்குமாறென்.

## ஆறுயிரப்படி.

(புகலிடம்) புலம்புறுமணிதென்றல் தொடக்கமாகவுள்ள விவையும் பாதியாகின்றன, சமஸ்ததுஃகங்களையும்போக்கிக்கொண்டு சர்வாத்மா

க்களையும் பலபடியால் ரக்ஷிக்கிற பரமகாருணிகனான எம்பெருமான் வருகிறிலன், இனியிருந்து நானுஜ்ஜீவிக்கைக் குபாயமென்னென்கிறாள் ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வப்ரகாரரக்ஷகனானவன் சந்நிஹிதனாகிறிலன், பாதகங்கள் தனித்தனியன்றியே திரள்திரளா யீராநின்றன, ஒதுங்கவிடங்காண்கிறிலோம், இனி ப்ராணரக்ஷணம்பண்ணும் ப்ரகாரமென்னென்கிறாள்.

தமியம்-தனிப்பட்டநாம். புகலிடம்-பெரும்படைக்கு ஒதுங்கவிடம். அறிகிலம்-அறிகிறிலோம், புலம்புறு-நாகைத்தொடருகிற சேக்களின் கழுத்திலே த்வநிக்கிற. மணி-மணியும். தென்றல் - அசஹாயமாய் நலிகிறதென்றலும். ஆம்பலாலோ-இலைக்குழலும், கூடிக்கொண்டது. பகலடுமாலை - பதார்த்ததர்ஶநம்பண்ணாமல் பகலை நசிப்பிக்கிற ராத்ரிமுகமும். வணசாந்தமாலோ-தத்காலோசிதமான அங்கராகசமுதாயமும், ஒருமுகமாய்த்து. பஞ்சமம்-பஞ்சமமாகிறபண்ணும். முல்லை-முல்லைமாலையும். தண்வாடையாலோ-குளிர்ந்தவாடையும், ஒருதிரளாய்த்து. இப்படி படைதிரண்டாப்போலே தனித்தனிபாதகங்கள் சங்கமான விவ்வவஸ்தையில், அகலிடம்-விஸ்தீர்ணமானஜகத்தை. படைத்து-உண்டாக்கி. இடந்து-ப்ரளயத்திலழுந்தாமலிடந்தெடுத்து. உண்டு-மஹாப்ரளயத்திலே வயிற்றுக்குள்ளேவைத்துநோக்கி. உமிழ்ந்து-உமிழ்ந்து. அளந்து-அந்யாபிமாநம் வாராமலளந்துகொண்டு. எந்தமளிக்கின்ற-எல்லாவிஷயத்திலும் வரையாமலுபகாரகனாய். ஆயன்-இந்தக்காரணத்வரக்ஷகத்வத்துக்கேகாந்தமான க்ருஷ்ணாவதார சௌலப்யத்தையுடையனாய். மாயோன் - ரக்ஷணாநுரூபமான ஆஶ்சர்யசேஷ்டிதவிசிஷ்டனாய். இகலிடத்து-யுத்தத்திலே எதிரம்புகோத்த. அசுரர்கள்-அசுரர்களுக்கு. கூற்றம்-ம்ருத்யுவானவன். வாரான்-இந்தபாதகசங்கங்களையழித்து என்னை ரக்ஷிக்கும்படிவருகிறிலன். இனி - அவன்விரும்பாமலுபேக்ஷித்தபின்பு. என்னுயிர்-எனக்கேசுமையானப்ராணனை. இருந்து - சத்தையோடேயிருந்து. காக்குமாறென்-ரக்ஷிக்கும்ப்ரகாரமென்.

ரக்ஷ்யபூதரானால் ரக்ஷணத்தில் சக்தியும் ப்ராப்தியுமில்லையென்றுகருத்து. பாதகஸ்வரூபங்களைச்சொல்லி பாதிக்கிறப்ரகாரம் சொல்லாதொழிந்தது, “படை படை” என்பாரைப்போலே வாசாமகோசரமான பயமும் ஆர்த்தியும் அதிசயிக்கையாலே. தென்றலையும் வாடையையுஞ்சொல்லிற்று, ஒருக்ஷணத்திலே அநேககல்பங்கள் கழிகிறதான கருத்தாலே ..........................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

முன்பு தூசியேறினபேர்க் குரமாகநின்ற பேரணி உறுபூசலானவாறே திரளவழுக்குமாபோலே, தனித்தனியே நலிந்தபாதகங்கள் பல ஹாநி மிகமிக பலகூடிவந்து நலியாநின்றதென்கிறாள்.

(புகலிடமறிகிலம்) மேல்வருகிற பாதகபதார்த்தங்களைக்குறித்துச்சொல்லிற்றாகவுமாம்; அன்றிக்கே, கீழ்ச்சொன்னவை தமக்கேயஞ்சி அநுபாஷிக்கிறதாகவுமாம். (தமியமாலோ) புகலிடமற்றார்க்குத் துணையாமவனுதவாதொழியத் தனியிருக்கிறவிருப்பிறே. (தமியம்-தனிப்பட்டநாம்.) (புலம்புறுமணி) நாகுகளைத்தொடர்கிற சேக்கள்கழுத்தில் மணியினுடையத்வநி, அந்நாகுகள்கைபுகுராமையாலே கூப்பிடுகிறாப்போ

லே யிராநின்றது. (தென்றல்) வெறும்புறத்திலே தென்றலென்னவமையும், "மல்லிகைகமழ்தென்றல்" என்னவேண்டா; வினைமுடுகினால் பின்னை யுடம்புக்கிடாதே யேறுவாரைப்போலே. "ஆரோதிராக உடம்புக்கிடுகிறது" என்றிராநின்றது. (ஆம்பலாலோ) குழலென்னுதல், இலைக்குழலென்னுதல்; இவையெல்லாம், "ஈருமாலோ, தவருமாலோ, மயக்குமாலோ, சிதைக்குமாலோ" என்றுப்போலே சொல்லவேண்டா, "புலி, புலி" என்பாரைப்போலே இவற்றின்பேரைச்சொல்ல, பயங்கரமாயிருக்கிறது. அன்றிக்கே, இவற்றினுடையநலிவு வாயால்சொல்லில் வாய்வக்குரிக்கும்படியாயிருக்கையாலே, சொல்லாதொழிந்ததாதல். (பகலடுமாலை) பிராட்டியுடைய வ்யஸநத்துக்குறுப்பாகப் பெரியவுடையாரை முடித்துக்கொண்டுவந்து ராவணன் தோற்றினாப்போலே ஆஶ்வாஸகரமான பகலைமுடித்துவந்து தோற்றிற்றாய்த்து சந்த்யை. பகல்பதார்த்ததர்ஶநம் பண்ணி யாற்றலாமிறே; அதில்லாமையாலே ராத்ரி வ்யஸந மொருமுகஞ்செய்திருக்குமிறே. (வண்சாந்தம்) அழகியசாந்தம், பஞ்சமமாகிறபண். (முல்லை) யாழ். அன்றிக்கே, முல்லைப்பூத்தா னிடையர்க்குத்தாராயிருக்குமிறே; அத்தைச்சொல்லிற்றாகவுமாம். (தண்வாடை) அவ்வாடையோடு தென்றலோடு வாசியற்றுப்போய்த்து. தென்றல்வருவது ஒருகாலமும் வாடைவருவது ஒருகாலமுமாயிருக்குமிறே; அவையெல்லாம் அவ்வவகாலங்களிலேவந்து தோற்றும்படியாய்த்து காலம் நெடுகுகிறபடி. அன்றியே, அநர்த்தஸூசகமாய் எல்லாக்காற்று மொருக்காலே யடித்ததாகவுமாம். இனித்தென்றலுக்கஞ்சி வாடையின்கீழொதுங்கவிரகில்லை.

(அகலிடமித்யாதி) தன்மஹிஷியானவள் இப்படி பாதகபதார்த்தத்தின்கையிலே நோவுபடாநிற்க, சர்வசாதாரணமாக வாபத்துவந்தால் வயிற்றிலேவைத்து நோக்குமவன்கிடீர் இப்போது வாராதொழிகிறான். பரப்புடைத்தானபூமி யுருமாய்ந்துகிடக்க உண்டாக்கி, ப்ரளயங்கொண்டவித்தை யிடந்தெடுத்து, திரியவும் ப்ரளயம்வர வயிற்றிலேவைத்து நோக்கி உள்ளேகிடந்து தளராதபடி வெளிநாடுகாணப் புறப்படவிட்டு, மிடுக்கராயிருப்பா ரிருஞ்சிக்கொள்ள எல்லைநடந்து மீட்டுக்கொண்டு, இப்படிவரையாதேநோக்கும் ஸ்வபாவனானவன்கிடீர் இப்போது வாராதொழிகிறான்!. (ஆயன்) "க்ருஷ்ணவஹ்நி" (க்ருஷ்ணஏவஹி) இத்யாதி. (மாயோன்) ஜகத்ரக்ஷணத்துக் கநுரூபமான ஆஶ்சர்யசக்தியுக்தன். (இகலித்யாதி) யுத்தபூமியில்காணும்ஆசுரவர்க்கத்துக்கு ம்ருத்யுவாயிருப்பது. "ஶரணம்" என்கிற ப்ரஹ்லாதவிபீஷணாதிகளை யழியச்செய்திலனிறே; ராவணஹிரண்யாதிகளையிறே முடித்தது. "த்ராதுங்ஸக்தாயுதிராமவத்யம்" (த்ராதுங்நஸக்தாயுதிராமவத்யம்) என்னக்கடவதிறே. (வாரான்) இங்கு அம்பேற்கவும்வேண்டா, விரோதிகளுமில்லை, முகங்காட்டவமையும். (இனியித்யாதி) வரைந்துநோக்குவா னொருவனைய் நானறியிருக்கிறேனே, வருமிடத்தில் ப்ரதிபந்தகமுண்டென் றறியிருக்கிறேனே, என்

னுடையரக்ஷணத்திலெனக்கந்வயமுண்டாய்த் தானறியிருக்கிறேனே, வ ளையாதே ரக்ஷிக்குமவனுமாய் சக்தனுமாய் ப்ராப்தனுமாயிருக்கிறவன்வாராதொழிய, அவனுடைய ரக்ஷ்யகோடியிலேயாய் அசக்தையாய் அப்ராப்தையாயிருக்கிற நான் என் ப்ராணன்களை நோக்குகையென்றொரு பொருளுண்டோ!. (இனியிருந்து) வருந்தனையும் ஜீவித்துக்கிடக்கும்படி "ந ஊஂவஸஂஶாவவொஹூஜெ" (நமாம்ஸம்ராகவோபுங்க்தே) என்று சிலர் சொல்லுதல், "கூாஉவெஶ்ரநுநூவாதுஜெ" (த்வாமபஸ்யந் ந்ருபாத்மஜே) என்னுதல் செய்துதானறியிருக்கிறேனே; - வரவுக்குடலாக கரன் பட்டான், கபந்தன்பட்டான், வாலிபட்டான், கடலடைப்பது, வந்துபுகுந்தாரத்தனை என்று தானறியிருக்கிறேனே. (இனியிருந்து) இதுக்கு முன்பெல்லாம் "அவன்சரக்கழியவொண்ணாது" என்றுநோக்கிக்கிடந்தமை தோற்றுகிறதாய்த்து-இனியென்கையாலே. (என்னுயிர்காக்குமாறென்) பிறருயிராய்த்தான் நோக்கியிருக்கிறேனே; இவற்றின்கையிலே நோவுபட வெனக்குப்பணியாகவோ என்னுடைய ப்ராணரக்ஷணம் ........*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (புகலிடமித்யாதி) கீழ் - தனித்தனியேநலிந்த பாதகபதார்த்தங்கள் திரளாகபாதிக்கும்ப்ரகாரத்தை சநிதர்ஶநமாக வருளிச்செய்யாநின்றுகொண்டு, அப்படிநலிகைக்கு ஹேதுவையுமருளிச்செய்கிறார் (முன்பித்யாதி) தூசி-சேநாமுகம். பேரணி-பெரியவ்யூஹம். உறுபூசல்-கைகலந்தயுத்தம்; மூலபலயுத்தமாதல். பலஹாநிமிகுகைநலிகைக்கடி. பலகூடிவந்தென்றது - "மணி, தென்றல், ஆம்பல், மாலே, சாந்தம், பஞ்சமம், முல்லே, வாடை, என்றவற்றைப்பற்ற.

மேல்வருகிறவென்றது - இப்பாட்டிற்சொல்லுகிறவென்றபடி. தனியேதென்ன (புகலிடமித்யாதி.)

"புலம்புறுமணி -" புலம்புதலிலே யுற்றமணி - த்வநிக்கிறமணி. த்வநிபாதகமாகிறபடியென்னென்ன (நாகுகளையித்யாதி) சேக்கள் - வ்ருஷபங்கள். "மல்லிகைகமழ்தென்றல்" என்றாப்போலே விசேஷணமிடவேண்டாவோவென்ன (வெறும்புறத்திலேயித்யாதி) வேண்டாமைக்கு ஹேதுவேதென்ன (விளைமுடுகினலித்யாதி) பரிஹாராந்தரம் (ஆரொதிராகவித்யாதி) ஈடு-ஜோடு-கவசம். "ஆம்பல்" ஆய்க்குழலும், இலேக்குழலும். "ஈரும், தவரும், மயக்கும்" என்னாதே, வெறுமனே "மணிதென்றலாம்பல்" என்கிறதென்னென்ன; பரிஹாரத்வயம் இவையெல்லாமித்யாதியாலும், அன்றிக்கே யிவற்றினுடைய வித்யாதியாலும்) வக்குரிக்கும்படியென்றது-வேம்படியென்றபடி.

"பகலடுமாலே" என்றதுக்கு சத்ருஷ்டாந்தமாகபாவம் (பிராட்டியுடையவித்யாதி) பகல் ஆஶ்வாஸகரமோவென்ன (பகலித்யாதி) யாழாவது - காநவிசேஷம். இடையர்க்குத்தாராகையாலே க்ருஷ்ணனுக்கு ஸ்மாரகமாய் பாதகமாமென்றபடி. "முல்லே" என்று - முல்லேப்பூவாதல். ப்ராதக்காலத்திலே வருகிறவாடை சந்த்யையிலே வரக்கூடுமோவென்ன (அவ்வாடையோடிதயாதி.) இவ்வாக்யாநந்தரம், (இனித்தென்றல்) இத்யாதிவாக்யமநுசந்தேயம். "அவ்வாடையோடு" இத்யாதிவாக்யவிவரணம் (தென்றல்வருவதித்யாதிவாக்யத்வயம்) அதாவது - ஒருசந்த்யையிலே

வொண்ணுமையாலே வாக்வ்யாபாரத்தை யெறட்டுக்கொள்ளாநிற்குமாய்த்து. பேச்சால் பிறக்கும் ஸ்பஷ்டதை நோக்காலே பிறக்கை. (தூமொழியிசைகள்கொண்டொன்றுநோக்கி) அழகிய பேச்சோடே கூடின இசைகளாலே, கண்ணாலே நோக்கி யீடுபடுத்துமாபோலே யீடுபடுத்தி. இசையோடேகூடச் செய்தேயும் இயலும் தெரிந்திருக்கை. வாக்வ்யவஹாரமும் நேத்ரவ்ருத்தியும் மாறுடினபடி. (பேதுறுமுகஞ்செய்துநொந்துநொந்து) கேட்கிறவர்களிலும் தன் செவியணித்தாகையாலே, "நாமீடுபடுகிறபடி கண்டால் அபலைகளானவர்க ளென்படுகிறார்களோ" என்று மிகவும் நொந்து. "வன்னெஞ்சரான நம்மை வருத்தினபடி கண்டால், அபலைகளென்படுகிறார்களோ" என்று மிகவும்நோவுபட்டான். (பேதைநெஞ்சறவறப்பாடும்பாட்டை) பெண்களுடைய நெஞ்சு ஊடலை மறந்து வந்து பொருந்தும்படி பாடுகிறபாட்டை. (ஆதுமொன்றறிகிலம்) அது பாதகமாகிறபடி யெனக்கொன்றும் தெரிகிறதில்லை. (அம்மவம்ம) பூசல் பூசல். (மாலையும்வந்தது) மிகவும் பாதகமாம்படி சந்த்யையும்வந்தது. இனியிருந்து க்லேசிக்கவேண்டாதபடி இது முடித்தே விடும்போலே யிருந்தது. (மாயன்வாரான்) தன்னைப் பிரிந்தார் லஜ்ஜிக்கும்படி தானே யிழவாளனாய்வந்து கால்பிடிக்கு மாஸ்சர்யபூதன் வருகிறிலன்..........*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (ஊதுமித்யாதி.) "இடையிடையதுமொழிந்து" என்றுதொடங்கி "பாடும்பாட்டை ஆதமொன்றறிகிலம்" என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (பண்டேயித்யாதி.) "பண்டே" என்றதுக்கர்த்தம் சந்திக்தம்.

"உய்யேன் நான்" என்னுமளவும் அநுவாதமாக பாவம் (கீழிலவையித்யாதி.) மிகை - அதிகம்.

"அது" என்கிறதேதென்ன (பிரிந்தேனித்யாதி.) இடையிடையேசொல்லியாய்த்தென்றது - குழலூதாநிற்க நடுவே நடுவே யந்தக்குழலிலேயிட்டுச்சொல்லியாய்த்தென்றபடி. இன்னதென்னவொண்ணாதோ, "அது" என்கிற தென்னென்ன (தாழ்ந்தவித்யாதி.) சொல்லப்போகாதென்னுமதுக்கு சம்வாதம் (எம்பாரித்யாதி.) (மோருள்ளதனையும் சோறேயோ) என்றதுக்கு கதை - * தீர்ப்பாரையாமினி ப்ரவேசத்திலே கண்டுகொள்வது. விவரணம் (நடுவேநடுவேயித்யாதி.) "அது மொழிந்து" என்று பாடமானபோது, "அது" என்று - நீசபாஷணங்களைச்சொல்லுகிறது; "இடையிடை" என்றது - குழலூதுகிற விடையிடையிலேயென்றபடி; இதுக்கு நியாமகம் - (குழலூதுகையிலே மூண்டு மீண்டு வார்த்தைசொல்லவொண்ணுமையாலே) இத்யாதிவாக்யம். "அதுவொழிந்து" என்று பாடமானபோது, "அது" என்று - * பாடும்பாட்டைச் சொல்லுகிறது. "இடையிடை" என்றது-நடுவேநடுவே யென்றபடி.

"தன் - கோலம் - செய்" என்றந்வயித்தர்த்தம் (தனக்குத்தானேயித்யாதி.) "தாதுசெய்" என்றத்தால் பலிதத்தை யருளிச்செய்கிறார் (தன்கருத்தையித்யாதி.) விவரணம் (நெஞ்சிலித்யாதி.) "தாதுசெய்" என்று விசேஷித்ததுக்குபாவம் (நம்பியித்யாதி.) இத்தால் (நம்பிமூத்தபிரான்) என்று கூட்டுவது

அதாவது - "𑌸𑌙𑍍𑌕𑍇𑌤𑌸𑍍𑌸𑌾𑌮𑌮𑌧𑍁𑌰𑍈𑌃 𑌪𑍍𑌰𑍇𑌮𑌗𑌰𑍍𑌭𑍈𑌰𑌗𑌰𑍍𑌵𑌿𑌤𑍈𑌃। 𑌰𑌾𑌮𑍇𑌣𑌾𑌶𑍍𑌵𑌾𑌸𑌿𑌤𑌾 𑌗𑍋𑌪𑍍𑌯𑍋 𑌹𑌰𑌿𑌣𑌾 𑌹𑍃𑌤𑌚𑍇𑌤𑌸𑌃" (ஸம்கேதஸ்ஸாமமதுரை: ப்ரேமகர்ப்பைரகர்விதை:। ராமேணாஶ்வாஸிதாகோப்யோ ஹரிணா ஹ்ருதசேதஸ:) என்கிறபடியே செய்வுற்றையும் செய்யாநிற்குமென்றபடி. வாயாலே பேசவொண்ணாதோ, கண்கள்கொண்டு பேசுகைக்கடியேதென்ன (குழலூதுகையிலேயித்யாதி.) கண்ணாலே பேசும்படி யென்னென்ன (பேச்சாலித்யாதி.) அநுதக்ருத்யத்தைப்பண்ணும் கண்களைக்கொண்டு ஸ்வாபிப்ராயத்தைச்சொல்லியென்று சப்தார்த்தம்.

வாயாலே நோக்குகையாவதேதென்ன (அழகியவித்யாதி.) * தூய்மைக்கு பாவம் (இசையோடேயித்யாதி.) "பேசி, நோக்கி" என்றதுக்கு - ஸ்பஷ்டதையிருக்குமென் றருளிச்செய்தபடி யன்றிக்கே, சர்வசக்தியாகையாலே. "𑌶𑍍𑌰𑌵𑌸𑌶𑍍𑌚 𑌦𑍃𑌶𑌶𑍍𑌚 𑌶𑌬𑍍𑌦𑌰𑍂𑌪𑌗𑍍𑌰𑌹𑌣𑍇 𑌤𑍇𑌨 𑌹𑌿 𑌜𑍀𑌵𑌵𑌦𑍍𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾" (ஶ்ரவஸஶ்ச த்ருஶஶ்சசப்தரூபக்ரஹணே தேநஹிஜீவவத்வ்யவஸ்த்தா) என்கிறபடியே அயதாவாக மாறுடிற்றென்றர்த்தாந்தரம் (வாக்வ்யவஹாரமுமித்யாதி.)

இதுக்கு பாவம் (கேட்கிறவர்களிலுமித்யாதி.) வீப்ஸைக்கர்த்தம் (மிகவும் நொந்தென்று.) அதாவது - பேதத்தையுற்ற முகத்தையுடையனென்கையாலே - தானிடுபட்டமையும், "நொந்துநொந்து" என்று - பெண்களுக்காக மிகவும் நோவுபட்டமையும் சொல்லுகிற தென்றபடி. விவரணம் (வன்னெஞ்சரான வித்யாதி.)

"பேதைநெஞ்சறவற" இத்யாதியால் பலிதார்த்தம் (பெண்களுடையவித்யாதி.) பேதைகளுடைய - பெண்களுடைய, நெஞ்சறவுண்டு-நெஞ்சற்றிருக்கை-ப்ரணயரோஷம், அது அறும்படியாகப் பாடும்பாட்டை, ஆதுமொன்றறிகிலம்-ஏதுமொன்றும் தெரிகிறதில்லையென்று சப்தார்த்தம். "பாடும் பாட்டை" என்றது - "பாடும்பாட்டு பாதகமாகிறபடி" என்று கூட்டிக்கொள்வது.

அந்தகாநம் தன்னை நோவுபடுத்தினதுக் குளைந்துசொல்லுகிறவார்த்தை (பூசல் பூசலென்று.) "மாலையும்" என்ற சகாரம் - க்ரௌர்யவாசி. "வந்தது" என்றதுக்குபாவமாதல், சந்த்யையின் பாதகத்வத்தினெல்லையாதல் (இனியிருந்தித்யாதி.) ஆஶ்சர்யமேதென்ன (தன்னைப்பிரிந்தாரித்யாதி.)

"மொழிந்து" என்றபாடத்தில் அந்வயமாவது - இடையிடை - அதுமொழிந்து - ஊதுமத்தீங்குழற்கே யுய்யேன் நான் - தன்செய்கோலமென்றுதொடங்கி, மேலிருந்தபடியே யந்வயம். "ஒழிந்து" என்றபாடத்தில், ஊதுமத் தீங்குழற்கே யுய்யேன் நான் என்றது - அநுவாதமாய், இடை யிடை - அதுவொழிந்து - தன்செய்கோலமென்று தொடங்கி, அடைவே யந்வயம். பேதுறு முகம்செய்து - பேதத்தையுற்ற முகத்தைச்செய்து; அதாவது - விக்ருதனென்றபடி. தனக்குண்டான வீடுபாடு தன்முகத்திலே தோன்றும்படி செய்து என்று உரையில் சப்தார்த்தம். பேதைத்தனத்தையுற்ற முகத்தைச் செய்தென்றுமாம். ஆதுமொன்றறிகிலம் - ஏதேனுமொருப்ரகாரத்தாலு மறியமாட்டுகிறிலோம். அம்மவம்ம - "அம்மே அம்மே" என்று உரையில் சப்தார்த்தம். பேதுறவு - நெஞ்சழிவு. ......................................*

# பத்தாம்பாட்டு.

---

மாலையும்வந்ததுமாயன்வாரான் மாமணிபுலம்பவல்லேறணைந்த, கோலநன்னாகுகளுகளுமாலோகொடியனகுழல்களுங்குழறுமாலோ, வாலொளிவளர்முல்லைக்கருமுகைகண்மல்லிகையலம்பிவண்டாலுமாலோ, வேலையும்விசும்பில்விண்டலறுமாலோ வென்சொல்லியுய்வனிங்கவனைவிட்டே.

## ஆறாயிரப்படி.

( மாலையும் ) மாலையும்வந்தது, மாயன் வருகிறிலன், மாமணிபுலம்பவல்லே றணைந்த கோலநன்னாகுகள் களித்துக் கொடுவாராநின்றன, வண்டுவரைப்பெருமாளுடைய திருத்தோழன்மார் குழல்களை யூதிக்கொடுவந்து புகுராநின்றனர், அதி தவளமான வொளிவளர்கிற முல்லை கருமுகைகள் மல்லிகைதொடக்கமான பூக்களின்மதுக்களைப்பருகி வண்டுகளாலாநின்றன, கடலும் கிளர்ந்து கொடுவாராநின்றது, இத்தசையிலவனைவிட்டு நானெத்தைச்சொல்லி யுய்வதென்கிறாள். ..........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்சர்யபூதனானவன் வந்திலன், பாதகங்கள் நலியாநின்றன, இனி யெங்கே யுஜ்ஜீவிப்பேனென்கிறாள்.

மாலையும்வந்தது - வருவதாக வவன்குறித்துப்போன மாலைக்காலமும் வந்தது. மாயன் - தன் சந்நிதியாலெல்லாம் அநுகூலிக்கும்படியான வாஸ்சர்யத்தை யுடையவன். வாரான் - வருகிறிலன். மாமணி - பெரியமணிகள். புலம்ப - த்வநிக்கும்படி. வல் - பெருமிடுக்கனான. ஏறு - ஏறுகள். அணைந்த - அணைந்த. கோலம்- தர்ஸநீயமான வடிவையுடையவாய். நல்-ஏறுகளோடுகலந்த வுகப்பையுடைத்தான. நாகுகள்-நாகுகளானவை. உகளும் - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸஸம்ப்ரம சஞ்சாரத்தைப்பண்ணாநின்றன. குழல்களும் - பசுக்கள் குவிகைக்காகப் பலவிடத்திலுமூதின குழல்களானவை. அவன் குழலோசையை ஸ்மரிப்பித்து, கொடியன - அசஹ்யமாம்படி. குழறும் - அநக்ஷரரஸமாக த்வநியாநின்றன. வால் - வெளுத்த. ஒளி-ஒளியையுடைத்தான. வளர் - கொடியானது மிகாநிற்கிற. முல்லை - முல்லை. கருமுகை- கருமுகை. மல்லிகைகள் - மல்லிகைகளை. அலம்பி - அவகாஹித்து. வண்டு-வண்டுகளானவை. ஆலும் - சப்தியாநின்றன. வேலையும் - சமுத்ரமும். விசும்பில் - ஆகாசத்திலே. விண்டலறும் - கிட்டி வாய்விட்டுக் கூப்பிடாநின்றது. இங்கு - இவ்வளவில். அவனைவிட்டு - அவனை விட்டு. என்சொல்லி - எத்தைச்சொல்லி. உய்வன்- உஜ்ஜீவிப்பேன். ........................................................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

வருவதாகச்சொன்ன காலம் வந்திருக்க அவன்வருகிறிலன், பாதகங்களுடைய சந்நிதியி லவனையொழியத் தரிப்பதெங்கேயென்கிறாள்.

( மாலையித்யாதி ) மாலையும் மாலையும் கூடப் பிணைத்துவிட்டாள் போலேகாணும். வருவதாகக் குறித்துப்போன காலம் வந்தது, அவன்

ருன் வருகிறிலன். அவனைக்காணவே, ப்ரதிகூலமெல்லா மநுகூலமாய்த் தோற்றுமிறே. ( மாமணிபுலம்ப ) பெருத்தமணி த்வநிக்க, (வல்லேறி த்யாதி) நாகுகை புகுந்தாலல்லது மீளாதாய்த்து. அபிமதம் கைபுகுந் தாலல்லது மீளாத ஏறுகளோடே கலந்த தர்ஶநீயமான ஸ்நேஹத்தை யுடைய நாகுகள், அந்த ஸம்ஶ்லேஷத்தாலுண்டான ஹர்ஷத்தாலே ஸஸ ம்ப்ரமவ்ருத்திகள் பண்ணுநின்றன. நான் சோகத்தோடேயிருந்தேன், இ வை ஹர்ஷத்துக்குப் போக்குவிடாநின்றன. பின்னை யவன்செய்த தென் னென்னில்; அவனின்னமும் வரவுக்கு க்ருஷிபண்ணுநின்றான் ( கொடி யனவித்யாதி ) தூரப்போன பசுக்களை யோரிடத்திலே திரட்டுகைக்காக அங்குமிங்கும் சிதறின விடையரடையத் திரண்டு எல்லாருமொக்கக் கு ழல்களைவாங்கி சந்த்யாசமயத்திலே தங்கள்வரவை ஊரறியும்படி யாகவு ம் பெண்கள்நெஞ்சில் மறமாறும்படியாகவும், எழுத்தும் சொல்லும்பொ ருளும் தெரியாதபடி யொன்றாகவிரவியெழும்படி யூதுவதொருகுழலோ சையுண்டு; அது பாதகமாகாநின்றதாய்த்து. ( வாலொளியித்யாதி ) மிக் கவொளியையுடைத்தாய் கண்டவிடமெங்கும் தானேயாம்படி படர்ந்த முல்லை, அப்படியிருக்கிற கருமுகை, மல்லிகை, இவற்றிலேபுக்கு மதுபா நம்பண்ணி, அலைகிற - ஆலிக்கிறவண்டுகளானவை ஸஸம்ப்ரம ந்ருத்தம் பண்ணுநின்றன; திர்யக்குக்களானவை, ஸம்ஶ்லேஷத்தால்வந்த ஹர்ஷத் துக்குப் போக்குவிட்டுக் களிப்பனவும், ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணுவன வுமாகாநின்றன. ( வேலையும் ) கடலும், ஆகாசத்திலே நின்று கூப்பிடா நின்றது. ஸம்போகமத்யத்திலே தைர்யபங்கம் பிறந்து கூப்பிடும்படிக்கு ஸ்மாரகமாய் நலியாநின்றது. ( இங்கவனைவிட்டு - என்சொல்லியுய்வன் ) பாதகபதார்த்தங்களின் நடுவே, அவனையொழிய வெத்தைச்சொல்லி யுஜ் ஜீவிப்பது. இவை மேன்மேலென நலியாநின்றன, அவனேவந்திலன், நா னுஜ்ஜீவிக்கவென்றொன்றுண்டோ. முடிந்தேனென்றபடி. ...............*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. ( மாலையுமித்யாதி. ) "மாலையும்வந்தது மாயன் வாரான், மாமணிபுலம்ப" என்றுதொடங்கி, "இங்கவனைவிட்டு" என்னுமளவும் கடாக்ஷித் தவதாரிகை ( வருவதாகவித்யாதி. )

"மாலையும் - மாயன்" என்ற பதச்சேர்த்திக்கு ரஸோக்தியாக பாவம் (மா லையையுமித்யாதி.) சப்தார்த்தம் ( வருவதாகவித்யாதி. ) அவன் வந்தால் பெறுகிற பேறேதென்ன ( அவனைக்காணவேயித்யாதி. )

ருஷபத்துக்கு வலிமையேதென்ன ( நாகுகைபுகுந்தாலித்யாதி. ) உக்தத்தை யநுவதித்துக்கொண்டு, "உகளுமாலோ" என்னுமளவுக்கும் சப்தார்த்தம் ( அபிம தமித்யாதி. ) அணைந்த - ஸம்ஶ்லேஷித்த. இத்தால் பாவம் (நான்சோகேத்யாதி.)

மேலுக்கவதாரிகை ( பின்னையித்யாதி. ) கொடியன - க்ரூரங்களான. "கு ழல்கள்" என்கிற பஹுவசநத்துக்கர்த்தம் ( தூரப்போனவித்யாதி. ) விரவி-கூடி.

"வாலொளிவளர்" என்கிறது - மூன்றுக்கும் விசேஷணம். வால் - மிகுதி. அலம்புகை - அலைகையாய், சப்திக்கிறவென்றபடி. ஆலுகை - ஸசம்ப்ரமந்ருத்தம்பண்ணுகை. "அலம்பி - அவகாஹித்து, ஆலும் - சப்தியாநின்றன." என்று உரையிலர்த்தம். "நாருகளுகளும், வண்டாலும்" என்கிற விரண்டாலும் பலித்தவர்த்தம் (திர்யக்குக்களித்யாதி.) களிப்பனவுமென்றது - நாருகளை; ந்ருத்தம்பண்ணுவனவுமென்றது - வண்டுகளை.

விண்டு - வாய்விட்டு. இது சொன்னதுக்கு பாவம் (சம்போகேத்யாதி.)

சப்தார்த்தம் (பாதகேத்யாதி.) இத்தால்பாவம் (இவைமேன்மேலித்யாதி.)*



# பதினொன்றாம்பாட்டு.

அவனைவிட்டகன்றுயிராற்றகில்லாவணியிழையாய்ச்சியர்மாலைப்பூசல், அவனைவிட்டகல்வதற்கேயிரங்கியணிகுருகூர்ச்சடகோபன்மாற, னவனியுண்டுமிழ்ந்தவன்மேலுரைத்தவாயிரத்துள்ளிவைபத்துங்கொண், டவனியுளலற்றிநின்றுய்மின்றொண்டீர்ச்சொன்னமாலைநண்ணித்தொழுதே.

## ஆருயிரப்படி.

(அவனைவிட்டு) வண்டுவரைப்பெருமானைப்பிரிந்து தங்களைக்கொண்டு தரிக்கமாட்டாமை * அந்தியம்போது அணியிழையாய்ச்சியர்திரளநின்றுகூப்பிட்டாப்போலே, ஆழ்வாரும் அவனைப்பிரிந்து தரிக்கமாட்டாமை கூப்பிட்டலற்றின வித்திருவாய்மொழியைக்கொண்டு அலற்றியுய்யலாமென்கிறார் ........................................ ..............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக பகவத்ஸம்ஶ்லேஷத்தை யருளிச்செய்கிறார்.

அவனைவிட்டகன்று - அதிசயிதபோக்யனான க்ருஷ்ணனைவிட்டகன்று. உயிராற்றகில்லா-ப்ராணதாரணம்பண்ணமாட்டாதேயிருப்பாராய். அணியிழை - அவன்வரவுக்கீடாக வணியப்பட்ட ஆபரணங்களையுடையரான. ஆய்ச்சியர் - கோபிமார். மாலை-மாலைக்காலத்தில். பூசல் - அவன்வரவுகாணமல் கூப்பிட்டபடியை. அவனை-அவனை. விட்டகல்வதற்கே - விட்டகன்றிருக்கைநிமித்தமாக. இரங்கி - நோவுபட்டு. அணிகுருகூர்-அழகியதிருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன்மாறன்-ஆழ்வாரானவர். அவனி-பூமியை. உண்டு - ப்ரளயங்கொள்ளாமல் உண்டு. உமிழ்ந்தவன்மேல்-உமிழ்ந்தவன்விஷயமாக. உரைத்த-அருளிச்செய்த. ஆயிரத்துள் - ஆயிரத்துள். இவைபத்தும்கொண்டு-இவைபத்தையும் ஸ்வீகரித்துக்கொண்டு. அவனியுள்-பூமிக்குள்ளே. அலற்றிநின்று-ப்ரீதியாலே திரளாகக்கூப்பிட்டுநின்று. தொண்டீர்-அநுபவசாபலத்தையுடையவர்களே. அச்சொன்னமாலை -அங்குச்சொன்ன ஆஶ்ரிதவ்யாமுக்தனான க்ருஷ்ணனை. நண்ணித்தொழுது-கிட்டித்தொழுது. உய்மின்-உஜ்ஜீவியுங்கோள்

இத்திருவாய்மொழியி லிப்பத்துப்பாட்டும்-கோபிமார் தனித்தனியேகூப்பிட்ட பாசுரமாதல், ஒருகோபிகை திரளோடேகூடியும் தனியுமாய்க்கூப்பிட்ட பாசுரமாதலாயிருக்கிறது.

இது எண்சீராசிரியவிருத்தம் ........ ........................................*

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில், அவன்பக்கல் சாபலமுடையார், இத்திருவாய்மொழியைச்சொல்லி அவனைப்பெறுங்கோளென்கிறார்.

(அவனைவிட்டகன்றுயிராற்றகில்லா வணியிழையாய்ச்சியர்) அவனைவிஸ்லேஷித்துத் தந்தாமுடைய ப்ராணன்களைக்கொண்டு தரிக்கக்ஷமைகளன்றிக்கே, அவனுடைய வரவுக்குறுப்பாக வொப்பிக்கப்பட்ட வாபரணங்களுடைய இடைப்பெண்கள். "கொங்கைமேல்குங்குமத்தின் குழம்பழியப்புகுந்து" என்கிறபடியே, அவன்வரவுக்குடலாகத் தங்களையலங்கரித்து, வரும்காலத்தில் வரக்காணுமையாலே, திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம்குடியிற்பெண்கள் க்ருஷ்ணவிரஹத்திலே ஒருசந்த்யையிற் கூப்பிட்ட கூப்பீடாய்த்து. (அவனைவிட்டகல்வதற்கேயிரங்கி) (அவனுடைய பிரிவாலேநோவுபட்டு) அவர்களெல்லாரும்பட்ட க்லேசத்தை யிவரொருவரும் பட்டாரென்கை. (அவனியுண்டுமிழ்ந்தவன்மேலுரைத்த) (சர்வரையும்) ப்ரளயாபத்திலே ரக்ஷித்து அழிந்தவற்றையடையவுண்டாக்கின சர்வேஸ்வரன்றிருவடிகளிலேயாய்த்துச்சொல்லிற்று. தொண்டீர்-அணிகுருகூர்ச்சடகோபன்மாறன், அவனியுண்டுமிழ்ந்தவன்மேலுரைத்தவாயிரத்துள்-அவனைவிட்டகல்வதற்கேயிரங்கி - அவனைவிட்டகன்றுயிராற்றகில்லா வணியிழையாய்ச்சியர் மாலைப்பூசல் - சொன்ன-இப்பத்துங்கொண்டு- அம்மாலைநண்ணித்தொழுது - அவனியுளலற்றிநின்றுய்மின். இப்போதிதுசொல்லிற்று விரஹப்ரளயத்தில் நின்றும் தம்மையெடுக்கவேணுமென்கைக்காக. (அச்சொன்னமாலை நண்ணித்தொழுது - அவனியுளலற்றிநின்றுய்மின்தொண்டீர்) அப்படிப்பட்ட வ்யாமோஹத்தை விளைக்கவல்லவனைக்கிட்டி, அவனைத்தொழுது, அவன்பக்கல் சாபலமுடையார், பூமியிலேநின்று அடைவுகெடக்கூப்பிட்டு உஜ்ஜீவித்துப்போகப்பாருங்கோள். இப்பாசுரத்தை யப்யஸிப்பார்க்கு என்னைப்போலே கூப்பிடவேண்டா, "என்சொல்லியுய்வன்" என்றுசைப்பட்டபேறுபெறுகையில் கண்ணழிவில்லை.............................................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் அவனையித்யாதி) "தொண்டீர்-இவைபத்துங்கொண்டு-உய்மின்" என்றத்தைப்பற்ற வவதாரிகை (அவன்பக்கலித்யாதி.)

"விட்டகன்று" என்று - முழுச்சொல்லு; விஸ்லேஷித்தென்றபடி. இப்படியார்த்தைகளானவர்களாலே யலங்கரிக்கிறதுக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார் (அவனுடையவரவுக்கித்யாதி) அணியிழை - அணியப்பட்டவாபரணங்களை யுடையரான. இழை - ஆபரணம். அணிகை-பூண்கை. "அவன்வரவுக்குறுப்பாக" இத்யாதிவாக்யத்தை விவரியாநின்றுகொண்டு, "மாலைப்பூசல்" என்றதுக்கர்த்தம் (கொங்கையித்யாதி) "மாலை" என்று - சந்த்யையாய், "பூசல்" என்று - கூப்பீடாய், சந்த்யாகாலத்தில் கூப்பீடென்றபடி.

“ விட்டகல்வதற்கு ” என்று - முழுச்சொல்லாய், பிரிவுக்காகவென்றபடி. “அவனைவிட்டகன்று” என்றுதொடங்கி “சடகோபன்மாறன்” என்றபதச்சேர்த்திக்குபாவம் ( அவர்களெல்லாருமித்யாதி ) இவ்விடத்திலே, “ அவனைவிட்டகல்வதற்கேயிரங்கி ” என்றது - * சடகோபனுக்கு விசேஷணமாகவும்; மேலே அந்வயமிடுகிறவிடத்தில் * ஆய்ச்சியர்க்கு விசேஷணமாகவும் கண்டுகொள்வது.

ப்ரளயாபத்ரக்ஷணம்சொல்லுகைக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார் ( இப்போதித்யாதி) இதுவென்றது - “அவனியுண்டுமிழ்ந்த” என்றத்தை. இத்தால் - ஆழ்வாரோடே சம்ஶ்லேஷித்தானென்றுகருத்து.

“அச்சொன்ன” என்கிறவிடத்தில், அகாரம் ஈஶ்வரவிசேஷணமாய், அம்மானையென்றபடி. இத்தால்பலிதம் (இப்பாசுரத்தையித்யாதி) ஆசைப்பட்டபேறுவது- உஜ்ஜீவநம். பதார்த்தங்கள் வ்யக்தங்களாகையாலே அந்வயம் காட்டுகிறார் (தொண்டரித்யாதி) “பூசல்-சொன்ன” என்றது - பூசலைச்சொன்னவென்றபடி............*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( மல்லிகை. )

𑌪𑌦𑍍𑌮𑌾𑌕𑍍𑌷𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌾, 𑌜𑌗𑌦𑌵𑌨𑌤𑌯𑌾, 𑌭𑌵𑍍𑌯𑌤𑌾𑌦𑍍𑌯𑍈𑌶𑍍𑌚, 𑌸𑌾𑌰𑌗𑍍𑌰𑌾𑌹𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌵𑍇𑌣𑍁𑌨𑌾𑌦𑍈𑌰𑍍𑌹𑍃𑌷𑌿𑌤𑌜𑌨𑌤𑌯𑌾, 𑌸𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑌤𑌾𑌨𑌾𑌥𑌜𑌾𑌤𑍇𑌃, । [illegible] ॥

(பத்மாக்ஷத்வப்ரஸித்யா) அல்லியந்தாமரைக்கண்ணனெம்மான் - “[illegible]” ( தஸ்யயதா கப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ ) என்கிறபடியே * கம்பீராம்பஸ் ஸமுத்பூத ஸும்ருஷ்டநாள ரவிகர விகசித புண்டரீகாமலாயதேக்ஷணனுகையாலும்; ( ஜகதவநதயா ) அகலிடம்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்தெங்குமளிக்கின்ற - லோகங்களை யெல்லாம் ஸ்ருஷ்டித்து ரக்ஷிக்குமவனுகையாலும் ; ( பவ்யதாத்யைஶ்ச ) கண்ணன்கள்வன்தனியிளஞ்சிங்கமெம்மாயன்-க்ருஷ்ணனுய்வந் தவதரித்து பவ்யனுகையாலும் ; ஆதிசப்தத்தாலே- ரஞ்சகத்வம் சொல்லப்படுகிறது. ( ஸாரக்ராஹித்வாத் ) தூவியம்புள்ளுடைத்தெய்வவண்டுதுதைந்தவெம்பெண்மையம்பூவிதாலோ - வண்டானது புஷ்பத்தை ஆத்தஸாரமாக்குமாபோலே, ஆஶ்ரிதருடைய ஹ்ருதயாதிகளை யபஹரித்து ஆத்தஸாரமாக்க வல்லனுகையாலும் ; ( வேணுநாதைர்ஹ்ருஷிதஜநதயா ) அவனுடைத்தீங்குழலீருமாலோ - “[illegible]” (ஶைலோக்யஶ்சஜலாம்பபூவ) இத்யாதிகளிற்படியே ஜங்கமஸ்த்தாவர விபாகமற வெல்லாரையும் வம்சநாதத்தாலே விக்ருதராக்கவல்லனுகையாலும் ; ( ஸ்வாங்கதாநாதஜாதே: ) சிவனொடுபிரமன் வண்டிருமடந்தைசேர்திருவாகம் - அந்யபரரான ப்ரஹ்ம ருத்ரர்களோடு நித்யாநபா

யிநியான பிராட்டியோடு வாசியறத் திருமேனியிலே யிடங்கொடுக்குமவ னுகையா லும் ; ( ஶ்யாமத்வாத் ) காரொக்குமேனி - வர்ஷுக வலாஹகம்போலே ஶ்யாமள மான வடிவையுடையனுகையாலும் ; (கவ்யசோரத்வதஃ ) அதுமணந்தகன்றநங்க ண்ணன்கள்வம்கண்ணனில்கொடிது-தன்னைக்காட்டிலு மாகர்ஷகமான நவநீதசௌ ர்யாதிகளையுடையனுகையாலும் ; ( ஸரஸஸ்மேரசேஷ்டத்வஹும்நா ) " தூதுசெய்க ண்கள்கொண்டொன்றுபேசித் தூமொழியிசைகள்கொண்டொன்றுநோக்கி - மாலையு ம்வந்ததுமாயன்வாரான்-" தனக்கு வஶம்வதங்களான கண்களாலும், குழலோ சையாலும், சரசசல்லாப வீக்ஷணுதிகளைச் செய்யவல்ல னுகையாலும், மற்றும் ம நோஹாரிசேஷ்டிதங்களை யுடையனுகையாலும் ; வண்டுவரைப்பெருமாளை வருகைக் குயோக்யமான சமயத்தையுடையனராக, "மல்லிகைகமழ்" என்கிறதசகத்திலே, ப்ரபந்நஜநகூடஸ்த்தரான வாழ்வார் ப்ரதிபாதித்தருளினுரொன்கிறுர். .........(கoக)

---

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

மல்லடிமைசெய்யுநாள்மாறன்னைக்கேட்கவவன்
சொல்லுமளவும்பற்றுத்தொன்னலத்தால் - செல்கின்ற
வாற்றாமைபேசியலமந்தமாறனருள்
மாற்றுகப்போகுமென்றன்மால். (அகூ)

( மல்லடிமைசெய்யுநாள் ) இதில், ஒருசந்த்யையி லுண்டான ஆழ்வாரபி சந்தியை யநுவதித்தருளிச்செய்கிறுர். எங்ஙனேயென்னில் ; * அறுக்கும் வினையி ல் பெரிய த்வரையோடே மநோரதித்தவர், த்வராநுகுணமாக ப்ராப்யபூமியிலேபு க்கு அவனை யநுபவிக்கப் பெறுவதற்குமுன்னே தத்ப்ராப்தி சூசகமான வடையாள ங்களைக்கண்டு நோவுபட்டுச் செல்லுகிறபடியை, பகலெல்லாம் பசுமேய்க்கப்போன க்ருஷ்ணன் மீண்டு வருவதற்கு முன்னே அவன்வரவுக் கடையாளமான மல்லிகை கமழ்தென்றல் முதலான வஸ்துக்களைக்கண்டு திருவாய்ப்பாடியி லிடைப்பெண்கள் அந்த க்ருஷ்ணவிரஹத்தாலே சந்த்யாசமயத்திலே நோவுபட்டுச்சொல்லுகிற துறை மேலேவைத் தருளிச்செய்கிற * மல்லிகை கமழ்தென்றலி லர்த்தத்தை "மல்லடி மை" இத்யாதியாலே யருளிச்செய்கிறுரொன்கை.

( மல்லடிமைசெய்யுநாள் மால்தன்னைக்கேட்க ) மல்லடிமை - சம்ருத்தமா ன வடிமை - பரிபூர்ணமான கைங்கர்யம், அதுசெய்யும் கால மெப்போதென்று சர் வேஶ்வரனைக்கேட்க. "நாளேலறியேனெனக்குள்ளன" என்றுகேட்க. ( அவன் சொல்லுமளவும்பற்றுத் தொன்னலத்தால் ) அவன் * மாலைநண்ணியிலே "மரண மானல்" என்று நாளவதியிட் டருளிச்செய்யுந்தனையும் பற்றுத ஸ்வாபாவிகமான பக்தியாலே. ( செல்கின்றவாற்றாமைபேசி யலமந்தமாறன் ) தமக்கு நடந்துசெல் லுகிற தரியாமையை யருளிச்செய்து அலமாப்பை யடைந்த ஆழ்வார். அதாவது - "மல்லிகைகமழ்தென்றல்," "புலம்புறுமணிதென்றல்," "தாமரைக்கண்ணுங்க

னிவாயும்," "வாடைதண்வாடை," "ஆபுகுமாலை," "அவனுடையருள்பெறும் போதரிதால்," "ஆருயிரளவன்றிக்கூர்தண்வாடை," "மதுமணமுகந்துகொண் டெறியுமாலோபொங்கிளவாடை," "ஊதுமத்தீங்குழற்கேயுய்யேன் நான்," "மாலையும்வந்ததுமாயன்வாரான்" என்று இவையடியாக பாதகபதார்த்தங்களாயுள்ள வெல்லாவற்றாலும் நொந்து, பிராட்டி தஸக்ரீவதர்ஸநாநந்தரம் மாருதிதர்ஸநாத்பூர் வம் மத்யே ராவணப்ரேரிதரான ராக்ஷஸீவச மாபன்னையாய் ஜீவநத்தில் நசையற் றாப்போலே, "யாமுடையாருயிர்காக்குமாறென்" என்கிறார். அதாவது - "புகலி டமறிகிலம்தமியமாலோ" என்றும், "இனியிருந்தென்னுயிர்காக்குமாறென்" என் றும், "பாவியேன்மனத்தேநின்றீருமாலோ" என்றும், "ஆவியின்பரமல்லவகை களாலோ" என்றும், "யாமுடையாருயிர்காக்குமாறென்" என்றும், "எவமினிப் புகுமிடமெவம்செய்கேனோ" என்றும், "ஆருக்கென்சொல்லுகேனன்னைமீர்காளா ருயிரளவன்றிக்கூர்தண்வாடை" என்றும், "ஆய்ச்சியர்க்கே யூதுமத்தீங்குழற்கேயு ய்யேன் நான்" என்றும், "யாதுமொன்றறிகில மம்மவம்ம" என்றும், "என் சொல்லியுய்வனிங்கவனைவிட்டே" என்றும், "அவனைவிட்டகன் றுயிராற்றகில் லா" என்றும், இப்படி ஆற்றாமையை யருளிச்செய்து, முன்னடிதோற்றமலமல ந்து நிலந்துழாவின வாழ்வாரென்கை. இப்படியான (மாறனருள்மாற்றாகப்போகு மென்றன்மால்) அதாவது - "அவனியுண்டுமிழ்ந்தவன்மேலுளைத்த வாயிரத்துள்ளி வைபத்துங்கொண்டு அவனியுளலற்றிநின் றுய்மின்தொண்டீர்" என்றுபக்ரமித்தவா ழ்வாரருள் அஜ்ஞாநத்துக்கு ப்ரதிபடமாக, என்னுடைய வஜ்ஞாநம் நிவ்ருத்தமாம். "பண்டைவல்வினைபாற்றியருளினன்" என்னக் கடவதிறே. * ஆபுகுமாலைக்கு அ வனுடையருள்பெறும்போதரிதாய்த்து. இங்கு (என்றன்மால் - மாறனருள்மாற்றா கப்போகும்) என்று நிஸ்சிதமாய்த்து......................................(அக)

ஒன்பதாம்பத்தில்-ஒன்பதாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக, திருவாய்மொழி-அக.—பாட்டு - கூஅக.

---

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஒன்பதாம்பத்து.

## பத்தாந்திருவாய்மொழி.

### மாலைநண்ணி - ப்ரவேஶங்கள்.

### ஆறுயிரப்படி.

(மாலைநண்ணி) "என்சொல்லியுய்வ னிங்கவனைவிட்டு" என்று விட்டுந்தலற்றுநிற்கச்செய்தே, அவனும் பசுமேய்த்துவந்துபுகுர அவர்களவனோடேகலந்து பரிமாறினாப்போலே, தம்முடைய வ்யஸநமும் தீரும்படி திருக்கண்ணபுரத்திலே அவனைக்கண்டு அவனோடேகலந்துபரிமாறி, தம்முடைய ப்ரீத்யதிசயத்தாலே அநுகூல ஜநங்களைக்குறித்து... ......*

### பன்னீராயிரப்படி.

பத்தாந்திருவாய்மொழியில், கீழே ப்ராப்யத்வரையாலே ஆர்த்தராய்க்கூப்பிட்டவர்க்கு ஈஶ்வரன் அர்ச்சாவதார சுலபனாய்க்கொண்டு திருக்கண்ணபுரத்திலே நிற்கிறநிலையைக்காட்டி யிவருடையவார்த்தியை சமிப்பித்த விவ்வாபத்ஸகத்வத்திலே சந்துஷ்டராய்; வடதளசாயித்வமஹோபகாரத்தையும், வஸ்தவ்யதேஶவைலக்ஷண்யத்தையும், விலக்ஷணவிபூதி யோகத்தையும், அதிசயிதபோக்யத்வத்தையும், பரமபதப்ரதத்வத்தையும், அநுபவவிரோதி நிராஸகத்வத்தையும், அநந்யப்ரயோஜந ஸுலபதையையும், ஸம்ஸாரநிவர்த்தகத்வத்தையும், காரணத்வத்தையும், ஶ்ரியஃபதித்வத்தையு மநுஸந்தித்து, ஏவம்ப்ரகாரவிஶிஷ்டனாய்க்கொண்டு ஆஶ்ரயணஸ்தலத்திலே யடிமைகொள்வதாக நிற்கிற கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வத்தையு மநுஸந்தித்து, அத்யந்தஹ்ருஷ்டராய், "பக்திபரராயும் ப்ரபத்திபரராயும் உக்திபரராயுங்கொண்டு அவனை யாஶ்ரயித்தும் அநுபவித்தும் அவன்திருவடிகளிலே கைங்கர்யம் பண்ணியும், நிவ்ருத்தஸாம்ஸாரிக ஸகலக்லேஶராய்க்கொண்டு வர்த்தியுங்கோள்", என்று, அவனுடைய கிஞ்சித்கார ப்ரதிஸம்பந்தித்வத்தால்வந்த பலரூபத்தை ப்ரதிபாதித்து நிகமிக்கிறார் ......................................................................*

### ஈடு.

* அறுக்கும் வினையிலே - அவனைப்பெறவேணுமென்று மநோரதமாய்ச்சென்றது; மநோரதசமயத்திலே அபேக்ஷித்தபடி கிடையாமையாலே மிகவும் க்லேஶப்பட்டபடி சொல்லிற்று - * மல்லிகைகமழ்தென்றலில்; அதுதான் ராத்ரி வ்யஸநமாய் நோவுபட்டபடியிறே. இப்படி

மநோரதித்துப்பெறுமையாலே நோவுபடுகிற இவருடைய வ்யவஸாதத்தையநுசந்தித்து, ஈஶ்வரன் "நீரோ இப்படி மநோரதிப்பீரும் அதுகிடையாமல் க்லேஶப்படுவீரும், உம்மைப்பெறவேணுமென்று மநோரதிப்போமும் நாமன்றோ, உம்மைக்கிடையாமையா லிழவுபட்டோமும் நாமன்றோ, உமக்கொருகுறையுண்டோ, * கலங்காப்பெருநகரம் கலவிருக்கையாயிருக்க அவ்விடத்தைவிட்டுத் திருக்கண்ணபுரத்திலே நாம்வந்து சந்நிதிபண்ணிற்று முமக்காகவன்றோ, சரீராவசாநத்திலே உம்முடைய வபேக்ஷிதம் செய்யக்கடவோம்" என்று சமாதாநம்பண்ண சமாஹிதராய், இவரும் ஹ்ருஷ்டராகிறார்; அவன் "ஒன்றுசெய்யக்கடவோம்" என்றால் அப்போதே பெற்றதாகநினைத்து ஹ்ருஷ்டராகலாம்படியிறே அவன்படியிருப்பது.

இப்படி ஹ்ருஷ்டராய், "அவன்படியிதுவானபின்பு, சர்வேஶ்வரன் சர்வஸமாஶ்ரயணீயனாய்க்கொண்டு திருக்கண்ணபுரத்திலே சந்நிதிபண்ணினான், எல்லாருமொக்க வவனையாஶ்ரயியுங்கோள், ஆஶ்ரயிக்குமிடத்தில் அவன்றிருவடிகளிலே பக்தியைப்பண்ணுங்கோள், பக்திக்குப்பரிகரமில்லாதார் ப்ரபத்தியைப்பண்ணுங்கோள், அதுக்கீடான வத்யவஸாயமில்லாதார் உக்திமாத்ரத்தையாகிலும் பண்ணுங்கோள், அவ்வளவேகொண்டு அவன்றான்கைவிடான், ஆனபின்பு எல்லாருமொக்க அவனையாஶ்ரயியுங்கோள்" என்று பரோபதேசத்திலே ப்ரவ்ருத்தராகிறார். மோஹித்துக்கிடந்தாராகில் கிடக்குமித்தனைபோக்கி, உணர்ந்தாராகில் பிறர்க்கு ஹிதஞ்சொல்லியல்லது நிற்கமாட்டார்.

"'சரீராவஸாநத்திலே உம்முடைய வபேக்ஷிதம் செய்யக்கடவோம்' என்று ஈஶ்வரன்சொன்னவிடமும், அதுகேட்டு இவர் ஹ்ருஷ்டரானவிடமும்கூடாது, 'ப்ராரப்தகர்மாவசாநத்திலே மோக்ஷமாகக்கடவது' என்றன்றோ வேதாந்தங்களில்வாஸநை" என்னில்; இத்திருவாய்மொழிதன்னிலே "பக்தியைப்பண்ணுங்கோள்" என்றும், "அதுமாட்டாதார் ப்ரபத்தியைப்பண்ணுங்கோள்" என்றும் சொல்லிற்றிறே. அதில், உபாசகனுகிற வதிகாரியைப்பற்றச்சொல்லுகிறது; இங்கு, ப்ரபந்நனுக்குச் சொல்லுகிறது; "தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே" (தஸ்யதாவதேவசிரம்யாவந்நவிமோக்ஷ்யே) என்கிற வாக்யமன்றோ இவ்வர்த்தத்தைச்சொல்லுகிறது. "'இதுதான் சரீராவசாநத்தைப் பற்றச் சொல்லுகிறதோ, கர்மாவசாநத்தைப்பற்றச்சொல்லுகிறதோ' என்றுவிசாரித்து, கர்மாவசாநத்தைப்பற்றச்சொல்லுகிறதென்று ஸித்தாந்தித்ததில்லையோ, அத்தோடு விரோதியாதோவிது" என்னில்; ந்யாயாநுக்ருஹீதமாயிறே வாக்யமர்த்த ப்ரத்யாயகமாவது-உபாஸகனுக்கு தான்பற்றினவுபாயம்முற்றி பலிக்கவேண்டுகையாலே அவ்வளவும் ந்யாயம்நடக்கும்;இவன்,முதலடியிலே, "என்னுடைய சர்வபரங்களுக்கும்கடவாய்நீயே" என்றுகொண்டு சர்வேஶ்வரன்பக்கலிலே பரந்யாஸம்பண்ணினவனிறே;

"இவன்றான் செய்கிறதொன்றுண்டாய் அது பக்வமாய்ப்பெறவேணும்" என்னும் விளம்பஹேதுவுமில்லை, இவன்றான் பரந்யாஸம்பண்ணினவீச்வரனுக்கு அசக்தியுண்டாய் அது விளம்பஹேதுவாகிறதுமன்று. ஆகவிப்படி ந்யாயங்கள் காட்டினவாறே இவனுக்கு சரீராவசாநத்திலே பேறுகைக்குத் தட்டில்லையிறே.

இனித்தான், "ஹமவஷஂவு வஷாஸாஹமவஜவோவஸா" (பகவந்தம்ப்ரபந்நாஸாபகவந்தமவாபஸா) என்று - மாதவிப்ரபத்திபண்ணி அநந்தரம் பெற்றுளாகச்சொல்லாநின்றதிறே. முக்கலோபார்க்யாநத்திலேவந்தவாறே "நரகாநுபவம்பண்ணுகிறவர்கள் பகவந்நாம ச்ரவணத்தாலே அநந்தரம் முக்தரானார்கள்" என்றதிறே; "அவதாரரஹஸ்யஜ்ஞாநமுடையவன் இஸ்ஸரீராவஸாநத்திலே பெறக்கடவன்" என்றேசொல்லாநின்றதிறே; "த்யக்த்வாதேஹம் புநர்ஜந்மநைதி" (த்யக்த்வாதேஹம்புநர்ஜந்மநைதி) "ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்றும் சொல்லாநின்றதிறே.

"ஆனால், ப்ரபத்திபண்ணினவநந்தரத்திலே பகவத்ப்ராப்தியாகவேண்டாவோ, 'இவ்விரோதியைப்போக்கி உன்திருவடிகளைத்தரவேணும்' என்றன்றோ விவனபேக்ஷிக்கிறது, பின்னையும் அநபிமதமானசரீரத்தோடே யிருக்கிறவிருப்பு கர்மசேஷத்தாலேயாவதோ ஈச்வரன்வைக்கவிருக்கிறானவதோ" என்னில்; ஈச்வரன்வைக்கிறானாகில் அவனுக்குச் சிலதோஷம் ப்ரசங்கிக்கும், அவன்றான் நம்விரோதியை நடுவேதுண்டித்து அவ்வருகே கொண்டுபோகிறேன் என்றுசொன்னதோடும் விரோதிக்கும்; ஆனபின்பு, கர்மவச்யரோபாதி சுகதுஃகாத்யநுபவ மிவனும் பண்ணியிருக்கையாலே கர்மத்தாலேயா மித்தனையன்றோ; இனி, கர்மம் நடையாடக்கடவதானால் அவ்வளவும் போகத்தட்டென்னென்னில்; அதுவேண்டா, அதிகாரிவிசேஷத்தாலே.

இவன் ப்ரபத்திபண்ணினவநந்தரம் முக்தனுமாகி விதுதன்னை நச்சுப்பொய்கையோபாதியாக நினைத்தஞ்சி ஆட்பற்றுறது; இனியிவனையிங்கே சிலநாளிருத்தவே, ஸ்ரீபீஷ்மரையிட்டு நாட்டுக்கு வெளிச்சிறப்பைப்பண்ணிக்கொடுத்தாப்போலே, இவன் சிலர்க்குபதேசித்தும், இவனுடைய வ்ருத்தங்கண்டு திருந்துவாருமாய், இங்ஙனே சிலநன்மைகளுக்குமுடலாயிருக்கும்; இனித்தான் "இவன்றன்னைத்தந்த சரீரமன்றோ" என்று இச்சர்மசரீரத்தை ஈச்வரன் தானாக வுபேக்ஷிக்கவுமாட்டான்.

இவன்றான் ப்ரபத்திபண்ணுகிற சமயத்திலே "இப்போதேவிரோதிபோய் உன்திருவடிகளைப்பெறவேணும்" என்னும் த்வரையு மிவனுக்குண்டாக சம்பாவனையில்லை, முகம் பழகினதாகையாலே "இத்தைவிட" என்றால் கடுக இசையான்; இனியொரு சரீரபரிக்ரஹம்பண்ணுதல் கர்ப்பவாசம்பண்ணுதல் செய்யாதொழியவேணுமென்னு மளவாய்த் திவனு

க்குண்டாகிலுள்ளது; ஆகையாலே தத்க்ரது ந்யாயத்தாலே அப்படியே பேறுமிருக்கும்; இவனுடையஙினைவையும்பற்ற, "இவன்முனிதிலே சாபலம்பண்ணியிருந்தானாகில் நாலுநாளிருந்திடுவானுக்கு" என்றிருக்கு மீஶ்வரன்.

"ஆனால், இங்கிருக்கிறநாலுநாளும் ஆதிவ்யாதிகளுக் கிடங்கொடாதபடி அல்லாதாரில் வ்யாவ்ருத்திதோற்ற இவனை சுகோத்தரனாக வையாதொழிவானென், நாட்டாரோபாதி ஒன்றையிழந்தபோதாக சோகித்தும் ஒன்றினுடைய லாபமுண்டானபோது ஹ்ருஷ்டனானுப்போலேயிருந்தும் போரும்படிக்கிடாகவைக்கிறதென்" என்னில்; இவன்முன் "இவ்விரோதியைப்போக்கி யுன்னைத்தரவேணும்" என்றே யபேக்ஷித்தது; இதுதான் தண்ணிதென்றறியாநிற்கச்செய்தேயும் விடமாட்டாதிருக்கிறவன், இதிலே சுகோத்தரமாக்கிவைக்குமன்று, "இதுதானே நன்றாயிருந்ததாகில் இன்னம்சிலநாளிதுதானே அநுவர்த்தித்திடுக" என்றிருக்குமிறே; இவனுடைய விச்சைக்கிடாக வைக்குமன்று இன்னமுமொரு சரீரத்திலே யிவனுக்கு ருசியுண்டாகவும்கூடுமே; ஆகையாலே, இவனுடையஹிதபரனாய் "இவனிருந்தபடியிருக்கிறான்" என்றிருக்கும். ஆகையாலே, முகம்பழகின இஶ்ஶரீரம் தன்னடையேகழிந்து இனியொருசரீரத்திலே யிவனுக்கு ருசிபிறப்பதற்குமுன்னே, ஈஶ்வரனுக்குக் காரியஞ்செய்துதலைக்கட்டலாயிருக்கும். முகம்பழகினது தன்னடையேகழிந்துகொடுநிற்கும்; மேல் வரப்புகுகிற தறியாமையாலே அதில் ருசியில்லை; "இதுதான்பொல்லாது" என்று போலியாகவறிந்தும் வைக்குமே. இவன்முதலிலே "இத்தைத்தவிர்த்துத்தரவேணும்" என்று ஒருவார்த்தைசொல்லிவைக்கையாலே, அவனுக்கபுருஷார்த்தம் செய்தானாகவும் வேண்டாவிறே. இனி சரமதசையிலே * காஷ்ட்டபாஷாணசந்நிபனாயிருக்குமிறே. ஆகையாலே முதற்சொன்னவார்த்தையைக்கொண்டு, இவன்விலக்கமாட்டாதவளவிலே ஈஶ்வரன்கார்யஞ்செய்து தலைக்கட்டும்.

"அசித்கல்பனாய்க்கிடக்கிறவன்றலையிலே ஒருதேவையிடேன், நானே நினைக்கக்கடவேன்" என்று சொல்லிவைத்தானிறே. "இஶ்ஶ்லோகத்வயமும் எம்பெருமானுடைய சர்வஸ்வம்" என்றுசொல்லக்கடவதிறே. [ஹ்ரிதைநஹி] [ஸ்த்திதேமநஹி] * நின்றவாநில்லாநெஞ்சமோரிடத்திலேநிற்பது. பட்டிதின்றுதிரியும் பசுவுடையவனுக்கு ஒன்றில் ப்ரவர்த்திக்கவொண்ணாதிறே; நெஞ்சைக்கொண்டு ப்ரவர்த்திக்கவேணுமிறே புருஷார்த்தம்பெறும்போதும்; "தஸ்யாஹம் நிக்ரஹம்மந்யே வாயோரிவ ஸுஷ்கரம்" (தஸ்யாஹம் நிக்ரஹம்மந்யேவாயோரிவஸுதுஷ்கரம்) என்றானிறே. நாட்டார் உர்வசீசாலோக்யத்துக்கு சாதநாநுஷ்ட்டானம் பண்ணாநிற்க, அவள்தான்வந்து உபஸ்த்தாநம்பண்ணாநிற்க, "நீயென்தாயன்றோ" என்று நமஸ்கரித்துக் கடக்கநிற்கவல்ல விரக்தனிறே இவ்வா

ர்த்தைசொல்லுகிறான். [ ஸஹஸ்வஸ்த்தேஶரீரே ] [ ஸஹஸ்வஸ்த்தேஶரீரே ] பரிணாமித்ரவ்யமான ஶரீரமு மொருநிலையிலேநிற்பது. [யாததாஸாம்யே ஸ்திதே] [தாதுஸாம்யேஸ்த்திதே] அதுக்குறுப்பாக தாதுக்களுமொன்று முடங்கி ஒன்றுநிமிருகையன்றிக்கே இவையுமெல்லாம் சமமாய், சரீரத்திலே யொருலாகவம்பிறந்து, சத்த்வம் தலையெடுத்தபோதாக நம்மையாவனொருவன் ஸ்மரிக்கிறான் - "நாமார், சரீரமாகிறவிது அசித்தாயிருந்தது, தேஹாதிரிக்தனாயிருப்பானொ ராத்மாவுளன், அவன்றான் ஸ்ர்வேஶ்வரனுக்கு சேஷபூதன், அவனைப்பெறுகை யிவ்வாத்மாவுக்கு மோக்ஷமாகிறது" என்று ஸ்மரித்து. [விஶ்வரூபஞ்சமாம்] [விஶ்வரூபஞ்சமாம்] குட்றுட்க்காலே முட்பாய்ந்தால்வரும் வ்யஸந மாத்மாவதாமாபோலே, இவற்றுக்குவந்ததொன்று தனக்குவந்ததாம்படி எல்லாவற்றையும் சரீரமாகவுடையனாயிருக்கிறவென்னை. [அஜம்] [அஜம்] இவனைப்போலே ஜந்மநிபந்தநமான கலக்கமின்றிக்கேயிருக்கையிறே. [ததஸ்தமித்யாதி] நடையாடித்திரியுமன்றிவனுக்கு முண்டிறே யிந்நினைவு; அசித்கல்பனாய்க்கிடந்தவன்றும் "இவன்நினைத்திலன்" என்று தேவையிடாதே நானவனையெப்போதும் நினைத்தபடியேநிற்பன். [மத்பக்தம்] [மத்பக்தம்] அடைகொடுபொழ்பொகடு மவனையோவவன்பற்றிற்று - நெடுநாள் பச்சையிடுவித்துக்கொண்டு கார்யகாலத்திலேவந்தவாறே பச்சையிடாதநாளையெண்ணி யகற்றுமவனையோபற்றிற்று. [நயாமிபரமாம்கதிம்] [நயாமிபரமாம்கதிம்] * கள்வன்கொல்லிற்பிராட்டியை அத்தவாளத்தலையையிட்டு மறைத்துக்கொடுபோனாப்போலே, தானே கையைப்பிடித்துக்கொடுபோமாய்த்து. ஆதிவாஹிகரைவரக்காட்டியாதல் பெரியதிருவடியை வரக்காட்டியாதல் கொடுபோகையன்றிக்கே, ஆதிவாஹிகரில் ப்ரதாநனான தானேகொடுபோம்.

## ஜீயர் அரும்பதம்.

மாலைநண்ணி ப்ரவேசம், * அறுக்கும்வினைதொடங்கி சங்கதியருளிச்செய்கிறார் (அறுக்கும்வினையித்யாதி) மிகுந்தக்லேசமாவ தென்னென்ன (அதுதானித்யாதி) இது ஆளவந்தார்நிர்வாஹத்திலே. நோவுபட்டபடியிறேயென்றது - நிரவதிக துஃகமன்றோ வென்றபடி. இவரைப்பெறவேணுமென்னும் மநோரதமும் இவரைக்கிடையாமையால் வந்தவிழவும் தன்னதென்னுமதுக்கு நியாமகம் காட்டுகிறார் (கலங்காப்பெருநகரமித்யாதி) "மரணமானால்" என்றதத்தைப்பற்ற (சரீராவசாநத்திலேயென்றது) அவன்சொன்னத்தைக்கொண்டு ஹ்ருஷ்டராகக்கூடுமோவென்ன (அவனென்றுசெய்யவித்யாதி.)

இப்படிஹ்ருஷ்டரானபின்பு எல்லாரு மிவ்விஷயத்தையிழக்கிற தென்னென்று தம்முடைய பரமக்ருபையாலே அவர்களுக்கு பகவத்ப்ராப்தி சாதநவிசேஷங்களை யருளிச்செய்கிறாரென்கிறார் (இப்படிஹ்ருஷ்டராயித்யாதி) அவன்படியிதுவானபின்பென்றது - இப்படிகுணாதிகனான பின்பென்றபடி. " தனதாளடைந்தார்க்கெல்லாம் - சரணமாகும் " என்றதத்தைப்பற்ற (சர்வசமாஶ்ரயணீயனாய்க்கொண்டென்

றது) "தொழுதெழுமினேதொண்டர்" என்றத்தைப்பற்ற (எல்லாருமொக்க வவனை யாஸ்ரயியுங்கோளென்றது) முதல் நாலுபாட்டையும்பற்ற (பக்தியைப்பண்ணுங் கோளென்றது) "சரணமாகும்" என்றுதொடங்கி மேலிற்பாட்டுக்களையும்பற்ற (ப்ர பத்தியைப்பண்ணுங்கோளென்றது) ( அத்யவசாயமில்லாதார் ) என்றவிடத்திலே, " விஶ்வாஸாயாஸஹ-ஆந்நாந்யஸநஹஜநயொாகௌரவெகொாவிஶெஷஃ " (விஶ்வாஸாயாஸபூம்நாந்யஸநபஜநயோர்க்கௌரவேகோவிஶேஷஃ) இத்யாத்யநுஸ ந்தேயம். "திருக்கண்ணபுரஞ்சொல்ல" என்றத்தைப்பற்ற (உக்திமாத்ரத்தையாகி லுமென்றது) உக்திமாத்ரத்திலே பலமுண்டோவென்ன (அவ்வளவேகொண்டித்யா தி) தம்முடையவநுபவத்தைவிட்டு பரோபதேசம் பண்ணுவானென்னென்ன (மோ ஹித்தித்யாதி.)

ப்ராரப்தகர்மாவசாநத்திலேயன்றோ மோக்ஷம், சரீராவசாநத்திலே கூடு மோவென்கிற சங்கையைப்பரிஹரிப்பதாக பூர்வபக்ஷாநுவாதம் (சரீராவசாநத்திலே யித்யாதி.) " ஹொமெநகவிதரொக்ஷபயிகாயஸம்பஜுதெ " ( போகேநத் விதரோக்ஷபயித்வாதஸம்பத்யதே ) என்கிற சூத்ரத்தைப்பற்ற (வேதாந்தங்களில்வா சனையென்றது) வாசனையென்றது-சொல்லப்பட்டதென்றபடி. இதரே - பூர்வோத் தராகவ்யதிரிக்தே - ப்ராரப்தே புண்யபாபே, போகேந - அநுபவேந, க்ஷபயித்வா, அத - தத்பலபோக சமாப்த்யநந்தரம், ப்ரஹ்மசம்பத்யதே, துஶப்தஃ பக்ஷவ்யாவ்ருத்யர்த்தஃ இதி சூத்ரார்த்தஃ. அதில் உபாசகனுகிற வதிகாரியைப்பற்றச்சொல்லுகி றதென்றது - அவ்விருவரிலும்வைத்துக்கொண்டு, வேதாந்தங்களிலே, ப்ராரப்தகர் மாவசாநத்திலே மோக்ஷமென்றது உபாசகனுன வதிகாரியைப்பற்றச்சொல்லுகிற தென்றபடி. இங்கு ப்ரபந்நனுக்குச் சொல்லுகிறதென்றது - இத்திருவாய்மொழியில் "சரீராவசாநத்திலேமோக்ஷம்" என்றது ப்ரபந்நனுக்குச்சொல்லுகிறதென்றபடி; ஆ கையாலே விரோதமில்லையென்றுகருத்து. அதிலென்றது-வேதாந்தத்திலென்றபடி. இங்கென்றது - இத்திருவாய்மொழியிலென்றபடி. " உவாயஹக்திஃவ்ராரஹவ்யதிரிக்தாவநாஶிநீ । ஸாய்யஹக்திஸ்துஸாஹந்த்ரீ வ்ராரஹஸ்யாவிஹூயஸீ " ( உபாயபக்திஃப்ராரப்தவ்யதிரிக்தாகநாஶிநீ । ஸாத்யபக்திஸ்துஸாஹந்த்ரீப்ரா ரப்தஸ்யாபிபூயஸீ ) இத்யாத்யநுஸந்தேயம். சாதயபக்திஃ-ப்ரபத்திரித்யர்த்தஃ. ப்ரப ந்நனுக்கு சரீராவசாநத்திலே மோக்ஷமென்னுமதுக்கு ப்ரமாணமேதென்ன (தஸ் யேத்யாதி) சாந்தோக்யே.

இதுதான் - இந்தஶ்ருதிதான். சித்தாந்தித்ததில்லையோ, ஆகையாலே எம்பெ ருமானுர் திவ்யசூக்தியோடு விரோதியாதோவென்னிலென்றபடி. இது-சரீராவசா நத்திலே மோக்ஷமென்கிறவிது. ந்யாயாநுக்ருஹீதமாயிறே வாக்யமர்த்தப்ரத்யாயக மாவதென்றது - தர்க்கத்தோடேகூடினுலிறே வாக்யமர்த்த நிஶ்சாயகமாவதென்ற படி. அந்தர்யாயத்தை யுபபாதிக்கிருர் (உபாஸகனுக்கித்யாதிவாக்யத்வயத்தாலே) முற்றி-பக்வமாய். அவ்வளவும்-கர்மாவசாநத்தளவும். இவன்றான் பாந்யாஸம்பண் ணினுல் சரீராவசாநத்திலே பேருய்விடுமோவென்ன வருளிச்செய்கிருர் (இவன்று னித்யாதிவாக்யத்வயத்தாலே) (ந்யாயாநுக்ருஹீதமாயிறே) இத்யாதிவாக்யந்தொட ங்கி, (சரீராவசாநத்திலே பேருகைக்குத் தட்டில்லையிறே) என்னுமளவுக்கும் தாத்பர் யம்-உபாசகனுக்கு விளம்பஹேதுவுண்டாகையாலே ப்ராரப்தகர்மாவசாநத்தளவும் நடக்கும், ப்ரபந்நனுக்கு விளம்பஹேதுவில்லாமையாலே இந்த சரீராவசாநத்திலே மோக்ஷமாகக்கடவது; ஆகையாலே, இந்த ஶ்ருதி இந்ந்யாயாநு க்ருஹீதையாய்க்

கொண்டு அதிகாரிபேதேந அர்த்தத்வயத்தையும் காட்டக்கடவதாகையாலே எம்பெருமானார் திவ்யசூக்திக்கு விரோதமில்லையென்றபடி.

ப்ரபந்நனுக்கு சரீராவசாநத்திலேமோக்ஷம் (என்னுமதுக்கு ப்ரமாணங்காட்டி, அநுஷ்டாநமும் காட்டுகிறார் (இனித்தான் பகவந்தமித்யாதி) “ அயாத்ரா யவீஸாவிதவஸ்தப்வாஸ-துஷ்கரம் । ஸமவந்தம்ப்ரவந்நாஸாஸமவந் வோவஸா ” ( அதாத்ரமாதவீஸாபிதபஸ்தப்த்வாஸுதுஷ்கரம் । பகவந்தம்ப்ரபந்நாஸாபகவந்தமவாபஸா ) இதிகாருடபுராணே ஸ்ரீரங்கமாஹாத்ம்யே த்ருதியாத்யாயே. பகவந்நாமச்ரவணத்தாலேயென்றது - ப்ரபத்திக்கு முபலக்ஷணம். அவதாரரஹஸ்யஜ்ஞாநமாவது - ஈஸ்வரனுடையஜந்மம் கர்மநிபந்தநமன்று, அநுக்ரஹநிபந்தநமென்றறிகை. எங்ஙனேயென்ன (த்யக்த்வேத்யாதி) “ஜந்மகர்மசமெதிவ்யம்” (ஜந்மகர்மசமேதிவ்யம்) இத்யாதி, கீதாயாம். “தேஹாவஸாநத்திலேமோக்ஷம்” என்றதுக்கு - “ தஸ்ய தாவதெவ ” (தஸ்யதாவதேவ) இத்யாதிப்ரமாணம் தவிர ப்ரமாணத்வயம் (த்யக்த்வாதேஹமென்றும், சர்வபாபேப்ய: என்றும்) “ த்யக்த்வா தெஹம் ” (த்யக்த்வாதேஹம்) என்றது - உபாசகவிஷயமானாலும், ப்ரபந்நனுக்கும் கிம்புநர்ந்யாயத்தாலே சித்திக்கையாலே, சரீராவசாநத்திலே மோக்ஷமென்கிற மாத்ரத்துக்கு ப்ரமாணமாகக்குறையில்லை.

சங்காநுவாதம் (ஆனாலித்யாதி.) ஆனாலென்றது - இவனுக்கு விளம்பஹேதுவில்லையேயானாலென்றபடி. ஆகிலும் இவனுக்கு ருசியில்லாமையாலே யிழக்கிறானென்கிற சங்கையை விவக்ஷித்து, இவனுக்கு ருசியிலும் குறைத்தலில்லையென்கிறார் (இவ்விரோதியையித்யாதி.) பரிஹாரம் (ஈஸ்வரனித்யாதி.) சில தோஷம் ப்ரசங்கிக்குமென்றது - சரணாகதனானபின்பு மிவன் து:கத்தை யநுபவிக்கிறான் என்றிருந்தானாகில் நைர்க்ருண்யரூபதோஷம் வருமென்றபடி. ஆகையாலே, ஈஸ்வரன் வைக்கிறானென்னப்போகாதென்றபடி.

சங்காந்தராநுவாதம் (இனிகர்மமித்யாதி.) அவ்வளவும் - ப்ராரப்தகர்மாவசாநத்தளவும். பரிஹாரம் (அதுவேண்டாவித்யாதி.)

ஆர்த்தப்ரபந்நனென்றும் த்ருப்தப்ரபந்நனென்று மிரண்டுவகையாகவிவக்ஷித்து, ஆர்த்தனை வைக்கைக்கு மூன்றுஹேதுவும் த்ருப்தனை வைக்கைக் கொருஹேதுவுமாய் நாலுஹேதுவருளிச்செய்கிறார் (இவன் ப்ரபத்திபண்ணினவித்யாதி.) நச்சுப்பொய்கை - விஷஹ்ரதம். ( சரமசரீரத்தைஈஸ்வரன்தானாகவுபேக்ஷிக்கமாட்டான்) என்கிறவிடத்திலே, “ ஸம்யாம்யயாமி ஸம்தயெப்ர ஹ்மணெஷ: । ரமெதெதஸ்மிந்நுதஜீர்ணெஶயாநெ । நைநம்ஜஹாத்யஹஸ்ஸுபூர்வ்யெஷு ” ( ஸம்தாம்சயாக்ஸம்ததேப்ரஹ்மணேஷ: । ரமதேதஸ்மிந்நுதஜீர்ணேஶயானே । நைநம்ஜஹாத்யஹஸ்ஸுபூர்வ்யேஷு ) என்கிற ஶ்ருதியை ப்ரமாணமாக ப்ரசாதிப்பர்.

கீழ், ஆர்த்தவிஷயமாக ஹேதுத்ரய மருளிச்செய்து, த்ருப்த விஷயமாக வொருஹேது ( இவன்றான் ப்ரபத்தியித்யாதி, நாலுநாளிருந்திடுவானுக்கு என்றிருக்குமீஸ்வரன் என்னுமளவும். ) சம்பாவநையில்லாமையைக் காட்டுகிறார் ( முகம்பழகினவித்யாதி. ) ஆனாலிவனெதுக்கிசையுமென்ன ( இனியொருவித்யாதி. ) கர்ப்பவாசமின்றிக்கே ப்ருதுசக்ரவர்த்தி முதலானார்க்கு சரீரபரிக்ரஹமுண்டாகையாலே ( இனியொரு சரீரபரிக்ரஹம்பண்ணுதல் கர்ப்பவாசம்பண்ணுதல் ) என்று விகல்பித்தருளிச்செய்கிறார். தத்க்ரதுந்யாயமாவது - இவன் யாதொருபடி சங்கல்பித்தான்;

அப்படியே பலிக்கை. கீழுக்தமான ஹேதுத்ரயத்தையும் சமுச்சித்ய வருளிச்செய்கிறார் (இவனுடையவித்யாதி.) (நினைவையும்) என்ற சகாரம் - கீழில் ஹேதுத்ரயத்தையும் சமுச்சயிக்கிறது. அதாவது - "இவனுடையநினைவையும்பற்ற" என்கையாலே கீழ்ச்சொன்ன மூன்றுஹேதுக்களோடே நினைவுமொருஹேதுவென்றபடி.

சங்காந்தரம் (ஆனாலித்யாதி.) இவனை இஶ்ஶரீரத்தோடே யிருக்கிறநாள் சுகோத்தரமாக்கிவையாமைக் கிரண்டுஹேதுவருளிச்செய்யாநின்றுகொண்டு, இப்படிவைக்கிறது மிவனுடைய ஹிதார்த்தமென்கிறார் (இவன்றானிவ்விரோதியையித்யாதி, இருந்தபடியிருக்கிறானென்றிருக்குமென்னுமளவும்.) சுகோத்தரமாகவைக்கில் இஶ்ஶரீரத்தோடே சிலநாளிருக்கவேணுமென்கிற மாத்ரமன்றிக்கே சரீராந்தரங்களையு மபேக்ஷிக்குமென்கிறார் (இவனுடைய விச்சைக்கீடாக வித்யாதி.) ஆகையாலே, கீழ்ச்சொன்ன ஹேதுத்வயத்தாலே சுகோத்தரமாக வையாமைக்கு பரிஹாரங்களருளிச்செய்து, ஈஶ்வரனுக்கும் கார்யம்செய்யலாயிருக்குமென்கிறார் (ஆகையாலே முகம்பழகினவித்யாதி.) ஆகையாலே - கீழ்ச்சொன்ன ஹேதுத்வயமடியாக சுகோத்தரமாக வையாமையாலே யென்றபடி. கழிந்துகொடு நிற்கும்படியையும் ருசிபிறவாதபடியையுங் காட்டுகிறார் (முகம்பழகினவித்யாதிவாக்யத்வயத்தாலே.) ஹேத்வந்தரம் (இதுதானித்யாதி.) போலியாக வறிந்தும் வைக்குமே - இந்தஹேதுத்ரயத்தாலும் ஈஶ்வரனுக்குக் கார்யஞ்செய்து தலைக்கட்டலாமென்று கருத்து. இவனபேக்ஷியாதிருக்க சரீராவசாநத்திலே கார்யஞ் செய்யும்போது அபுருஷார்த்தமாகாதோவென்ன (இவன்முதலிலேயித்யாதி.) ஸத்வம் தலையெடுத்தபோது "இத்தைத்தவிர்த்துத்தரவேணும்" என்று முதலிலே சொன்னானேயாகிலும், சரமதசையிலே "வேண்டாம்" என்று விலக்கினால் கார்யம் செய்யலாமோவென்ன (இனி சரமேத்யாதி.) "இவன்முதலிலே" இத்யாதிவாக்யத்தை நிகமிக்கிறார் (ஆகையாலே முதற்சொன்னவித்யாதி.)

காஷ்ட்டபாஷாணசந்நிபனான தசையிலே கார்யம்செய்யுமோவென்ன (அசித்கல்பனாயித்யாதி.) அதவா, ஆனால் அந்திமஸ்ம்ருதி வேண்டாவோவென்ன (அசித்கல்பனாயித்யாதி) என்னவுமாம். ஶ்லோகத்வயத்துக்கு மர்த்த மருளிச்செய்வதாக, இதின் சீர்மையையருளிச்செய்கிறார் (எம்பெருமானுடையவித்யாதி.) "மநஸி-ஸ்த்திதே" என்றதுக்கர்த்தம் (நின்றவாநில்லாவித்யாதி) திருமொழி. நின்றவாநில்லா நெஞ்சினையுடையேன் - ஒருவிஷயத்திலு மரைக்ஷணம் கால்தாழாத நெஞ்சையுடையேனென்றபடி. "வெறியேவேண்டி" இத்யாதி - பாட்டடி. நிற்கவேணு மென்னும் நிர்ப்பந்தமேதென்ன (பட்டிதின்றித்யாதி.) பட்டிதின்று திரியும் பசுவுடையவனுக்கென்றது - ஸ்வேச்சாசஞ்சாரம் பண்ணிக்கொண்டு திரிகிறபசுப்போலே, ஓரிடத்திலே அரைக்ஷணம் நில்லாத நெஞ்சையுடையவனுக் கென்றபடி. நெஞ்சுதான் வேணுமோவென்ன (நெஞ்சைக்கொண்டித்யாதி.) நெஞ்சை நியமிக்கவருந்தலோவென்ன (தஸ்யாஹமித்யாதி) ஸ்ரீகீதாயாம், "[Grantha text] [Grantha text]" (சஞ்சலம்ஹிமநஃக்ருஷ்ண ப்ரமாதிபலவத்த்ருடம்) இதி பூர்வார்த்தம். ஸ்ரீவராஹபுராணே, "[Grantha text]". (ஸ்த்திதேமநஸி) இத்யாதி.

இவன்சொன்னால் ப்ரமாணமாமோவென்ன (நாட்டாரித்யாதி.) "புரூரவா என்கிற ராஜா உர்வசீசாலோக்யத்துக்கு சாதநாநுஷ்ட்டாநம்பண்ணிப் பெற்றான்" என்கிற கதையை யநுசந்திப்பது. (நீ யென் தாயன்றோ) என்கிறவிடத்தில், "[Grantha text] । [Grantha text]" (த்ருஷ்ட்வைவசோர்வஶீம்

ப்ராப்தாம்லஜ்ஜாவ்ருதவிலோசநஃ। பாதாபிவந்தநம்க்ருத்வா குருபூஜாம்ப்ரயுக்தவாந்) என்கிறதநுசந்தேயம்.

தாதுக்கள் - வாதபித்த ஶ்லேஷ்மங்கள். ஸ்மரணப்ரகாரத்தைக்காட்டுகிறார் (நாமாரித்யாதி.) "விஶ்வரூபஞ்சமாமஜம்" (விஶ்வரூபஞ்சமாமஜம்) என்றது - * நாராயணசப்தார்த்தம். "விஶ்வரூபம் - மாம்" (விஶ்வரூபம் - மாம்) என்று ஸ்வாமித்வ சௌலப்யங்களைச் சொன்னது, வாத்ஸல்ய சௌசீல்யங்களுக்குமுபலக்ஷணம். "அஜம்" என்று - ஜந்மநிபந்தநமான கலக்க மில்லாமையைச் சொல்லுகையாலே, ஜ்ஞாநசக்த்யாதிகளைச் சொல்லுகிறது. பிறக்கை சுட்டியிறே சேதநனுக்கு ஜ்ஞாநாதிகளொளி மழுங்குகிறது. "ததஃ" என்றது - ஹேதுபரம். "காஷ்டபாஷாணஸந்நிபம் - ம்ரியமாணம் - அஹம்ஸ்மராமி" (காஷ்ட்டபாஷாணஸந்நிபம் - ம்ரியமாணம் - அஹம்ஸ்மராமி) என்றதுக்கர்த்தம் (நடையாடியித்யாதி வாக்யத்வயத்தாலே.) இந்நினைவு - "ஸ்மராமி" என்கிறநினைவு. "ஸ்மராமி" என்கிற வர்த்தமாநார்த்தம் (எப்போதும் நினைத்தபடியே நிற்பனென்றது.) "மத்" என்றதுக்கு பாவம் (அடையித்யாதி.) அடைகொடுபோழ்போகடுகை-ரக்ஷிக்கிறோமென்று கைக்கொண்டு கைவிடுகை. விவரணம் (நெடுநாளித்யாதி.) "நயாமி" என்றதுக்கர்த்தம் (கள்வனித்யாதி.) அத்தவாளத்தலை - முந்தானையிற்றலை.

ஏதத்வ்யாவர்த்யம் (ஆதிவாஹிகரையித்யாதி.) ஆதிவாஹிகரில் ப்ரதாநனுணவென்றது - "ஹார்த்தாநுக்ருஹீதஃ" (ஹார்த்தாநுக்ருஹீதஃ) என்றத்தைக் கடாக்ஷித்து. ஹார்த்தன் - சர்வேஶ்வரன்.............................................*

---

## பத்தாந்திருவாய்மொழி.

# முதற்பாட்டு.

மாலைநண்ணித்தொழுதெழுமினோவினைகெடக்
காலைமாலைகமலமலரிட்டுநீர்
வேலைமோதுமதிள்சூழ்திருக்கண்ணபுரத்
தாலின்மேலாலமர்ந்தானடியிணைகளே.

### ஆறாயிரப்படி.

சர்வ சமாஶ்ரயணீயனைக்கொண்டு திருக்கண்ணபுரத்திலே யெழுந்தருளியிருந்தவெம்பெருமானை ரக்ஷகனாகப்பற்றி அவன்றிருவடிகளைக் கமலமலரிட்டுநீர்வினைகெடத்தொழுதெழுமின், இதுக்கொரு காலநியமாபேக்ஷையுமில்லையென்கிறார். ..........................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், வடதளசாயியான மஹோபகாரகன் திருவடிகளிலே ப்ரேமயுக்தராய்க்கொண்டு சர்வகாலங்களிலும் கைங்கர்யம் பண்ணுங்கோளென்று இத்திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யமான வர்த்தத்தை சங்க்ரஹித்தருளிச்செய்கிறார்.

வேலை - திரைக்கிளப்பத்தையுடைய சமுத்ரத்தாலே. மோதும் - மோதப்பட்ட. மதிள்சூழ் - மதிள்சூழ்ந்த. திருக்கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே வர்த்திக்குமவனாய். ஆலின்மேலாலமர்ந்தா னடியிணைகள் - வடதளசாயியாய்க்கொண்டு ஜகத்தைரக்ஷித்த அகடிதகடநா சமர்த்தனானவன் திருவடிகளை யுத்தேசித்து. மாலை - ப்ரேமபாரவஶ்யத்தை. நண்ணி - பெற்றுக்கொண்டு, காலைமாலை - அஹோராத்ரவிபாகமற. ஆதாரநுரூபமாக, கமலமலர் - விலக்ஷணமான தாமரைப்பூக்களை. இட்டு - பணிமாறி. நீர் - நீங்கள். வினை - உங்களநுபவாலாபக்லேசம். கெட - தீரும்படி. தொழுதெழுமினோ - "ப³ஸாஞ்ஜலிபுடா:" (பத்தாஞ்சலிபுடா:) என்கிறபடியே சேஷத்வாநுரூபவ்ருத்தியைப்பண்ணி உஜ்ஜீவியுங்கோள்.

மேலாலென்றது - ஆலின்மேலென்றபடி. ஆல் - அசையாய்க்கிடக்கிறது. *

## ஈடு - முதற்பாட்டு.

இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற வாஶ்ரயணத்தை சங்க்ரஹேண வருளிச்செய்கிறார்.

(மாலைநண்ணித்தொழுதெழுமினோ) சர்வேஶ்வரன்றிருவடிகளைக்கிட்டி யாஶ்ரயித் துஜ்ஜீவிக்கப் பாருங்கோள். மாலென்று - ஸ்நேஹகார்யமான வ்யாமோஹமாய், மாலையுற்றென்னவுமாம். பக்தியுக்தராயென்றபடி. (தொழுதெழுமினோ) என்கிறார், "தொழுதெழு" என்கிற தம்முடைய வாஸனையாலே. "அருளினன்" என்று ப்ரபத்தியைப்பற்றி யிழிந்தவராகையாலே, தம்வாஸனைதோற்றச்சொல்லுகிறார். (எழுமினோ) சர்வேஶ்வர னிவ்வாத்மவர்க்கத்துக்கெல்லாம் சேஷியாய் அவனைக் குறித்து சேஷத்வாகார மெல்லார்க்கு மொத்திருக்கையாலே பலர்க்குமாகச் சொல்லுகிறார். (வினைகெட) பகவத்ப்ராப்தி விரோதிவர்க்க மென்னுதல், * மல்லிகைகமழ் தென்றலில் விரஹக்லேசந் தீரும்படி யென்னுதல். (காலைமாலை) ஆஶ்ரயணத்துக்குக் காலநியதி யில்லையென்கை. "ஆதிநடுவந்திவாய்" என்கிறபடியே சர்வகாலத்துக்கு முபலக்ஷணம். (கமலமலரிட்டு) சர்வபுஷ்பங்களுக்கு முபலக்ஷணம். நீங்கள் விரும்பின ப்ராக்ருதத்ரவ்யமேயமையுமென்கை. (நீர்) அதிகாரிகளும் முன்புத்தை நீங்களேயமையும். (வேலையித்யாதி) சமுத்ரமணித்தாகையாலே திரைகள்வந்து மோதாநின்றுள்ள மதிளாலே சூழப்பட்டிருந்துள்ள திருக்கண்ணபுரத்திலே. ஶ்ரமஹரமான தேசமென்கை. (ஆலின்மேலாலமர்ந்தான்) சகலலோகங்களையும் வயிற்றிலேவைத்து ஒருபவனான வாலந்தளிரின்மேலே கண்வளர்ந்தவன். உங்கள் விரோதிநிரஸநங்கள் துர்க்கடங்களே யாகிலும் கடிப்பிக்கவல்லவனென்கை. அவனடியிணைகளை - இறைஞ்சுமின். (ஆலின்மேலாலமர்ந்தான்) ஆல் - நீரும், இடமும். நீரின்மேலாலென்றுமாம், ஆலின்மேலிடத்தென்றுமாம். ஆல் - செய்யுளின்பம். ...............*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (மாலையித்யாதி.) இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற வாஶ்ரயணமாவது - உபாஸநமுகத்தாலும் ப்ரபத்திமுகத்தாலும் அவனையடைகை.

"ஆலின்மேலாலமர்ந்தானை - மாலினுடைய - அடியிணைகளை - நண்ணித் தொழுதெழுமினோ" என்றந்வயித்து, ப்ரபத்திபரமாக வர்த்தம் ( சர்வேஶ்வரனித்யாதி. ) "மாலை" என்கிற ஐகாரம் அவ்யயம். "மாலைநண்ணி" என்றதுக்கு பக்திபரமாக வர்த்தாந்தரம் ( மாலென்றித்யாதி. ) ஸ்நேஹகார்யமான வ்யாமோஹத்தை பக்தியென்கிறது, காரணே கார்யோபசாரம் பண்ணுகிறதென்றபடி. ஆயாச சாத்யபக்தியை, "தொழுதெழுமினோ" என்று லகுவாகச் சொல்லுவானென்னென்ன (தொழுதெழுமினோவித்யாதி.) விவரணம் (அருளினனித்யாதி.) அதாவது- "அருளினன்" என்று நிர்ஹேதுக பகவத்க்ருபை யொன்றையே யவலம்பித்து சர்வேஶ்வரனைப்பற்றின வாஸனை தோற்றவென்றபடி. "எழுமினோ" என்கிற பஹுவசனார்த்தம் ( சர்வேஶ்வரனித்யாதி. ) பக்திபரமானபோது, "வினை" என்றதுக்கர்த்தம் ( பகவத்ப்ராப்தீத்யாதி. ) ப்ரபத்திபரமானபோது அர்த்தாந்தரம் ( மல்லிகையித்யாதி. ) அதவா, அர்த்தத்வயமும் பக்திபரயோஜனையிலே யாகவுமாம்; அப்போது, விரஹக்லேசம் தீரும்படி யென்றது - பக்திமான்களுக்கு விரஹக்லேசமில்லாதிருக்கச்செய்தேயும் தம்முடைய வாஸனையாலே யருளிச்செய்தாரென்றபடி.

பக்திமானுக்கு, "ப்ராதர்நிஶிதயாஸந்த்யாமத்யாஹ்நாதிஷுஸம்ஸ்மரந் । நாராயணமவாப்நோதிஸத்ய:பாபக்ஷயாந்நர:" ( ப்ராதர்நிஶிததாஸந்த்யாமத்யாஹ்நாதிஷுஸம்ஸ்மரந் । நாராயணமவாப்நோதி ஸத்ய:பாபக்ஷயாந்நர: ) என்று - காலையும் மாலையு மாஶ்ரயிக்கவேணும். ப்ரபத்திபரமானபோது "காலைமாலை" என்றதுக்குக் கருத்தேதென்ன ஆஶ்ரயணத்துக்கித்யாதி. ) அதெப்படி யென்ன ( ஆதிமத்யேத்யாதி ) முதலும் நடுவும் முடிவுமான சர்வகாலங்களிலுமென்றபடி. இரண்டாந்திருவந்தாதி எழுபத்துமூன்றும்பாட்டு, "ஆய்ந்துரைப்பன்" இத்யாதி. கமலமலர்வேணுமென்கிற நிர்ப்பந்தமென்னென்ன ( சர்வபுஷ்பேத்யாதி; ) "கள்ளார்துழாயும்" இத்யாத்யநுசந்தேயம். இத்தால் பாவம் ( நீங்களித்யாதி. )

வேலை - சமுத்ரம். திரைகள் மோதவென்றது - அர்த்தாத்ஸித்தம். "வேலை மோதும்" என்று விசேஷித்ததுக்கு பாவம் ( ஶ்ரமஹரமானவித்யாதி. ) இத்தால்- ஆஶ்ரயணஸௌகர்யம் சூசிதம்.

பவனை - பவனை - உண்டாகாநிற்கிற, ஆலின்மேல் - ஆலந்தளிரின் மேலே. இது சொன்னதுக்கு பாவம் ( உங்கள்விரோதியித்யாதி. ) அர்த்தாந்தர கதநத்துக்காக ப்ரதீகோபாதாநம் ( ஆலின்மேலித்யாதி. ) ஆலின்மேல் - ஜலத்தின்மேலே, ஆலமர்ந்தான் - ஆலிலையிலே யமர்ந்தானென்னுதல்; "ஆல்" என்று - இடமாய், ஆலிலையின்மேலிடத்தே யமர்ந்தானென்னுதல் என்றர்த்தத்வயம். இவ்விடத்தே பெரியஜீயர் வ்யாக்யாநம்பண்ணாநிற்கச்செய்தே, "ஆலென்று" ஜலத்தைவசிக்கும்படியேதோ" என்று விசாரியாநிற்க, கந்தாடைநாயன் "ஆலாங்கட்டி என்னக்கடவதே" என்ன, ஜீயருகந்தருளினாராம். "ஆல்" என்று ஜலத்தைச் சொல்லுமோவென்ன வருளிச்செய்கிறார் ( ஆல்செய்யுளின்பமென்று. ) செய்யுளின்பம்-சாஸ்த்ரஸித்தமான பேச்சு. நிகண்டு சித்தப்பேச்சு, திசைச்சொல், வழக்கச்சொல், செய்யுட்சொல் என்று மூன்றுவகையாயிருக்குமிறே; அதில், திசைச்சொல்லாவது- தேசபாஷை; வழக்கச்சொல்லாவது - வ்யாவஹாரிகபாஷை; செய்யுட்சொல்லாவது - சாஸ்த்ரபாஷை என்று தமிழர் நிகண்டுவைச் சொல்லுகிறது.

"மால்" என்று - சர்வேஶ்வரனென்றபக்ஷத்தில், வேலைமோதும் என்று தொடங்கி ஆலமர்ந்தானை - மாலின் - அடியிணைகளை - நண்ணி - காலைமாலைகமல

மலரிட்டுநீர் - வினைகெட - தொழுதெழுமினோ என்றந்வயம்; "மாலை" என்கிறவிடத்தில், ஐகாரம் அவ்யயம். "மால்" என்று பக்திபரமானபோது, நீர் - காலைமாலைகமலமலரிட்டு - வினைகெட - மாலைநண்ணித் தொழுதெழுமினோ - வேலைமோதும் என்றுதொடங்கி, அடியிணைகளை - கள்ளவிழும் மலரிட்டு நீரிறைஞ்சுமின் என்றந்வயம்.......................................................................................*

---

# இரண்டாம்பாட்டு.

கள்ளவிழுமலரிட்டுநீரிறைஞ்சுமி
னள்ளிசேரும்வயல்சூழ்கிடங்கின்புடை
வெள்ளியேய்ந்தமதிள்சூழ்திருக்கண்ணபுர
முள்ளிநாளுந்தொழுதெழுமினோதொண்டரே.

## ஆறுயிரப்படி.

(கள்ளவிழும்) அவன்றிருவடிகளைக் கள்ளவிழும் மலரிட்டு நீரிறைஞ்சுமிடத்தில், அவற்றை நெஞ்சாலே நினைத்துக்கொண்டு நாளுமிறைஞ்சுமி னென்கிறார். ........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவன் வர்த்திக்கிறதேசத்தை யாராதித்து அதினுடைய க்ஷேமவத்தையை யநுசந்தித்து சுகிகளாய் வர்த்திக்கப் பாருங்கோளென்கிறார்.

தொண்டர் - அநுபவசாபலமுடைய. நீர் - நீங்கள். கள் - மதுவை. அவிழும் - மலருகிற. மலரிட்டு - பூக்களைக்கொண்டு. இறைஞ்சுமின்-ஆராதியுங்கோள். போக்யசம்ருத்தியாலே, நள்ளி - க்ஷுத்ரமான பெண்நண்டுகளகப்பட. சேரும்-சேர்ந்துவர்த்திக்கிற. வயல் - வயல்களாலே. சூழ் - சூழப்பட்ட. கிடங்கின் - அகழினுடைய. புடை - பரிசரத்திலே. வெள்ளி - வெள்ளியாலே. ஏய்ந்த - சமைந்த. மதிள் - மதிளாலே. சூழ் - சூழப்பட்ட. திருக்கண்ணபுரம் - திருக்கண்ணபுரத்தை. ரக்ஷையுடையதேசமென்று, நாளுமுள்ளி - நித்யாநுசந்தாநம்பண்ணி. தொழுதெழுமினோ - அநுபவஜநிதப்ரீதியாலே தொழுது கிளர்த்தியோடே வர்த்தியுங்கோள்.

(இறைஞ்சுமின்) என்கிறவிடம், கீழில் * அடியிணைகளோடே யந்விதமாய், தேசபரமாகவுமாம். வெள்ளியேய்ந்தவென்று - சுக்ரபதத்தோடே சேர்ந்தவென்றுமாம். அன்றியே, வெள்ளிபோன்ற நிறமுடைய மதிளென்றுமாம். நள்ளி - பெண்நண்டு.......................................................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

"இவ்விஷயத்துக்கென்வருகிறதோ" என்றஞ்சும் சாபலமுடையார், சுரக்ஷிதமான தேசமென்று நிர்ப்பயராய் நித்யமாக வாஸ்ரயியுங்கோளென்கிறார்.

(கள்ளவிழுமித்யாதி) செவ்விப் பூவைக்கொண்டு ஆஸ்ரயியுங்கோள். ஸ்நேஹிகளாயிருப்பார், செவ்விப்பூத் தேடுவர்களிறே; "கள்ளார் துழாயும்கணவலரும்" என்கிறபடியே புஷ்பஜாதிமாத்ரமே யமையுமிறே அவன்படியைப்பார்த்தால். ஆக, த்ரவ்யதாரதம்யம்பாரான், ஆஸ்ரயிக்குமவன் ப்ரேமத்தையே பார்க்குமத்தனை. ஸ்ரீபுருஷோத்தமமுடையானுக்கு ராஜபுத்ரன் சாத்தின செண்பகப்பூ வார்த்தையை ஸ்மரிப்பது. (நள்ளியித்யாதி); நள்ளியென்று - பெண்நண்டு. நீர்மாருதவிடங்களிலேயாய்த்தவைவர்த்திப்பது. ஜலசம்ருத்தியை யுடைத்தான வயலாலே சூழப்பட்ட அகழினருகே. கிடங்கு - அகழ். (வெள்ளியித்யாதி) நக்ஷத்ரபதத்தளவு மோங்கின மதிளென்னுதல், வெள்ளியாலே செய்யப்பட்ட (தகுதியான) மதிளென்னுதல். ப்ரத்யக்ஷிக்கிறிலோமாகிலும் ப்ரேமாதிசயத்தாலே அதிவிலக்ஷணமாய்த் தோற்றுமிறே. (திருக்கண்ணபுரமுள்ளி) ப்ரேமத்தாலே நிர்ப்பயமான தேசமென்று அநுசந்தித்து, இவ்விஷயத்திலே சபலரா யிருப்பார், நித்யமாகத்தொழு துஜ்ஜீவியுங்கோள். "அபர்வணிகடல் தீண்டலாகாது" என்னுமாபோலே இவ்விஷயத்தில் காலநியதியில்லை.................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (கள்ளவிழுமித்யாதி.) "தொண்டரே - வெள்ளியேய்ந்த" என்றுதொடங்கி "எழுமினோ" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (இவ்விஷயத்துக்கித்யாதி.)

"கள்ளவிழும்" என்றதுக்கு பாவம் (செவ்வியித்யாதி.) கள்ளவிழும்மலர்-தேன்சொரிகிறமலர். கீழே "ப்ராக்ருதத்ரவ்யமமையும்" என்றுவைத்து,இங்கே "செவ்விப்பூ" என்று விசேஷிக்கிறதென்னென்ன (ஸ்நேஹிகளாயித்யாதி.) அதாவது - பரிவின்கார்யமென்றபடி. இவனுக்கந்த நிர்ப்பந்தமில்லையோ வென்ன (கள்ளாரித்யாதி) திருமொழி. கணவலர்-காக்கணம்பூ. இத்தால்பலித்தவர்த்தமேதென்ன (ஆகவித்யாதி.) ப்ரேமத்தையே பார்க்குமென்றதுக்கு சம்வாதம் (ஸ்ரீபுருஷோத்தமமித்யாதி.) * ஒழிவில்காலத்திலே இக்கதையைப் பார்த்துக்கொள்வது.

இதுசொன்னதுக்குபாவம் (நீர்மாருதவித்யாதி.) "வெள்ளி" என்று-சுக்ரனாய், அத்தாலே - நக்ஷத்ரபதத்தைச் சொல்லுகிறது. ஏய்கை-அடைகையும், பண்ணுகையும். அப்படி நமக்குத் தோற்றவில்லையேயென்ன (ப்ரத்யக்ஷிக்கிறிலோமித்யாதி.) "வெள்ளியேய்ந்தமதிள்" என்றத்தைப்பற்ற (க்ஷேமத்தாலே நிர்ப்பயமானவென்றது.)

"தொண்டரே - நாளும்தொழுதெழுமினோ" என்றதுக்கர்த்தம் (இவ்விஷயத்திலேயித்யாதி.) "நாளும்" என்று விசேஷித்ததுக்குபாவம் (அபர்வணீத்யாதி.) "[Grantha script] । [Grantha script]" (அஶ்வத்தம்ஸிந்துராஜஞ்ச நித்யம் ஸேவேதநஸ்ப்ருஶேத் । மந்தவாரேஸ்ப்ருஶேத்பூர்வமபரம்பர்வணிஸ்ப்ருஶேத்) என்றத்தைப்பற்ற (அபர்வணி) என்கிறது.

கள்ளவிழும்மலரிட்டு நீரிறைஞ்சுமின் என்றதுக்கு கீழ்ப்பாட்டோடே யந்வயம்.................................................................*

## மூன்றாம்பாட்டு.

தொண்டர்நுந்தந்துயர்போகநீரேகமாய்
விண்டுவாடாமலரிட்டுநீரிறைஞ்சுமின்
வண்டுபாடும்பொழில்சூழ்திருக்கண்ணபுரத்
தண்டவாணனமரர்பெருமானையே.

### ஆறாயிரப்படி.

(தொண்டர்) சர்வலோகேஶ்வரனாய், * அயர்வறுமமரர்களதிபதியாயிருந்துவைத்து, சர்வசமாஶ்ரயணீய னாகைக்காகத் திருக்கண்ணபுரத்திலே யெழுந்தருளி யிருந்த வவனுக் கநந்யப்ரயோஜநராய்க்கொண்டு அடிமைசெய்யுங்கோளென்கிறார். ......................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், விலக்ஷணவிபூதியுக்தனாய்க்கொண்டு சுலபனான சர்வேஶ்வரனை ஏககண்டரா யாராதியுங்கேளென்கிறார்.

வண்டு - வண்டுகளானவை. பாடும் - களித்துப்பாடும். பொழில் - பொழில். சூழ் - சூழ்ந்த. திருக்கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே. அண்டவாணன் - பரமபதநிலயனாய். அமரர்பெருமானை - சூரிபோக்யனாய்க்கொண்டு நின்றவனை. தொண்டர் - சகலகைங்கர்யாபிநிவேசயுக்தரானவர்களே. நுந்தம்துயர் - உங்களநுபவாலாபக்லேசம். போக - தீரும்படி. நீர் - நீங்கள். ஏகமாய் - ஏக ஹ்ருதயராய்க்கொண்டு. விண்டு - விகாஸோந்முகமாய். வாடா - செவ்வியழியாத. மலரிட்டு - பூக்களையிட்டு. நீரிறைஞ்சுமின் - உங்கள் சேஷத்வாநுரூபமாக வாராதியுங்கோள்.......*

### ஈடு - மூன்றாம்பாட்டு.

திருக்கண்ணபுரத்திலே நின்றருளினவன் உபயவிபூதிநாதனாய்த்து, உங்கள் துஃகம்கெட அநந்யப்ரயோஜநராய்க்கொண் டாஶ்ரயியுங்கோளென்கிறார்.

(தொண்டர்) ஆசாலேச முடையாரான நீங்களென்னுதல், * அஹம்ஸர்வம்கரிஷ்யாமிக் கிட்டுப் பிறந்த நீங்களென்னுதல். ( நுந்தம்துயர்போக ) துயரும் அவர்களுக்கு வ்யாவ்ருத்தமாயிறே யிருப்பது. விஷயப்ராவண்யத்தால் வந்த துஃகமென்னுதல், இறைஞ்சப்பெறாததுஃகமென்னுதல். ( நீரேகமாய் ) நீங்களநந்யப்ரயோஜநரா யென்னுதல், நீங்களெல்லாரு மொருமிட்டாயென்னுதல். "தொண்டர்" என்கையாலே எல்

